# சங்கப் பெண்பாற் புலவர்களின் சமுதாயச் சிந்தனைகள்

சென்னைப் பல்கலைக்கழக
முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

**சு. சதாசிவம்**, எம்.ஏ.,எம்.ஃபில்.,
முழுநேர ஆய்வாளர்

முனைவர் **ந. இளங்கோ**, எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
மேற்பார்வையாளர்




**தமிழ்த்துறை**
**சென்னைக் கிறித்தவக் கல்லூரி (தன்னாட்சி)**
**தாம்பரம், சென்னை - 600 059.**

மே, 2008

**முனைவர் ந. இளங்கோ,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
முதுநிலை விரிவுரையாளர்,
தமிழ்த்துறை,
சென்னைக் கிறித்தவக் கல்லூரி (தன்னாட்சி),
தாம்பரம்,
சென்னை - 600 059.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

**'சங்கப் பெண்பாற் புலவர்களின் சமுதாயச் சிந்தனைகள்'** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு, சென்னைப் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக, **சு. சதாசிவம்** அவர்கள் சென்னைக் கிறித்தவக் கல்லூரித் தமிழ்த்துறையில் முழுநேர ஆய்வாளராக இருந்த காலத்தில், என் மேற்பார்வையில் தன்னியலாக செய்யப்பட்டதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன்னர் வேறு எந்தப் பட்டத்திற்காகவும் அளிக்கப்பெறவில்லை எனச் சான்றளிக்கிறேன்.

இளங்கோ

இடம் : சென்னை-59
நாள் : 22 .05.2008

(ந. இளங்கோ)
மேற்பார்வையாளர்

**சு. சதாசிவம்**, எம்.ஏ., எம்.ஃபில்.,
முழுநேர ஆய்வாளர்,
சென்னைக் கிறித்தவக் கல்லூரி (தன்னாட்சி),
தாம்பரம்,
சென்னை - 600 059.

# ஆய்வாளர் உறுதிமொழி

**'சங்கப் பெண்பாற் புலவர்களின் சமுதாயச் சிந்தனைகள்'** என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்கு அளிக்கப்படும் இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானதேயாகும். இவ்வாய்வேடு இதற்கு முன்னர் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்காகவும் அளிக்கப் பெறவில்லை என உறுதியளிக்கிறேன்.

இடம் : சென்னை - 59
நாள் : 22.05.2008

(சு. சதாசிவம்)
ஆய்வாளர்

# நன்றியுரை

**'சங்கப் பெண்பாற் புலவர்களின் சமுதாயச் சிந்தனைகள்'** என்னும் இவ்வாய்வினை மேற்கொள்ள வாய்ப்பளித்துச் சிறப்புற வழிகாட்டிய என் நெறியாளர் பேராசிரியர் **முனைவர் ந. இளங்கோ** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

ஆய்வியல் மாணவர்களின் நலனில் மிகுந்த அக்கறைக் கொண்டு, நாளும் அவர்களை ஊக்கப்படுத்தி வரும் தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் மோசசு மைக்கேல் பாரடே** அவர்களுக்கு என் நன்றி என்றும் உரியது.

ஆய்வு நிகழ்த்த வாய்ப்பளித்த சென்னைக் கிறித்தவக் கல்லூரி முதல்வர் அவர்களுக்கு என் நன்றி.

ஆய்விடையே மனம் தளர்ந்த நிலையில் அத்தளர்ச்சி போக்கி, என் முயற்சியை நிலைப்புக்குள்ளாக்கிய மதிப்பிற்குரிய பேராசிரியர் **முனைவர் கே.கே.சுந்தரசோபிதராஜ்** அவர்களுக்கும், கந்தசாமிக் கண்டர் கல்லூரியின் மேனாள் தமிழ்த் துறைத் தலைவர் **திரு. மு.ப. பச்சையண்ணன்** அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

சென்னைக் கிறித்தவக் கல்லூரியின் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் மனங்கனிந்த நன்றி.

இவ்வுலகிற்கு அறிமுகப்படுத்தியதோடு என்னை ஓர் ஆய்வாளன் என்னும் நிலைக்கு உயர்த்திய என் பெற்றோர் **திரு. மா. சுப்பிரமணியன், திருமதி சு. கண்ணம்மாள்** ஆகியோருக்கு எனது வாழ்நாள் வரையிலான நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

ஆய்வுக்களத்தில் எனக்கு ஒத்துழைப்பு நல்கி, ஊக்கமளித்த என் துணைவியார் **திருமதி எஸ். கௌசல்யாதேவி,** என் மகன் **எஸ்.கே.பிறைசூடன்** ஆகியோருக்கும் என் அன்பு நன்றி.

என் கல்விப்பணிக்குப் பேருதவி புரிந்து, பல நல்லுரைகளை வழங்கி, எனது வாழ்வியல் வழிகாட்டிகளாக இருந்து வரும் **குருதேவ் மு.மா. செல்வராஜ், திரு.சி.இரத்தினவேல், திரு.குருநாதன்** ஆகியோருக்கும் என் மனமார்ந்த நன்றி.

ஆய்வுக்குத் தேவையான நூல்களை வழங்கிய **சென்னைப் பல்கலைக் கழக நூலகர், சென்னைக் கிறித்தவக் கல்லூரி நூலகர், உலகத்தமிழாராய்ச்சி நிறுவன நூலகர், மறைமலையடிகள் நூலகர், டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூலகர்** மற்றும் தனிப்பட்ட முறையில் நூல்கள் தந்துதவிய நண்பர்கள் அனைவருக்கும் என் மறக்கவியலாத நன்றி.

ஆய்வேடு உருவாகும் காலத்தில் உறுதுணை புரிந்த நண்பர்கள் **திரு.ஏழுமலை, திரு.சந்திரசேகர், திரு.ஸ்ரீதர், திரு. சிவகுமார், திரு.எல்லப்பன், திரு.பிரின்ஸ் சார்லஸ், திரு.பசுபதி, திரு.மெய்யப்பன், திரு.ரவி, திரு.மணி,** ஆகிய அனைவருக்கும் என் நன்றி.

இவ்வாய்வேட்டை அழகுற அச்சிட்டுக் கட்டமைப்புச் செய்தளித்த **தாம்பரம் மாணவர் நகலக பொறுப்பாளர்கள் திரு.பூபதி, திருமதி.விஜயா, திருமதி. கற்பகம், திருமதி.டெய்சி ராணி, திருமதி ராஜேஸ்வரி** ஆகயோருக்கும் என் மனங்கனிந்த நன்றி.

எல்லாவற்றிற்கும் மேலாக ஆய்வு நிறைவடைய அருள்பாலித்த தமிழ்க்கடவுளுக்கும் இவ்வாய்வேட்டின் உருவாக்கத்தில் பங்கு கொண்ட பிற நல்லுள்ளங்களுக்கும் என் பணிவுடன் கூடிய நன்றி.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணையியல் |
| அகம். | - | அகநானூறு |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| க.ஆ. | - | கட்டுரை ஆசிரியர் |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நற். | - | நற்றிணை |
| நூற். | - | நூற்பா |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பதிற்று. | - | பதிற்றுப்பத்து |
| புறம். | - | புறநானூறு |
| பொ.ஆ. | - | பொருநராற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மு.கு.நூ. | - | முன் குறித்த நூல் |
| மே.கு.நூ. | - | மேற்குறித்த நூல் |

# உள்ளுரை

# முன்னுரை

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய தனிப்பாடல்களின் தொகுப்பு சங்க இலக்கியமாகும். இவை எட்டுத்தொகை, பத்துப்பாட்டு எனவும் பதினெண் மேற்கணக்கு எனவும் அழைக்கப்படுகின்றன. சங்கப் பாடல்கள் யாவும் பழந்தமிழரின் அக, புற வாழ்வியல் சிந்தனைகளைக் காட்சிப்படுத்துவதாய் அமைந்துள்ளன. சங்கப்பாக்களைப் பாடிய நானூற்று எழுபத்து மூன்று புலவர்களில் பெண்பாலர் ஐம்பது பேர் இடம் பெற்றுள்ளனர். இப்பெண்பாற் புலவர்களின் அக்காலச் சிந்தனைகளை வெளிப்படுத்துவதாய் இவ்வாய்வுக் களம் அமைகிறது.

## ஆய்வுத் தலைப்பு

ஆய்வுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைப்பு **'சங்கப் பெண்பாற் புலவர்களின் சமுதாயச் சிந்தனைகள்'** என்பதாகும். சங்கப் பெண்பாற்புலவர்களின் பாடல்களை அடிப்படையாகக் கொண்டு சங்க கால மக்களின் வாழ்வியல் கூறுகள் பன்முக நோக்குடன் உரிய தரவுகளுடன் ஆய்வில் எடுத்தாளப்பட்டுள்ளன. சங்கப் பெண்பாற் புலவர்களின் சிந்தனைகளையும் படைப்பாக்கத் திறன்களையும் எடுத்துரைப்பதே ஆய்வின் பொருளாகக் கொள்ளப்படுகிறது.

## ஆய்வு நோக்கம்

சங்ககால மக்களின் நாகரிகம், பண்பாடு, பழக்க வழக்கம் போன்றவற்றை அறிவதற்குச் சங்க இலக்கியங்களே பெரிதும் துணை செய்கின்றன. பெண்பாற் புலவர்களின் பார்வையில் முடிவேந்தர்கள், சிற்றரசர்கள் போன்றோரின் அரசியலை விளக்குதல், சங்ககாலச் சமுதாய நிகழ்வுகளைத் திணை அடிப்படையில் விளக்குதல் இவ்வாய்வின் முதன்மை நோக்கமாகிறது. மேலும், அவர்கள் கையாண்ட உத்திகளான கற்பனை, உவமை, உள்ளுறை, இறைச்சி மற்றும் நடை போன்றவற்றைப் பாடல்களைக் கொண்டு விளக்கி உரைப்பதே இவ்வாய்வின் நோக்கம்.

**ஆய்வு அணுகுமுறை**

இந்த ஆய்வு சங்ககால வரலாற்று அடிப்படையில் ஆராயப்படுவதால் வரலாற்று வழி ஆய்வாகவும், பாடல்களின் தரவுகளைக் கொண்டு தொகுக்கப்படுவதால் பகுப்பாய்வாகவும், குறிப்பிட்ட தரவுகளின் தன்மைகளையும் அவற்றின் பின்புலத்தையும் ஆராய்வதால் விளக்க முறை ஆய்வாகவும் அமைகிறது.

**ஆய்வு எல்லை**

சங்கப் பெண்பாற் புலவர்களின் பாடல்கள் முழுமையும் இவ்வாய்வின் எல்லையாக அமைந்துள்ளன. அகத்திணை மற்றும் புறத்திணை சார்ந்த பெண்பாற் புலவர்களின் பாடல்கள் அனைத்தும் சங்ககால மக்கள் வாழ்வியல் சிந்தனைகளை விளக்கும் நோக்கில் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன.

**ஆய்வு மூலங்கள்**

இந்த ஆய்வின் அடிப்படைச் சான்று சங்கப் பெண்பாற்புலவர்களின் பாடல்களில் கிடைக்கப்பெறும் தரவுகளே. ஆய்வுத் தலைப்பை நிறுவத் தேவைப்படும் தரவுகளும் அதனை அறிய பயன்படும் பிறவும் சான்றுகளாகக் கருதப்படுகின்றன. அவை முறையே முதன்மைச் சான்றாதாரங்கள், துணைமைச் சான்றாதாரங்கள் எனப் பகுக்கப்படுகின்றன.

**முதன்மைச் சான்றாதாரங்கள்**

ஔவை சு. துரைசாமிப் பிள்ளை, உ.வே. சாமிநாதையர், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் ஆகியோரால் உரை எழுதப்பட்டு, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப்பட்ட நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு போன்றவற்றில் உள்ள பெண்பாற்புலவர்களின் பாடல்கள் ஆய்வின் முதன்மை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன. இவை ஆராய்ச்சி உரையாக அமைந்துள்ளதால் ஆய்வு முழுமைக்கும் பயன்படுத்தப்பட்டுள்ளன. சங்க இலக்கியத்தின் பிற பதிப்புகளும் ஒப்பு நோக்கப்பட்டுள்ளன.

## துணைமைச் சான்றாதாரங்கள்

பெண்பாற் புலவர்களின் பாடல்கள் வழி வெளியான ஆய்வுகள், நூல்கள், கட்டுரைகள் ஆகியவை துணைமைச் சான்றாதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன. சங்க இலக்கிய ஆய்வு மிகவும் பரந்துபட்டதாகும். சங்க இலக்கியத்தின் பல்வேறு தளங்களில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகள், கட்டுரைகள், விளக்க முறை ஆய்வுகள், வரலாற்று நிலை ஆய்வுகள், பழந்தமிழரின் வாழ்வியல் சூழல் குறித்த ஆய்வுகளும் துணையாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வு முன்னோடிகள்

முனைவர் ஔவை து. நடராசன் 'பெண்பாற் புலவர் - சங்ககாலம்' என்ற தமது ஆய்வேட்டில் நாற்பத்தொரு பெண்பாற்புலவர்களின் பாடல்களைக் கொண்டு ஆய்வு மேற்கொண்டுள்ளார். இதுவே பெண்பாற்புலவர்கள் குறித்து நிகழ்த்தப்பட்ட விரிவான முதல் ஆய்வாகும்.

முனைவர் வ.ஜெயா **'சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும்'** என்ற நூலில் பெண்பாற்புலவர்களின் மொழி, கருத்து, சமுதாயம் என்னும் அடிப்படையில் ஆராய்ந்துள்ளார்.

பெ.சு.மணி **'சங்க கால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்'** என்னும் நூலில் ஔவையாரை உலகப் பெண்பாற் புலவர்களோடு ஒப்பு நோக்கியும், பிற புலவர்களைத் தனித்தும் திறனாய்வு நோக்கில் ஆராய்ந்துள்ளார்.

முனைவர் சரளா இராசகோபாலன் **'சங்கத் தமிழ் வளர்த்த நங்கையர்'** என்னும் நூலில் பதினைந்து பெண்பாற்புலவர்களை சமூக நோக்கில் ஆராய்ந்துள்ளார்.

ரா.ராகவையங்கார் **'நல்லிசைப் புலமை மெல்லியலார்கள்'** என்ற தமது நூலில் முற்பத்தொரு பெண்பாற்புலவர்களின் வரலாற்றை ஆராய்ந்துள்ளார்.

முனைவர் தாயம்மாள் அறவாணன் **'மகடூஉ முன்னிலை'** என்ற தமது நூலில் நாற்பத்தைந்து புலவர்களைக் குறிப்பிட்டு, அவர்களை, அகம் பாடிய பெண்பாற் புலவர்கள், புறம்பாடிய பெண்பாற் புலவர்கள், அகப்புறப்

பாடல்களைப் பாடிய பெண்பாற் புலவர்கள் எனப் பகுத்து விரிவான ஆய்வு செய்துள்ளார்.

வள்ளிநாயகி **'தமிழ் வளர்த்த மகளிர்'** என்ற நூலில் பெண்பாற்புலவர்களின் வாழ்வியல் சிந்தனைகளைச் சமூகவியல் நோக்கில் ஆராய்ந்துள்ளார்.

அ.ச.ஞானசம்பந்தன் **'மகளிர் வளர்த்த தமிழ்'** என்ற தமது நூலில் பெண்பாற் புலவர்களின் பாடல்களைத் திறனாய்வு அடிப்படையில் ஆய்வு செய்துள்ளார்.

**இயல் பகுப்பு**

**'சங்கப் பெண்பாற் புலவர்களின் சமுதாயச் சிந்தனைகள்'** என்னும் இவ்வாய்வு முன்னுரை, நிறைவுரை தவிர்த்து ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

| | | |
|---|---|---|
| இயல் ஒன்று | : | பெண்பாற் புலவர்களின் வரலாறு |
| இயல் இரண்டு | : | அகவாழ்வுச் சிந்தனைகள் |
| இயல் மூன்று | : | ஐவகைச் சமூகப் பகுப்பும் பார்வையும் |
| இயல் நான்கு | : | புறவாழ்வு நோக்கு |
| இயல் ஐந்து | : | படைப்பாக்க உத்திகள் |

என்னும் அமைப்பில் ஆய்வு அமைக்கப்பட்டுள்ளது.

**'முன்னுரை'**யில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வு அணுகுமுறை, ஆய்வு எல்லை, ஆய்வு மூலங்கள், இயல் பகுப்பு ஆகிய செய்திகள் தரப்பட்டுள்ளன.

**'பெண்பாற் புலவர்களின் வரலாறு'** என்னும் முதல் இயலில், சங்கப் புலவர்களின் இயல்பு, அவர்கள் மன்னர்களோடும் மக்களோடும் கொண்டிருந்த உறவுநிலை, சமுதாயவியல் நோக்கு ஆகியவை விளக்கப்பட்டுள்ளன. பெண்பாற்புலவர்களின் எண்ணிக்கை குறித்த கருத்து மாறுபாடுகள் ஆய்வுக்குட்படுத்தப்பட்டு தெளிவுபடுத்தப்பட்டுள்ளன. பெண்பாற் புலவர்களுள்

அகத்திணை பாடியோர், புறத்திணை பாடியோர், அகம் புறம் ஆகிய இரு திணைப் பாடல்களையும் பாடியோர் குறித்த விரிவான வரலாறு விளக்கப்பட்டுள்ளது.

**'அகவாழ்வுச் சிந்தனைகள்'** என்னும் இரண்டாம் இயலில் அகவாழ்வு களவு, கற்பு என இரு நிலைகளில் பேசப்படுகிறது. களவில் இயற்கைப் புணர்ச்சி, பாங்கியர் கூட்டம், வரைவு கடாவுதல், வரைவு வேண்டல், இற்செறிப்பு, பிரிவாற்றாமை, பொருட்பிரிவு, பசலை, குறிபார்த்தல், வெறியாட்டு, உடன்போக்கு போன்றவை குறித்த நிகழ்வுகள் விளக்கப்பட்டுள்ளன. கற்பில் இல்லற வாழ்வு, விருந்தோம்பல், பரத்தையர் பிரிவு, ஊடல் போன்ற நடப்புகளை விளக்கும் பெண்பாற்புலவர் தம் பாடல் செய்திகள் புலப்படுத்தப்பட்டுள்ளன.

**'ஐவகைச் சமூகப் பகுப்பும் பார்வையும்'** என்னும் மூன்றாம் இயலில், சங்க காலச் சமூக அமைப்புகள், சமுதாயக் கலப்பு, சமுதாயக் கடமைகள், சமூக முன்னேற்றம் ஆகிய மக்கள் வாழ்வியல் கூறுகள் தெளிவுபடுத்தப்பட்டுள்ளன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐவகைச் சமூகப் பகுப்பு முறைகளும் மக்களின் வாழ்வியல் சூழலும் விளக்கப்பட்டுள்ளன. தமிழ்ச் சமூகத்தில் நடைபெற்று வந்த வணிகம், பண்டமாற்று, நடுகல் வழிபாடு, விழாக்கள் போன்றவை குறித்தும், சங்க காலக் கைம்பெண்கள் நிலை குறித்தும் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

**'புறவாழ்வு நோக்கு'** என்னும் நான்காம் இயலில் முடிவேந்தர் அரசியல் நிலை, ஒற்றுமை, சேரர், சோழர் பரம்பரை சார்ந்த முடிவேந்தர்களின் வரலாறு போன்றவை விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. பழந்தமிழகத்தின் பல்வேறு பகுதிகளைச் சிறப்புற ஆட்சி செலுத்திய சிற்றரசர்கள், வேளிர்கள் போன்றோர் வரலாறு தனித்தனியே விளக்கப்பட்டுள்ளது. சங்கால வீரமகளிர் குறித்த செய்திகளும் இத்தலைப்பில் விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

**'படைப்பாக்க உத்திகள்'** என்னும் ஐந்தாம் இயலில் பெண்பாற்புலவர்களின் படைப்புகளில் இடம் பெற்றுள்ள அணிநலன் விளக்கப்பட்டுள்ளது. கற்பனைத் திறம், உவமைநலம், உள்ளுறை, இறைச்சி ஆகியவற்றைக் கையாளும் ஆற்றல், நடைத்திறம் போன்ற படைப்பாக்க உத்திகள் வகைதொகை செய்யப்பெற்று விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

**‘நிறைவுரை’** மேற்குறித்த ஐந்து இயல்களில் ஆராய்ந்து அறியப்பட்ட செய்திகளின் தொகுப்பாக அமைகிறது. இதில், மேலாய்வுக்கான களங்களாகச் சில ஆய்வுத் தலைப்புகள் தரப்பட்டுள்ளன. இவ்வாய்வேட்டின் இறுதியில் ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள், அகராதிகள், இதழ்கள், ஆய்வேடுகள் ஆகியவற்றின் பட்டியல் இடம் பெற்றுள்ளது.

## இயல் ஒன்று

# பெண்பாற் புலவர்களின் வரலாறு

''பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்
நுமக்கு அரிது ஆகுக தில்ல எமக்குஎம்
பெருந்தோள் கணவன் மாய்ந்தென அரும்புற
வள்இதழ் அவிழ்ந்த தாமரை
நள்இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே''

–பெருங்கோப்பெண்டு

# சங்கப் பெண்பாற் புலவர்களின் வரலாறு

இன்றிலிருந்து இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய காலத்தைச் சங்க காலம் என்கிறோம். இக்காலக் கட்டத்தில் வாழ்ந்த மக்களைப் பழந்தமிழர் என அழைக்கின்றோம். சங்ககாலம் மன்னர் ஆட்சிக்காலமாக இருந்தபோதும் கற்றறிந்த புலவர்கள் தம் கருத்தை வெளிப்படுத்தும் சுதந்திரம் உள்ளவர்களாக இருந்தனர். கல்வி முறை இருபாலருக்கும் பொதுவானதாகவே இருந்துள்ளது. இதனால், மகளிரும் சிறந்த கவிபாடும் திறமுடையவர்களாகத் திகழ்ந்தனர். இத்தகைய சங்ககாலப் பெண்பாற் புலவர்களின் வரலாற்றினை விரிவாக அறியும் நோக்கில் இவ்வியல் அமைகின்றது.

**சங்கப் புலவர்கள்**

சங்க இலக்கியங்களாகிய எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றில் உள்ள பாடல்களைப் பல்வேறு காலகட்டங்களில் வாழ்ந்த புலவர்கள் தம் வாழ்வியல் சூழலோடு இயைத்துப் பாடிப் பெருமை பெற்றுள்ளனர்.

> **“எட்டுத்தொகையிலும் பத்துப்பாட்டிலுமாகச் சங்க இலக்கியப் பாடல்கள் மொத்தம் இரண்டாயிரத்து முந்நூற்று எண்பத்தொன்றாகும். இவற்றுள் நூற்றிரண்டு பாடல்களின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை; எஞ்சிய 2279 பாடல்களைப் பாடியவர்கள் 473 புலவர்கள் ஆவர்.”[1]**

சங்கப் புலவர்கள் 473 பேரில் பெண்பாற் புலவர்களும் அடங்குவர். சங்கப் புலவர்களுள்,

> **“பலர் தாம்பாடிய பாடல்களின் தொடர்களாலும் தாம்பாடிய பாடல்களின் பண்பாலும் பெயர்பெற்று விளங்குகின்றனர். ஏறத்தாழ நாற்பத்து மூன்று புலவர்கள் தாம் பாடிய பாடற்றொடராலும் திணை முதலியவற்றாலும் காலத்தை வெற்று விளங்குகின்றனர்.”[2]**

என்று மு.வ. கூறுகின்றார். சங்கப் புலவர்கள் பலரும் அகம், புறம் என்னும் பாகுபாட்டின் அடிப்படையிலேயே பாடல்களைப் புனைந்துள்ளனர். இயற்கை நிகழ்வுகளையும், மக்களின் வாழ்வியல் போக்குகளையும், ஆட்சி நெறி முறைகளையும் மற்றும் யதார்த்த உண்மைகளையும் தம் பாடற்பொருளாக

வைத்துப் பாடியுள்ளனர். சங்க காலப் புலவர்கள் சமூகத்தில் உயர்ந்த இடத்தில் வைத்துப் போற்றப்பட்டுள்ளனர். மன்னர் முதலியோராலும் நன்கு மதிக்கப்பெற்றுள்ளனர். புலவர்கள் 'சன்றோர்' என்றும் அழைக்கப்பட்டனர். இதனை மா.ரா.போ. குருசாமி,

> **''எட்டுத்தொகை, பத்துப்பாட்டுகள் குறிப்பிடப்படும் புலவர்களைச் 'சான்றோர்' எனவும் 'சங்கத்துச் சான்றோர்' எனவும் உரையாசிரியர்கள் குறிப்பது நினைவு கூர்தற்குரியது.''**[3]

என்று கூறுவதால் சங்கப்புலவர்களுக்கு இருக்கும் நன்மதிப்பு அறியப்படுகிறது. கடைச்சங்க காலமே 'சங்க காலம்' என்று வரையறை செய்யப்படுகிறது. இக்காலக்கட்டத்தில் வாழ்ந்த புலவர்களே சங்கப் புலவர்கள் என்னும் சிறப்புக்குரியவர்களாகத் திகழ்கின்றனர்.

**புலவரும் மன்னரும்**

சங்ககாலம் மன்னராட்சிக் காலமாதலால் சில சமயங்களில் போரும் பூசலும் நடைபெற்ற வண்ணம் இருந்தன. இக்காலக்கட்டத்தில் மக்கள் பெரும் துன்பநிலையடைந்தனர். மன்னரது வெற்றிக்கு வீரர்கள் பலர் தம் இன்னுயிரைத் தரவேண்டியிருந்தது. அநீதி இழைந்த மன்னர்களும் உண்டு. முறைத்தவறிச் செருக்குற்று நாட்டைக் கைப்பற்றும் நோக்குடன் படையெடுத்துச் செல்லும் மன்னருக்குத் தம் கூர்ந்த மதியால் அறிவுறுத்தி போரை நிறுத்திய பெருமை சங்கப் புலவர்க்கே உரித்தானது. சங்கப்புலவர்கள் பலர் மன்னரது அவைக்களப் புலவராக இருந்தனர். மன்னரது உண்மையான சிறப்புகளை மட்டுமே பாடிப் பரிசு பெற்றனர். மன்னரும் புலவர்கள் வாயால் தாம் பாடப்படுவதைப் பெருமையாகக் கருதினர். புலவர்கள் மன்னர்களுடன் நெருங்கிய தொடர்புடையவர்களாக இருந்தபோதும் தவறிழைத்த வழி கடிந்துரைத்து நல்வழிப்படுத்தவும் தலைப்பட்டனர். தாம் வாழும் காலத்தில் புலவர்களின் வாழ்த்துதலைப் பெற்றால் இறந்த பிறகு மறுமை உலகத்தில் நற்கதி பெறலாம் என்ற நம்பிக்கை அன்று மன்னரிடையே நிலவியுள்ளது. இதனை,

> ''புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
> வலவ னேவா வான வூர்தி
> எய்துப வென்பதஞ் செய்வினை முடிந்தென''[4]

என்று வரும் புறநானூற்றுப் பாடலடிகளால் அறியலாம். பழந்தமிழகத்தில் புலவர்கள் மன்னரிடம் பெற்றிருந்த மதிப்பைத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் போருக்குச் செல்லும் முன் கூறிய வஞ்சின உரையால் புலப்படும்.

> **''உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்**
> **புலவர் பாடாது வரைகவென் னிலவரை''[5]**

என்ற அடிகள் புலவர்கள் மீது அக்காலச் சமூகம் கொண்டிருந்த பெருமதிப்பை புலப்படுத்துகின்றது.

> **''பழந்தமிழ் வேந்தரிடம் புலவர்கள் பெற்றிருந்த செல்வாக்கு புகழத்தக்கது. தம்மை நாடிவந்த புலவர் பெருமக்களை அன்புடன் வரவேற்று, வேண்டியன நல்கிப் போற்றினர் வேந்தர். தம்மை விட்டுப் பிரியும் பொழுது ஏழடி புலவரின் பின்சென்று வழியனுப்பும் பண்பாட்டையும் பெற்றிருந்தனர்.''[6]**

என்று வரும் அரங்க. இராமலிங்கம் அவர்களின் கருத்தும் இங்கு நோக்கத்தக்கது.

**மன்னர் புலவர் நட்பு**

மன்னரது போர் வெற்றியை மட்டும் சிறப்பித்துப் பாடிப் பரிசில் பெறும் நோக்குடையவர்களாக அக்காலப் புலவர்கள் இல்லை. மன்னரது குடும்ப வாழ்வில் ஏற்படும் துன்ப நிலைக்கு இரங்குபவர்களாகவும், மன்னன் வடக்கிருந்து உயிர்துறந்தபோது தாமும் உயிர்துறந்து பெருமை பெற்றவர்களாகவும் திகழ்கின்றனர். முரசுக் கட்டில் என அறியாது துயில் கொண்ட மோசிக்கீரனார்க்குத் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை கவரி வீசினான் என்பதிலிருந்து அக்கால மன்னர்கள் புலவர்கள் மீது கொண்டிருந்த பெருமதிப்பு விளக்கும். நீதி நெறியிலிருந்து என்றும் வழுவாத சான்றோராகத் திகழ்ந்த புலவர் பெருமக்களோடு மன்னர்கள் பூண்டிருந்த நட்பு உணர்ச்சிமிக்கப் பேரன்பு கொண்டதாக இருந்துள்ளது. அவ்வாறே சான்றோர்களாகிய புலவர்களும் இருந்தனர் என்பதை,

> **''பழந்தமிழ் வேந்தரிடம் புலவர்கள் கொண்டிருந்த தொடர்பு, புரவலர் இரவலர் என்ற நிலையினைக் கடந்து உள்ளம் உணர்ந்த உயிர்நட்பாக விளங்கியது. வேந்தன் உயிர்துறக்கும் பொழுது தாமும் உயிர்துறக்கும் அளவிற்கு அன்பு பூண்டொழுகினர்.''[7]**

என்ற கூற்றால் உணர முடிகிறது. கோப்பெருஞ் சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும் இருந்த நட்பும், கபிலர்க்கும் பாரிக்கும் இருந்து வந்த நட்பும் பொருள் பெரும் நோக்குடையது அல்ல. தம் இன்னுயிரையே துறக்குமளவிற்கு ஆழமானதாகவும் தூய்மையானதாகவும் சுயநலமற்றதாகவும் இருந்தது எனலாம். ஔவை பெருமாட்டியாரோடு அதியமான் கொண்டிருந்த நட்பும் இவ்வாறானதாகவே இருந்தது.

> **''கற்றாரைக் கற்றாரே காமுறுவர்' என்றபடி கல்வி நலம் வாய்க்கப் பெற்ற தமிழ் வேந்தர் முத்தமிழ்ப் புலவர்களை நன்கு போற்றினர்; அவர்களைத் தம் உற்ற நண்பராகக் கொண்டனர். தம் இன்ப துன்பங்களில் பங்கு கொள்ளச் செய்தனர்.''[8]**

என்று மா.இராசமாணிக்கனார் கூறுகின்றார். சங்கப் புலவர்கள் மன்னர்களோடு எவ்வளவு ஆழமான நட்புடையவர்களாக இருந்தபோதும், '' பிழை கண்ட விடத்து அதனை எடுத்துக் கூறி அவ்வபோது'' அரசர்களைத் திருத்தி வந்தனர்.''[9] எனவே, அக்காலப் புலவர்கள் சமூக நலம் கொண்டவர்களாகத் திகழ்ந்தனர் என்பதை இதன் வழி தெளியலாம்.

**சங்கப் புலவர் நோக்கம்**

சங்கப் புலவர்கள் வெவ்வேறு சூழல்களில் வெவ்வேறு காலக்கட்டங்களில் வாழந்தவராக இருந்தபோதும் அனைவரும் நாட்டுப்பற்றிலும் மொழிப்பற்றிலும் பொதுவாக ஒருமித்த கொள்கையுடையவராக இருந்தனர். எந்தச் சூழ்நிலையிலும் அவர்கள் தம் கொள்கைளிலிருந்து வழுவவில்லை. அறவழி நின்று உண்மையை எடுத்துரைப்பதே அவர்களின் தலையாய கடமையாக இருந்தது.

> **''பழந்தமிழப் புலவர் தாம் கற்ற பெருங்கல்வியைத் தமிழ் மக்களுக்குப் பயன்படுத்தினர். தம் அறிவுரைகளை மகிழ்ந்து கேட்போரை மதித்தனர். தாம் கூறும் அறிவுரைகளைக் கேட்டுணரும் அறிவைப் பெறாதார் மன்னராயினும் அவரை மதியாது இகழ்ந்தனர்.''[10]**

என்ற க.வெள்ளைவாரணாரின் கருத்தும் இங்கு ஏற்கத்தக்கதாய் உள்ளது. சங்க காலத்தில் பிறமொழிக் கலப்பு இருந்த போதும், முடிந்தவரை சங்கப்புலவர்கள் செந்தமிழ் நடையைப் பயன்படுத்தி வந்தனர். சங்கப் புலவர்களைப் பற்றி உ.வே.சா.,

**“சங்க காலத்துப் புலவர்கள் ஒரு காலத்தினரல்லர்; ஒரு தேயத்தாரல்லர்; ஒரு சாதியாரல்லர்; ஒரு குலத்தினரல்லர்; ஒரு தொழிலினரல்லர்; ஒரு மதத்தினரல்லர்.”**[11]

என்று கூறுகின்றார். அவ்வாறு இருந்தபோதும் சங்கப் புலவர்கள் ஒருமித்த கருத்துடன் நாடும் மன்னரும் மக்களும் எந்நாளும் துன்பமின்றி வாழ வேண்டும் என்ற நோக்குடையவர்களாகவே திகழ்ந்தனர். சங்கப்புலவர்களில் வறுமையுடையோரும் செல்வந்தர்களும் கலந்தே இருந்தனர். மன்னரிடம் பொருள் பெறும் நோக்கத்தோடு மட்டுமே பாடல் புனையவில்லை. அவர்கள் காலக்கட்டத்துச் சமுதாயச் சூழல்களையும் மக்களின் நாகரிகம், பண்பாடு, பழக்கவழக்கம் போன்றவற்றையும், சில வரலாற்று நிகழ்வுகளையும் நாளைய சமுதாயம் அறிந்துகொள்ள வேண்டும் என்ற நோக்குடையவர்களாகவும் இருந்துள்ளனர்.

**புலவரும் சமூகமும்**

பண்டைய சமூகத்தில் புலவர்கள் நாடாளும் மன்னராலும் நாட்டில் வாழும் மக்களாலும் பெரிதும் மதிக்கப்பெற்றனர். சிற்றரசர்களாக இருந்தாலும் பேரரசர்களாக இருந்தாலும் சங்கப்புலவர்களின் பாடலுக்குத் தலை வணங்குபவர்களாக இருந்துள்ளனர்.

**“புலமை இல்லாத அரசர்களும், புலவர்களால் பாடப்படுவதை ஒரு பெரிய பேறாகக் கருதினார்கள். புலவர்களின் புகழ்பெற்றவர்களுக்கே மறுமையில் தேவருலக இன்பம் கிடைக்கும் என்ற நம்பிக்கையும் அவர்களுக்கு இருந்தது.”**[12]

என்ற மு.வ. அவர்களின் கருத்தும் இங்கு நோக்கத்தக்கது. சங்கப்புலவர்கள் பேருணர்ச்சி மிக்கப் பாடல்களைப் பாடி மன்னர்களைப் பேருவகை கொள்ளச் செய்தனர். புலவர்களின் அறிவுரைகளைக் கேட்ட மன்னர்கள் சிலர் மனம் தெளிந்து போரைக்கைவிட்டனர்.

**“தமிழ் வேந்தர்கள் வீரம் நிறைந்தவர்களாக, போருக்கு அஞ்சாதவர்களாக விளங்கியது போலவே, அன்பு நிரம்பியவர்களாகவும் நீதிக்குக் கட்டுப்பட்டவர்களாவும் விளங்கியதும் காண்கிறோம். அவர்களிடம் புலவர்களுக்குப் பெருஞ்செல்வாக்கு இருந்தது. புலவர்களின் அறிவுரைக்கும் அறவுரைக்கும் அவர்கள் செவிகொடுத்துப் பணிந்திருந்தார்கள்.**

**அதனாலேயே இன்னும் பாராட்டத்தக்க சிறந்த பாட்டுகள் அக்காலத்தில் தோன்ற முடிந்தது.''[13]**

புலவர்களின் வறிய நிலை ஒருபோதும் அவர்களைத் தாழ்த்தியதில்லை. ''சங்க காலத்தில் அரசர்க்கும் புலவர்க்கும் இருந்து வந்த உறவு பெருஞ்சிறப்புடையதாய் இருந்தது. புலவர்கள் அரசியலிலும் பொது வாழ்க்கையிலும் தங்களை இரண்டறப் பிணைத்துக்கொண்டதால் நடைபெறவிருந்த பல போர்களைத் தடுத்ததோடு பல நற்காரியங்களையும் செய்ய முடிந்தது.''[14] புலவர்கள் மன்னர்களின் நம்பிக்கைக்குரியவர்களாக இருந்தனர். அதனால்தான் சமாதானத் தூதுவர்களாகவும் மன்னரால் அனுப்பப்பட்டனர்.

**''தம்மினும் புலவர் சிறப்புடையர் என்பதையும் நாட்டிற்கு மிக்க பயன் விளைவிக்கும் நல்லியல்பு அமைந்தவர் என்பதையும் உணர்வு சான்ற அரசர் அறிந்திருந்தனர். அதனால் புலவர்தம் வாழ்விற்குப் பெருந்துணை செய்தனர்.''[15]**

என்ற மு.வ.வின் கருத்தும் நோக்கத்தக்கதாய் உள்ளது. 'உயர்ந்த நோக்கங்களை மேற்கொண்டிருந்த பண்டைத் தமிழ்ப்புலவர் பெருமக்களை மன்னர்கள் எத்துணைப் பெருமை பாராட்டினார்கள் என்பதற்குச் சங்க நூல்களே சான்றாக உள்ளன[16]. சங்க இலக்கியங்கள் பெறும் அத்துனைப் பெருமையும் சங்கப் புலவர்களையே சாரும். சங்கப் புலவர்கள் வறுமைக்குத் தளராதவர்களாகவும், அநீதிக்கு அஞ்சாதவர்களாகவும், உண்மையை உரைக்கும் இயல்பினராகவும், மக்களின் குறைகளை மன்னர்க்கு உரைப்பவராகவும், இழுக்காகக் கிடைக்கும் பொருள் எத்தகைய மதிப்புடையதாக இருப்பினும் அதை வெறுத்து ஒதுக்குபவராகவும் இருந்தனர். புலவர்கள் ஒரு சார்புடையவர்களாக இல்லாமல் பொது நோக்குடையவர்களாத் திகழந்தனர்.

புலவர்களின் பாடலைக் கேட்டுக் களிப்புற்ற சேர மன்னர்கள் பொன்னையும் பொருளையும் நாட்டின் பெரும்பகுதியையும் கொடுத்ததோடு தன் புதல்வனையும் அரசாட்சியையும் புலவர்களுக்குப் பரிசாகக் கொடுத்து மகிழந்தனர் என்று பதிற்றுப்பத்தின் பதிகங்கள் கூறுவதிலிருந்து அன்றையச் சமூகத்தில் புல்வர்க்கு இருந்த சமூக மதிப்பு பெறப்படுகிறது.

**புலவரின் மனப்பான்மை**

சங்கப் புலவர்கள் தமக்கென வாழாது பிறர்க்கென வாழந்த பெருமையுடையவர்கள். நாட்டில் அநீதி நிகழ்ந்தவிடத்து உள்ளம் கலங்கினர். உரியவரிடம் துணிவுடன் அறிவுறுத்தவும் செய்தனர். மன்னர்கள் மக்களுக்கு நன்மை செய்தவழி அதைப் போற்றிப் பாடினர். இதனால் மன்னர்கள் பெருமையடைந்தனர். புலவர்கள் வாயால் தாம் பாடப்படுவதை மன்னர்களும் பெரும் பேறாகக் கருதினர். நாடாளும் மன்னன் நல்லுரைகளைப் பேசும் புலவரின் வாயால் பாடப்படும் பெருமையுடைவன் என்பதை,

**“நாநவில் புலவர் வாயுளனே[17]”**

என்னும் அடி காட்டுகிறது. இவ்வாறு உண்மை நிகழ்வுகளை மட்டுமே தம் பாடல்களில் வைத்துப் பாடப்படும் நெறியை அக்காலப் புலவர் பெருமக்கள் கொண்டிருந்தனர்.

> **“சங்கப் புலவர் எல்லார்தம் பாடல்களும் காலங்கடந்த ஞால மதிப்பைப் பெற்று வழிவழி வாழ்கின்றன.”[18]**

என்று வ.சுப.மாணிக்கம் அவர்கள் கூறும் கருத்தும் இதற்கு அரண் சேர்ப்பதாய் உள்ளது. “புலவர்களே நமது மொழியின் பண்பாட்டின் நாகரிகத்தின் புரவலர்கள்”[19] என்றும் கூறப்படுகின்றது.

> **“சங்ககாலப் புலவர்கள் இனிய இலக்கியங்களை இன்றும் போற்றிப் புகழும் வகையில் இயற்றித் தந்துள்ளனர். இவர்கள் இன்றைய உலகப் பெரும்புலவர்களோடு ஒப்பிடத்தக்க புலமையும் பெருமையும் உடையவர்கள். இவர்கள் அமைச்சர்களாகவும், தூதர்களாகவும், ஆளுநர்களாகவும், மெய்யுணர்வாளர்களாகவும், மக்கள் துயர் போக்கும் சான்றோர்களாகவும், பிறர்க்கென வாழும் பெரியோர்களாவும் வாழ்ந்து, நாட்டுத் தொண்டும் மொழித் தொண்டும் மக்கள் தொண்டும் ஆற்றினர்.”[20]**

என்று சி.இலக்குவனார் கூறுவதிலிருந்து பழந்தமிழ்ப் புலவர்களின் பெருமையினையும், சிறப்பையும், தொண்டுள்ளத்தையும் நன்கு அறியலாம்.

**புலவரும் மக்களும்**

சங்கப் புலவர்கள் மக்களோடு ஒருவராக மிகவும் எளிய வாழ்க்கையை மேற்கொண்டிருந்தனர். மன்னரிடம் எவ்வளவு செல்வாக்குப் பெற்றவர்களாக இருந்தாலும் அவர்கள் மக்களின் வாழ்வியலையே அதிகம் பாடியுள்ளனர்.

> **''சங்கப் புலவர்கள் தம் வெவ்வேறு மனங்களிடையே, வெவ்வேறு கற்பனைகளிடையே ஓர் உள்ளத்து ஒருமைப்பாடு விளங்குகிறது.''**[21]

என்று தெ.பெ.மீ கூறுவதாலும் அறியலாம். சங்கப்புலவர் பெருமக்களின் ஒருமித்த மனம் சமூக மேம்பாடு குறித்ததாகவே இருந்தது. ஐவகைச் சமூக மக்களின் வாழ்வியலையும் இயற்கைச் சூழலையும் நிலத்தன்மைகளையும் அங்கு நிகழ்ந்த முக்கிய நிகழ்வுகளையும் பழக்கவழக்கங்களையும் புலவர்கள் தமது பாடல்களில் பதிவு செய்தனர். புலவர்கள் மக்களோடு ஒன்றிய வாழ்க்கை நடத்தியவர்களாதலால் அவர்களின் பண்பு நலன்களை நன்கு அறிந்திருந்தனர். மக்களும் புலவர்கள் மீது அளவுகடந்த மதிப்பு கொண்டவர்களாக இருந்தனர். இதனை சி.இலக்குவனார்,

> **''புலவர்களைக் கடவுளர் எனக்கருதிப் போற்றி வழிபட்டுள்ளனர். இறைவனை வணங்கும் திருக்கோயில்களில் புலவர்களின் வடிவங்களை வைத்து வழிபட்டனர். இன்னும் ஒண்தமிழ்க் கூடலாம் மதுரையில் அங்கயற்கண்ணியின் துங்க நாற்கோயிலில் நாற்பத்தொன்பது புலவர் படிவங்களும் இறைவன் படிவத்துடன் இணையாக வைக்கப்பட்டிருப் பதைக் காணாலமே. ஆங்காங்குச் சில ஊர்களில் நக்கீரர்க்கும் ஔவைக்கும் பிறர்க்கும் எடுத்த கோயில்கள் காலவயப்பட்டுக் காணாமற் போகாமல் எஞ்சி நின்று ஏத்துமின் என்று அழைக்கின்றனவே. ஆகவே மக்களும் புலவர்களைப் போற்றினர் என்பது வெற்றுரையன்று என்று தெளியலாம்.''**[22]

என்று கூறுவதிலிருந்து அக்காலப் புலவர்கள் மக்களால் கடவுளாக மதித்து வழிபாடு செய்யப்படும் அளவிற்கு உயர்ந்தவர்களாக இருந்துள்ளனர் என்பதை அறியலாம்.

**சங்கப் பெண்பாற் புலவர்கள்**

சங்ககாலம் பெண்கல்வியில் சிறந்து விளங்கியது என்பதற்குப் பெண்பாற் புலவர்களே சான்றாக அமைகின்றனர். உணர்ச்சி ததும்பும் பாடல்களைப் பாடிச் சிறப்புப்பெற்றுள்ளனர். ஆண்பாற் புலவர்களுக்குத் தாம் சளைத்தவர்களல்லர்

என்பதைத் தம் பாடல்கள் வழி நிறுவியுள்ளனர். அகவாழ்வு பற்றியும் புறவாழ்வு பற்றியும் பெண்களின் வீரவாழ்வு குறித்தும், சிறப்புறப் பாடியுள்ளனர். பெயர் தெரிந்த சங்கப் புலவர்கள் 473 பேரில் பெண்பாற்புலவர்கள் இத்தனை பேர் என இன்னும் வரையறுத்துக் கூறு இயலாத நிலை இருந்து வருகிறது.

**பெண்பாற் புலவர்களின் எண்ணிக்கை**

சங்கப் பெண்பாற் புலவர்களின் எண்ணிக்கையில் இன்றுவரையிலும் பல்வேறு குழப்பங்களே நீடித்து வருகின்றன. உ.வே.சாமிநாதையார் பெண்பாலர் குறித்து ஆற்றிய சொற்பொழிவின் போது,

> **"ஏறக்குறைய ஐம்பது பெண்பாலர் இயற்றிய செய்யுட்கள் இப்பொழுது கிடைக்கின்றன. மற்றப் புலவர்களுடைய வாக்குக்கு எவ்வளவு சிறப்பு உண்டோ அவ்வளவு சிறப்பு இவர்களுடைய செய்யுட்களுக்கும் உண்டு."**[23]

என்றும்,

> **"சங்ககாலத்தில் தமிழாராய்ந்து விளங்கிய பெண்பாலர் ஐம்பதின்மருக்கு மேலிருக்கலாமென்று தெரிகிறது."**[24]

என்றும் கூறுகிறார். உ.வே.சா. ஐம்பது பெண்பாலர்கள் இருந்தனர் என்று கூறும் கணக்கீடு சரியானதாக இருப்பினும், அவர் பட்டியலிட்டுக் கூறாததால் சில பெயர்கள் பெண்பாலரா ஆண்பாலரா என அறிவதில் ஐயம் ஏறப்பட்டுள்ளது. திருமதி. புஷ்பம் நடராசன்,

> **"சங்க நூல்களில் ஐம்பதின்மருக்குக் குறையாத பெண்பாற் புலவர்கள் இயற்றிய பாடல்களைக் காணலாம்."**[25]

என்றும், சி.பாலசுப்பிரமணியன்,

> **"ஐம்பதிற்கும் மேற்பட்ட பெண்பாற் புலவர்கள் சங்கப்புலவர் வரிசையில் இடம்பெற்றிருக்கக் காணலாம்."**[26]

என்றும், தமது கட்டுரையில் குறிப்பிட்டுக் கூறுகின்றனர். சங்கப் பெண்பாற் புலவர்கள் ஐம்பதுக்கும் மேற்பட்டவர்கள் இருந்தனர் என்று பா.திருஞானசம்பந்தம் அவர்களும் கூறுகின்றார்.[27] இது உ.வே.சா.கூறும் பெண்பாற்புலவர்கள் பற்றிய எண்ணிக்கைக்கு வலுசேர்ப்பதாக உள்ளது.

பெண்பாற்புலவர்கள் நாற்பதுக்கும் மேற்பட்டோர் என்று கூறுவாறும் உள்ளனர். ஔவை து.நடராசன் 'பெண்பாற் புலவர் - சங்ககாலம்' என்னும் தமது ஆய்வு நூலில் நாற்பத்தொரு புலவர்கள் குறித்து ஆய்வு செய்துள்ளார். அவரது முடிவிற்கு ஒப்ப தாமும் ஔவையாரைப் பற்றி மிக விரிவாகவும், அவர் அல்லாத மற்ற நாற்பது புலவர்கள் குறித்து மிகச் சுருக்கமாக ஆய்வு செய்துள்ளதாகவும் பெ.சு.மணி கூறுகின்றார்.[28] ஔவை நடராசன், பெ.சு.மணி ஆகிய இருவரும் பெண்பாற் புலவர்களின் எண்ணிக்கை நாற்பத்து ஒன்று என்பதில் ஒன்றுபடுகின்றார். 'சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும்' என்னும் நூலில் வ.ஜெயா "சங்க இலக்கியங்களில் 42 பெண்பாற் புலவர்கள் பாடிய பாடல்கள் இடம்பெற்றுள்ளன"[29] என்று கூறுகின்றார். ஆனால், பெண்பாற் புலவர்களை அட்டவணைப் படுத்தும்போது அகம் பாடியோர் 22 பேர் என்றும் புறம்பாடியோர் 11 பேர் என்றும் அகமும் புறமும் பாடியோர் 7 பேர் என்றும் மொத்தம் 40 புலவர்களைச் சுட்டியுள்ளார்.[30]

"சங்ககாலத்தில் பல்வேறு சமூகச் சூழ்நிலையிலிருந்து வந்த 41 பெண்கள் கவிதை எழுதியிருக்கிறார்கள் என்றும் சங்கம் வளர்த்த மதுரை தவிர சேரநாடு, ஆந்திரநாட்டுப் பகுதிகளிலிருந்தும் பெண்கள் எழுதியிருக்கிறார்கள்"[31] என்றும் இராஜேஸ்வரி பாலசுப்பிரமணியம் என்பவர் தமது கட்டுரை ஒன்றில் தெரிவிக்கின்றார்.

சங்கப்பெண்பாற் புலவர்கள் குறித்துப் பல்வேறு நிலைகளில் ஆய்வினை மேற்கொண்டு வரும் தாயம்மாள் அறவாணன், மகடூஉ முன்னிலை என்னும் நூலில்,

> **"சங்கப் பெண் புலவர்கள் 45பேர் கவிதை படைத்துள்ளனர். இது சிந்திக்கத்தக்க ஒன்று. பத்துப் பாட்டில் ஒரே ஒரு பெண் கவிதை யாத்து உள்ளார்."[32]**

என்று கூறுகின்றார். இவரே 'தையல் சொல் கேளீர்' என்னும் பிறிதொரு நூலில் பெண்பாற் புலவர்கள் குறித்து இவ்வாறு கூறுகின்றார்.

> **"சங்க காலத்தில் பெண்ணுக்குக் கல்வி கற்கச் சம வாய்ப்பு நல்கப் பெற்றிருந்தது. இதனைச் சங்க இலக்கியங்களுள் முப்பது பெண்பாற் புலவர்கள் இடம் பெற்றிருந்து உறுதி செய்கின்றது."[33]**

என்று சங்கப் பெண்பாலர் பற்றிய எண்ணிக்கையில் இருவேறான கருத்தை மொழிந்துள்ளார்.

ந.சஞ்சீவி அவர்கள் சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள், என்னும் தமது ஆராய்ச்சி நூலில் சங்கப்பெண்பாற் புலவர்கள் முப்பது பேர்களை அகரவரிசைப் படுத்திக் காட்டுகின்றார்.[34] ஆனால், ந.சஞ்சீவி 36 பெண்பாற் புலவர்கள் பற்றிக் குறிப்பிடுதாக 'பெண்கவிதை மொழியும் பெண்கவிஞர்களும்'[35] என்னும் நூலில் பத்மாவதி விவேகானந்தனும் 'சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்ககளும்,[36] என்னும் நூலில் பெ.சு.மணியும் கூறுகின்றனர். எவ்வயில் இவ்வாறு கூறினர் என்பது ஐயப்பாடாக உள்ளது. ரா.ராகவையங்கார் 'நல்லிசைப் புலமை மெல்லியலார்கள்' என்னும் சங்கப் பெண்பாற் புலவர்கள் பற்றிய ஆய்வு நூலில் தாம் அறிந்த அளவிற்குத் தமிழ்நாட்டில் வாழ்ந்த ஔவையார் உள்ளிட்ட 31புலவர்களைப் பற்றி ஆராய்ந்தாகக் கூறுகின்றார்.[37] மேலும்,'சங்கப் புலவர்கள் 473 பேர்களில் 30 பேர்கள் பெண்பாற் புலவர்கள்,[38] என்று வள்ளிநாயகி குறிப்பிடுகின்றார். இதே போல் தி.இராசகோபாலன் அவர்கள் பெருமைக்குரிய பெண்டிர் என்னும் தமது நூலில் சங்கப் பெண்பாற் புலவர்கள் முப்பதுபேரை நிரல்படுத்திக் காட்டுகின்றார்.[39] சங்கப்புலவர்களின் வரலாற்றை மிக விரிவாக ஆராய்ந்த புலவர் கா.கோவிந்தன் சங்கத்தமிழ்ப் புலவர் வரிசை 4-ல் ஔவையார் ஒருவர் வரலாறு பற்றியும், சங்கத்தமிழ்ப் புலவர்வரிசை 5-ல் சங்கப் பெண்பாற் புலவர்கள் இருபத்தி ஆறுபேரின் வரலாறு பற்றியும் அராய்ந்துள்ளார்.

> **''வாழையடி வாழையாகப் பாக்கள் புனைந்தும் நூற்கள் யாத்தும் தமிழன்னையை அலங்கரித்த பெண்பாற்புலவர்கள் எண்ணிலடங்கார். எனினும் இடையிடையே இவ்வரிசை ஒளி மங்கிக் காணப்படுகிறது.''**[40]

சங்கப் பெண்பாற் புலவர்கள் குறித்த வரலாற்றை ஆராய்வதில் இன்னும் அறிஞர்களிடையேயும் ஆய்வாளர்களிடையேயும் ஒருமித்தக் கருத்து ஏற்படவில்லை என்பதைக் காணமுடிகிறது.

**பாடல் எண்ணிக்கை வேறுபாடு**

சங்கப் பெண்பாற் புலவர்கள் குறித்த எண்ணிக்கையில் காணப்பட்ட வேறுபாட்டினைப் போன்றே அவர்களின் பாடல்கள் குறித்த எண்ணிக்கையிலும்

வேறுபாடுகள் நிலவுகின்றன. ‘சங்கப் புலவர்கள் அனைவரும் பாடிய சிறியவும் பெரியவுமான பாடல்கள் 2381. இத்தொகையுள் முப்பது மகளிரும் பாடிய 190 பாடல்களும் அடங்கும்’’[41] என்று அ.ச.ஞானசம்பந்தன் கூறுகின்றார். சங்ககாலத்தில் வாழ்ந்த ‘பல பெண்பாற் புலவர்கள் பாடிய செயுட்கள் 150 கிடைத்துள்ளன’[42] என்று பொன்.தெய்வநாயகி சோதி தமது கட்டுரை ஒன்றில் தெரிவிக்கின்றார். உதகைப் பொன்னழகன் ‘‘பெண்பாக்களஞ்சியம்’’ என்னும் நூலில் 32 பெண்பாற் புலவர்கள் பற்றிய சுருக்க வரலாற்றைக் கூறி அவர்கள் பாடியனவாக 170 பாடல்களைக் குறிப்பிடுகின்றார். இவ்வாறு பெண்பாற் புலவர்களின் பாடல்கள் குறித்த எண்ணிக்கை வேறுபட்டுள்ளது.

### பெண்பாற் புலவர் வரலாறு

மிகப் பன்னெடுங் காலத்திற்கு முன்பாக நம் பழந்தமிழகத்தில் பெரும்புலமையுடன் வாழ்ந்த பெண்பாற் புலவர்களின் வரலாற்றை அறிவது என்பது பெருமை தரும் ஒன்றாகும். ஆண்பாற் புலவர்களின் எண்ணிக்கையில் பத்தில் ஒருபங்கினராகவே பெண்பாற்புலவர்கள் உள்ளனர். பெரும்பாலான ஆய்வுகள் பெண்பாற்புலவர்களின் பாடல்கருத்துக்களை ஒட்டி அமைந்துள்ளன. இதுவரை பல்வேறு ஆய்வறிஞர்களால் பெரும்பான்மையாக ஒத்துக் கொள்ளப்பட்ட முடிவினைக் கருத்தில் கொண்டு பெண்பாற்புலவர்களின் வரலாறு இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்படுகிறது. மேலும், அவர்களின் பாடல்கள் வாயிலாக வெளிப்படுத்தும் செய்திகள் மற்றும் நடை போன்றவற்றின் அடிப்படையிலும் ஒப்புநோக்கப்படுகிறது. அகம் பாடிய புலவர்கள், புறம் பாடிய புலவர்கள், அகம் புறம் பாடிய புலவர்கள் என்னும் அடிப்படையில் பகுக்கப்பட்டு பெண்பாற் புலவர்களின் வரலாறுகள் ஆராயப்படுகின்றன.

### அகத்திணை பாடிய புலவர்கள்

1. அஞ்சி அத்தை மகள் நாகையார்
2. அஞ்சில் அஞ்சியார்
3. ஆதிமந்தியார்
4. ஊட்டியார்
5. ஊண்பித்தை

6. கச்சிப்பேட்டு நன்னாகையார்

7. கழார்க் கீரன் எயிற்றியார்

8. காமக்காணி நப்பசலையார்

9. காமம் சேர் குளத்தார்

10. குழுழி ஞாழலார் நப்பசலையார்

11. குறமகள் குறிஎயினி

12. குன்றியனார்

13. நக்கண்ணையார்

14. நல்வெள்ளியார்

15. நன்னாகையார்

16. நெடும்பல்லியத்தை

17. நெடுவெண்ணிலவினார்

18. நெய்தற்கார்கியார்

19. பொதுக்கயத்துக் கீரந்தை

20. பொதுவிற் புல்லாளங் கண்ணியர்

21. பொன்மணியார்

22. போந்தைப் பசலையார்

23. மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார்

24. முள்ளியூர் பூதியார்

25. வருமுலையாரித்தி

26. வெண்பூதியார்

27. வெண்மணிப்பூதி

28. வெள்ளி வீதியார்

**புறத்திணைப் பாடிய புலவர்கள்**

1. காவற்பெண்டு
2. குறமகள் இளவெயினி
3. தாயங்கண்ணியார்
4. நெட்டிமையார்
5. பாரிமகளிர்
6. பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு
7. பேய்மகள் இளவெயினி
8. பொத்தியார்
9. பொன்முடியார்
10. மாற்பித்தியார்
11. முடத்தாமக் கண்ணியார்
12. வெண்ணிக் குயத்தியார்
13. வெள்ளெருக்கிலையார்
14. வெள்ளைமாளர்.

**அகம் புறம் பாடிய புலவர்கள்**

1. அள்ளூர் நன்முல்லையார்
2. ஒக்கூர் மாசாத்தியார்
3. ஔவையார்
4. காக்கைப்பாடினி நச்செள்ளையார்
5. பூங்கணுத்திரையார்
6. பெங்கோழி நாயக்கன் மகள் நக்கண்ணையார்
7. மாறோக்கத்து நப்பசலையார்
8. வெறிபாடிய காமக்கண்ணியார்.

**அகத்திணைப் புலவர்கள் வரலாறு**

எட்டுத்தொகையில் அகநூல்களாகிய நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு ஆகிய மூன்று நூல்களிலும் 28 பெண்பாற்புலவர்கள் பாடிய அறுபதைந்திற்கும் மேற்பட்ட (67) பாடல்கள் காணலாகின்றன. அகம் பற்றிப் பாடிய மேற்கண்ட பெண்பாற் புலவர்களின் வரலாறுகள் குறித்து இனி ஆராயப்படுகின்றது.

**1. அஞ்சிய அத்தை மகள் நாகையார்**

'நாகையார்' என்னும் இயற்பெயர் கொண்ட இப்பெண்பாற் புலவர் அஞ்சியின் அத்தை மகள் என்று அறியப்படுகின்றது. தகடூரைத் தலைநகரகக் கொண்டு அரசாண்ட மன்னன் அதியமான் நெடுமான் அஞ்சி ஆவான். இதனால் நாகையார் இவனது உறவினர் என்று கருதப்படுகிறது. இப்புலவர் பாடியவனாக அகநானூற்றில் ஒருபாடல் மட்டுமே காணக்கிடைக்கிறது. அப்பாடலில் நாகையார்,

**''கடும்பரிப் புரவி நெடுந்தேர் அஞ்சி''[43]**

என்று அதியமான் நெடுமானஞ்சியைப் பற்றிப் பாடியுள்ளார். ''நாகையார் இவ்அதியமான் நெடுமானஞ்சியின் கடிய குதிரையையும், நெடியதேரையும், பாணர்பலர் அவன் புகழ்பாடிப் பரவுவதையும் தனது பாட்டில் சிறப்பிக்கின்றார். இவர் பெயரையும், பாட்டின் பொருளையும் ஒருங்கே வைத்து நோக்கினால், இவர் அஞ்சியின் அத்தை மகளே என்று உறுதி கொள்ளலாம்''[44] இவ்வாறு நாகையரின் வரலாறு அறியப்படுவதால், இவர் அரசர் குடியில் பிறந்த பெண்பாலர்களுள் ஒருவர் என்பதும், தகடூர் நாட்டினர் என்பதும் பெறப்படுகின்றது. மேலும், ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, 'நாகையாரை அதியமான் மணம் புரிந்து வாழ்ந்தான்'[45] என்றும் கூறுகின்றார். அவ்வாறு இருப்பின் அதியமானையும் அவனது மகன் பொகுட்டெழினியையும் சிறப்பித்துப்பாடிய ஔவையார் நாகையாரைப் பற்றித் தம் பாடலில் குறிப்பிடாமல் விட்டது மேலும் ஆய்விற்குரியதாக அமைகின்றது.

**2. அஞ்சில் அஞ்சியார்**

' அஞ்சி' என்பது இவருடைய இயற்பெயர். 'அஞ்சில்' என்பது இவரின் ஊர் ஆதலால் அஞ்சில் அஞ்சியார் என அழைக்கப்படுகின்றார். 'அஞ்சி' என்ற

பெயரைக் கொண்டிருப்பதால் இவர் தகடூர் அதியமான் நெடுமான் அஞ்சியின் உறவினராகவும் ஊரினராகவும் இருக்கலாம் எனக் கருதப்படுகின்றது. கடைச் சங்கப் புலவர் வரிசையில் அஞ்சில் ஆந்தையார் என்ற புலவர் ஒருவரும் காணப்படுகின்றார். இதனால் 'அஞ்சில்' என்பது குடிப்பெயரையோ ஊர்ப் பெயரையே குறிப்பதாகக் கொள்ளலாம். ஆனால், பி.நா.ஐயார், "அஞ்சிலென்னும் ஊரினராதலின் அஞ்சிலஞ்சியார் எனப்பட்டார். இஃது ஊர்பற்றி வந்த பெயர்"[46] எனக் கூறுகின்றார் . அஞ்சில் அஞ்சியார் பாடியதாக நற்றிணையில் ஒரு மாடல் (நற்.90) மட்டுமே காணப்படுகிறது. அப்பாடலில் 'அம்சில் ஓதி' என்ற தொடரைப் பயன்படுத்தியுள்ளார். அவை நாளடைவில் 'அஞ்சில்' என மருவி சிறப்புப் பெயராக அமைந்தது எனவும் கூறப்படுகிறது. அஞ்சில் அஞ்சியாரைப் பற்றி மொ.சு.துரைஅரங்கசாமி,

> **"இவ்விடத்தில் அஞ்சி என்பது மற்றவரை அஞ்சச்செய்வது எனப் பொருள்படும். அஃதாவது அஞ்சத்தக்கது அஞ்சி எனப்படும். தெய்வ சக்தியின் வியத்தகு பண்பான, உயிர்களுக்கு அச்சம் ஊட்டுகின்ற தன்மையை, இச்சொல் குறிக்கிறது எனலாம். சங்க இலக்கியப் பதிப்பாசிரியர் இப்பெயரைப் பெண்பாற் பெயராகக் கொண்டுள்ளார்."[47]**

என்று கூறி பெயர் விளக்கம் தருகின்றார். அஞ்சில் அஞ்சியார் மற்றவரை அச்சம் கொள்ளச் செய்யும் தோற்றம் கொண்டவராகவே, தன்மை உடையவராகவோ இருந்திருக்க வாய்ப்பில்லை. அவர் கற்றறிந்த சான்றோராகவும், அதியமான் அஞ்சியின் மரபில் வந்தவராகவும் இருக்கலாம். எனவே, அஞ்சில் அஞ்சியாரும் அரசர் குல மரபில் தோன்றிய பெண்பாற்புலவர்களுள் ஒருவராகக் கருதப்படுகின்றார்.

### 3. ஆதிமந்தியார்

சோழன் கரிகாற் பெருவளத்தானின் மகள் ஆதிமந்தி. ஆடற் கலையில் சிறந்தவள். இவளது கணவன் பெயர் ஆட்டன் அத்தி. இவன் சேர நாட்டின் வஞ்சியைத் தலைநகராகக் கொண்டவன். ஆண்மையும் வீரமும் நிறைந்த இவன் ஆற்றுப் புனலில் குதித்து விளையாடுவதில் வல்லவன். இதனால் 'அத்தி' என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டான். சோழ நாட்டு மக்கள் காவிரியாற்றில் புதுப்புனல் ஏற்படும் பொழுது கரையின் இருமருங்கிலும் இருந்து ஆடிப்பாடி

மகிழ்வது வழக்கம். இப்புனல் விழாவை மன்னரும் திரளான மக்களும் ஒருங்கே கூடிக் கண்டுகளித்தனர். இத்தகைய விழா ஒன்றில் கலந்துகொண்டு விளையாடிய ஆதிமந்தியின் கணவன் ஆட்டன் அத்தி, காவிரியில் இழுத்துச் செல்லப்பட்டான். கணவனை இழந்த ஆதிமந்தி அழுது சிவந்த கண்களோடு வழியெங்கும் தேடி அலைகின்றாள்.

இறுதியாகக் காவிரியாறு கடலில் கலக்கும் இடத்தின் அருகே வந்தபோது மருதி என்பவள் கணவனைக் காணாது தவித்த ஆதிமந்திக்கு ஆட்டன் அத்தியை அடையாளம் காட்டுகின்றாள். பின்னர், ஆதிமந்தி தன் கணவனோடு சேர்ந்ததாகக் கூறப்படுகின்றது. ஆதிமந்தியின் வரலாறு அன்றையப் புலவர்கள் பலரும் அறிந்த ஒன்றாக இருந்துள்ளது. வெள்ளி வீதியார்,

**''ஆதிமந்தி போல பேதுற்று**
**அலந்தனென் உழல்வென் கொல்லோ''**[48]

என்று, ஆதிமந்தியார் கணவனை இழந்து வருந்தித் தேடி திரிந்த நிகழ்வைத் தம் நிலைக்கு உவமை கூறுகின்றார். இதனைப் பரணர்,

**'' ஆதிமந்தி பேதுற்று இனைய''**[49]

என்று கூறி மேலும் உறுதி செய்கின்றார். ஆதிமந்தியின் வரலாற்றைப் பரணர் மிக ஆழமாக அறிந்து பாடியுள்ளார். ஆட்டன் அத்தி காவிரியாற்றில் அடித்துச் செல்லப்பட்டதை.

**''அடுந்திறல் அத்தி ஆடுஅணி நசைஇ**
**நெடுநீர்க் காவிரி கொண்டு ஒளித்தாங்கு''**[50]

என்று கூறுகின்றார். இவ்வாறு ஆட்டன் அத்தி காவிரியாற்றில் அடித்துச் செல்லப்பட்ட பின்னர், ஆதிமந்தி தம் காதல் கணவனைத் தேடி ஊர் ஊராகச் சென்றதைப் பரணர்,

**''ஆட்டன் அத்தியைக் காணிரோ என**
**நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்**
**கடல் கொண்டன்று எனபுனல் ஒளித்தன்று என**
**கலுழ்ந்த கண்ணள் காதலற் கெடுத்த**
**ஆதிமந்தி போல''**[51]

என்று பாடியுள்ளார். இறுதியாக ஆதிமந்திக்கு மாருதி என்பவள் ஆட்டன் அத்தியை அடையாளம் காட்டிய நிகழ்வைப் பரணர்,

**''ஆட்டன் அத்தி நலன் நயந்து உரைஇ**
**--------- ------ -------- ---------**
**மருதி அன்ன மாண்புகழ் பெறீஇயர்''**[52]

என்று உரைக்கின்றார். ஆதிமந்தியின் வரலாற்றைச் சங்கப் புலவர்களுள் பரணர் மட்டுமே அதிகம் பாடியுள்ளார். சிலப்பதிகாரம் பாடிய இளங்கோவடிகள் ஆதிமந்தி சோழன் கரிகால்வளவனின் மகள் என்பதையும், ஆட்டன் அத்தி சேரநாட்டின் வஞ்சியைத் தலைநகராகக் கொண்டவன் என்பதையும், அவன் காவரிப் புதுப்புனலில் அடித்துச் செல்லப்பட்டான் என்பதையும், பின்னர் இருவரும் ஒன்றிணைந்தனர் என்பதையும்,

**''மன்னன் கரிகால் வளவன் மகள் வஞ்சிக்கோன்**
**தன்னைப் புனல்கொள்ளத் தான் புனலின் பின் சென்று**
**கன்னவில் தோளாயோ! எனக் கடல் வந்து**
**முன்னிறுத்திக் காட்ட அவனைத் தழீஇக் கொண்டு**
**பொன்னங் கொடிபோலப் போதந்தாள்''**[53]

என்று கூறுவதால் அறியலாம். மேலும், ''கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வமாகிய கண்ணகி பாராட்டிய கற்புடைய மகளிர் எழுவரில் ஆதிமந்தியாரும் ஒருவர்''[54] எனவும் இளங்கோவடிகள் பாராட்டிள்ளார். ஆதிமந்தியார் பிறந்து மொழிபயின்ற பட்டினம், பூம்புகார்ப் பட்டினமே என்றும் பட்டினத்துப் பிள்ளையாரால் கூறப்படுகின்றது.''[55] இவ்வாறு ஆதிமந்தியாரின் வரலாறு சங்ககாலம் முதல் காப்பிய காலம் வரையிலும் மக்களால் வழிவழியாகப் பேசப்பட்டுவந்த ஒரு செய்தியாக இருந்துள்ளதை அறியலாம். ஆதிமந்தியார் பாடியதாகக் குறுந்தொகையில் ஒருபாடல் (குறுந்.31) மட்டுமே காணப்பெறுகிறது. இவரும் சங்ககால அரசர் மரபில் தோன்றிய புலவர்களில் ஒருவராகத் திகழ்கின்றார்.

### 4. ஊட்டியார்

சங்கப்பெண்பாற் புலவர்களில் ஒருவராக ஊட்டியாரும் போற்றப்படுகின்றார். இவர் பாடியனவாக அகநானுற்றில் இருபாடல்கள் உள்ளன. இதில் குறிஞ்சி நிலத் தன்மைகள் பற்றியும் வெறியாட்டுப் பற்றியும்

வெகுவாகச் சிறப்பித்துப்பாடப்பட்டுள்ளன. சி.பாலசுப்பிரமணியன், ஊட்டியார் பெண்பாலர் எனத் தமது **'சங்ககால மகளிர்'** என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.[56]

> **''அசோகந்தளிரும், முருகனின் கையில் உள்ள அம்பும் இயல்பாகவே செந்நிறம் பெற்றிருந்தாலும் இவற்றிற்குச் செந்நிறம் ஏற்றுதல் என்னும் பொருள்பட 'ஊட்டி அன்ன ஒண்தளிர்ச் செயலை' என்றும் ''ஊட்டியனள் ஊரன்புரள் அன்பு'' என்றும் பாடியதனால் இப்புலவர் ஊட்டியார் என்று அறிஞர்களால் அழைக்கப்பெற்றார்.''**[57]

என்று கூறப்படுகின்றது. வெள்ளிவீதியார், நெட்டிமையார், பொத்தியார், குன்றியனார், நல்வெள்ளியார், வெண்பூதியார், வெண்மணிப் பூதியார் போன்ற பெண்பாற் புலவர்கள் பெயர்களை நோக்குகின்றபோது ஊட்டியாரும் பெண்பாலர் என்பதை உணரலாம். பாடல் தொடரால் பெயர் பெற்றிருப்பினும் அவை பெண்பாற் பெயராகவே அமைந்துள்ளன.

### 5. ஊண்பித்தை

சங்ககாலத்தில் வாழ்ந்த பெண்பாற் புலவர்களில் ஊண்பித்தையாரும் ஒருவர். இவர் பாடியதாகக் குறுந்தொகையில் ஒரு பாடல் மட்டுமே காணப்படுகின்றது. பொருள் தேடிச்சென்ற தலைவனை நினைத்துத் தலைவி வருந்துவதாக அப்பாடல் அமைகிறது. இவர் பெயர் சில இடங்களில் உண்பித்தியார் என்றும் அழைக்கப்படுகின்றது. இவரும் புறநானூற்றில் உள்ள மாற்பித்தியார் என்ற பெண்பாற் புலவரும் ஒருவரே என்ற கருத்தும் நிலவுகின்றது. இதைக் தெளிவுப்படுத்தும் விதமாகப் புலவர் கா.கோவிந்தன்,

> **''இருவரும் வேறு வேறாவர் என்பதை அறிவிப்பதற்காகவே, ஒருவர் பெயர் முன் ஊண் என்பதையும், மற்றொருவர் பெயர் முன் மால் என்பதையும் சேர்த்து, ஊண்பித்தியார், மாற்பித்தியார் என வழங்கியுள்ளார்கள்.''**[58]

என்று கூறுவதிலிருந்து இருவரும் ஒருவரல்லர் என்ற ஐயம் தெளிவுபெறுகின்றது. மேலும், ஊண்பித்தையாரின் வரலாற்றினை அறிவதற்குப் போதுமான சான்றுகள் எதுவும் கிடைக்கப்பெறவில்லை.

### 6. கச்சிப்பேட்டு நன்னாகையார்

குறுந்தொகையில் 'நன்னாகையார்' என்னும் இயற்பெயர் கொண்ட இரண்டு பெண்பாற் புலவர்கள் உள்ளனர். ஒருவர் கச்சிப்பேட்டு நன்னாகையார் எனவும் மற்றொருவர் நன்னாகையார் எனவும் பதிப்பில் காணப்படுகின்றது. இருவரும் ஒருவரே என்னும் கருத்தும், ஒருவரல்லர் என்னும் கருத்தும் அறிஞர்களிடையே நிலவுகின்றது. குறுந்தொகைப் பாடல்களைத் தொகுப்பித்த புலவர், இருவரும் ஒருவரல்லர் என்று வேறுபடுத்திக் காட்டவே ஒருவர் பெயர்முன் ஊரப்பெயரைச் சேர்த்துக் குறிப்பிட்டுள்ளார் என்பது தெளிவு. எனவே, நன்னாகையாரும், கச்சிப்பேட்டு நன்னாகையாரும் ஒருவரல்லர் என்னும் கருத்தே இங்கு கொள்ளத்தக்கதாகும். முதலில் கச்சிப்பேட்டு நன்னாகையாரின் வரலாறு ஆராயப்படுகின்றது. 'நாகையார்' என்ற இயற்பெயர்க் கொண்ட இப்பெண்பாற் புலவர் 'நல்' என்ற அடைமொழிபெற்று நன்னாகையார் என்று அழைக்கப்பெற்றார்.

> **"தொண்டை நாட்டில் சிறப்புற்றோங்கிய காஞ்சிமாநகரை அடுத்துக் கச்சிப்பேடு என்றோர் ஊர் உளது. ஒரு நகரத்தின் புறத்தே அதைச் சார்ந்து இக்காலத்துச் சந்தைபோல் நாள்தோறும் நிகழும் வணிக நிலையத்தைக் குறிக்க வழங்கிய பேட்டு' என்ற பெயர் இன்று 'பேட்டை' எனத் திரிந்து வழங்குகிறது."[59]**

என்று கூறுவதன் வாயிலாக நாகையார் வாழ்ந்த ஊர் 'கச்சிப்பேட்டு' என்பது புலனாகிறது. ஊர்ப்பெயரோடு சேர்த்து இப்பெண்பாற் புலவர் கச்சிப்பேட்டு நன்னாகையார் என அழைக்கப்படுகின்றார். இவர் பாடியனவாகக் குறுந்தொகையில் ஆறு பாடல்கள் காணப்படுகின்றன. இவர் பாடல்கள் அனைத்திலும் தலைமகன் பொருட்பிரிவும், அதனால் ஏற்படும் தலைவியின் வருத்தமும் சிறப்பித்துப் பேசப்படுகின்றன.

### 7. கழார்க் கீரன் எயிற்றியார்

'எயிற்றியார்' என்னும் இயற்பெயருடைய இவர், குறுந்தொகையில் மூன்றும், நற்றிணையில் இரண்டும், அகநானூற்றில் ஐந்துமாக மொத்தம் எட்டுப்பாடல்களைப் பாடியுள்ளார். இப்பெண்பாற் புலவரைப் பற்றி நற்றிணை உரையாசிரியர் பி.நா.ஐயர்,

**“கீரன் என்பவரின் மனைவியார்; பெண்பாற் புலமையார்; சோழநாட்டு மாயூரத்தின் கீழ்பாலுள்ள கழார் என்னும் உரினர்; வேட்டுவமரபினர்.”[60]**

என்று கூறுகின்றார். எயிற்றியாரும்,

**“வெல்போர்ச் சோழர் கழாஅர்க் கொள்ளும்”[61]**

என்று நற்றிணையில் தமது ஊரைப் பற்றிப் பாடியுள்ளார். மேலும்,

**“பார்வை வேட்டுவன்”[62]**

என்று பாடியுள்ளதால், இவர் வேட்டுவ மரபினர் எனவும் அறியப்படுகின்றது. இவரைப் பற்றி புலவர் கா.கோவிந்தன்,

**‘கீரன்’ என்பவர் எயிற்றியாருக்கு தந்தையாகவோ அல்லது கணவராகவோ இருந்திருக்கலாம் எனவும் கருத இடமுண்டாகிறது. மேலும், ‘கீரன்’ என்ற பெயர், ஒரு வகைப் பார்ப்பாருக்கு உரிய குலப்பெயர் என்றும், சங்கை வாள் கொண்டு அறுத்துக் கைவளை முதலியன செய்தல் அக்குலத் தொழிலாம் என்றும் கூறுவர். அஃது எவ்வாறாயினும், அக்குடி, நக்கீரர் போன்ற நல்லிசைப்புலமை சான்ற நல்லாசிரியர் பலர் பிறந்த பெருமையுடையது என்பதில் ஐயமில்லை.’’[63]**

என்று கூறுவதால் எயிற்றியாரின் வரலாறு மேலும் அறியப்படுகின்றது. ‘எயினி’ என்பது போல் ‘எயிற்றி’ என்பதும் குறிஞ்சி நில மக்களுக்கு வழங்கப்படும் பெயராக இருந்துள்ளது. இவர் பாடிய பாடல்களில் தலைவனைப் பிரிந்து வாடைக்காலத்தில் துன்புறும் தலைவியின் நிலை குறித்தும், நாழிகைக் கணக்கர் இரவில் காலக்கணக்கை ஆராய்வது குறித்தும் புலத்தி ஆடைக்குக் கஞ்சிபோடும் வழக்கம் போன்றவை குறித்தும் பாடியுள்ளார்.

## 8. காமக்காணி நப்பசலையார்

மகளிர்க்கு உண்டாகும் பசலை நோய் பற்றிச் சிறப்பித்துப் பாடியதன் விளைவாக இவருக்குப் பசலையார் எனப் பெயர் அமைந்திருக்கலாம். பசலை நோய் குறித்து இவர் பாடியதாக எப்பாடலும் கிடைக்கப்பெறவில்லை. பாண்டிய நாட்டைச் சார்ந்த பெண்பாற் புலவர்களுள் ஒருவராக இவர் கருதப்படுகின்றார்.

> **''இவர் மதுரைக் காமக்கணி நப்பசலையாரெனவுங் கூறப்படுவர்; பெயர் காரணத்தார் பெண்பாலரென்பது தெளிவு''.[64]**

என்று பி.நா.ஐயர் இவரைச் சுட்டுகின்றார். இப்புலவர் நற்றிணையில் ஒருபாடலும், அகநானூற்றில் ஒருபாடலுமாக இரண்டினைப் பாடியுள்ளார் என்று பி.நா.ஐயர் குறிப்பிடுகின்றார்[65]. அகநானூற்றில் மதுரைக் காமக்கணி நப்பாலத்தனார் என்ற புலவர் ஒருவர் காணப்படுகின்றார். இவர் பாடிய பாடல் ஒன்றும் உள்ளது. இருவர் பெயரிலும் 'காமக்கணி' என வருவதை வைத்து இருவரும் ஒருவரே எனக் கருதுவோரும் உள்ளனர். நப்பாலத்தனாரும், நப்சலையாரும் பாண்டிய நாட்டைச் சார்ந்தவர்களாக இருப்பினும் இருவேறானவர் என்பதை உணராலம். காமக்காணி நப்பசலையார் பாடியதாக நற்றிணையில் கிடைக்கும் ஒருபாடலைத் தவிர வேறெதுவும் கிடைக்கப் பெறவில்லை. இப்புலவரைப் பற்றி ஒளவை சு.துரைசாமிப்பிள்ளை,

> **''நப்பசலையார் என்பது இவரது இயற்பெயர். நக்கீரன், நப்பூதன் என்றார் போல இருவரும் நப்பசலையார் எனக் குறிக்கப் பெறுகின்றார். காமக்காணி என்பது பண்டை நாளில் அரசர்களால் விரும்பித்தரப்பட்ட காணியாச்சிச் சிறப்புகளுள் ஒன்று. கூத்தர்க்குக் கூத்தாட்டுக் காணி என்றும், தச்சர்க்குத் தச்சக்காணி என்றும் வழங்கினாற் போல. அரசன் விரும்புவனவற்றை அவன் விரும்பியவாறே செய்த செயல்நலம் கருதி வியந்து அவன் அளிக்க வரும் காணியுரிமையாதலின் அது காமக்காணி எனக் கருதப்பட்டது.''[66]**

என்று கூறுகின்றார். மேலும்,

> **''ஏடு எழுதினோர் காமக்காணி என்பதைக் காமக்கணி என்று பிழையாக எழுதிவிட, அதனைத் திருத்திக் கொள்ளாது காமக்கணி என்றது காமக்கண்ணி என்பதன் விகாரமாகக் கருதி, அது காமாட்சி என்ற வடசொல்லின் மொழிபெயர்ப்பு எனப் பெயர் கூறிவிட்டனர்.''[67]**

என்றும் கூறுகின்றார். காமக்கண்ணி என்பது காமக்காணி என்பதின் திரிபாகக் கூறப்படுகின்றது. மதுரைக் காமக்காணி நப்பசலையார் என்பதே இப்பெண்பாற்புலவரின் பெயராக அமைகின்றது. இவர் தமது பாடலில் இளமை நிறைந்த வாழ்க்கையை சூதாடுகருவிக்கு ஒப்பிட்டுக் கூறும் நயம் சிறப்பளிக்கின்றது.

## 9. காமம் சேர் குளத்தார்

'காமம் சேர் குளத்தார்' என்ற புலவர் பெண்பாலர் வரிசையில் சேர்க்கப்பட்டுள்ளார். இவர் பாடியனவாகக் குறுந்தொகையில் ஒருபாடல் காணக் கிடைக்கிறது. இவரின் இயற்பெயர் இன்னதெனத் தெரியவில்லை.

> **'காமம் சேர்குளம்' எனக் கவிதையிற் கண்ட சொற்றொடரால் இப்பெயர் தோற்று விக்கப்பட்டிருத்தல் கூடும்.''**[68]

என்றும் கூறப்படுகின்றது. காமம் சேர் குளத்தாரின் பாடற் பொருளைக் கொண்டு இவர் பெண்பாலர் எனக் கூறப்படுகின்றார்.

> **''காமம் சேர் குளத்தார் ஒரு பெண் புலவராகவே இருந்திருத்தல் வேண்டும். ஆடவர் பட்டியலில் சேர்க்கப்பட்டிருக்கும் இப்புலவர் ஒரு பெண்ணாகவே இருத்தல் வேண்டும் என்பதைப் பாடலின் பாங்கும் பாடலின் பொருளும் உணர்த்துவதுடன் பாடலின் சொல்லாட்சியும் உணர்த்துகிறது.''**[69]

என்ற தாயம்மாள் அறவாணன் அவர்களின் கூற்று காமம் சேர் குளத்தார் பெண்பாற் புலவர் என்பதை உறுதிப்படுத்துகின்றது. 'நோம் என் நெஞ்சே' என்னும் தொடரை இவர் தமது பாடலில் மூன்று முறை பயன்படுத்தியுள்ளதால், பெண்டீரே உணர்வு மயக்கத்தில்இவ்வாறான தொடரைக் கையாள்வர் என்றும் கூறப்படுகின்றது.

## 10. குமிழி ஞாழலார் நப்பசலையார்

'நப்பசலையார்' என்ற இயற்பெயர் கொண்டவர்களினும் இவரை வேறுபடுத்தவே குமுழி ஞாழலார் என்ற சிறப்புப் பெயரும் சேர்த்து வழங்கப்பட்டது எனலாம். 'குமுழி என்பது இவர் வாழந்த ஊர்ப் பெயராக இருக்கலாம்.

உருண்டையான கொன்றை மரம் போன்ற தோற்றமுள்ளவர் என்பதால் 'குமுழி ஞாழலார்' என்ற பெயர் வந்திருக்காலம் எனவும் பெயர்க்காரணம் கூறப்படுகின்றது. மகளிரின் பசலை பற்றிப் பாடியமையால் மட்டுமின்றி பொதுவாகவே அக்காலமகளிர் 'பசலையார்' என்ற பெயர் கொண்டவர்களாக இருந்துள்ளனர். இவர் பாடியனவாக அகநானூற்றில் நெய்தல் திணை சார்ந்த ஒருபாடல் மட்டுமே காணக்கிடைக்கிறது. இதில் நெய்தல் நிலத்தில் வாழும்

உயிரினங்களின் இயல்புகள் பற்றிக் கூறப்பட்டுள்ளது. மேலும், இவரது பெயர்க் காரணம் குறித்தும், வரலாறு குறித்தும் அறிந்துகொள்ள புறச்சான்றுகள் போதுமானதாய்க் கிடைக்கப்பெறவில்லை.

## 11. குறமகள் குறிஎயினி

நற்றிணையில் குறிஞ்சித் திணை சார்ந்த ஒரு பாடல் (நற்.357) மட்டுமே குறமகள் இளவெயினியாரால் பாடப்பட்டுள்ளது. இவர் குறிஞ்சி நிலப்பகுதியைச் சார்ந்தவர் என்பதைக் குறமகள் என்னும் சிறப்புப் பெயரால் அறியலாம்.

> **“இவர் குறி சொல்லும் வழக்குடையராதலின் குறி எயினி என்று பெயர் பெற்றனர். இக்குறக்குடி மகளிரே கட்டுவித்தியாய்த் தோன்றி குறியிறுத்தல் பண்டை வழக்கு.”**[70]

என்று ரா.ராகவையங்கார் கூறுகின்றார். புறநானூற்றில் காணப்படும் குறமகள் இளவெயினியும் இக்குறிஎயினியும் ஒருவரே என்றும் கூறப்படுகிறது. பி.நா.ஐயர்,

> **“குறிப்பெயினியாரே இளம்பருவத்தே பாடத் தொடங்கியதால் இளவெயினி எனப்பட்டாரென்று ஊகிக்கலாம்.”**[71]

என்று குறிப்பிடுகின்றனார். இளவெயினியும், குறியெனியும் ஒருவரல்லர் என்ற கருத்தும் நிலவுகின்றது.

> **“குறிஎயினி, இளஎயினி என அவர் பெயர்களுள் சில சொற்களை, அவர் பாடிய பாடல்களின் இயல்புக்கேற்ப மாற்றியமைத்து வழங்கியுள்ளனர். ஆகவே, அவ்இளவெயினியாரே இக்குறி எயினியார் என்று கொள்வது சரியன்று.”**[72]

என்றும் கூறப்படுகின்றது. புலவர் பெருமக்களின் வரலாறுகளை அறிவதற்குப் போதிய சான்றுகள் இல்லாமையே இத்தகைய குழப்பங்களுக்கு இடம் தருவதாய் உள்ளது. குறவர் குடியில் பிறந்த பெண்பாலர் பலர் கல்வியிற் சிறந்து விளங்கித் தமது குடிக்குப் பெருமைச் சேர்த்துள்ளனர். குறவர் குடியில் பல பெண்கள் கல்விப் புலமையாளர்களாகச் சிறந்து விளங்கியமையால், அவர்களை வேறுபடுத்திக் காட்டவே, இளவெயினி, குறிஎயினி, பேய்மகள் இளவெயினி என்றும் அழைக்கப்பட்டனர் என்பதை அறியலாம். இளவெயினியும், குறியெயினியும் இருவேறானவர் என்ற கருத்தே இங்கு எடுத்துக்கொள்ளப்படுகிறது.

## 12. குன்றியளார்

சங்கப் பெண்பாற்புலவர்களுள் ஒருவராகக் கருதப்படும் குன்றியாளர் குறுந்தொகையில் மூன்றும், நற்றிணையில் இரண்டும், அகநானூற்றில் இரண்டுமாக மொத்தம் ஏழு பாடல்களைப் பாடியுள்ளார். ரா.ராகவையங்கார் குன்றியாளர் ஒரு பாடலுக்கு மட்டுமே உரிமையுடைவர் எனக் கூறுகின்றார்.

> **"குன்றியனார், குன்றியன் என ஆண்பாற்கண் வருதல் போலக் குன்றியாள் எனப் பெண்பாற்பகண் வந்தது. இவர் பாடியது குறுந்தொகையில் 50-ஆம் பாட்டாகும். இவர் குன்றியனார் உடன்பிறந்தவரோ என ஊகிக்கப்படுகின்றார்."**[73]

என்று கூறப்படுவதால் சற்றுத் தடுமாற்றம் நேரலாம். குன்றியாளர் வேறு, குன்றியன் வேறு என்பதை உரை பாடபேதங்கள் காட்டுகின்றன. நற்றிணைக்குப் பின்னத்தூர் நாராணயசாமி ஐயர் எழுதிய உரையிலும், குறுந்தொகைக்கு உ.வே.சாமிநாதையர் எழுதிய உரையிலும் பாடினோர் வரலாற்றில் குன்றியாளர் பெண்பாலர் என்ற குறிப்பு இல்லை. குறுந்தொகையில் மேலைக் கடற்கரையின் தொண்டி நகரைச் சிறிப்பித்துப் பாடியுள்ளதால் இவர் சேரநாட்டவராகலாம் எனக் கருதப்படுகின்றது. குன்றியன் என்னும் பெயர் கொண்ட ஆண்பாற் புலவர் பாடியதாகக் குறுத்தொகையில் மூன்று பாடல்கள் உள்ளன. இவரும் குன்றியாளாரும் ஒருவரே என்ற கருத்தும் நிலவுகிறது. 'குன்றியாள்' என்ற பாடபேதத்தைக் குறுந்தொகையைப் பதிப்பித்த உ.வே.சா. சுட்டிக்காட்டுகின்றார். அதனை அடிப்படையாகக் கொண்டு குன்றியாள், குன்றியனார் என்ற பெயர்கள் ஒருவரையே குறித்துள்ளதை உணரலாம். இப்புலவர், களவு, கற்பு பற்றிய இருவகை ஒழுக்கங்களையும் சிறப்பித்துப் பாடியுள்ளதாலும், பெரும்பாலான பாடல்கள் தலைவி கூற்றாகவும், தோழி கூற்றாகவும் அமைந்துள்ளதாலும் இவர் பெண்பாலர் எனக் கொள்ளலாம்.

## 13. நக்கண்ணையார்

சங்கப் புலவர் வரிசையில் 'நக்கண்ணையார்' என்னும் இயற்பெயர் உடைய இருபுலவர்கள் உள்ளனர். பெருங்கோழி நாய்க்கன் மகள் நக்கண்ணையார் என்ற பெண்பாலர் ஒருவர் புறநானூற்றில் மூன்று பாடல்கள்

பாடியுள்ளார். இவரும் நக்கண்ணையாரும் ஒருவரே என்று கூறுவாரும் உள்ளனர். நக்கண்ணையார் பற்றி ரா.ராகவையங்கார்,

> **"நக்கண்ணனார் (அகம்.252) என ஆண்பாற்கண் வருதல் போல நக்கண்ணையார் எனப் பெண்பாற்கண் வந்ததாம். இவர் பாடியன நற்றிணையில் 19,87 ஆம் பாடல்களாம்."[74]**

எனக் கூறுகின்றார். நற்றிணையில் சோழநாட்டின் ஆர்க்காட்டைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த 'அழிசி' என்ற குறுநிலமன்னனைச் சிறப்பித்துப் பாடியுள்ளதால் இவரும் சோழ நாட்டைச் சார்ந்தவராக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

## 14. நல்வெள்ளியார்

மதுரையைச் சார்ந்த நல்வெள்ளியார் என்னும் இப்பெண்பாற்புலவர் நற்றிணையில் இரண்டும், குறுந்தொகையில் ஒன்றும், அகநானூற்றில் ஒன்றுமாக மொத்தம் நான்கு பாடல்களைப் பாடியுள்ளார்.

> **"இவர் மதுரை நல்வெள்ளியார் எனவும் நல்லொளியார் எனவும் கூறப்படுகின்றார்."[75]**

இது, ஏடெழுதுவோரின் மிகை எனப் பி.நா.ஐயார் கூறுகின்றார். உ.வே.சாமிநாதையர்,

> **"வெள்ளியார் என்னும் சுக்கிரனுடைய பெயர் இவருக்காயிற்றுப் போலும்."[76]**

என்று இப்புலவரின் பெயர்க்காரணம் குறித்துக் கூறுகின்றார். மேலும், 'தமிழரின் கிழமைப் பெயர்களில் ஒன்றான வெள்ளி என்னும் பெயரை அடியொற்றி இவர் பெயர் அமைந்திருக்கலாம் எனவும், பெண்பால் ஈறான இகரத்தைத் தமது பெயரில் கொண்டிருப்பதால் இவர் பெண்பாலர் எனவும் கூறப்படுகின்றது.[77]

## 15. நன்னாகையார்

இப்பெண்பாற் புலவர் கச்சிப்பேட்டு நன்னாகையாரினும் வேறானவர் என்பது முன்னரே சுட்டிக் காட்டப்பட்டது. நன்னாகையார் பாடியனவாகக் குறுந்தொகையில் இரு பாடல்கள் (குறுந்.118,325) காணப்படுகின்றன.

**“நன்னாகனார் (புறம்.381) என ஆண்பாற்கண் வருதல் போல நன்னாகையார் எனப் பெண்பால் பற்றி வந்ததாம்.”**[78]

என்று கூறும் ரா.ராகவையங்கார் இவர் பெண்பாலினர் என்பதை உறுதிப்படுத்துகின்றார். உ.வே.சாமிநாதையரும் நன்னாகையார் பற்றி,

**“இவர் ஒரு பெண்பாற் புலவர் மாலையிற் கதவடைப்போர், வருவீர் உள்ளிரோ’ என்று கூப்பிடுதல் வழக்கமென்பது இவர் பாட்டால் தெரிகிறது (118). பெண்பாலராகிய இப்புலவர் தலைவி கூற்றாகவே இந்த இரண்டு செய்யுட்களையும் அமைந்துள்ளார்.**[79]**”**

என்று கூறுகின்றார். இதனால் இவர் கச்சிப்பேட்டு நன்னாகையாரினும் வேறானவர் என்பதும், பெண்பாலினர் என்பதும் பெறப்படுகின்றது. ‘நாகையார்’ என இயற்பெயர் கொண்டுள்ளதால் இவர் ‘நாகர்’ குலத்தைச் சார்ந்தவராகவும் இருக்கலாம் என ஊகிக்கப்படுகின்றது.

## 16. நெடும்பல்லியத்தை

இவர் குறுந்தொகையில் மருதத்திணை சார்ந்த பரத்தையர் பிரிவு குறித்த இரு பாடல்களைப் பாடியுள்ளனார். இவரைப் பற்றி உ.வே.சா.,

**“இவர் ஒரு பெண்பாற் புலவர். இவர் நெடும்பல்லியத்தனாரின் உடன் பிறந்தாரோவென்று ஊகிக்கப்படுகின்றார்.”**[80]

என்று கூறுகின்றார். நா.சி.கந்தையா பிள்ளை,

**“இவர் பெண்பாலினர் போலும்”**[81]

என்று கூறிச் செல்கின்றார். இவது பெயரில் உள்ள ‘பல்லியம்’ என்பதற்குச் ‘சங்கீதம்,’ வாச்சியப் பொது’[82] எனப் பொருள் கூறப்படுகின்றது. இதனால் இப்புலவர் இசையில் தேர்ச்சி பெற்றவராகவோ அல்லது இசைக் குடும்பத்தைச் சார்ந்தவராகவோ இருந்திருக்கக் கூடும் எனக் கருதப்படுகின்றது.

## 17. நெடுவெண்ணிலவினார்

இப்புலவர் குறுந்தொகையில் ஒரு பாடலைப் பாடிச்சிறப்புப் பெற்றுள்ளார்.

**“இவர் பெண்பாலின் போலும்”.**[83]

என்று நா.சி.கந்தையாபிள்ளைக் குறிப்பிடுகின்றார். இவரது வரலாறு குறித்தச் செய்திகள் அதிகம் கிடைக்கப்பெறாத நிலையில் உ.வே.சாமி நாதையர்,

> **''களவுக் காலத்தில் இரவுக் குறிக்கண் வரும் தலைவனுக்கு இடையூறாக இருக்கும் நிலவை ''நெடுவெண்ணிலவே'' என்று விளித்துத் தோழி வெறுப்புக் குறிப்புபடக் கூறுவதாகச் செய்யுள் பாடியதால் இவர் இப்பெயரைப் பெற்றார்.''**[84]

என்று கூறுவதனால் பாடல் தொடரால் பெயர் பெற்றவர் இவர் எனக் கருதப்படுகின்றது. இருந்தபோதும், இவரது பாடல் தலைவன் ஒருவனது வரவை நெடுநாள் எதிர்ப்பார்த்திருக்கும் தலைவி தனது உணர்வுகளை வெண்ணிலவின் மீது ஏற்றிக் கூறுவதாக அமைந்துள்ளது. பண்டைய புலவர் பெருமக்கள், மகளிரின் நெற்றியைப் பிறைநிலவிற்கும் முகத்தை முழுநிலவிற்கும் உவமைக் கூறிச் சிறப்பிப்பது வழக்கம். வெண்ணிலவினார் என்பது ஆண்பாற்கு உரியபெயரல்ல என்பதும் பெண்பாலர்க்கு மட்டுமே வைக்கும் பெயர் எனக் கருதப்படுவதாலும், கடைச்சங்கப் புலவர்களில் ஒருவரான 'வெண்ணிலவினார்' பெண்பாலர் என்னும் வரிசையில் இடம்பெறுகின்றார். 'நெடு' என்பது தலைவியின் நீண்ட நாள் துன்பத்தைக் குறிப்பதாகக் கருதப்படுகின்றது.

## 18. நெய்தற் கார்க்கியார்

குறுந்தொகையில் நெய்தற் கார்க்கியார் பாடியனவாக (குறுந்.55) ஒரு பாடல் உள்ளது. இவர் நெய்தல் திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளமையால் இப்பெயர் பெற்றுள்ளார்.

> **''அகச்சான்றுகளையும் புறச்சான்றுகளையும் ஆராயும் பொழுது நெய்தல் கார்க்கியார் பெண்புலவர் என்று கருத இடம் இருக்கிறது.''**[85]

நெய்தல் கார்க்கியன் என்னும் ஆண்பாற் புலவர் ஒருவரும் குறுந்தொகையில் (212) காணப்படுகின்றார். இவரும் நெய்தல் திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளதனால், நெய்தல் கார்க்கியன் என்னும் பெயர் பெற்றுள்ளார். பெயரளவிலேயே கார்க்கியார் பெண்பாலர் எனவும் கார்கியன் ஆண்பாலர் எனவும் தெளியலாம். ''உபநிடத காலத்தில் கார்க்கி என்னும் ஒரு பெண்புலவர் வடமொழியில் நன்கு தேர்ச்சிப் பெற்று வந்தார் என்று கூறப்படுகின்றது.''[86]

சங்ககாலம் முதலாகவே வடமொழியும் தமிழ்மொழியும் இரண்டறக் கலந்துள்ளதைக் காணலாம். அதுபோல், வடமொழிப் பெயர்களைக் கொண்டவர்களாகச் சில சங்கப் புலவர்களும் உள்ளனர். கார்க்கியாரைப் பற்றி தாயம்மாள் அறவாணன்,

> **"வடமொழியில் இப்பெயருக்கு நீரில் இருந்து தோன்றியவர் என்பதாகும். தமிழிலும் நீரோடு நெருங்கிய தொடர்புடைய நெய்தல் திணையில் பாடல்களைப் பாடிய பெண்புலவர் கார்க்கியார் என்பது மேலும் ஒரு பொருந்தம் உடையது ஆகிறது."**[87]

என்று கூறுகின்றார். இதனால் கார்க்கியார் பெண்பாற் புலவர் என்பது தெற்றெென விளங்கும்.

## 19. பொதுக்கயத்துக் கீரந்தை

இப்புலவர் பாடியனவாக குறுந்தொகையில் (37) ஒரு பாடல் உள்ளது. இப்பாடல் குறிஞ்சித்திணையில் தலைவன் கூற்றில் அமைத்துப்பாடப்பட்டுள்ளது. இப்புலவரைப் பற்றித் தாயம்மாள் அறவாணன்,

> **"கீரந்தை என்பது இவர்தம் இயற்பெயர் ஆகும். இப்பெயர் பெண்பாற் பெயராக இருக்கும் என்பதை நெடும்பல்லியத்தை, ஊண்பித்தை என்னும் ஏனைய பெண் பாற் பெயர்களும் உறுதி செய்கின்றன."**[88]

என்றும், கூறி நக்கீரர், மோசிக்கீரனார், குடவாயில் கீர்த்தனார், கீரத்தனார் போன்ற ஆண்பாற் புலவர்களையும் குறிப்பிட்டுக் காட்டுகின்றார். 'கயம்' என்பது குளத்தைக் குறிக்கின்றது. பொதுக்கயம் என்பது ஊர்க்குளம் என்று பொருள் பட்டாலும், இது அவரின் ஊர்ப்பெயராக இருக்கவும் இடமுண்டாகிறது. திருவள்ளுவமாலையில் 'கீரந்தை' என்னும் புலவர் ஒருவர் காணப்படுகின்றார். அவரினும் இவர் வேறானவர் என்பதற்குப் 'பொதுக்கயம்' என்ற சிறப்புப் பெயர் சான்றாக அமைகிறது.

## 20. பொதும்பில் புல்லாளங் கண்ணியார்

'கண்ணியார்' என்பது இப்பெண்பாற் புலவரின் இயற்பெயர். பொதும்பில் என்பது ஊர்ப் பெயர். அதனால் பொதும்பில் புல்லாளங் கண்ணியார் என அழைக்க ப்படுகின்றார். இவர் அகநானூற்றில் முல்லைத் திணை சார்ந்த ஒரு பாடல்

மட்டுமே பாடியுள்ளார். இதில், முல்லை நிலத்தின் தன்மையும், இயற்கை வருணனையும், உயிரினங்களின் இயல்பு நிலையும் காட்சிப்படுத்தப்படுகின்றன.

## 21. பொன்மணியார்

இப்புலவர் குறுந்தொகையில் ஒரு பாடல் மட்டுமே பாடிச் சிறப்புப்பெற்றுள்ளார். இவரைப்பற்றி குறுந்தொகை உரையாசிரியர் உ.வே.சா.,

> **"கார்காலத்தில் மயில்கள் கூவுவது தலைவிக்கு வருத்தத்தைத் தரும் என்பது இவர் குறித்துள்ளார். இவர் ஒரு பெண்பாற் புலவர்."[89]**

என்று கூறுகின்றார். "இவர் பெண்பாலினர் என்பதைப் பொன் தெய்வநாயக சோதி செந்தமிழச் செல்வி இதழில் தமது கட்டுரை மூலம் உறுதி செய்கின்றார்."[90]

மேலும், பொன்மணியாரைப் பற்றிய செய்திகள் காணக்கிடைக்கப் பெறவில்லை.

## 22. போந்தைப் பசலையார்

'பசலையார்' என்பது இவரது இயற்பெயர். போந்தை என்பது சிறப்புப் பெயர். போந்தை என்பதற்கு 'அனுட நாள்'[91] எனவும், அனுடம் என்பதற்கு 'ஓர் நட்சத்திரம்'[92] எனவும் பொருள் கூறப்படுகின்றது. பிறந்தநாள் பலனைக் கொண்டு இப்புலவரின் பெயர் அமைந்திருக்கக் கூடும் எனக் கருதப்படுகின்றது. இவர் பாடியனவாக அகநானூற்றில் நெய்தல் திணை (அகம்.110) சார்ந்த ஒரு பாடல் மட்டுமே காணக்கிடைக்கின்றது. தோழி செவிலிக்குத் தலைவியின் களவொழுக்கத்தை வெளிப்படுத்துவதாக உள்ள இப்பாடல் நாடகப் பாங்கில் அமைந்துள்ளது.

## 23. மதுரை ஓலைக்கடையத்தார் நல்வெள்ளையார்

பாண்டிய நாட்டின் ஓலைக்கடையம் என்ற ஊரைச் சார்ந்தவர் நல்வெள்ளையார். இவரை பற்றி பி.நா.ஐயர்,

> **"இவரது பெயரினால் இவர் பெண்பாலரென்று ஊகிக்கப்படுகின்றது. நிறையடுகாமம் சிறையடு கடும்புனலோ டொத்ததென்றிவர் கூறியது வியக்கத்தக்கது. இவர் இமயமலையையுங் கங்கையாற்றையும் கூறியுள்ளார்."[93]**

என்று கூறுவதால் இப்புலவரின் சிறப்பை உணரலாம். இவர் பாடியனவாக நற்றிணையில் (250,369) இரண்டு பாடல்கள் உள்ளன. இவரது பாடல்கள் வரலாற்றுக் குறிப்புகளைக் கொண்டனவாக அமைந்துள்ளன.

## 24. முள்ளியூர் பூதியார்

இப்பெண்பாற் புலவரின் இயற்பெயர் பூதியார் என்பதாகும். இவரது ஊர்ப்பெயரோடு சேர்த்து முள்ளியூர் பூதியார் என அழைக்கப்படுகின்றார். முள்ளியூர் மலையமான் திருமுடிக்காரியின் ஆட்சிக்குட்பட்ட ஓர் ஊராகும். இப்புலவரைப் பற்றி தாயம்மாள் அறவாணன்,

> **“பூதன் எனும் ஆண்பால் ஈற்றை உடைய புலவர்கள் சங்க இலக்கியத்தில் காணப்பெறுகின்றனர். பூதி எனும் பெண்பால் ஈற்றை உடைய புலவரும் காணப்பெறுகின்றனர். ஆகவே இவர் பெண்புலவராக இருத்தல் வேண்டும்.”**[94]

எனக் கூறுகின்றார். இவர் பாடிய ஒரு பாடல் மட்டுமே அகநானூற்றில் உள்ளது. நன்னன் என்ற குறுநில மன்னனைப் பற்றியும், அவன் மலைவளம் பற்றியும் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

## 25. வருமுலையாரித்தி

பெயரளவில் இவர் இளம் வயதுடைய பெண்பாற் புலவர் என்று தெரிகிறது. இப்புலவர் பாடியனவாகக் குறுந்தொகையில் தோழி கூற்றில் அமைந்த ஒரு பாடல் (குறுந்.176) மட்டுமே காணப்படுகின்றது. இவர், வருமுலையாரித்தியார் எனவும் அழைக்கபடுகின்றார். இவரைப் பற்றி ரா.ராகவையங்கார்,

> **“இவர், பெயர்க்கண் உள்ள வருமுலை யென்னும் அடையால் பெண் பாலராகக் கருதப்படுகின்றார்.”**[95.]

எனக் கூறுகின்றார். மேலும், இவர் பெயருக்குரிய காரணம் பற்றி அறிய குறிப்புகள் எதுவும் கிடைக்கப்படவில்லை.

**26. வெண்பூதியார்**

சங்கப் பெண்பாற் புலவர்களுள் ஒருவராக வெண்பூதியார் கருதப்படுகின்றார். இவர், ஆண்பாலரென்றும் கூறப்படுகின்றது. இப்புலவரைப் பற்றி உ.வே.சாமிநாதையர்,

> **"வெள்ளூர் கிழார் மகனார் வெண்பூதியார் என்பாரும் இவரும் ஒருவரே. பெயரளவில் பெண்பாலராக இருக்கலாமென்று தோன்றினாலும் வெள்ளூர் கிழார் மகனார் என்றிருப்பதால் ஆண்பாலென்றே கொள்ள வேண்டும்."[96]**

எனக் கூறுகின்றார். உ.வே.சா. அவர்களின் இக்கூற்றை மறுத்துத் தாயம்மாள் அறவாணன்,

> **"வெள்ளூர்கிழார் மகனார் என்ற குறிப்பு மகளார் என்று இருத்தல் வேண்டும். ஒப்பீடு அஞ்சி அத்தை மகள் நாகையார், பெருங்கோழி நாய்க்கன் மகள் நக்கண்ணையார், பேய் மகள் இளவெயினி(புறம்11). எனவேதான் வையாபுரிப் பிள்ளை தம் சங்க இலக்கியப் பதிப்பில் வெண்பூதியார் என்னும் புலவரின் பெயரிலேயே குறுந்தொகை 97,174,219 ஆகிய மூன்று பாடல்களையும் தொடுத்தனர் ஆதல் வேண்டும்."[97]**

என்று கூறி வெண்பூதியாரை பெண்பாலர் என உறுதிப்படுத்துகின்றார். பெண்பாற் புலவர்கள் குறித்த ஆய்வினை முதலில் மேற்கொண்ட ரா.ராகவையங்கார்,

> **"வெண்பூதன் (குறுந்தொகை 83) என ஆண்பாற்கண் வருதலால் இப்பெயர் பெண்பால் பற்றியதாகும். குறுந்தொகையில் 97,174-ஆம் பாடல்கள் இவர் பாடியன."[98]**

என்று கூறுவது வெண்பூதியார் பெண்பாலர் என்பதை ஐயமின்றி தெளிவு படுத்துகின்றது. மேலும், வெண்பூதியார் பெண்பாலர் என்பதை, ஔவை து.நடராசன் 'பெண்பாற் புலவர் - சங்ககாலம்' என்ற தமது ஆய்வு நூலில் சுட்டிக்காட்டுகின்றார். பெண்பாற் புலவர்கள் பற்றி ஆராய்ந்த பெ.சு.மணி அவர்களும் 'சங்க கால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்' என்ற தமது நூலில் வெண்பூதியாரை பெண்பாற் புலவர்கள் வரிசையில் வைத்து ஆராய்ந்துள்ளது குறிப்பிடத்தக்கது. மேலும், ரா.ராகவையங்காரின் கருத்தினை

அடியொற்றி வெண்பூதியாரின் இருபாடல்கள் இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன.

## 27. வெண்மணிப்பூதி

குறுந்தொகையில் வெண்மணிப் பூதியார் பாடியனவாக தலைவி கூற்றில் அமைந்த ஒரு பாடல் (குறுந்.299) உள்ளது. 'பூதி' என்பதற்குச் செல்வம், கொடுமை, விபூதி எனப் பொருள் கொள்ளப்படுகின்றன. 'வெண்மணி' என்பது அரியலூர் பக்கத்தில் உள்ள ஓர் ஊர் என்றும் வெண்மணிப்பூதியார் அவ்வூரைச் சார்ந்தவர் என்றும் உ.வே.சாமிநாதையார் கூறுகின்றார்.[99]

## 28. வெள்ளி வீதியார்

கடைச் சங்க காலத்து வாழ்ந்த பெண்பாற் புலவர்களுள் ஔவைக்கு அடுத்த நிலையில் வைத்தப் போற்றத்தக்கப் பெருமையுடையவர் வெள்ளி வீதியார். இவர் சங்க இலக்கியத்தில் அகம் சார்ந்த பதிமூன்று பாடல்களைப் பாடியுள்ளார். இதில் களவுப் பாடல்கள் ஐந்தும் கற்புப் பாடல்கள் எட்டும் அடங்கும். இவரது பாடல் சிறப்புக் குறித்து வ.சுப.மாணிக்கம்,

> **"புலமையாளின் கற்புப் பாடல்கள் எட்டும் தலைமகள் கூற்றெனக் கொள்ளக் கிடைக்கின்றன. களவுபோல் இவைகளும் மிக்க காமத்தைப் புலப்படுத்துவன."**[100]

என்று கூறுகின்றார். வெள்ளிவீதியார் தம் வாழ்வில் ஏற்பட்ட நிகழ்வுகளையே பாடல்களிலும் பதிவு செய்துள்ளார் என்பது அறிஞர்கள் பலரின் கருத்தாக அமைகிறது.

> **"வாழ்ககையில் தாம் அனுபவித்த துன்ப உணர்ச்சிகளையெல்லாம் தமிழ்க் கவிதையில் வடித்தெடுத்தார். காதல் தோல்வியுற்ற அவர் தம் கவலை எல்லாவற்றையும் கவிதையாகப் படைத்தார்."**[101]

என்றும் இவர் பற்றிக் கூறப்படுகின்றது. வெள்ளிவீதியார் தம் காதல் கணவனைப் பிரிந்து இருந்தபோது ஏற்பட்ட துன்ப உணர்ச்சிகளையே தமது பாடலில் வைத்துப் பாடினார். ஆதிமந்தியின் வரலாற்றோடு தமது கதையை இணைத்துக் கூறுவதன் வழி இதனை அறியலாம். ஆதிமந்தியார் காவிரியாற்றில் மூழ்கிய தமது கணவரைத்

தேடி அலைந்ததைப் போல் இவரும் தமது கணவரைத் தேடி அலைந்து திரிந்தார் என்பதை,

**"ஆதிமந்தி போலப் பேதுற்று**
**அலந்தனென் உழல்வென் கொல்லோ"**[102]

என்று வரும் வெள்ளிவீதியாரின் பாடலடிகளே காட்சிப்படுத்துகின்றன. ஔவையார் வெள்ளி வீதியாரைப் பற்றி,

**"நெறிபடு கவலை நிரம்பா நீளிடை**
**வெள்ளி வீதியைப் போல"**[103]

என்று கூறுகின்றார்.

> **"ஔவையாரின் உவமத்தால், வெள்ளிவீதியார் நிறையற்ற காமத்தார் எனவும், கணவன் இடம் நாடி அலைந்தவர் எனவும் அறிந்து கொள்கின்றோம்."**[104]

மேலும், வெள்ளிவீதியாரைப் பற்றி ஔவை சு.துரைசாமிப்பிள்ளை,

> **"அகநா. 147 - ஆம் பாடலால் ஔவையாருக்குக் காலத்தால் முந்தியவர் வெள்ளிவீதியார் என்பதும், அகநா.45 -ஆம் பாடலால் வெள்ளி வீதியாருக்குக் காலத்தால் முந்தியவர் ஆதிமந்தியாரென்பதும் விளங்குகின்றன."**[105]

என்று கூறுகின்றார். வெள்ளிவீதியாரைப் பற்றி ஔவையாரும், ஆதிமந்தியாரைப் பற்றி வெள்ளிவீதியாரும் நன்கு அறிந்திருந்துள்ளனர் என்பதை இதனால் அறியலாம். வெள்ளி வீதியார் தமது அனுபவ உண்மைகளையே பாடலாகப் பாடினார் என்றும், ஆதிமந்தியாரும் இவரும் ஒரே காலத்தவர் என்றும் கூறப்படுகின்றது. இதனை உ.வே.சா,

> **"இவர் பாடிய பாடல்கள் பல தம் அனுபவங்களேயாகும் என்பதும், இங்ஙனமே தம் அனுபவங்களைக் கூறும் ஆதிமந்தியார் என்ற பெண்புலவரும் இவரும் ஒரு காலத்தவர் என்பதும் தொல்.அகத்.சூ.54-க்கு நச்சினார்க்கினியர் எழுதிய விசேட உரையால் தெரிகின்றன."**[106]

என்று கூறுவதால் அறியலாம். வெள்ளிவீதியார் எந்த மன்னர் காலத்தில் வாழ்ந்தவர் என்பதை அறியமுடியவில்லை. ஆதிமந்தியாரும் இவரும் ஒரே காலத்தவர் எனக் கூறப்படுவதால் கரிகால்பெருவளத்தான் காலத்தவராக இருக்கலாம் எனக் கருதப்படுகின்றது.

''வெள்ளிவீதியார் தம் காதல் வாழ்வில் ஏற்பட்ட முறிவால் அவரது உள்ளத்தில் பீறிட்ட துன்ப உணர்ச்சிகலெல்லாம் பாட்டாக மலர்ந்தது''[107] என்றும் கூறப்படுகின்றது. இக்கருத்தை மறுத்துரைப்போரும் உள்ளனர். கா.பூரணச் சந்திரன்,

> **''வெள்ளிவீதியார் காட்டும் தலைவியின் செய்கையை வெள்ளி வீதியார் மீதே ஏற்றிக்காணும் போக்கு தவறானது.''[108]**

என்று மறுத்துரைக்கின்றார். பாடல் கருத்துகளைக் கொண்டு வெள்ளிவீதியாரின் வாழ்வியலைப் பார்ப்பது தவறானதாக அமையும் என்பதும் இதனால் பெறப்படுகின்றது. இருந்தபோதும் வெள்ளிவீதியாரின் வாழ்வியல் அனுபவங்களையே அவரது பாடல்கள் காட்டுகின்றன என்பதே பலரது முடிபாக இருந்து வருகிறது.

> **''வெள்ளி வீதியார் என்னும் இப்பெயரில் உள்ள வீதி என்னும் சொல் சங்க நூல்களில் காணப்படவில்லை. ஆனால் சங்கச் சான்றோராகிய ஔவையார் 'வெள்ளி வீதியார்' என்றே இப்புலவரைச் சுட்டியுள்ளார். ''தாழையின் வெள்ளிய வீழ்து என்றாராக அது வெள்ளி வீதி என மருவியிருக்கலாம் எனக் கருதினார் நாவலர் வேங்கடசாமி நாட்டார்'' என்றும் ஏடு ஒன்றில் இவர் பெயர் 'வெள்ளி விடியலார்' என்றிருப்பதாகவும் ஔவை சு.துரைசாமிப்பிள்ளை குறித்துள்ளார்.''[109]**

என்று சரளா ராசகோபாலன் அவர்கள் இப்புலவரைப் பற்றி கருத்துக் கூறுகின்றார். மதுரையில் வெள்ளியம்பல வீதி என்ற ஒரு வீதி இருந்ததென்றும் அது நாளடைவில் வெள்ளி வீதி என்று குறைத்து வழங்கப்பட்ட தென்றும், அவ்வீதியில் வாழ்ந்தமையால் இவர் வெள்ளிவீதியார் என அழைக்கப்பெற்றதாகவும் கூறப்படுகிறது. பி.நா.ஐயர்,

> **''மதுரையில் வெள்ளியம் பலத் தெருவில் இருந்தமையால் இப்பெயர் பெற்றார் போலும்.''[110]**

எனக் குறிப்பிடுகின்றார். இவர் யாப்பியல் நூல் ஒன்றினை இயற்றியுள்ளார் என்றும் கூறப்படுகிறது.

**புறத்திணைப் புலவர்கள் வரலாறு**

அகத்திணை பாடிய பெண்பாலர்களைவிட புறத்திணைப் பற்றி பாடியவர்கள் மிகக் குறைவு. சங்கப்பாடல்களில் புறத்திணை பற்றி மட்டும் பாடிய பெண்பாற் புலவர்கள் பதினான்குப் பேர் மட்டுமே காணப்படுகின்றனர். இவர்கள் பாடியனவாக பதினைந்துப் புறப்பாடல்கள் உள்ளன. பெண்பாற் புலவர்கள் பாடிய புறத்திணைப் பாடல்களில் பெரும்பாலும் கைமை நோன்பு, பெண்களின் வீரம், போன்ற செய்திகள் அதிகம் இடம் பெற்றுள்ளன. பெண்களின் வீரம் குறித்துப் பாடப்படும் மூதின் முல்லைப் பாடல்களில் இப்புலவர்கள் தமது உணர்ச்சிபூர்வமான கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளனர். புறத்திணைப் புலவர்கள் பற்றிய வரலாறு மிகச் சுருக்கமாகப் பின்வருமாறு அமைகிறது.

**1. காவற்பெண்டு**

இவர் மறவர் குடியில் பிறந்து கல்வியில் சிறந்து விளங்கிய பெண்பாற்புலவர்களுள் ஒருவர். இவர் பாடியதாக புறநானூற்றில் ஒரு பாடல் (புறம்.86) மட்டுமே உள்ளது. இவரது பாடல் மறக்குடி மகளிரின் வீரவுணர்வுகளை வெளிக்காட்டுவதாக அமைந்துள்ளது. காவற்பெண்டு என்பது செவிலித்தாயைக் குறிக்கும் பெயராகும். இவர், ‘சோழன் போரவைக்கோ பெருநற்கிள்ளியின் செவிலித்தாய்’ எனவும் கூறப்படுகின்றார்.[111] காவற்பெண்டு என்னும் இப்பெயர் சில பதிப்புகளில் காதற்பெண்டு என்றும் குறிக்கப்பட்டுள்ளது. இப்புலவரின் பெயர்க்காரணம் குறித்து வள்ளிநாயகி,

> **“காவற்பெண்டு என்னும் இப்பெயர், செய்தொழில் காரணமாகத் தோன்றியதாக இருக்கலாம். அக்காலத்தில் மன்னர்களின் குழந்தைகளுக்குச் செவிலித்தாயாக இருந்து வளர்த்து வந்தோரைக் காவற் பெண்டிர் என்று அழைப்பது வழக்கம். அந்த வழக்கத்தின் படி இப்பெண் புலவரின் பெயர் தோன்றியிருக்கலாம்.”[112]**

என்று கூறி விளக்குகின்றார். இவரைப் பற்றி ஔவை சு.துரைசாமிப்பிள்ளை,

**"காவற் பெண்டென்பவர் சிறந்த மறக்குடியில் பிறந்து வளர்ந்து மறக்குடியில் வாழ்க்கைப் பட்டவர்; இனிய செய்யுள் செய்யும் சிறப்புடையவர்."[113]**

என்று இப்புலவரின் குடிப்பெருமையும் கல்விச்சிறப்பும் குறித்து கூறுகின்றார். காவற்பெண்டு என்பவர் தலைவன் ஒருவனை வளர்த்ததால் இப்பெயர்ப் பெற்றார் என்றும் "இவ்வாறின்றி, அரசனது மெய்க்காவல், மனைக் காவல், ஊர்க்காவல், பாடிக்காவல் இவற்றிலொன்றிற்குரிய காவற்குடிக் கண்ணே பிறந்த பெண்டு ஆவள் எனினும் அமையும்[114]" என்றும் இவர் குறித்துப் பேசப்படுகின்றது.

## 2. குறமகள் இளவெயினி

இப்புலவர் குறிஞ்சிநிலக் குறவர் குடியில் பிறந்து, இளம் வயதிலேயே கல்விப் புலமையில் சிறப்புற்று விளங்கியவர். 'இளவெயினி' என்பது இவரது இயற்பெயர். தாம் பிறந்த குறவர் குடியின் பெருமையைப் பறைசாற்றும் வகையில் 'குறமகள் இளவெயினி' எனப் பெயர்ப் பெற்றுள்ளார். குறிஞ்சி நில ஆடவர்கள் குறவர், எயினர், எனவும் பெண்டிர் குறத்தி, எயினி எனவும் அழைக்கப்படுகின்றனர். இவர் ஏறைக்கோன் என்பவனைத் தமது பாடலில் புனைந்துப் பாடியுள்ளார். ஏறைக்கோன் என்பவன் தமது குடியினர்க்குத் தலைவன் என்பதை,

**"கோடற் கண்ணிக் குறவர் பெருமகன்"[115]**

என்று குறிப்பிடுகின்றார். இப்பெண்பாற் புலவர் இளம் வயது முதலாக புலமையுடையவராக இருந்தமையால், புறநானூற்றில் உள்ளது இவர் இளமைக் காலத்துப் பாடியதென்றும், முதுமைப்பருவம் எய்திய பின்னர் இவர் குறியெயினி என்று அழைக்கப்பட்டதாகவும் கூறப்படுகிறது. குறியெயினி பாடியபாடல் ஒன்று நற்றிணையில் உள்ளது.

## 3. தாயங்கண்ணியார்

சங்ககாலப் பெண்பாற் புலவர்களுள் தாயங்கண்ணியாரும் ஒருவர். 'தாயம்' என்பதற்கு உரிமை என்பது பொருள். இவர் தமது அழகிய கண்களுக்கு உரிமையுயைவராக இருந்தமையால் 'தாயங்கண்ணியார்' எனப் பெயர்

பெற்றதாகவும் சிறப்பிக்கப்படுகின்றது. இப்புலவரின் பெயர்க்காரணம் குறித்து ஔவை சு. துரைசாமிப் பிள்ளை,

> **''தாயன் என்பார்க்கு மகளாதல் தோன்ற இவர் தாயக்கண்ணியார் எனப்படுகின்றார். கண்ணியார் என்பது இவரது இயற்பெயர். சங்ககால நல்லிசைப்புலமை மெல்லியலாருள் இவரும் ஒருவர்.''**[116]

என்று கூறியுள்ளார். மேலும், புறநானூற்றில் 'எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்' என்ற ஆண்பாற் புலவர் ஒருவரும் காணப்படுகின்றார். தாயங்கண்ணியார், தாயங்கண்ணனார் என்ற பெயர் ஒற்றுமையினால் இருவரும் உறவுடையோர்களாக இருக்கக்கூடும் எனவும் கருதப்படுகின்றது. அவ்வாறு இருப்பின் தாயங்கண்ணியாரும் எருக்காட்டூரைச் சார்ந்தவர் எனத் துணியலாம். இப்புலவர் எருக்காட்டூரையோ அல்லது அங்குள்ள நிலத்தையோ அரசரிடமிருந்து தானமாகப் பெற்று வாழ்ந்திருந்தார் என்றும் கருத இடமளிக்கிறது. எருக்காட்டூர் தஞ்சை மாவட்டத்திலுள்ள ஓர் ஊராகும். இதனால், தாயங்கண்ணியார் சோழநாட்டினர் என்பது புலப்படும்.

## 4. நெட்டிமையார்

இவர் பாண்டிய நாட்டைச் சார்ந்த பெண்பாற்புலவர்களுள் ஒருவர். இவர் பாடியனவாக புறநானூற்றில் மூன்று பாடல்கள் (9,12,15) உள்ளன. கடல் கோளால் அழிந்த பஃறுளி ஆற்றைப்பற்றி தமது பாடலொன்றில் சிறப்பித்துப் பாடியுள்ளதால் இவர் சங்கப் புலவர் பலரினும் காலத்தால் முந்தியவர் எனக் கருதப்படுகின்றது. இவரது பெயர்க் காரணம் பற்றிப் பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன. புலவர் கா.கோவிந்தன்,

> **''மக்கள் உறுப்புகளுள் அவர்க்குச் சிறப்பளித்து நிற்பன கண்கள்; அக்கண்களுக்கு அழகும், பாதுகாப்பும் அழித்து நிற்பன அக்கண்களின் இமைகள், அத்தகை இமைகள் எல்லோர்க்கும் அமைவதே போல் அமையாது, சற்று நீண்டு அமைந்து விட்டமையால் இவர் நெட்டிமையார் என அழைக்கப்பெற்றார்.''**[117]

என்று கூறுகின்றார். சங்கப் புலவர்கள் பலரும் மகளிரின் கண்களைக் கயல்விழி, மான்விழி என்று உவமித்துக் கூறியுள்ளதாலும் மீனாட்சி, கண்ணாத்தாள் என நடைமுறையில் மகளிர் பெயர்ப்பெற்றிருப்பதாலும், பூங்கணுத்திரையார் போன்ற

சங்கப் பெண்பாற் புலவர்கள் கண்ணால் சிறப்புப் பெற்றிருப்பதாலும் நெட்டிமையாரும் பெண்பாலரென்றே கருதப்படுகின்றார்.

> **“பாண்டியனைப் பாடிய புறநானூற்றுப் பெண்பாற்புலவர் இமைகள் நீண்டிருப்பது கருதி அவர் நெட்டிமையார் என அழைக்கப்பட்டிருத்தல் வேண்டும்.”[118]**

என்றும் கூறப்படுகின்றது. இவர் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியையும் அவனது தந்தை நெடியோன் என்பவனையும் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

## 5. பாரிமகளிர்

பாண்டிய நாட்டின் பறம்பு மலைக்குத் தலைவனாகிய பாரியின் மக்களே இவர்கள். பறம்பு மலை முந்நூறு ஊர்களைக் கொண்டது. இப்போது அம்மலை ‘பிரான்மலை’ என்று அழைக்கப்படுகின்றது. கடையேழு வள்ளல்களில் ஒருவனாகிய பாரி ‘வேளிர்’ மரபைச் சார்ந்தவன். புலன் அழுக்கற்ற அந்தணாளராகிய கபிலரை நண்பராகப் பெற்றவன். பாரியின் பறம்பு மலை மிகுந்த வளம் கொண்டிருந்ததால் முடிவேந்தர் மூவரும் அதனைக் கைப்பற்றக் கருதிப் படைதிரட்டி வந்தனர். தமது படை வலிமையால் பாரியைக் கொன்று பறம்புமலையைக் கைப்பற்றினர். தந்தையை இழந்த பாரி மகளிர் இருவரும் அநாதையாக நின்றனர். இந்நிலையில் பாரியின் உயிர்த்தோழராகிய கபிலர், கல்வியிற் சிறந்து விளங்கிய இம்மகளிர் இருவரையும் கரை சேர்க்க எண்ணினார். பருவமெய்திய பாரிமகளிர் இருவருக்கும் மணம் செய்துவைக்க எண்ணி, வஞ்சிக்கோன், இருங்கோவேள் போன்ற குறுநிலமன்னர்களிடம் வேண்டினார். பாரிமகளிரை மணம் செய்ய முன் வந்தால் மூவேந்தர்களின் சினத்திற்கு ஆளாக நேரிடும் எனக் கருதி குறுநில மன்னர் பலரும் மறுத்துவிட்டனர். இதனால் மிகவும் மனம் வருந்திய கபிலர் பாரிமகளிர் இருவரையும் பார்ப்பனர் ஒருவர் வீட்டில் அடைக்கலப்படுத்தி விட்டு, பாரியைப் பிரிந்த துயரால் வடக்கிருந்து உயிர்துறந்தார்.

> **“கபிலர் இறந்தபின், பாரிமகளிரின் நிலமையை ஔவையார் கேட்டறிந்தார். அவர் உடனே புறப்பட்டுச் சென்று பாரிமகளிரைக் கண்டார். பாரிமகளிர் ஔவையாரை நன்கு வரவேற்றுப் பாராட்டினர். ஔவையார் அவர்களின் நற்குடிப் பிறப்பின் பண்பை வியந்து அவர்களுடன் பல நாள் தங்கி இருந்தார்.”[119]**

ஔவையார் பாரிமகளிர் இருவருக்கும் மணம் செய்துவைக்க எண்ணித் திருமுனைப்பாடி நாட்டுத் திருக்கோவலூர் அரசன் தெய்வீகன் என்பவனிடம் அழைத்துச் சென்றார். அவனும் மறுத்துவிடவே, ஔவையார் மனம் வருந்தி அழகு வாய்ந்த இம்மகளிரை அரசர்கள் யாவரும் மணம்புரிய மறுப்பது ஏன் என்று காரணத்தை அறிய முற்பட்டார்.

பாரிமகளிரை அரசர்கள் யாவரும் திருமணம் செய்ய மறுப்பது, மூவேந்தர்க்கும் பயந்தே என்பதை உணர்ந்த ஔவையார், சேர,சோழ, பாண்டிய மன்னர் மூவரிடமும் நிலைமையை எடுத்துரைத்து இசைவுபெற்றார். பின்னர் திருமண ஏற்பாடுகள் நடைபெற்றன. தமது சக்தியால் பல்வேறு பாடல்களைப் பாடி, பொன்னும் பொருளும் ஈட்டி, பாரிமகளிரின் திருமணத்தை முடிவேந்தர் மூவரும் முன்னின்று நடத்தும்படிச் செய்தார் என்று கூறப்படுகின்றது. இவ்வாறு பாரிமகளிர் பற்றிய பல்வேறு கதைகள் நிலவுகின்றன. ‘‘இவர்கள் இருவரின் இயற்பெயரை அறியாத பழந்தமிழ் மக்கள் பாரிமகளிர் என்றே அழைத்தனர். தமிழ் நாவலர் சரிதை என்ற நூல்மட்டும் அவ்விருமகளிர்க்கும் அங்கவை, சங்கவை என்று பெயரிட்டு அழைக்கிறது.’’[120] கபிலர் பாரிமகளிர்க்கு ஆசிரியராக இருந்தமையால் இளம் வயது முதற்கொண்டே அம்மகளிர் இருவரும் புலமை பெற்றவர்களாத் திகழ்ந்தனர். பாரிமகளிர் இருவருமாகச் சேர்ந்து பாடிய ‘அற்றைத் திங்கள்’ எனத் தொடங்கும் புறநானூற்றுப் பாடல் ஒன்று மட்டுமே கிடைக்கப் பெற்றுள்ளது. அதுவும், தம் நாட்டையும், தந்தையையும், பகைவர்களிடம் இழந்து ஒரு திங்கள் கடந்த நிலையில் ஒரு முழுமதி நாளில் வருந்திப் பாடியதாக அமைந்துள்ளது.

### 6. பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு

தமிழ் வளர்த்த பாண்டிய மன்னர்களுள் சிறந்து விளங்கியவன் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் ஆவான். இவன் மிகுந்த வீரமுடையவன். பாண்டிய நாட்டிற்குட்பட்ட ‘ஒல்லையூர்’ என்னும் ஊர் சோழர்களின் பிடியில் இருந்தது. அவ்வாறு இருப்பது தன்மானக் குறைவு எனக் கருதிய பூதப்பாண்டியன் பெரும்படைதிரட்டிச் சென்று ஒல்லையூரைக் கைப்பற்றினான். அன்றுமுதல் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என அழைக்கப்பெற்றான். மிகுந்த புலமையும், கவிபாடும் திறமையும் ஒருங்கே பெற்றிருந்தான். இவனைப் போன்றே மாண்பிலும் கல்விப் புலமையிலும் சிறந்து விளங்கிய பெருங்கோப்பெண்டு

என்பவள் இவனது துணைவியாக அமைந்தாள். இதனால் இவர் பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு எனவும் அழைக்கப்பெற்றார். பாண்டியனது புகழைக் கண்டு பொறாமையுற்ற சேரரும் சோழரும் இவன் மீது படையெடுத்து வந்தனர். அவ்வாறு எதிர்த்து வந்தவர்களைக் கண்டு அஞ்சாது போரிட்டுப் புறமுதுகிட்டு ஓடச்செய்வேன், அவ்வாறு இல்லையாயின் எனது அன்பிற்கு இனிய மனைவியைப் பிரிவேன் என்பதை,

**''பேரமருண்கண் இவளினும் பிரிக''**[121]

என்று வஞ்சினம் கூறிப் படைக்களம் புகுந்தான். இறுதியில் வீரமரணம் அடைந்தான். தன் கணவன் இறந்ததைக்கண்டு பெருந்துயருற்ற பெருங்கோப் பெண்டு தாமும் உடன்கட்டை ஏறத்துணிந்து சிதையில் மூட்டுமாறு பணித்தார். இதனைக்கண்ட சான்றோர் பலரும் உடன்கட்டை ஏறும் செயலை தடுத்து நிறுத்த பலவழிகளையும் மேற்கொண்டு இறுதியில் தேவியாரின் கோபத்திற்கு ஆளாகி நின்றனர். அப்போது அங்குக் கூடியிருந்த சான்றோர் பலரையும் நோக்கி, கற்புடை மகளிரது கடன் கணவனோடு உயிர்த்துறத்தலே என்றும் கணவனைத் துறந்து கைமை மேற்கொண்டு வாழும் மகளிரது துயரநிலை இவ்வாறானது என்றும் எடுத்துக் கூறினார். இதை,

**''பல்சான்றீரே! பல்சான்றீரே! ''**
-------- -------- ----------
**பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே''**[122]

என்ற பாடலடிகள் மூலம் சான்றோர்களின் அறவுரையை மறுத்து, உடன் கட்டை ஏறி கணவனோடு உடன்மறைந்து தமது கற்புத்திறத்தை நிலைநாட்டினார். இப்பெண்பாற் புலவர் பாடிய ஒரு பாடல் (புறம்.246) மட்டுமே கிடைக்கப்பெற்றுள்ளது. பெருங்கோப்பெண்டு தீயுள் பாய்ந்த செய்தியைப் புறநானூற்றில் மதுரைப் பேரலவாயர் என்னும் புலவர் தமது பாடலில் (புறம். 247) எடுத்துக்கூறியுள்ளார்.

## 7. பேய்மகள் இளவெயினி

இளவெயினி என்பது இவரது இயற்பெயர். 'எயினி' என்பதால் இவர் குறமகள் இளவெயினியாரைப்போல் குறிஞ்சி நிலத்தைச் சேர்ந்தவராக இருக்கலாம்.

இளமையிலேயே புலமைத்திறம் மிகுந்திருந்திருந்ததால் இளவெயினி என அழைக்கப்பெற்றார். 'இயற்பெயருக்கு முன் பேய் மகள்' என்றிருப்பது போர்க்களத்தில் பிணந்தின்னும் பேய்மகளிரைச் சிறப்பித்துப் பாடியதால் பெற்ற பெயராகும்.[123] இளவெயினியார் பேய் உருவம் கொண்டுத் திகழ்ந்தார் என்றும் கூறப்படுகிறது. இதனை மறுத்து ரா.ராகவையங்கார்,

> **"இத்தகைப் பெருநாகரிகரைப் பேய்மகள் என்றது என்னையெனில் தேவராட்டி, அணங்காட்டி என்றாற் போலத், தம் மந்திரவலியால் பேயைத் தமக்குரியதாகப் பெற்ற மகள் இவர் ஆவார், அது பற்றிக் கூறப்பட்டதா மென்க. இதனால் இவர் பேயையும் ஏவிக் காரியங்கொள்ள வல்லர் என்பதறிக."[124]**

என்று கூறுவதாலும், பேய்மகள் இளவெளினியாரது சிறப்பு அறியப்படுகின்றது. இவர் பாடியனவாக புறநானூற்றில் ஒரு பாடல் (புறம்.11) மட்டுமே உள்ளது. அதில் சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோவைப் பற்றியும் சேரர்களின் தலைநகராகிய வஞ்சி மாநகரைப் பற்றியும் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

## 8. பொத்தியார்

இவர் சோழநாட்டைச் சார்ந்தவர். கோப்பெருஞ்சோழனைப் பற்றிச் சிறப்பித்துப்பாடியுள்ளார். இவர் பாடியனவாகப் புறநானூற்றில் மூன்று பாடல்கள் காணப்படுகின்றன. 'இவரைப் பெண்பாலர்' என சி.பாலசுப்பிரமணியம் குறிப்பிடுகின்றார்.'[125] 'பொத்தி' என்பது இவரது இயற்பெயர். பெண்பாலரைக் குறிக்கும்'இ' கர ஈறு பெற்றுவருவதால் 'பொத்தி' என்பது பெண்பாலர் என்றே கொள்ளப்படுகின்றது. இவரைப் பிசிராந்தையார் "பொத்தில் நண்பிற் பொத்தி" (புறம் .212) எனப் பாராட்டுகின்றார். ஔவையார் அதியமானோடுப் பூண்டிருந்த நட்பினைப்போன்று இவரும் கோப்பெருஞ்சோழனோடு பெரும் நட்புடையவராகத் திகழ்துள்ளார். கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தபோது இவரும் வடக்கிருக்கத் துணிந்தார். இதனைக் கண்ட கோப்பெருஞ்சோழன்,

> **"புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வாவென**
> **என்னிவ ணொழித்த வன்பிலாள"[126]**

என்று கூறி தன்னைத் தடுத்து நிறுத்தியதாகப் பொத்தியார் தமது பாடலில் குறிப்பிட்டுள்ளார். மேலும், வெண்ணிக் குயத்தியார், மாற்பித்தியார்,

வெண்மணிப்பூதியார், வெள்ளி வீதியார், முள்ளியூர் பூதியார், ஆதிமந்தியார், ஒக்கூர் மாசாத்தியார் என்ற பெண்பாற் புலவர்களின் பெயர்களைப் போன்றே 'பொத்தியார்' என்ற பெயரும் இடம் பெற்றுள்ளது என்பதை அறியலாம்.

## 9. பொன்முடியார்

இவர் சேரநாட்டில் மறவர் குடியில் பிறந்தவர். சங்க காலத்தில் கல்வியிற் சிறந்து விளங்கிய பெண்பாலருள் பொன்முடியாரும் ஒருவர். இவர் பாடியனவாக புறநானூற்றில் மூதின் முல்லைத் துறையைச் சார்ந்த ஒரு பாடலும், நூலிலாட்டு, குதிரை மறம் என்னும் துறை சார்ந்த இரண்டுப் பாடல்களும் உள்ளன. தாய், தந்தை, அரசன், கருமான், பிள்ளை போன்றோரின் கடமைகள் குறித்துப் பாடிய 'ஈன்று புறந்தருதல்' (புறம் .312) எனத் தொடங்கும் பாடல் ஒன்றே எல்லோராலும் அறிந்துப் போற்றப்பட்டு, இவரது சான்றாண்மையை விளக்குவதாக அமைந்துள்ளது. இப்புலமையாளரைப் பற்றி ஔவை சு. துரைசாமிப்பிள்ளை,

> **''மறக்குடியில் பிறந்து நல்லிசைப் புலமைப் பெற்றுச் சான்றோரினத்துள் ஒருவராய் மறச் செயல்களைப் பாராட்டிப்பாடும் பண்பு மிக்கவர். இவர் சேரநாட்டுக் குடநாட்டின் வடபகுதியில் வாழந்தவர். இவர் பெயரால் இந்நாட்டில் பொன்முடி என்றோர் ஊரும் உளது. இப்போது இப்பகுதி வெள்ளாத்திரி நாடு என மக்களிடையே வழங்குகிறது. இங்குள்ள முதியோர், இதனை முன்னோர் பொன்முடி நல்லூர் என வழங்கினர் என மொழிகின்றனர். காக்கைப் பாடினியாரது ஊரைக் காக்கையூரெனச் சேர நாட்டவர் வழங்கக் காண்கிறோமாதலால் இவ்வூரைப் பொன்முடியாரது ஊர் எனக் கருத இடமுண்டாகிறது.''**[127]

என்று கூறுகின்றார். மேலும், பொன்முடியார் பெருஞ்சேரலிரும் பொறையின் தகடூர் போர் குறித்து பாடியிருப்பதாலும் இவர் சேர நாட்டினர் என்பதை அறியலாம். நா.சஞ்சீவி 'சங்க இலக்கிய ஆராய்ச்சிஅட்டவணைகள்' என்னும் நூலில் ''புலவருள் சேர நாட்டுப் பெண்கள் இல்லாமை குறிக்கத்தக்கது''[128] என்று தமது ஆராய்ச்சிக் குறிப்பில் கூறுகின்றார். ஆனால், பொன்முடியாரும், காக்கைப்பாடினி நச்செள்ளையாரும் சேர நாட்டினர் என்பது ஔவை துரைசாமிப்பிள்ளை உள்ளிட்ட பல அறிஞர்களின் கருத்தாய் அமைந்துள்ளது. 'பொன்முடி' என்பதை ஊர்ப் பெயராகக் கொள்ளாமல் உ.வே.சா.,

**"இவருடைய கல்விப் பெருமையையும் கவிப் பெருமையையும் நோக்கி அவற்றின் அறிகுறியாக அக்காலத்திலிருந்த அரசர் ஒரு பொன்முடி அளித்தமையால் இவர் இக்காரணப் பெயரைப் பெற்றிருக்கலாமென்று தோன்றுகிறது.''**[129]

என்று பெயர்க்காரணம் பற்றித் தமது கருத்தைத் தெரிவித்துள்ளார். பொன்முடியார் புறத்தில் மட்டுமல்லாது தகடூர் போர் பற்றிக் கூறும் தகடூர் யாத்திரையிலும் திருவள்ளுவமாலையிலும் பாடிய பாடல்களும் கிடைக்கப் பெற்றுள்ளன.

## 10. மாற்பித்தியார்

இவர் சோழ நாட்டைச் சார்ந்த பெண்பாற் புலவர்களும் ஒருவர். இவரது பெயர் சில இடங்களில் மாறிப்பித்தியார் என்றும் மரற்பித்தியார் என்றும் காணப்படுகின்றது. மணம் மிகுந்த 'மாரிப்பித்திகம்' என்னும் மலரைச் சிறப்பித்துப் பாடியதால் இவர் மாரிப்பித்தியார் எனப் பெயர் பெற்றார் என்றும், மாற்பித்தியார் என்னும் பெயர் பிழையானது என்றும் கூறப்படுகிறது''[130] இவர் பாடிய இரண்டு பாடல்கள் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளன. இதில் துறவு நிலை குறித்துப் பேசப்படுகின்றது.

## 11. முடத்தாமக்கண்ணியார்

பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படைக்கு அடுத்தப்படியாக வைத்துப் போற்றப்படுவது. பொருநராற்றுப்படை. இதன் ஆசிரியர் முடத்தாமக் கண்ணியார். இவர் கரிகால் பெருவளத்தானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடியுள்ளார். அகவற்பாவால் பாடப்பெற்ற பொருநாராற்றுப்படை 248 அடிகளைக் கொண்டது. இதில், சோழ நாட்டின் வளம், கரிகாலனது வீரம், கொடை, பண்பு நலன் முதலியவை சிறப்பிக்கப்பட்டுள்ளன. இவர் சங்கப் பெண்பாற் புலவர்களுள் ஒருவர்.'[131] உ.வே.சா., முடத்தாமக்கண்ணியார் பெயர்க் காரணம் குறித்துக் கூறுகையில் இப்பெயர் உறுப்பால் வந்ததென்றும், இவர் பெண்பாலரென்று கூறுவாறும் உளர் என்றும் குறிப்பிடுகின்றார். பத்துப்பாட்டினை ஆராய்ச்சி மேற்கொண்ட இராசமாணிக்கனார் இவரைப் பெண் பாலரென்றே குறிப்பிடுகின்றார்.''[132] நற்றிணையில் 'பொதும்பில் கிழார் மகனார் வெண்கண்ணியார்' என்ற ஆண்பாற் புலவர் ஒருவர் உள்ளார். இவரைப் பற்றிக் கூறவந்த பி.நா. ஐயர்,

**“வெண்கண்ணி என்றதனானே இவர் பெண்பாலர் போலும் எனவுமாம்; கிழார் மகனார், கிழார்மகன் என்றிருந்தலானே பெண் பாலாகக் கூற வழியில்லை.”[133]**

என்று கூறுகின்றார். ‘கண்ணி’ என்பது பெரும்பான்மையாக பெண்பாலற்கே உரிய பெயராகும் என்பதைத் தாயங்கண்ணியார், காமக்கண்ணியார், புல்லாளங் கண்ணியார் போன்ற சங்கப் பெண்பாற் புலவர்களின் பெயர்கள் எடுத்துக் காட்டுகின்றன. இயற் பெயருக்கு முன்னால் ‘முடம்’ என்ற சிறப்புப் பெயர் வருவதால் இப்புலவர் உடல் குறைபாடுடையவர் என்ற கருத்தும் நிலவுகின்றது. ‘கண்ணி’ என்பது அரும்பு, பூமாலை, பூங்கொத்து போன்ற பொருளைத் தருவதாலும் இவர் பெண்பாலர் என்பது பெறப்படுகின்றது. மேலும் பெண்ணெழுத்து அடிப்படையில் ஆய்வு மேற்கொண்ட அறிஞர் பலரும் முடத்தாமக் கண்ணியாரை பெண் பாலர் என்றே கூறிச் செல்கின்றனர்.

12

## 13. வெண்ணிக் குயத்தியார்

சோழநாட்டின் தஞ்சைப்பகுதியில் உள்ள ‘வெண்ணில்’ என்னும் ஊரைச் சார்ந்தவர் இப் பெண்பாற்புலவர். இவர் மண்பாண்டம் செய்யும் குயவர் குடியில் பிறந்தவர். கரிகாற் பெருவளத்தானுக்கும் பெருஞ் சேரலிரும் பொறைக்கும் சோழ நாட்டின் வெண்ணிப் பறந்தலையில் நடைபெற்ற போர் குறித்துப் பாடியுள்ளார். இப்புலவரைப் பற்றி ஔவை சு.துரைசாமிப் பிள்ளை,

**“வேட் கோவருள் சிறந்தோர்க்குப் பண்டை நாளில் வேந்தர், குயம் என்னும் பட்டம் தந்து சிறப்பித்தல் மரபு. இவர் குயத்தியார் எனப்படுதலால், வேட்டகோவருள் சிறந்தவரென்பது துணிபாம். இம்மரபு பத்தாம் நூற்றாண்டு வரையில் இருந்திருக்கிறது.”[134]**

எனக் கூறுகின்றார். ‘வேட்கோபன்’ என்பது குயவன் எனப் பொருள் கூறப்படுகிறது’[135] வெண்ணிக் குயத்தியார் கல்விப் புலமையிற் சிறந்து விளங்கிய சான்றண்மையாளர் என்பதை இவரது பாடல் பறை சாற்றுகின்றது.

## 13. வெள்ளெருக்கிலையார்

கணவனை இழந்த மகளிர் மேற்கொள்ளும் கைமை நோன்பு குறித்துப் பாடியுள்ள பெண்பாற் புலவர்களுள் வெள்ளெருக்கிலையாரும் ஒருவர். இவர்

பாடியனவாகப் புறநானூற்றில் இரண்டு பாடல்கள் உள்ளன. பறம்புமலையை ஆண்ட வேள்பாரியின் குலத்தில் தோன்றிய ‘எவ்வி’ என்பவனைத் தமது இரு பாடல்களிலும் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

இவர் வெள்ளெருக்கின் இலையை சிறப்பித்துப்பாடியுள்ளதால் இப் பெயர் பெற்றிருக்கக் கூடும் எனவும் கருதப்படுகின்றது. அவ்வாறு இவர் வெள்ளெருக்கிலையைச் சிறப்பித்துப் பாடியதாகப் பாடலடிகள் எதும் இடம் பெற்றிருக்கவில்லை, இவரது புறநானூற்றுப் பாடல் கைமைநோன்பு மேற்கொள்ளும் மகளிர் பற்றிக் கூறுவதால் இவர் பெண்பாலர் என்றே இங்குக் கருதப்படுகின்றார்.

## 14. வெள்ளைமாளர்

இப்புலவர் பாடியதாகப் புறநானூற்றில் ஒரு பாடல் (296) மட்டுமே உள்ளது. இவரது இயற் பெயர் வெள்ளைமாறனார் என்றும் அச்சுப் பிரதிகளில் காணப்படுகின்றது. இவர் ஏறாண் முல்லைத் துறையைச் சிறப்பித்துப்பாடியுள்ளார்.

> **“இவர் பெண்பாற் புலவராகவே இருத்தல் வேண்டும் என்பதை இவர் எழுதியுள்ள பாடல்துறையான ஏறாண் முல்லைத் துறையும், பாடலில் இடம் பெற்றுள்ள காட்சிகளும், கருத்துக்களும் உறுதி செய்கின்றன.”**[136]

என்று கூறப்படுவதாலும், ஒரு வீரனின் தாய் போருக்குச் சென்ற தன் மகனைக் குறித்துப் பாடுவதாகவும் இவரது பாடல் அமையப் பெற்றுள்ளதாலும் இவர் பெண் பாற் புலவர் என்பது அறியலாகிறது.

## இரு திணை பாடிய புலவர் வரலாறு

அகத்திணை புறத்திணை ஆகிய இரு திணைகள் சார்ந்த எழுபதிற்கும் மேற்பட்ட பாடல்களை எட்டுப் பெண் பாற் புலவர்கள் பாடியுள்ளனர். சில புலவர்கள் அகத்திணை குறித்துப் பாடுவதில் வல்லவராகவும், சிலர் புறத்திணை குறித்துப் பாடுவதில் வல்லவராகவும், சிலர் இருதிணைகள் பற்றியும் பாடுவதில் கைதேர்ந்தவர்களாகவும் காணப்படுகின்றனர். இவ்வாறு அகம் புறம் ஆகிய இருதிணைகள் குறித்துப்பாடிய பெண்பாற் புலவர்களின் வரலாறு பின்வருமாறு ஆராயப்படுகின்றது.

## 1. அள்ளூர் நன் முல்லையார்

நன்முல்லையார் என்பது இவரது இயற்பெயர். அள்ளூர் என்பது இவர் வாழ்ந்த ஊர். இவ்வூர் பாண்டிய நாட்டில் சிவகங்கைக்கு அருகாமையிலுள்ள ஓர் ஊர் என்றும் கூறப்படுகின்றது.[137] நன்முல்லையார் தாம் வாழ்ந்த ஊரைப் பற்றி 'பிண்ட நெல்லின் அள்ளூர்'[138] என்று தமது பாடலில் சிறப்பித்துள்ளார். ''நன்முல்லையார் இயல்பில் மருத நில வாழ்க்கையர். 'பிண்ட நெல்லின்' என்ற ஊரடையைக் காண்க'[139] என்று வ.சுப. மாணிக்கம் இப் பெண்பாற் புலவரின் வாழ்க்கையைப் பற்றி எடுத்துரைக்கின்றார். இதனால் நன்முல்லையார் அள்ளூர் என்னும் வளம் கொழித்த ஊரில் வாழ்ந்த உழவர் குடியினர் என்பது பெறப்படுகின்றது. இப்பெண்பாற் புலமையாளரைப் பற்றி புலவர் கா.கோவிந்தன்,

> **''அள்ளூர் நன்முல்லையார், நல்லிசைப் புலமை வாய்ந்த நற்பெருங் கவிஞர்; கண்ணில் காணும் காட்சிகளைக் கருத்தோடு இழைத்துக் கவிபாடும் இயல்பினர்; அவர் பாடலில் பொதிந்து கிடக்கும் உவமைகள் சிலவே, இவர் புலமைச் சிறப்பைப் புலப்படுத்த போதியனவாம்.''[140]**

என்று கூறிச் சிறப்பிக்கின்றார். நன்முல்லையார் பாடியனவாகக் குறுந்தொகையில் ஒன்பதும், புறத்தில் ஒன்றும் அகத்தில் ஒன்றுமாக மொத்தம் பதினொரு பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இவர் நிமித்தம் பற்றியும் நடுகல் வழிபாடு பற்றியும் மகளிரின் துன்பநிலைப் பற்றியும் தமது பாடலில் சிறப்பித்துள்ளார். நன்முல்லையார் பெண்ணுரிமை பேணும் கவிஞர்களில் ஒருவராகத் திகழ்கின்றார்.

## 2. ஒக்கூர் மாசாத்தியார்

'ஒக்கூர்' என்பது பாண்டிய நாட்டில் உள்ள திருக்கோட்டியூருக்கு அருகே இன்றும் இருந்து வரும் ஓர் ஊராகும். ''இவரது இயற்பெயர் 'சாத்தி' என்பது. மா என்பது உயர்வும் பெருமையும் குறிக்க வந்த அடைமொழி''[141] தாம் பிறந்து வாழ்ந்த ஊர்ப் பெயரோடு தம் இயற்பெயரையும் சேர்த்து 'ஒக்கூர் மாசாத்தியார்' என அழைக்கப் பெற்றார். சாத்தன், சாத்தி என்ற பெயர்கள் அக்காலத்தில் மக்களிடையே பெருவழக்காக இருந்துள்ளன. இலக்கண உரையாசிரியர்களும் இத்தகைய பெயர்களை மேற்கோளாகக் காட்டியுள்ளனர். மாசாத்தியார் பிறந்த

ஒக்கூரில், மாசாத்தனார் என்ற ஆண்பால் புலவர் ஒருவரும் வாழ்ந்துள்ளார். இவ்விருவரும் ஏதேனும் ஒருவகையில் உறவுடையோராக இருக்கலாம் எனக் கருத இடமளிக்கிறது. மாசாத்தியார் பாடியனவாகத் தொகை நூல்களில் எட்டுப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் புறப்பாடல் ஒன்றினைத் தவிர மற்ற ஏழும் அகப்பாடல்களாகும். "அவர் பாடிய பாக்கள் எல்லாவற்றுள்ளும், தமிழர்க்கும், தமிழ் நாட்டிற்கும் சிறப்பளித்துத் தனக்கும் புகழ் அளித்த பெரும்பாட்டு காணப்படும் பாட்டே"[142] என்று புலவர் கா. கோவிந்தன் மாசாத்தியாரின் புலமைத் திறம் குறித்துச் சிறப்பிக்கின்றார். மாசாத்தியாரின் அகப்பாடல்கள் ஏழனுள் மருதத் திணை சார்ந்த ஒரு பாடலைத் தவிர மற்ற ஆறும் முல்லைத் திணை சார்ந்தவையாகும். கற்புத் துறை சார்ந்த ஆறு பாடல்களிலும் முல்லை மலரைப் பற்றிச் சிறப்பித்துப் பாடியுள்ளார். வ.சுப. மாணிக்கம்,

> **'எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்' என்ற கம்பரின் கற்பனைக்கு சங்க மூலம் உண்டு. அம் மூலவர் மாசாத்தியார் ஆவர்."[143]**

என்று கம்பரோடு தொடர்புப்படுத்திக் காட்டுகின்றார்.

## 3. ஔவையார்

ஔவை என்பதற்குத் 'தவப்பெண், தாய், சகோதரி,' என்றும் பாட்டி, முதியவள் என்றும் பொருள் கொள்ளப்படுகிறது.[144] தமிழில் மட்டுமல்லாது துளு, கன்னடம் ஆகிய மொழிகளிலும் ஔவை என்பதற்கு 'அம்மை' என்றே பொருள் கொள்ளப்படுகின்றது. மாலதி மைத்திரி,

> **"ஔவை என்பது அரசியல், சமூகவியல், நாட்டுப்புறவியல், நாடோடியியல், கவிதையியல் எனப் பல தளங்களில் சங்கம் தொட்டு இன்று வரை நிகழ்ந்து வரும் ஒரு உருவகமாகும். இப்படி ஒரு கவிதையில் உருவகம் இரண்டாயிரம் ஆண்டுகளின் வரலாற்றில் எந்த ஒரு மொழியிலும் எந்த ஒரு காலச் சாத்திரத்திலும் உருவாகவில்லை."[145]**

என்று கூறுகின்றார். ஔவை என்னும் பெயர் இயற் பெயராக அமையாமல் சங்க காலம் தொட்டு இன்று வரை ஒரு குறியீடாகவே புலவர்களால் கையாளப்பட்டு வருகின்றது. இதனை பழ. அன்பு மீனாள்,

**“பெண் புலமைக்கு ஒரு குறியீடாக அவ்வையார் என்னும் பெயர் ஆளப்படுவதே, அவரது ஒப்பற்ற சிறப்புக்குச் சிறந்ததொரு சான்றாகும்.”[146]**

என்று கூறி விளக்குகின்றார். மேலும், “ஔவை என்னும் பெயர் நமது பண்பாடு முழுவதையும் உள்வாங்கி ஊடுறுத்தி அதன் சின்னமாக - ஒரு குறியீடாக - பயன்படுத்தப்படுகிறது” என்று கா.சிவதம்பி அவர்கள் ஔவையார் கவிதைக் களஞ்சியம் என்னும் நூலின் முகப்புரையில் கூறுகின்றார்.”[147] இவ்வாறு ஔவை என்றும் பெயர் பற்றிய பல்வேறு கருத்து நிலைகள் காணப்படுகின்றன. ஔவையாரை உலகப் பெண்பாற் புலவர்களோடு ஒப்பிட்டு ஆராய்ந்த பெ.சு.மணி,

**“சங்கால ஔவையாரின் ஆளுமையின் விளைவே, பிற்காலப் பல ஔவையார்களின் தோற்றத்திற்கு மூல காரணமாகும்.”[148]**

எனக் கூறுகின்றார். சங்க காலத்திற்கும் அடுத்துக் கல்விப் புலமையிற் சிறந்து விளங்கிய பெண்பாலர் பலர் தமது இயற்பெயரை விடுத்து ‘ஔவை’ என்னும் பெயரைச் சூட்டிக் கொண்டதாகத் தெரிகின்றது. இதற்குக் காரணம் சங்க காலத்து ஔவையார் சமூகத்தில் கொண்டிருந்த நன் மதிப்பே அன்றி வேறில்லை. ஔவையார் பற்றிப் பி.நா. ஐயர்,

**“இவர் பாணர் மரபினர், இளமையில் விறலியராக ஆடல் பாடல் முதலியவற்றிலே தேர்ந்து விளங்கியவர்; புறம். 89-ல் தம்மை விறலியென்று தாமே கூறுமாற்றானறிக.”[149]**

என்று கூறுகின்றார். பழங்காலத்தில் அரசன் ஒருவனைப் பாடும் பொழுது, புலவர்கள் தங்களை ஒரு பாணனாகவோ, விறலியாகவோ கொண்டு கவிபாடுவதை மரபாகக் கொண்டிருந்தனர் என்பதை எடுத்துக் காட்டி ஔவையார் பாணர் குடியில் பிறந்தவர் அல்லர் எனவும் மறுக்கப்படுகின்றது. ஔவையாரின் வரலாறு இன்னதென அறிய சான்றுகள் ஏதும் கிடைக்கப் பெறவில்லை. அவரது பாடல்களைக் கொண்டே அவரது வரலாற்றைப் பலவாறு கூறும் போக்கு இருந்து வருகின்றது.

ஔவையாரின் வரலாறு குறித்துத் திருவள்ளுவர் கதை, கபிலரகவல், ஞானமிர்தம், புலவர் புராணம், விநோதரச மஞ்சரி, பன்னிரு புலவர் சரித்திரம்

முதலான நூல்கள் பல கதைகளைக் கூறுகின்றன. கபிலரகவல், ஞானாமிர்தம், புலவர் புராணம் போன்ற மூன்று நூல்களும் ஔவையாரோடு உடன் பிறந்தவர்கள் எண்ணிக்கை ஏழு என்று கூறுகின்றன. கபிலர், உப்பை, அதிகமான், உறுவை, வள்ளி, வள்ளுவர், சேரமான் போன்றோர் அவ்வெழுவரராவர். ஔவையாரின் பிறப்புப் பற்றி வி.கிருஷ்ணமாச்சாரியார் பன்னிரு புலவர் சரித்திரம் என்னும் தமது நூலில்,

> **‘‘பூர்வத்தில் தமிழ் நாட்டில் ஆதி என்றவளுக்கும் பகவன் என்னும் ஒரு பிராமணனுக்கும் பெண் மக்கள் நால்வரும் ஆண் மக்கள் மூவரும் பிறந்தனர். இவருடைய தம்பிமார்தான் குறள் எழுதிய திருள்ளுவ நாயணாரும், அகவல் எழுதிய கபிலரும் ஆவர்.’’**[150]

என்று கூறுகின்றார். இவ்வாறு ஔவையாரைப் பற்றி இன்னும் பல கதைகள் பேசப்படுகின்றன. இக்கதைகள் யாவும் பிற்காலத்தவரால் சங்க இலக்கியங்களை அடியொற்றிப் படைக்கப்பட்டனவாகும். படிப்பதற்குச் சுவை தருவதாக இருப்பினும் அவைகள் நம்பத்தகுத்தவையாக இல்லை. ஔவையாருக்குக் கூறப்படும் புனை கதைகள் போன்று வேறு எந்தப் பெண் பாற் புலவருக்கும் கூறப்படவில்லை.

ஔவையார் சங்கப் பெண்பாற் புலவர்களில் தலைமை சான்றவர். இவர் பாடியனவாகத் தொகை நூல்களில் 59 பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்கள் அனைத்தும் அகவற்பாவால் அமைத்துப் பாடப்பட்டுள்ளன. வ.சுப. மாணிக்கம் ஔவையாரின் பாடற்திறம் பற்றி,

> **‘‘இவர் புறம் பாடுவதில் வல்லவர் என்பதனைப் பலர் அறிகுவர். இவர்தம் புறப்பாடல்கள் 33; அகப்பாட்டுகள் இருபத்தாறே. களவிற்கு உரியவை 8; கற்பிற்கு உரியவைட 18; அகம் பாடுவதிலும் வல்லுநர் ஔவையார் என்பதனைக் கூற விரும்புகின்றேன்.’’**[151]

என்று வியந்து உரைக்கின்றார். ஔவையார் சங்கப் புலவர்களில் ஒப்பற்றவராகவும், உலகியல் ஞானமும் அரசியல் அறிவும் ஒருங்கே பெற்றவராகவும் திகழ்கின்றார். இவர் முடிவேந்தர் மூவரைப் பற்றியும் பாடியுள்ளார். சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு, தொண்டை நாடு, நாஞ்சில் நாடு போன்றவற்றையும் அங்கிருந்த பல ஊர்களையும் ஆட்சி புரிந்த பல

மன்னர்களையும் தமது பாடல்களில் சிறப்பித்துள்ளார். அதியமான், பொகுட்டெழினி, நாஞ்சில் வள்ளுவன், தொண்டைமான், பாரி, உக்கிரப் பெருவழுதி, சேரமான் மாவெண்கோ, சோழன் இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளி, கிள்ளி வளவன், முடியன், நன்னன் போன்ற பதினொரு மன்னர்கள் குறித்துப் பாடியுள்ளார்.

அரிசில் கிழார், உலோச்சனார், மோசிக்கீரனார், மருதன் இளநாகனார், அஞ்சி அத்தை மகள் நாகையார் போன்ற புலவர்கள் ஔவையாரின் சம காலத்தவர் ஆவர். மன்னர்களை மட்டுமல்லாது புலமை சான்ற பரணர் (புறம். 96), கபிலர் (புறம் 303), வெள்ளிவீதியார் (அகம். 147) போன்ற புலவர்களையும் தமது பாடலில் சிறப்பித்துப் பாடியுள்ளார், தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும் பொறையின் காலத்தைக் கொண்டு ஔவையாரின் காலம் கி.பி. முதல் நூற்றாண்டின் பிற்பகுதி அல்லது இரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதி எனக் கணக்கிடப்படுகின்றது.

ஔவையார் அதியமானிடம் நெல்லிக்கனி பெற்று உண்ட வரலாறு நாடறிந்தது. அதியமான் ஔவைக்கு நெல்லிக்கனி கொடுத்ததை சிறுபாணாற்றுப்படை கூறுகின்றது. அதியமான் கொடுத்த நெல்லிக் கனியைத் தாம் பெற்று உண்டதை ஔவையார் தமது பாடல் ஒன்றில் (புறம்.91) குறிப்பிட்டுள்ளார். கிடைத்தற்கரிய நெல்லிக் கனியை உண்டதால் ஔவையார் பல காலம் வாழ்ந்தார் என்றும் கூறப்படுகின்றது. உ.வே.சா. இது குறித்து,

> **“அதிகன் கொடுத்த நெல்லிக்கனியைத் தின்றதால் ஔவையார் சிரஞ்சீவியாக இருந்திருக்கக் கூடும் என்பது சிலபெரியோர் கருத்து.”**[152]

எனக் கூறுகின்றார். அதியமான் ஔவைக்குக் கொடுத்த நெல்லிக் கனியானது அமுதம் போன்றது என்பதைப் பரிமேலகழர்,

> **“இனிய கனிக ளென்றது, ஔவையுண்ட நெல்லிக்னி போல அமிழ்தாவனவற்றை.”**[153]

என்று ‘இனிய உளவாக’ (குறள். 100) என்னும் குறளின் உரையில் கூறுகின்றார். இவ்வாறு ஔவையின் புகழ் அன்று முதல் இன்று வரை நிலைபேறுடையதாக இருந்து வருகின்றது.

## 4. காக்கைப் பாடினி நச்செள்ளையார்

செள்ளையார் என்பது இவரது இயற்பெயர். 'ஐ' என்பது பெண் பாலைக் குறிக்கும் விகுதி. 'செள்ளை' என்ற சொல் விரும்பத் தக்கவர்' எனப் பொருள்படும்.'[154] இவர் பாடிய பாடலின் சிறப்பு கருதி நச்செள்ளை என அழைக்கப்பட்டார். நற்செள்ளை என்பது நச்செள்ளை என மருவியதாகவும் கூறப்படுகிறது. குறுந்தொகையில் ஒரு பாடலும் புறநானூற்றில் ஒரு பாடலுமாக இரண்டு பாடல்களையும் பதிற்றுப்பத்தில் ஆறாம்பத்தையும் இவர் பாடியுள்ளார். குறுந்தொகையில்,

**'விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே'[155]**

என்று காக்கையைச் சிறப்பித்துப் பாடியுள்ளதால் இவர் காக்கைப் பாடினியார் என்று எல்லோராலும் அழைக்கப்பட்டார். மேலும், இவர், ''ஆடுகோட்பாட்டுச் சேரலாதனென்னும் அரசன் மீது பதிற்றுப்பத்துள் ஆறாம்பத்தைப்பாடி, அணிகலனுக்கென்று ஒன்பது துலாம் பொன்னும் நூறாயிரம் பொற்காசும் பரிசு பெற்றவர்''[156] என்று உ.வே. சாமிநாதையார் சிறப்பிக்கின்றார். ஔவையார் அதியமானோடு கொண்டிருந்த நட்பினைப் போன்று காக்கைப் பாடினியார் சேரலாதனோடு நட்பு பூண்டிருந்தார் என்றும் சேரலாதன் தன் அரியணையின் அருகிலேயே இவருக்கு ஓர் இடங் கொடுத்து அமரச் செய்தான் என்றும் கூறப்படுகின்றது. இவர் பாணர் குலத்தைச் சார்ந்தவராகவும் கருதப்படுகின்றார். இவரைப் பற்றி இரா.இளங்குமரன்,

> **''காக்கைப் பாடினியார் பெண்பாற் புலவர் என்பது அவர்தம் பெயரானே தெள்ளிதின் அறியப்படுகின்றது. பாடுவதையே தொழிலாகக் கொண்ட பழந்தமிழ்க் குடியினர் பாணர் எனப் பெற்றனர். அவர்களுள் 'பாணர்' என்னும் ஆண்பாற் பெயருக்கு அமைந்த பெண்பாற் பெயர் பாடினி என்பதாம்.''[157]**

என்று கூறுவதால் அறியலாம். காக்கைப்பாடினியர் அகத்தியரின் பன்னிரு மாணவர்களில் ஒருவர் என்றும் கருதப்படுகின்றார். சிறு காக்கைப்பாடினியம், பெருங் காக்கைப்பாடினியம் பாடிய பெண்பாலரும் தொகை நூலில் பாடிய காக்கைப் பாடினியாரும் இருவேறானவர் என்பதற்கு, இலக்கண நூல் பாடிய புலவர்க்கு நச்செள்ளையார் என்ற பெயர் வழங்கப்படாமையால் உணரலாம்.

குறுந்தொகைப் பாடல் பாடிய பிறகே 'காக்கைப் பாடினியார்' என்ற சிறப்புப் பெயர் பெற்றதாகக் கூறப்படுகிறது. பதிற்றுப்பத்தில் ஆறாம்பத்தின் பதிகத்தில்,

> **"யாத்த செய்யுள் அடங்கிய கொள்கை
> காக்கை பாடினியார் நச்செள்ளையார்'**[158]

என்று பாடப் பெற்றுள்ளதால், குறுந்தொகைப் பாடலுக்குப் பின்னரே இவர் பதிற்றப்பத்தின் ஆறாம் பத்தினைப் பாடியுள்ளார் என்பது தெளிவாகின்றது.

## 5. பூங்கணுத்திரையார்

'உத்திரை'என்ற இயற்பெயர் உடைய இப்பெண்பாற் புலவர் அழகிய கண்களைப் பெற்றிருந்தமையால் பூங்கண் உத்திரையார் என அழைக்கப்பட்டார்.'பூங்கண்' என்பது காவிரியாற்றின் வடகரையில் இருந்த ஓர் ஊர்ப் பெயராகவும் உள்ளது. இதனால் உத்திரையார் இவ்வூரினராக இருக்கலாம் எனவும் கருதப்படுகின்றது. மேலும்,

> **"இவர் உத்தர நாளில் பிறந்தமையால் உத்தரையார் எனப் பெயரிடப் பெற்றார்."**[159]

என்றும் பெயர்க் காரணம் கூறப்படுகின்றது. இவர் பாடியனவாக குறுந்தொகையில் இரண்டும், புறநானூற்றில் ஒன்றுமாக மூன்று பாடல்கள் உள்ளன. அகப்பாடல்கள் இரண்டும் தலைமக்களது காதல் வாழ்வைச் சிறப்பித்துக் கூறுவதாகவும் புறப்பாடல் மறவர் குடி மகளிரின் வீரத்தைப் பறைசாற்றுவதாகவும் அமைந்துள்ளது.

## 6. பெருங்கோழி நாய்க்கன் மகள் நக்கண்ணையார்

நக்கண்ணையார் சோழ நாட்டைச் சார்ந்த பெண்பாற் புலவர். இவர் 'அரசர்க்கு மகட் கொடைநேரும் வணிக மரபினர்"[160] எனக் கூறப்படுகின்றது. இவர் புறத்தில் மூன்று பாடல்களைப் பாடியுள்ளார். இவரது வரலாறு பற்றி கா. கோவிந்தன்,

> **"சோழ நாட்டுத் தலை நகர்களுள் ஒன்றாகிய உறையூர்க்குக் கோழி என்பது ஒரு பெயர். நாய்க்கன் என்பது கடல் வாணிகம் மேற்கொள்ளும் இனத்தார் வைத்துக் கொள்ளும் பட்டப் பெயர்;**

> **கண்ணகியின் தந்தைக்கு மாநாய்கன் என்பதே பெயராதல் காண்க. ஆகவே நக்கண்ணையார், உறையூர்ப் பெருவணிகன் ஒருவனது மகளாதல் பெற்றாம். கண்ணன் என ஆடவர்க்குப் பெயரிடுவர்; அவ்வாறே கண்ணை எனப்பெண்டிர்க்கும் பெயரிடுவர்; அப்பெயரோடு 'ந' என்ற சிறப்பும் சேர நக்கண்ணையார் என ஆயிற்று.''[161]**

எனக் கூறுகின்றார். நக்கண்ணையார் பாடிய புறப்பாடல் மூன்றும் 'ஒரு தலைக் காமம்' பற்றிக் கூறும் திணையாகிய கைக்கிளையில் பாடப்பட்டுள்ளன. தொல்காப்பியர் கைக்கிளையை அகத்திணையாகக் கூறியுள்ளார். இதனால் புறத்தில் அகம் பாடிய புலவர் இவர் ஒருவரே ஆவார். தன் தந்தையிடம் பகைமை கொண்டு இப்புலவரின் ஊரில் வந்து தங்கியிருந்த போரவைக் கோப்பெருநற்கிள்ளியின் மீது இவர் ஒருதலைக் காமம் கொண்டதனால் இவ்வாறு பாடியதாகக் கூறப்படுகின்றது.

### 7. மாறோக்கத்து நப்பசலையார்

பாண்டிய நாட்டின் கொற்கை நகரைச் சூழ்ந்திருந்த பகுதி 'மாறோக்கம்' என்று அழைக்கப்பட்டது. இவர் அவ்வூரைச் சார்ந்தவர் ஆவார். மகளிர் தலைவனைப் பிரிந்து வாடும் காலத்தில் ஒருவகை மேனிவாட்டத்திற்கு ஆளாவர். இது 'பசலை' எனப்படும். இப்பெண்பாற் புலவர்,

> **''மணிமிடை பொன்னின் மாமை சாயஎன்**
> **அணிநலம் சிதைக்குமார் பசலை''[162]**

என்று பசலை நோய் பற்றிச் சிறப்பித்துப் பாடியுள்ளமையால் பசலையார் எனப் பெயர் பெற்றார். இவர் வாழ்ந்த ஊர்ப் பெயரோடு சேர்த்து மாறோக்கத்து நப்பசலையார் என அழைக்கப்பெற்றார். இவர் புறநானூற்றில் ஏழு பாடல்களும் நற்றிணையில் ஒரு பாடலுமாக மொத்தம் எட்டுப் பாடல்கள் பாடியுள்ளார்.

குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை பதிமூன்று சங்கப் புலவர்கள் பாடியுள்ளனர். அவர்களில் நப்பசலையாரும் ஒருவர். கிள்ள வளவன் இறந்த செய்தியும் அவனது முன்னோர் புறாவின் துயர் போக்கிய செய்தியும் இவரால் பாடப்பட்டுள்ளன. சோழரின் உறந்தை அவையம் பற்றியும் சிறப்பித்துள்ளார். இவரது பாடல்களில் சோழ மன்னர்கள் பற்றிய செய்திகளே அதிகம் உள்ளன.

இதனால் இவர் சோழ நாட்டினராகலாம் எனவும் எண்ணப்படுகிறது. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், மலையமான் திருமுடிக்காரி, மலையமான் சோழிய வேனதி திருக்கண்ணன், கடுந்தேர் அவியன். தொடிதோட் செம்பியன் போன்றோரும் இவரால் சிறப்பித்துப் பாடப் பெற்றுள்ளனர். இமயத்தில் சேரர் விற்பொறி வைத்தசெய்தியும் இவரால் கூறப்படுகின்றது. இவர் கபிலரை 'புலனழுக் கற்ற அந்தணாளன்'[163] எனவும், 'பொய்யா நாவின் கபிலன்''[164] எனவும் தம் பாடலில் வைத்துச் சிறப்பித்துள்ளார்.

## 8. வெறிபாடிய காமக் கண்ணியார்

'கண்ணியார்' என்பது இவரின் இயற்பெயர். புலவர்களுக்குத் தாம்பாடும் பாடலின் சிறப்பு காரணமாகவும் பெயர் அமைதல் உண்டு. பாலைபாடிய பெருங்கடுங்கோ, மடல் பாடிய மதங்கீரனார் எனப் பாடலின் பொருட் சிறப்பால் பெயர் அமைந்து போல, 'வெறியாட்டு' பற்றிச் சிறப்பாகப் பாடியதனால் இவர் வெறிபாடிய காமக் கண்ணியார் என அழைக்கப்பட்டார். இவர் அகத்தில் மூன்றும் புறத்தில் இரண்டுமாக ஐந்துப்பாடல்கள் பாடியுள்ளார். இவரின் அகப் பாடல்கள் மூன்றிலும் வெறியாடல் பற்றிச் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. வெறியாட்டு குறிஞ்சித் திணைக்கு உரியதாதலால் காமக் கண்ணியாரின் மூன்று அகப்பாடல்களும் குறிஞ்சித் திணையில் அமைந்துள்ளன. இவரைப் பற்றி பி.நா.ஐயர்,

> **'வெறியாட்டுப் பற்றி விரிவாக அகத்தில் பாடியதனால் இவர் வெறிபாடிய காமக் கண்ணியார் எனப்பட்டார்.''[165]**

என்று கூறுகின்றார். காமக்கண்ணி என்பது வடமொழியில் 'காமாட்சி' எனத் திரிந்ததாகவும் கூறப்படுகின்றது. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை இவரை 'காமக்காணியார்' எனக் குறிப்பிடுகின்றார். 'காமக்காணி' என்பது அரசர் வழங்கும் காணியாட்சிச் சிறப்புகளுள் ஒன்று என்றும், ஏடெழுதினோர் காமக்காணி என்பதை காமக்கணி என்றும் காமக்கண்ணி என்றும் பிழைபட எழுதியதாகவும் கூறுகின்றார்.[166] பெரும்பான்மையாக காமக்கண்ணி என்றே இவர் பெயர் காணப்படுவதால் இங்கும் அவ்வாறே கொள்ளப்படுகின்றது. வ.சுப. மாணிக்கம். 'வெறிபாடிய காமக்கண்ணியார் ஒரு துறைபாடிய சிறப்புப் புலவர்''[167] என்றும் மொ.அ.துரை அரங்கசாமி, வெறியாடல் என்ற துறையைப் பாடுவதில் காமக்கண்ணியாருக்கு இருந்த பேராற்றலை இவரது அகநானூற்றுப் பாடல்கள்

உள்ளங்கை நெல்லிக்கனி எனக் காட்டுவதாகவும், இதனால் இவருக்கு வெறிபாடிய 'காமக்கண்ணியார்' என்ற பெயர் அமைந்தது''[168] என்றும் கூறிச் சிறப்பிக்கின்றார்.

**தொகுப்புரை**

1, அகத்திணைப் பாடிய புலவர்கள் 28 பேர். புறத்திணைப் பாடிய புலவர்கள் பதினான்கு பேர். அகம்புறம் ஆகிய இரு திணைப்பாடிய புலவர்கள் எட்டுப்பேர். ஆகமொத்தம் ஐம்பது சங்கப் பெண்பாற் புலவர்களின் வரலாறு ஆராயப்பட்டுள்ளது.

2. ஔவையார் தொகை நூல்களில் ஐம்பத்து ஒன்பது பாடல்களைப்பாடி பெண்பாற் புலவர்களுள் தலைமை சான்றவராக உள்ளார். இவருக்கு அடுத்த நிலையில் பதிமூன்று பாடல்களைப்பாடிய வெள்ளி வீதியார் இடம் பெறுகின்றார்.

3. பெண்பாற்புலவர்கள் புறப்பாடல்களை விட அகப்பாடல்களே அதிகம் பாடியுள்ளனர். அகத்திலும் களவைவிட கற்புப் பற்றிய பாடல்களே அதிகம் இடம் பெற்றுள்ளன.

4. சங்க காலத்தில் ஐவகைச் சமுதாயத்தைச் சார்ந்த மகளிர் அனைவரும் கல்வி கற்கும் வாய்ப்பும் பெற்றிருந்தமைக்குப் பெண்பாற் புலவர்களே சான்றாக அமைகின்றனர்.

5. பெண்பாற்புலவர்கள் பாடிய புறப்பாடல்களில் தன்னுணர்ச்சிப் பாடல்களும் இடம் பெற்றுள்ளன. பெண்களின் வீரம் குறித்துப் பாடப்படும் மூதின் முல்லைத் துறைப்பாடல்கள் ஆண்பாற் புலவர்களால் பாடப்பட்டிருந்தாலும் அவை பெண்பாற் புலவர்களின் உணர்ச்சி மிக்கப் பாடல்களுக்கு ஈடாகவில்லை.

6. பெண்பாற் புலவர்கள் சமுதாய உணர்வுடனும் நாட்டுப் பற்றுடனும் கூடிய பாக்களைப் புனைத்தார்களேயன்றி பொருள் பெறும் நோக்கில் செய்தாரில்லை.

7. புறத்தில் அகம்பாடிய புலவராக பெருங்கோழி நாய்க்கன் மகள் நக்கண்ணையார் திகழ்கின்றார்.

8. சேர, சோழ, முடிவேந்தர்கள் பற்றியும், வேளிர், குறுநில மன்னர்கள் பற்றியும் பாடப்பட்டுள்ளது. ஒளவையார் ஒருவரே முடிவேந்தர்கள் குறுநில மன்னர்கள் உள்ளிட்ட பதினொருவரைப் பற்றிச் சிறப்பித்துப்பாடியுள்ளார்.

9. தொகை நூல்களில் இருபத்து மூன்று பெண்பாற் புலவர்கள் ஒரு பாடல் மட்டுமே புனைந்துள்ளனர்.

10. சேர நாடு, சோழ நாடு, பாண்டியநாடு ஆகிய மூன்று நாடுகளைச் சார்ந்த பெண்பாற் புலவர்களும் இடம் பெற்றுள்ளனர் என்பது ஆய்வில் கூறப்பட்டுள்ளது. இதில் பாண்டிய நாட்டடைச் சார்ந்த பெண்பாலர்களே அதிகம் உள்ளனர்.

11. அரசர், வணிகர், குறவர், குயவர் போன்ற மரபைச் சார்ந்த புலவர்களும் இடம் பெற்றுள்ளனர்.

12. புலமையிற் சிறந்த மற்ற புலவர்களைத் தமது பாடலில் வைத்துப் போற்றிப் பாடும் பண்பு பெண்பாற் புலவர்களிடம் இருந்துள்ளது. இதை, ஒளவையார், பெருங்கோழி நாய்க்கன் மகள் நக்கண்ணையார், வெள்ளி வீதியார் போன்றோரது பாடல்கள் வழி அறியலாம்.

# அடிக்குறிப்புகள்

1. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, ப. 235.
2. மே.கு.நூ., ப. 236.
3. மா.ரா.போ. குருசாமி, சங்க காலம், ப.16.
4. புறம். 27:7-9.
5. புறம் . 72:15-16.
6. அரங்க இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர், ப. 58.
7. மே.கு.நூ., ப. 79-80.
8. மா.இராசமாணிக்கனார், தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப. 120.
9. மே.கு.நூ., ப. 160.
10. கோ.தனபாலன், (தொ.ஆ.)., கட்டுரைச் செல்வம் , பக். 22-23.
11. உ.வே. சாமிநாதையர், சங்கத்தமிழும் பிற்காலத் தமிழும், ப.89.
12. மு.வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 43.
13. மே.கு.நூ., பக் 44 - 45.
14. இரா.தண்டாயுதம், சங்க இலக்கியம், ப. 31
15. மு.வரதராசன், தமிழ் நெஞ்சம், ப. 41.
16. மு.கதிரேசச் செட்டியார், உரைநடைக் கோவை, பக். 50-51.
17. புறம். 282: 11.
18. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப. 28.
19. சி. இலக்குவனார், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், ப. 144.
20. மே.கு.நூ., பக். 157 - 158.
21. தொ.பெ. மீ., தமிழ் இலக்கிய வரலாறு, ப. 43.
22. சி. இலக்குவனார், மே.கு.நூ., ப. 147.
23. உ.வே. சா., நல்லுரைக் கோவை, இரண்டாம் பாகம், ப. 144.
24. உ.வே. சா., சங்கத்தமிழும் பிற்காலத் தமிழும், ப.100.
25. திருமதி புஷ்பம் நடராசன், (க.ஆ.)., மதுரைத் தமிழ்ச் சங்கப் பொன்விழா மலர், ப. 303.
26. சி.பாலசுப்பிரமணியன், சங்ககால மகளிர், ப. 19.
27. அன்னிதாமசு, (ப.ஆ.)., சங்க காலப் பெண்மை, ப. 81.
28. பெ.சு.மணி, சங்கால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும், ப. 301.
29. வ.ஜெயா, சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும், ப. 52.
30. மே.கு.நூ., ப. 18.
31. த.ஜானகி, (ப.ஆ)., செம்மொழித் தமிழில் மகளிர் மாட்சி, ப. 23.
32. தாயம்மாள் அறவாணன், மகடூ முன்னிலை, ப. 05.

33. தாயம்மாள் அறவாணன், தையல் சொல் கேளீர், ப. 14.

34. ந. சஞ்சீவி, சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள், ப,32.

35. பத்மாவதி விவேகானந்தன், பெண் கவிதை மொழியும் பெண் கவிஞர்களும், ப. 16..

36. பெ. சு.மணி, மே.கு.நூ., ப. 250.

37. ரா.ராகவையங்கார், நல்லிசைப் புலமை மெல்லியலார்கள், ப. 17.

38. வள்ளிநாயகி, தமிழ் வளர்த்த மகளிர், ப. 19.

39. தி.இராசகோபாலன், பெருமைக்குரிய பெண்டிர், பக். 1-2.

40. புஷ்பம் நடராசன், (க.ஆ.)., மே.கு.நூ., ப. 308.

41. அ.ச. ஞான சம்பந்தன், மகளிர் வளர்த்த தமிழ், ப. 22.

42. பொன். தெய்வநாயக சோதி, (க.ஆ.)., செந்தமிழ்ச் செல்வி, திங்கள் இதழ், திசம்பர் 1992, ப. 134.

43. அகம். 352:12.

44. கா. கோவிந்தன், சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை, தொகுதி -2, ப.1.

45. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு மூலமும் உரையும், முதற்பகுதி, பக். 208-209.

46. பி.நா.ஐயர், நற்றிணை மூலமும் உரையும், பாடினோர் வரலாறு, ப.1.

47. மொ.அ.துரை அரங்கசாமி, சங்க கால சிறப்புப் பெயர்கள், ப. 125.

48. அகம். 45: 14-15.

49. அகம். 76 :10.

50. அகம். 396 : 13-14.

51. அகம். 236 : 16-20.

52. அகம். 222 : 7-12.

53. சிலம்பு. 21 : 11 - 15.

54. கா.கோவிந்தன், மே.கு.நூ., ப. 13.

55. மே.கு.நூ., ப.13.

56. சி.பாலசுப்பிரமணியன், சங்க கால மகளிர், ப.19.

57. கா.கோவிந்தன், சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை, பகுதி 5, ப. 8.

58. கா.கோவிந்தன், சங்கத்தமிழ்ப் புலவர் வரிசை பகுதி -2, ப.14.

59. கா.கோவிந்தன், மே.கு.நூ., ப.21.

60. பி.நா. ஐயர், நற்றிணை மூலமும் உரையும், பாடினோர் வரலாறு, ப. 24.

61. நற். 281 :3.

62. நற். 312 : 4.

63. கா.கோவிந்தன், மே.கு.நூ., ப. 23.

64. பி.நா. ஐயர், மே.கு.நூ., ப.27.

65. மே.கு.நூ., ப. 28.

66. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, நற்றிணை மூலமும் விளக்கவுரையும், தொகுதி 2, ப. 954.
67. மே.கு.நூ., ப. 955.
68. மொ.அ.துரை அரங்கசாமி, மே.கு.நூ., ப.99.
69. தாயம்மாள் அறவாணன், மகடூ முன்னிலை, ப. 111.
70. ரா.ராகவையங்கார், நல்லிசைப் புலமை மெல்லியலார்கள், ப. 117.
71. பி.நா. ஐயர், மு.கு.நூ., ப, 32.
72. கா.கோவிந்தன், மு.கு.நூ., ப. 47.
73. ரா.ராகவையங்கார், மு.கு.நூ., ப. 119.
74. மே.கு.நூ., ப. 123.
75. பி.நா.ஐயர், மு.கு.நூ., ப. 49.
76. உ.வே. சாமிநாதையர், குறுந்தொகை மூலமும் உரையும், ப. 156.
77. தாயம்மாள் அறவாணன், மு.கு.நூ., ப. 146.
78. ரா.ராகவையங்கார், மு.கு.நூ., பக் 123:124.
79. உ.வே. சாமிநாதையர், மு.கு.நூ., ப. 143.
80. மே.கு.நூ., ப. 144.
81. நா.சி.கந்தையா பிள்ளை, தமிழ்ப் புலவர் அகராதி, ப. 269.
82. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப. 967.
83. நா.சி. கந்தையா பிள்ளை, மு.கு.நூ., ப. 269.
84. உ.வே. சாமிநாதையர், மு.கு.நூ., ப. 145.
85. தாயம்மாள் அறவாணன், பெண் இன்று நேற்று அன்று, ப. 87.
86. பெ.சு. மணி, மு.கு.நூ., ப. 22.
87. தாயம்மாள் அறவாணன், மு.கு.நூ., ப. 89.
88. தாயம்மாள் அறவாணன், மு.கு.நூ., ப. 173.
89. உ.வே. சாமிநாதையர், மு.கு.நூ., ப. 153.
90. பொன். தெய்வநாயகி, மு.கு.நூ., ப. 135.
91. ச.பாவானந்தம் பிள்ளை, தற்கால தமிழ்ச் சொல்லகராதி, ப. 313.
92. மே.கு.நூ., ப. 32.
93. பி.நா. ஐயர், மு.கு.நூ., ப. 67.
94. தாயம்மாள் அறவாணன், மு.கு.நூ., ப. 236.
95. ரா.ராகவையங்கார், மு.கு.நூ., ப. 119.
96. உ.வே.சாமிநாதையர், மு.கு.நூ., பக். 165 - 166.
97. தாயம்மாள் அறவாணன், மு.கு.நூ., ப. 242.
98. ரா.ராகவையங்கார், மு.கு.நூ., ப. 124.
99. உ.வே.சாமிநாதையர், மு.கு.நூ., ப. 166.
100. வ.சுப. மாணிக்கம், மு.கு.நூ., ப. 447.
101. மா.சேசையா, வெள்ளிவீதியின் வாழ்க்கையும் திறனாய்வும், பக். 13-14.

102. அகம். 45 : 14-15.
103. அகம். 147 : 8-9.
104. வ.சு. மாணிக்கம், மு.கு.நூ., ப. 450.
105. உ.வே. சாமிநாதையர், மு.கு.நூ., ப. 111.
106. உ.வே. சாமிநாதயர், மு.கு.நூ., ப. 166.
107. மா.சேசையா, மு.கு.நூ., ப. 137.
108. க.பூரணச்சந்திரன், இலக்கியப் பயணத்தில் சில எதிர்பாடுகள், ப. 148.
109. சரளா ராசகோபலன், சங்கத் தமிழ் வளர்த்த நங்கையர், ப. 87.
110. பி.நா. ஐயர், மு.கு.நூ., ப. 79.
111. தாயம்மாள் அறவாணன், மு.கு.நூ., ப. 177.
112. வள்ளி நாயகி, தமிழ் வளர்த்த மகளிர், ப. 143.
113. ஔவை, சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு மூலமும் உரையும், முதற்பகுதி, ப. 207.
114. ரா.ராகவையங்கார், மு.கு.நூ.,ப. 117.
115. புறம். 157 :7.
116. ஔவை சு.துரைசாமிப் பிள்ளை, மு.கு.நூ., ப. 105.
117. கா.கோவிந்தன், சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை, பகுதி - 5, ப. 47.
118. தாயம்மாள் அறவாணன், மு.கு. நூ., ப. 161.
119. செல்வத் தாண்டவன், புறநானூற்றுக் காட்சிகள், ப.77.
120. கா.கோவிந்தன், மு.கு.நூ., ப. 51.
121. புறம். 71 :6.
122. புறம். 246 : 1-3.
123. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, மு.கு.நூ., ப. 31.
124. ரா.ராகவையங்கார், மு.கு.நூ., ப. 116.
125. சி. பாலசுப்ரமணியம், கட்டுரை வளம், ப.29.
126. புறம். 222 : 3-4.
127. ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு முகமும் உரையும், இரண்டாம் பகுதி, பக். 196 - 197.
128. நா.சஞ்சீவி, சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள், ப. 33.
129. உ.வே.சா., சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும், ப.101.
130. கா.கோவிந்தன், மு.கு.நூ., ப. 86.
131. ப.வே. கோபாலன், புலவர் அகராதி, ப. 153.
132. மு.பழநியப்பன், பெண்ணிய வாசிப்பும் திறனாய்வும், ப. 56.
133. பி.நா. ஐயர், மு.கு.நூ., ப. 64.
134. ஔவை. சு.துரைசாமிப் பிள்ளை, புறநானூறு மூலமும் உரையும், முதற்பகுதி, ப. 169.
135. நா. கதிரைவேற் பிள்ளை, மு.கு.நூ., ப. 1317.

136. தாயம்மாள் அறவாணன், மு.கு.நூ., ப. 260.
137. உ.வே. சாமிநாதையர், மு.கு.நூ., ப. 110.
138. அகம். 46:14.
139. வ.சுப. மாணிக்கம், மு.கு.நூ., ப. 343.
140. கா.கோவிந்தன், சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை தொகுதி 2, பக். 5-6.
141. வள்ளி நாயகி, மு.கு.நூ., ப. 97.
142. கா. கோவிந்தன், மு.கு.நூ., ப.16.
143. வ.சுப. மாணிக்கம், மு.கு.நூ., ப.358.
144. நா.கதிரைவேற்பிள்ளை, மு.கு.நூ., ப. 149.
145. மாலதி மைத்திரி, விடுதலையை எழுதுதல், பக். 89-90.
146. பழ. அன்பு மீனாள், (ப.ஆ.)., இலக்கியத் தரவுகளில் மகளிர் பதிவுகள், ப. 20.
147. ப. சரவணன், ஔவையர் கவிதைக் களஞ்சியம், ப.7.
148. பெ.சு.மணி, மு.கு.நூ., ப.309.
149. பி.நா. ஐயர், மு.கு.நூ., ப. 13.
150. வி. கிருஷ்ண மாச்சாரியார், பன்னிரு புலவர் சரித்திரம், ப. 167.
151. வ.சுப. மாணிக்கம், மு.கு.நூ., ப.366.
152. உ.வே.சா., சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும், ப. 107.
153. பரிமேழகர் ருரை, திருக்குறள், ப.40.
154. மொ.அ. துரை அரங்கசாமி, சங்க காலச் சிறப்புப் பெயர்கள், ப. 183.
155. குறுந். 210 :6.
156. உ.வே. சாமிநாதையார், மு.கு.நூ., ப. 128.
157. இரா. இளங்குமரன், காக்கைப் பாடினியம் மூலம் உரையும், ப. 23.
158. பதிற்றுப்பத்து, பதிகம்
159. வள்ளி நாயகி, மு.கு.நூ., ப.123.
160. பி.நா. ஐயர்,மு.கு.நூ., ப.44.
161. கா.கோவிந்தன், சங்கத்தமிழ்ப்புலவர் வரிசை,தொகுதி - 2, ப. 69.
162. நற். 304 : 6-7.
163. புறம். 126: 11.
164. புறம் : 176 :10.
165. பி.நா.ஐயர், மு.கு.நூ., ப. 81.
166. ஔவை, சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு மூலமும் உரையும், இரண்டாம் பகுதி, ப. 143.
167. வ.சுப.மாணிக்கம், மு.கு.நூ., ப. 37.
168. மொ.அ.துரை அரங்கசாமி, மு.கு.நூ., ப. 180.

# இயல் இரண்டு

# அகவாழ்வுச் சிந்தனைகள்

''கன்று முண்ணாது கலத்தினும் படாது
நல்லான் றீம்பா னிலத்துக் காஅங்
கெனக்கு மாகா தென்னைக்கு முதவாது
பசலை யுணீஇயர் வேண்டும்
திதலை யல்குலென் மாமைக் கவினே''

– வெள்ளிவீதியார்

# அகவாழ்வுச் சிந்தனைகள்

சங்கப் பெண்பாற் புலவர்கள் பாடிய அகத்திணைப் பாடல்கள் வழி கிடைக்கப் பெறும் செய்திகளின் அடிப்படையில் 'அகவாழ்வியல் சிந்தனைகள்' என்னும் இரண்டாம் இயல் அமைக்கப்பட்டுள்ளது. புறத்திணை பாடிய புலவர்களைக் காட்டிலும் அகத்திணைப்பாடிய புலவர்களே அதிகம் உள்ளனர். தொகை நூல்களில் அகத்திணை மட்டும் பாடிய புலவர்கள் இருபத்தெட்டுப் பேரும், புறத்திணையும் அகத்திணையும் கலந்து பாடிய புலவர்கள் எட்டு பேருமாக மொத்தம் நூற்று இருபதுக்கும் மேற்பட்ட அகத்திணைப் பாடல்களைப் பாடியுள்ளனர். இவர்கள் பாடிய பாடல்களின் அடிப்படையில் களவு, கற்பு ஆகிய அகவாழ்வின் இரு கூறுகள் பற்றி ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

**அகத்திணை**

தொல்காப்பியர் அகத்திணைகள் ஏழு என வரையறை செய்துள்ளனர்.

**"கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்**
**முற்படக் கிளந்த எழுதிணை யென்ப"**[1]

என்ற நூற்பாவின் வழி அகத்திணைகளின் எண்ணிக்கைக் குறித்து அறியலாம். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை ஆகிய ஏழு திணைகளுள் பெருந்திணை ஒழிய மற்ற ஆறு திணைகள் பற்றிப் பெண் பாற் புலவர்கள் பாடியுள்ளனர். அகத்திணை ஐந்திணைப் பற்றி பெரும்பான்மையான புலவர்கள் பாடியிருக்கும் நிலையில் கைக்கிளை பற்றிப் புறநானூற்றில் நக்கண்ணையாரின் பாடல் காணப்படுகின்றது. தொல்காப்பியரின் கூற்றுப்படி கைக்கிளை அகத்திணையாக இருப்பினும், புறநானூற்றுப் பாடல்கள் வரிசையில் சேர்ந்துள்ளமை ஆய்விற்குரியதாக அமைகின்றது. அகநூல்களின் சிறப்பு குறித்து வ.சுப. மாணிக்கம்,

**"சங்க இலக்கியமே நாம் பெற்றிருக்கும் தமிழ் நூல்களுள் தொன்மையான அக இலக்கியம். இலக்கிய இலக்கண ஆராய்ச்சி, காதலர்கள் போல் தம்முள் பிரிந்து நில்லாதவை; பிரிக்க முடியாதவை வலிந்து பிரித்தால் வளப்படாதவை. ஆதலின், அகவிலக்கியமும் அகவிலக்கணமும் சங்க நூற் செல்வங்களின் பெருந்துணை கொண்டு ஒருங்கு ஆராய்தற்குரியன."**[2]

என்று உரைப்பதன் வழி அறியப்படுகின்றது. சங்கப் பெண் பாற் புலவர்கள் புறவாழ்வில் அதிக ஈடுபாடு அற்றவர்களாக இருந்த காரணத்தால் புறப்பாடல்களை விட அகப்பாடல்களை அதிகம் பாடியுள்ளனர் எனலாம். பெண்பாற் புலவர்களின் அகத்திணைப் பாடல்கள் ஆண்பாற் புலவர்களின் பாடல்களைவிட உணர்வு பூர்வமாகவும் சிறப்பாகவும் அமைந்துள்ளன. அகத்திணை என்பது தலைவன் தலைவி ஆகிய இருவரது அகவாழ்வு குறித்துப் பேசுவதாக அமைகிறது. இது குறித்து வ.ஜெயா,

> **''அனைத்துப் பெண்பாற் புலவர்களும் அகப்பொருளை மிக எளிமையாகவும் தேர்ந்த சொற்களாலும் கையாண்டு கருத்தை எளிமையாகப் புலப்படுத்தியுள்ளார்.''[3]**

என்று கூறியுள்ளார்.

**களவு**

களவு என்பதற்கு ''உன்மத்தம், களாச் செடி, திருட்டு, வஞ்சணை''[4] என்று அகராதி பொருள் தருகின்றது. பரிமேலழகர் தமது திருக்குறள் உரையில்,

> **''களவாவது பிணி மூப் பிறப்புக்களின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மையராய் உருவுந்திருவும் பருவமுங் குலனுங் குணனுமன்பு முதலியவற்றால் தம்முளொப்புமை யுடையராய்த் தலை மகனுந் தலைமகளும் பிறர் கொடுப்பவும் அடுப்பவுமின்றிப் பால் வகையில் தாமே எதிர்ப்பட்டுப் புணர்ந்துருவது.''[5]**

என்று களவிற்கு விளக்கம் தருகின்றார். தலைவனும் தலைவியும் முதன் முதலில் யார் உதவியுமின்றி ஒருவரை ஒருவர் சந்தித்துத் தமது உள்ளத்தை ஒருவரிடமிருந்து ஒருவர் பறிகொடுத்து நிற்பதே களவு எனப் போற்றப்பட்டுள்ளது. இது மறைந்த ஒழுக்கம் என்றும் கூறப்படுகின்றது. நா.சுப்புரெட்டியார்,

> **''வேதத்தை மறைநூல்' என்று சொல்வது போலவே அறநிலை வழுவாமல் காதலர்கள் கரந்து ஒழுகும் இதனைக் 'களவு' என்று பண்டையோர் குறித்தனர்.''[6]**

என்று கூறும் கருத்தும் இங்கு நோக்கத்தக்கது. களவுக் காலத்தில் தலைமக்கள் இருவரும் தாம் ஒருவர் மீது ஒருவர் கொள்ளும் ஆழ்ந்த அன்பின் போது, நேரத்தின் அளவுகள் கணிக்கப்படுவதில்லை. காலைப் பொழுது என்றும் உச்சிப் பொழுது என்றும், மாலைப் பொழுது என்றும் யாமப் பொழுது என்றும், வைகறைப்

பொழுது என்றும் பிரித்தரியப்படுவதில்லை. அவ்வாறு பிரித்தரியப் படுமேயானால் அக்காதல் உணமைத் தன்மையை இழந்தது ஆகும். இதனை அள்ளூர் நன்முல்லையார் என்றும் புலவர்,

**"காலையும் பகலும் கையறு மாலையும்**
**ஊர்த்துஞ் சியாமமும் விடியலுமென்றிப்**
**பொழுதிடை தெரியிற் பொய்யே காமம்"[7]**

என்று கூறுவதால் அறியலாம். தலைமக்கள் இருவரும் மனமொன்றி காதற் வயப்பட்ட நிலையில் அவர்களுக்கு எல்லாக் காலமும் நேரமும் ஒரே தன்மையுடையது என்பதும் பகுத்தறிவதற்கு இயலாத ஆழ்ந்த மன ஒருமைப்பாடு கொண்டதே களவின் உண்மை நிலை என்பதும் இதனால் பெறப்படுகின்றது. களவில் பாங்கன், தோழி, செவிலி, தலைவன், தலைவி போன்றோர் கூற்று நிகழ்த்துவதற்கு உரிய மாந்தர்களாவர். களவின் கால வரையறை குறித்து 'இறையனார் களவியல்' என்னும் இலக்கண நூல்,

**"களவினுள் தவிர்ச்சி வரைவின் நீட்டம்**
**திங்கள் இரண்டின் அகமென மொழிப"[8]**

என்று இரண்டு மாதக்காலத்தை எல்லையாகக் குறிப்பிடுகின்றது. இக்காலக் கட்டத்திற்குள் தலைவன் தலைவியை வரைந்து கொள்ளுதல் வேண்டும் என்பது அக்கால மரபாக இருந்துள்ளது.

**களவு நெறி**

செல்வம், குலம், ஒழுக்கம், அன்பு போன்றவற்றில் ஒத்த தலைமகனும் தலைமகளும் தமக்குள் அனுபவித்த இன்ப நுகர்வுகளைப் புறத்தார்க்கு இன்னதென எடுத்துக் கூற இயலாதது எதுவோ அதுவே 'அகம்' என்று கூறப்படுகிறது. அகவாழ்வியலில் முதலில் அமைவது களவு. இது திருமணத்திற்கு முந்தைய வாழ்க்கை. களவு ஐந்திணைகளுக்கும் பொதுவானது. தலை மக்களது உள்ள ஒற்றுமையைப் படம் பிடித்துக் காட்டுவதாகவே அகப்பாடல்கள் அமைந்துள்ளன. களவு நெறி குறித்து வ.சுப.மாணிக்கம்.

**"களவு ஒரு குறிக்கோள் அன்று: முடிவான பயன் அன்று. ஒரு குறிக்கோளை, முடிந்த பயனை அடைதற்கு உரிய நெறியேயாம். கற்பாக - திருமணமாக - முடியுங்கால், களவு நெறி நன்னெறி எனப்**

**போற்றப்படும். இன்றேல் கள்ளத் தனம் என இகழப்படும். கற்பென்னும் மண வாழ்க்கைக்கு முன்னரெல்லாம் களவென்னும் மறைவு நெறி ஒரு தலையாக நடக்க வேண்டுமோ எனில் இல்லை. இதுவே பண்டைத் தமிழ் மன்பதையின் கருத்து.''[9]**

என்று தமது கருத்தைக் கூறுகின்றார்.

களவொழுக்கத்தில் ஈடுபட்டவரே திருமணம் புரிய தகுதியுடைவர் என்ற நிலை அன்று இல்லாமல் இருந்திருக்கிறது. அதேபோல், தலை மக்களது உள்ள ஒற்றுமையால் விளைந்த விருப்பத்திற்கேற்பவும் களவு நெறி நன்னெறியாக மலர்ந்துள்ளதை அகப்பாடல்கள் காட்டுகின்றன. களவு என்பது கற்பில் முடிவதையே பழந்தமிழ்ச் சமுதாயம் அறநெறியாகப் போற்றியது. களவில் இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கர் கூட்டம், பாங்கியர் கூட்டம், வரைவு கடாவுதல், பொருள் வயின் பிரிதல், இற்செறிப்பு, தலைவன் வரவுக்காக ஆற்றியிருத்தல், உடன்போக்கு போன்ற நிகழ்வுகளின் அடிப்படையில் பாடல்கள் அமைந்துள்ளன. சங்க காலத்தில் திணை அடிப்படையிலேயே தலை மக்களின் வாழ்வியல் போக்குகள் அமைந்தன. அகன் ஐந்திணையில் தலைமக்களின் சில பொதுவான பண்பு நலன்களும் கூறப்பட்டுள்ளன. இதனை ந.சுப்புரெட்டியார்,

**''அகத்திணை வடித்துக் காட்டும் காதற்பாங்கு தனித் தூய்மை கொண்டது. மனித சமுதாயம் முழுவதையும் நோக்கும் பான்மையது.''[10]**

என்று கூறுகிறார். அகன் ஐந்திணைகளும் களவியலை முதலாவதாக வைத்து கற்பியலைப் போற்றுகின்றன.

### இயற்கைப் புணர்ச்சி

தலைவன் தலைவி ஆகிய இருவரும் தம் ஊழ்வினையின் பயனால் ஒருவரை ஒருவர் முதன் முதலாகச் சந்தித்துக் கூடுவது இயற்கைப் புணர்ச்சி என்று கூறப்படுகிறது. இதனை ந.சுப்புரெட்டியார்,

**''இன்ப வாழ்வில் முதன்முதலாக நடைபெறுவது இயற்கைப் புணர்ச்சி. அஃதாவது தலைவனும் தலைவியும் ஊழ்வலியால் ஒருவரையொருவர் கண்டு காதல் கொள்வது. இதனை இலக்கண நூல்கள் 'எதிர்ப்பாடு' என்றும் குறிப்பிடும். இந்த இயற்கைப் புணர்ச்சியை இலக்கண நூலார் காட்சி, ஐயம், தெளிதல், தேறல் என்று நான்கு வகையாகப் பகுத்துப் பேசுவர்.''[11]**

என்று தலைமக்கள் தம் வாழ்வில் நடைபெறும் முதற் கூட்டமாகிய இயற்கைப் புணர்ச்சியின் மரபு நிலையை உணர்த்துகிறார். இயற்கைப் புணர்ச்சியானது ஒரு சில நாட்கள் மட்டுமே நடைபெறும். இதில், இரவுக்குறி, பகற்குறி எனப் பாங்கன், தோழி ஆகியோர் உதவியுடன் தலைமக்கள் கூடுவதும் உண்டு. இவ்வாறு கடற்கரைச் சோலையில் குறியிடம் வந்து கூடிச் சென்ற தலைவன் மணம்புரிய விழையாததால் தனது அழகு கெட்டொழிந்ததாக வருந்துகிறாள் தலைவி. மேலும், தலைவனோடு கூடியிருந்த போது கண்கள் அவனைக் கண்டு இன்புற்றன என்றும் செவிகள் அவனது இனிய மொழிகளைக் கேட்டுச் சுவைத்தன என்றும் தோள்கள் மட்டும் கூடியிருந்த போது அழகு பெற்றதாகவும் பிரிந்த போது அவ்வழகு ஒழிந்ததாகவும் கூறுகின்றாள். இதனை வெண்மணிப் பூதி என்னும் புலவர்,

**''புணர்குறி வாய்த்த ஞான்றைக் கொண்கற்**
**கண்டன மன்னெங் கண்ணே யவன் சொற்**
**கேட்டன மன்னெஞ் செவியே மற்றவன்**
**மணப்பின் மாலை மெய்தித்**
**தணப்பின் நெகிழ்பாவன் றடமென் றோளே''**[12]

என்று தலைவி தன் தோழியிடம் சொல்லி இரங்குவதாகப் பாடியுள்ளார். களவுக் காலத்தில் தலைவனால் தலைவியின் நலன் அழிக்கப்பட்டது என்னும் செய்தி ஊர் முழுதும் பரவியது. இந்நிலையில் உள்ளம் வருந்தி, உடல் மெலிந்து அவனது நினைவோடு துன்புற்று வருந்தியிருந்தாள் தலைவி என்பதை வெண்பூதியார்,

**''யானே யீண்டை யேனே யென்னலனே**
**ஆனா நோயொடு கானலஃதே''**[13]

என்று கூறுகின்றார். களவிற் கூட்டத்திற்குப் பின்னர் தலைவனை விட தலைவியின் துன்ப நிலை மனதளவிலும் உடலளவிலும் அதிகம் பெருகுவதனைப் புலவர் இதன் வழிச் சுட்டிக் காட்டுகின்றார்.

**தோழியிற் கூட்டம்**

அகப்பாடல்கள் கூறும் தலைமக்களின் காதல் வாழ்வில் தோழியின் பங்கு குறித்து அதிகம் பேசப்படுகிறது. தலைமக்களின் களவினை முதலில் அறிந்து அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்பவள் தோழி. சரளா ராசகோபாலன்,

**“அகத்திணையிலக்கியத்தில் தோழி மிகுந்த உரிமையுடைவள். தலைவியின் உரிமையையும் செயலையும் தன் உரிமையும் செயலுமாகக் கொள்ளும் சிறப்புடையவள்.”[14]**

என்று கூறுகின்றார். புலவர்கள் பலரும் தோழியின் அறிவுத் திறம் குறித்து அதிகம் பாடியுள்ளனர். தோழியானவள் தலைவிக்கு நெருங்கிய உறவுடையவளாகவும், பிரிவால் வருந்தும் தலைவிக்கு ஆறுதல் மொழிபவளாகவும் தலைவனது செயலைக் கடிந்துரைத்து அறிவுறுத்துபவளாகவும் புலவர்களால் அறிமுகப்படுத்தப்படுகின்றாள்.

தலைவியை சந்தித்துக் கூட இயலாத நிலையில் தோழியின் உதவியை நாடுகிறான் தலைவன். பலமுறையும் தலைவன் வந்து கூடிச் செல்வதில் மட்டுமே விருப்பம் உடையவனாக இருப்பதை உணர்த்தத் தோழி, பல காரணங்களைக் கூறி குறியிடம் மறுக்கிறாள். இந்நிலையில் தலைவன் பெரிதும் துன்பம் கொள்கிறான். இனிமேலும், தலைவியைக் காண்பது அரிது என்பதை உணர்கிறான். தோழியும் தன் விருப்பத்தை நிறைவேற்றாதவளாக இருப்பதை நினைத்துத் துயருறுகிறான். மரக்கிளையில் ஏற இயலாத குட்டியைக் குரங்கானது அடி வயிற்றில் தழுவி அனைத்துச் செல்வதைப் போல் தன் குறிப்பை அறிந்து நிறைவேற்றுபவர் யாவரும் இல்லையே எனத் தன் நெஞ்சிற்குச் சொல்லி வருந்துகின்றான். இதனை ஔவையார்,

**“மகவுடை மந்திபோல**
**அகனுறத் தழீஇக் கேட்குநர்ப் பெரினே”[15]**

என்று கூறுவதன் வழி அறியலாம். தாய்க் குரங்கு தன் குட்டிக்கு உதவியதைப் போல பாச உணர்வுடன் தன் இயலாமையைப் புரிந்து செயல்படுபவர் இல்லை என்பதே தலைவனின் வருத்தத்திற்கு உரிய காரணமாக அமைகிறது. தலைவியின் நலன் கருதியே தோழியால் தலைவனுக்குக் குறியிடம் மறுக்கப்பட்டதை இதனால் அறியலாம்.

**வரைவு கடாவுதல்**

பெண்பாற் புலவர்கள் பாடிய களவுப் பாடல்கள் பெரும்பான்மையானவை வரைவினை வலியுறுத்துவதாக உள்ளன. வரைவு மலிதல், அறத்தொடு நிலை, உடன் போக்கு, கற்பொடு புணர்ந்த கவ்வை, மீட்சி, தன் மனை வரைதல்,

உடன்போக்கிடையீடு வரைதல் போன்ற நிலைகளில் நடைபெறும்.[16] களவுக் காலத்தில் தலைவன் பகற்குறி இரவுக் குறி ஆகிய இரு நிலைகளில் வந்தொழுகுவான். இதனைத் தொல்காப்பியர்,

> **''குறி எனப்படுவது இரவினும் பகலினும்**
> **அறியக் கிளந்த ஆற்றது என்ப''**[17]

என்று கூறுவதால் அறியலாம். தலை மக்களது குறியிடக் கூட்டத்திற்குப் பெரிதும் துணை நிற்பவள் தோழி ஆவாள். குறியிடம் வந்தொழுகும் தலைவனிடம் உரையாடி, களவு வெளிப்படுமாயின் அலர், இற்செறிப்பு, வெறியாட்டு, நொதுமலர் வரைவு போன்ற துன்பங்கள் தலைவிக்கு நேரிடும் என்பதை எடுத்துரைப்பாள். இனியும் களவு நீட்டிப்பது பொருளற்றது என்பதைக் கூறி, தலைவனை விரைந்து வந்து வரைந்து கொள்ளுமாறு தோழி பலவகையான வழிகளில் எடுத்துரைப்பாள். ''தலைவியின் விருப்பத்திற்கு ஏற்பப் பகற்குறி, இரவுக்குறிகளில் தலைவனைச் சந்திக்கத் தலைவிக்கு வாய்ப்புகளை உருவாக்கிக் கொடுக்கும் அதே நேரத்தில், தோழி தலைவன் மீண்டு செல்லும் போது வரைவு கடாவவும் தவற மாட்டாள்''[18] இவ்வாறான தோழியின் அறிவுறுத்தலுக்குப் பின்னரும் பலவகைக் காரணங்களால் தலைவன் வரைவு நீட்டித்தான் எனில் மீண்டும் மீண்டும் தோழி தலைவியின் துயர நிலையை எடுத்துக் கூறியும், குறியிடம் மறுத்தும், இல்லத்தாரின் கண்டிப்பு நிலைகளைச் சொல்லியும் விரைந்து வந்து முறையாகத் தலைவியை மணந்து கொள்ளுமாறு அறிவுறுத்துவாள். இதனை ந.சுப்புரெட்டியார்,

> **''வரைவு கடாவுதல் என்பது; அஃதாவது தலைவன் தலைவியை மணந்து கொள்வதைப் பற்றி உசாவுதல். இக்களவு வெளிப்படச் சுற்றத்தார் இற்செறிப்பரோ என்றும், வழியாலும் பொழுதாலும் ஏதம் வருங்கொல் என்றும் தோழி அச்சமுற்று, 'இவ்வாறு களவொழுக்கம் ஒழுகல் நும் குடிப்பிறப்புக்கும் சிறப்புக்கும் பொருந்தாமையின் நீவிர் இவளை மணந்து கொள்வதே தகுதி' என்று தலைவனை வரைவு கடாவத் தொங்குவாள்.''**[19]

என்று காட்சிப்படுத்துகின்றார். தலைவி தனது நாணமிகுதியின் காரணமாகத் தலைவனிடம் நேரடியாக வரைவு குறித்துப் பேசமாட்டாள். இவ்வேளை, தலைவியின் மனக் குறிப்பை முழுதும் உணர்ந்த தோழி தலைவியைக் கற்பு நெறிக்கு உடம்படுத்துவதிலேயே கருத்தாய் இருந்து செயல்படுவாள்.

**“களவில் தலைவியின் நலனுக்காகவும் பாதுகாப்பிற்காகவும் தலைவியின் வரைவு நிகழவும் தோழி கடமையாற்று கின்றாள்.”[20]**

என்று கூறப்படுவதாலும் தோழியின் பங்கு குறித்து அறியலாகிறது. குறியிடத்துச் சந்திக்க விருப்பம் கொண்ட தலைமகன் ஒருவன் சிறைப்புறமாக வந்து நின்றான். இதனை அறிந்த தோழி, அவன் காதில் படுமாறு தலைவியிடம் இதுவரை நாம் தலைவனின் விருப்பத்திற்கு இணங்கி ஒரு நாளும் நடந்து கொள்ளவில்லை. இவ்வாறு இருக்கும் நிலையிலேயே இவ்வூர் அவனோடு கைவளை உடைய கூடி முயங்கியதாகப் பழி கூறுகிறது. அவனோடு உண்மையாகவே கூடி முயக்கம் பெற்றிருந்தால் என்ன சொல்லித் தூற்றுமோ தெரியவில்லை. இந்நிலையில் தலைவன் வரைந்துகொள்வான் என்று எதிர்ப்பார்ப்பது ஐயமானதாகவே உள்ளது என்கிறாள். இதனைக் குன்றியனார் என்னும் புலவர்,

**“அமைந்து தொழில் கேட்டன்றோ விலமே முன்கை**
**வார்கோ லெல்வளை யுடைய வாங்கி**
**முயங்கெனக் கலுழ்ந்த விவ்வூ**
**ரெற்ற வதுகொல்யா மற்றொன்று செயினே”[21]**

என்று கூறுகிறார். தலைவியின் உள்ளக் குறிப்பை தோழி எடுத்துரைப்பதாக இப்பகுதி அமைந்துள்ளது. இவ்வாறு நேரடியாகவும் மறைமுகமாகவும் தோழி அறிவுறுத்துவதைத் தவிர தலைவியும் தோழியிடம் கூறுவதைப் போன்று மறைந்து நிற்கும் தலைவன் கேட்குமாறு வரைவு வேண்டுகின்றாள்.

### தலைவி வரைவு வேண்டல்

தோழி வரைவு வேண்டுவதாகவே பெரும்பாலான அகத்துறைப் பாடல்கள் அமைந்துள்ளன. பெண்பாற் புலவர்களின் பாடல்களில் தோழியின் வரைவு வேண்டுதலைவிட தலைவியின் வரைவு வேண்டுதல் குறித்த பாடல்களே அதிகம் உள்ளன.

**“தோழியைப் போலத் தலைவனிடம் தலைவி நேரிடையாக வரவினைப் பற்றிப் பேசாவிட்டாலும் சிறைப்புறமாகத் தலைவன் இருக்கும் போது, தோழியிடம் பேசுவாள் போல வரைவு பற்றிய தன் எண்ணங்களைக் காட்டுகிறாள். வரைவு கடாதலைத் தலைவி முகக் குறிப்பால் வெளிப்படையாகவும், மறைமுகமாகவும் காட்ட முடியும். தலைவனோடு தனித்திருக்கும் போது தன் முகக் குறிப்பினால் வரைவு வேட்கையைப் புலப்படுத்துவாள். தலைவன்**

> **சிறைப்புறமாக இருக்கும் போது அஃறிணைப் பொருளாகிய ஆறுபோன்றவற்றிடமும், உயர்திணையாகிய தோழியிடமும் தன் மனக்குறையைக் கூறுவாள் போல வரைவினைப் புலப்படுத்துவாள்.''[22]**

இவ்வாறு தலைவியின் வரைவு வேட்கையைக் கேட்ட தலைவன் மீண்டுச் சென்று வரைவிற்கு வேண்டிய ஏற்பாடுகளை விரைந்து முடித்துத் தலைவியை மணம் புரிந்து இல்லற வாழ்வைத் தொடங்குவான். மண வாழ்க்கைக்கு முன்பாகத் தலைவி வரைவு குறித்த தனது மன வேட்கையை வெளிப்படுத்துவதாகப் பெண்பாற் புலவர்களின் சில பாடல்கள் அமைந்துள்ளன. களவில் அதிக விருப்பம் கொண்ட தலைவன் ஒருவன் வரைவு நீட்டிக்கின்றான். அவனது வரவுக்காகத் தலைவி காத்திருக்கிறாள். பறவைகளும், விலங்குகளும் தன் இணையைச் சேர விரும்பும் மாலைப் பொழுதும் வர மேலும் வருந்துகின்றாள். வெளியிலிருந்து விருந்தினர் எவரும் வராமை கண்டு இல்லத்தாரும் கதவை அடைத்து விட்டனர். இந்நிலையில் தலைவன் வரைந்து கொள்ள எங்ஙனம் வருவான் என்று தலைவி தன் தோழியிடம் கூறுவனவாக நன்னாகையார் என்னும் பெண்பாற் புலவர்,

> **''பலர்புகு வாயிலடைக்கக் கடவுநர்**
> **வருவீ ருளீரோ வெனவும்**
> **வாரார் தோழி நங் காத லோரே''[23]**

என்று கூறிச் சிறப்பிக்கின்றார். மேலும், சிறைப்புறம் வந்து நிற்கும் தலைவன் கேட்குமாறு தலைவி தன் தோழியிடம் இவ்வாறு கூறுகின்றாள். கார்ப்பருவத்தின் இறுதி நாட்களில் இலேசானமழைப் பொழிவு இருந்தது. அவ்வேளை சேற்றை விரும்பும் எருமை அதனை வெறுத்துச் சிவந்தக் கண்களுடன், நடுயாமத்தில் அச்சம் உண்டாகும் படி 'ஐ' என்ற சப்தம் எழுப்பியது. அத்தகைய யாமப் பொழுதிலும் தலைவனது வரவை எதிர்நோக்கி இரவெல்லாம் உறங்காமல் வருந்தியிருந்தேன். ஆனால், தலைவன் நம் துயரை அறியாதவனாக இருந்து வருகிறான் என்றாள். இதனை எயிற்றியார் என்றும் புலவர்,

> **''சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்**
> **நள்ளென் யாமத் தையெனக் கரையும்**
> **அஞ்சுவரு பொழுதி னானு மென்கண்**
> **துஞ்சா வாழி தோழி.....''[24]**

என்று கூறுகின்றார். தலைவி தனக்குள் இருக்கும் வரைவின் விருப்பத்தைத் தோழியிடம் கூறுவது போன்று தலைவன் உணருமாறு வெளிப்படுத்தியதை இதன் வழி அறியலாம். தலைவன் வரைவு நீட்டிப்பதைப் பொறுக்காதவளாய் வருந்துகிறாள் ஒரு தலைவி. தலைவனின் இத்தகைய செயலைத் தோழி பழித்துக் கூறுகின்றாள். அதைக் கேட்ட தலைவி சினமுற்று, அருவியானது தன்னைச் சார்ந்திருக்கும் வேட்கையைப் பாதுகாப்பதைப் போல என்னையும் பாதுகாக்கத் தவறாதவன் தலைவன் என்று நம்பிக்கை மொழி கூறுகின்றாள். இத்தகைய தலைவியை அள்ளூர் நன்முல்லையார் என்னும் பெண்பாற் புலவர்,

> **"அருவி வேங்கைப் பெருமலை நாடற்**
> **கியானெவன் செய்கோ வென்றி யானது**
> **நகையென வுணரே னாயின்**
> **என்னா குவைகொ னன்னுதனீயே"**[25]

என்று கூறுவதன் வாயிலாக இதனை அறியலாம். தலைவியின் களவொழுக்க வாழ்வை மதி நுட்பத்துடன் செயல்பட்டு அதைக் கற்பொழுக்கமாக மாற்றுவதில் தோழியின் பங்கு பெரியது. தலைவியின் மன உணர்வுகளை முழுதாகப் புரிந்துக் கொண்டு, அவள் துவண்டபோது ஆற்றுவித்தும், தலைவன் வரைவு நீட்டித்த வழி அவனுக்குப் பலஅறிவுரைகளை நல்கி விரைவில் மணம் புரிய வைப்பதையும் தோழி தன் கடமையாகக் கொண்டு செயல்புரிந்துள்ளதை இதன் வழி அறிய முடிகின்றது.

**இற்செறிப்பு**

தலை மகளது களவு வெளிப்பட்ட நிலையில் இற்செறிப்பு நிகழும். தலைவி தன் ஆயத்தாரோடு விளையாட்டு போன்றவற்றில் கலந்து கொள்ளாதவாறு செவிலி மற்றும் அன்னை போன்றோர் காவல் நிற்பர். இந்நிலையில் தலைவனைச் சந்திப்பது என்பது கடினம். ந.சுப்புரெட்டியார்,

> **"இற்செறிப்பு என்பது, தலைவனைச் சந்திக்க இடமின்றி பெற்றோர் தலைவியை அவள் முதிர்ச்சி நோக்கி வீட்டினுள் இருத்துகையாகும்."**[26]

என்று கருத்துரைப்பதால் தலைவிக்கு மணப் பருவம் குறித்து பெற்றோர் கவலை கொண்டு இற்செறிப்பு நிகழ்த்தியமை அறியலாகிறது. இவ்வாறு இற்செறிப்பு

வைக்கப்பட்ட தலைவி ஒருத்தி மழை பொழியும் நள்ளிரவு நேரத்தில் சிறிய கரையை உடைய குளத்தைக் காவல் செய்யும் காவலனைப் போல் அன்னை உறங்காமல் இருக்கிறாள். இத்தகைய நிலையில் தாயின் காவலை மீறி தலைவனைக் கூடுவது என்பது இயலாத காரியம் என்பதை சிறைப்புறமாக வந்து நிற்கும் தலைவன் கேட்குமாறு தோழியிடம் கூறுகிறாள். இதனை நக்கண்ணையார்,

**''பெருங்குளங் காவலன் போல**
**அருங்கடி யன்னையுந் துயில்மறந் தனளே''[27]**

என்று பாடியுள்ளதன் வழி தலைவி இற்செறிக்கப்பட்டு வருந்தியதை அறியலாம். தலைவி இற்செறிக்கப்பட்டு அன்னையின் காவலில் இருப்பதைத் தலைவன் அறிந்து விரைந்து சென்று வரைவுக்கான ஏற்பாடுகளைச் செய்து தலைவியின் துயரினைப் போக்குவான் எனக் கருதிய தோழி தலைவனுக்குப் பலவாறு அறிவுரை நல்குகின்றாள். சிறைப்புறம் வந்து நிற்கும் தலைவனைக் கண்ட தோழி தலைவியிடம் பேசுபவள் போல், களவொழுக்கத்தை அன்னை அறிந்து இல்லறக் காவல் வைத்திருக்கிறாள். தலைவன் வரைவு நீட்டிப்பதால் தமது துன்பமும் மேலும் அதிகரிப்பதாய் உள்ளது. உனது அழகும் இளமையும் இல்லத்தில் இருந்தவாறே கழிந்து முதுமை ஏற்பட்டுவிடுமோ என்ற அச்சமும் உண்டாகிறது என்று கூறுகின்றாள். இதனை,

**''ஆயமு மழுங்கின்று யாயும் ஃதறிந்தன**
**ளருங்கடி யயர்ந்தனன் காப்பே**
**------------------------------**
**இளநல மிற்கடை யொழியச்**
**சேறும் வாழியோ முதிர்கம் யாமே''[28]**

என்ற ஔவையின் பாடலடிகள் வாயிலாக அறியலாம். தலைவி இற்செறிக்கப்பட்ட நிலையைத் தலைவன் அறிந்து அவனது சுற்றத்தோடு வந்து மணம் புரிந்து வாழ்க்கையைத் தொடங்க வேண்டும் என்பதே தலைவிக்கும் தோழிக்கும் நோக்கமாக இருந்துள்ளது. தலைவனுக்கும் களவு வெளிப்பட்டால் அச்சம் ஏற்படும். தலைவியின் துயர நிலைக்குத் தானும் காரணம் எனக் கருதித் தன் ஆண்மைக்கு இழுக்கு நேராதவாறு உடனே வரைவுக்கு வழி செய்து இல்லற வாழ்வில் ஈடுபடுவான் என்பது இதன் வழி பெறப்படுகிறது.

**பிரிவாற்றாமை**

களவில் ஈடுபட்டு வந்த தலைவன் தலைவியை மணந்துக் கொள்ளும் பொருட்டுப் பொருள் தேடும் முயற்சியில் ஈடுபடுவது உண்டு. தலைவன் பிரிவுற்ற காலத்தில் தலைவி துயரடைவாள். இவ்வகைத் துயரம் இன்பத்தில் முடிவதால் ஒரு வகையில் ஆற்றியிருக்கக் கூடியதாகும். இற்செறிப்பு முதலியவற்றால் தலைவனைச் சந்திக்காது பிரிந்து இருக்கும் நிலை மிகவும் துன்பகரமானதாகும். இதனை தி.சு.பாலசுந்தரம் பிள்ளை,

> **"பகற்குறி இராக்குறி முதலியவற்றால் நேர்ந்த பிரிவுகளைவிட இவ்வொருவழித் தணத்தலாலுண்டான பிரிவே அன்பையும் அறிவையுந் தாகாங்கு நிரம்பி விளைதற்குரிய அருமைக் கருவியாயுள்ள தென்பது கருத்தற்பாலது. வரைந்து கோடலை எல்லையாக உடைய களவொழுக்கம் முழுமையிலும் இவ்வொருவழிந் தணத்தலென்பதுதான் தக்கபயன் தரவல்ல உண்மைப் பிரிவிலக்கணத்தை யுடையதாகும்."[29]**

என்று பிரிவின் துயர நிலையைக் காட்சிப்படுத்துகின்றார். களவில் தலைவியோடு கூடியிருந்த தலைவன் தனது பிரிவு குறித்துத் தலைவியிடம் தெரிவிக்க எண்ணுகிறான். தலைவியின் கற்புத் திறத்தை நன்கு அறிந்தவளான தோழி, தலைவனை நோக்கி, தலைவியைப் பிரிந்து சென்று மீண்டும் வந்து கூடும் அந்த இடைப்பட்ட நாள் அளவும் தலைவி உயிருடன் இருக்க மாட்டாள் என்று வலியுறுத்துகின்றாள். இதனை,

> **"செலீஇய சேறியாயி னிவளே**
> **வருவை யாகிய சின்னாள்**
> **வாழா ளாதற் அறிந்தனை சென்மே"[30]**

என்னும் நக்கண்ணையாரின் பாடலடிகள் வழி பிரிவாற்றாமை நிலை குறித்த தோழியின் முன் எச்சரிக்கை நடவடிக்கை எத்தகையது என்பதை அறியலாம். நெடுநாளைய பிரிவைத் தலைவி தாங்க இயலாதவள் என்பது தலைவியின் கற்பு மேம்பாட்டைக் காட்டுகிறது. தலைவியை மணம் முடித்துச் சென்றால், அலர், பசலை, இற்செறிப்புப் போன்ற துன்ப நிலைகளுக்கு ஆளாகாமல் தடுக்கலாம் என்பதும் இங்கு கருத்தாய் அமைகின்றது.

**தலைவியின் வேட்கை**

தலைவனைச் சந்தித்துக் கூடியதிலிருந்து தலைவி தன் நிலை இழந்து நிற்கிறாள். தலைவன் உடனுறையும் போது இன்புற்றும் அவன் பிரிந்த போது துன்புற்றும் வருந்துகிறாள். தனக்குள் தலைவன் மீது இருக்கும் தீரா வேட்கையை வெளிப்படுத்த வழியின்றியும் சிலவேளைகளில் தோழியிடம் பகர்ந்தும் தவிக்கிறாள். களவு நிலையில் தலைவனின் பிரிவு ஒரு புறமும் ஊராரின் அலர், தலைவனின் வரைவு நீட்டிப்புப் போன்றவையும் தலைவியின் துன்பநிலைக்குக் காரணங்களாக அமைகின்றன. களவுக் காலத்தில் தன்னைப் பிரிந்து சென்ற தலைவனை நினைத்து இரங்குகின்றாள் தலைவி. வானத்தில் திங்கள் பிரகாசிப்பதையும், கடல் அலைகள் ஓயாமல் பேரொலி எழுப்புவதையும் காண்கிறாள். கடற்சோலையில் மலர்ந்த தாழையின் மணம் எங்கும் பரவி வீசுகின்றது. கடற்கரை அருகே இருக்கும் பனையில் அன்றில் பறவை ஓயாமல் கத்துகிறது. இவையல்லாமல் யாழிசை நடுயாமம் வரைக்கும் இசைக்கப்படுகின்றது. இத்தகைய புறநிகழ்வுகள் அனைத்தும் தலைவிக்குத் தலைவன் மீதுள்ள காமத்தை மேலும் அதிகரிக்கச் செய்கின்றன. இந்நேரத்தில் தலைவன் அருகில் இல்லாமையை நினைத்து வருந்துகின்றாள் தலைவி. இக்காட்சியை வெள்ளி வீதியார்,

> **''அன்றிலு மென்புற நரலுமன்றி**
> **விரல்கவர்ந் துழந்த கவர்வி னல்யாழ்**
> **யாம முய்யாமை நின்றன்று**
> **காமம் பெரிதே களைஞரோ விலரே''[31]**

என்று விளக்குகிறார். மேலும், தலைவன் பிரிந்துள்ள நிலையில் தனக்குள் ஏற்பட்ட காமவேட்கை குறித்த ஒரு தலைவி இவ்வாறு கூறுகின்றாள்.

இமயத்திலிருந்து தோன்றிப் பெருக்கெடுத்து ஓடும் கங்கையாற்றின் வெள்ளம், வழியில் உள்ள தடுப்புகளைத் தகர்த்துச் செல்வது போல், தலைவன் மேல் தனக்குள் ஏற்பட்ட காமப் பெருக்கம் பெண்மையின் நிலைக்களன்களாகிய அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு போன்றவற்றால் தடுத்து நிறுத்தவியலாத ஒன்றாக உள்ளது என்று தன் நிலையைக் கூறுகின்றாள். இதனை நல்வெள்ளையார் என்னும் புலவர்,

**“கங்கையம் பேர் யாற்றுக் கரையிறந் திழிதருஞ்**
**சிறையடு கடும்புன லன்னவென்**
**னிறையடு காம நீந்து மாறே”[32]**

என்ற பாடலடிகளின் வாயிலாகக் காட்டுகின்றார். தலைவி தன் உடல் முழுதும் காமநோய் பரவியதாகவும் கங்கைப் பெருக்கைத் தடுத்து நிறுத்த முடியாதது போல நாணம் போன்றவற்றால் தடுக்க இயலாததாகவும் தமக்குள் ஏற்பட்ட காமப் பெருக்கத்தைத் தணிக்கும் வழி அறியாதவளாகவும் வருந்துவதாகக் கூறுகிறாள் தலைவி.

**பொருட்பிரிவு**

சங்க காலத்தில் பொருள் தேடுதல் என்பது ஆடவர்க்கே உரித்தான முதற்கடமைகளில் ஒன்றாகப் போற்றப்படுகிறது. களவு வழிப்பட்ட நிலையில் பொருட் பிரிவு என்பது தலைமக்கள் இருவருக்கும் துன்பத்தைக் கொடுப்பதாக இருக்கிறது. அக்காலத்தில் பெண்களுக்கு ஆடவர்கள் பரிசம் கொடுத்து மணக்க வேண்டியிருந்தது. இதனால் ஆடவர் பலரும் சுயமாக முயன்று பொருள் கொணர்ந்து மண ஏற்பாடுகளைச் செய்தனர். இதனை இ.சிவகுரு நாதன்,

**“தலைவன் திருமணத்திற்கு வேண்டிய பொருளொடு தக்க சான்றோர் பலரைத் தனது கருத்தைத் தலைவியின் இல்லத்தார்க்கு அறிவிக்க அழைத்து வருவான். அச்செய்தி கேட்ட தலைவி அளவிலா மகிழ்ச்சி அடைவாள்.”[33]**

என்று கூறுவதால் தலைவன் பொருள் பெற்று வந்த பின்பு தலைவியை மணம் புரிய வந்தமையை அறியலாம்.

தலைவியை மணம் புரிய வேண்டி, பொருள் தேடப் பிரிந்துச் செல்கிறான் தலைவன். அப்பிரிவைத் தலைவி ஒருவாறு ஆற்றியிருப்பதும், முடியாத நேரத்தில் தன் தோழியிடம் தனது துன்ப நிலையைச் சொல்லிப் புலம்புவதும் வழக்கமாக உள்ளது. களவில் ஏற்படும் பொருட் பிரிவை கற்பில் தழைக்கப் போகும் வாழ்வை எண்ணி ஒருவாறு ஆற்றியிருக்கின்றாள்.

வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிவு என்பது தலைமக்கள் இருவரிடையேயும் திருமண நோக்கத்துடன் அமைவதால் அது ஒருவகை ஆறுதல் தருவதாக அமையப் பெற்றது. இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் நடைபெறும்

இப்பிரிவின் கண் திருமண இன்பத்தை நினைத்து தலைவி ஒருவாறு ஆற்றியிருந்தாலும் பொருட்பிரிவின் காலம் நீட்டிக்கும் வழி அவளின் துயரம் அதிகரிக்கின்றது. இந்நிலையில் தன் நிலையைப் பலவாறு கூறி புலம்புகின்றாள். தலைவன் பொருட் பிரிவின் வழி பிரிந்து சென்ற போது முதலில் அப்பிரிவை ஆற்றியிருக்கும் தன்மையுடையவளாகின்றாள் தலைவி. உறக்கத்திலும் அவனது நினைவே மேலோங்கி இருப்பதால் தலைவன் அருகிலிருந்து அணைத்தலைப் போல கனவு காண்கிறாள். விழித்தெழுந்ததும் அவன் அருகில் இருப்பதாக நினைத்து படுக்கையைத் தடவுகையில் அவன் இல்லாமை உணர்ந்து தான் கண்டது பொய்க் கனவு என்பதை அறிந்து நாணமடைகின்றாள். கூறிச் சென்ற பருவத்தில் திரும்பாத தலைவன் ஏற்கனவே பொய் கூறியவன் ஆனான். இப்போது கனவிலும் பொய்யாகத் தோன்றும் தன்மை உடையவன் ஆனான் என்பதைத் தலைவி கூறுவதாக கச்சிப்பேட்டு நன்னாகையார்,

**“பொய்வலாளன் மெய்யுற மரீஇய**
**வாய்த்தகைப் பொய்க்கனா மருட்ட வேற்றெழுந்**
**தமளி தைவந் தனனே”[34]**

என்கிறார். களவிற் பொருட் பிரிவைத் தலைவி ஆற்றியிருக்கக் கடமையுடைவளாக இருப்பினும் தலைவன் காலம் நீட்டித்த வழி துன்பம் உண்டாகவே செய்கிறது என்பதை நன்னாகையாரின் குறுந்தொகைப் பாடல் இவ்வாறு விளக்குகின்றது.

**தலைவியின் கனவு நிலை**

கனவு பற்றி இலக்கியத்தில் பல நிலைகளில் பேசப்படுகின்றது. கனவு என்பது நினைவுகளின் அழுத்தத்தால் உண்டான மேலோங்கிய வெளிப்பாடாகவும் அமைகிறது. அவ்வாறு இல்லாமல் எதிர்ப்பாராத சில காட்சிகளும் கனவில் தோன்றி மறைகின்றன. கனவு நினைவாகும் என்று கூறப்படுவது வழக்கம். கனவு பற்றிச் சங்க நூல்களிலும் பேசப்படுகின்றது. ச.வே. சுப்பிரமணியம்,

**“நனவில் எய்தாத அனுபவத்தைக் கனவில் பெற்று அமைதி அடைவதை இலக்கியத்திலும் வாழ்க்கையிலும் காணலாம். எனவே கனவினை, நனவின் மாற்றுப் பொருளாகவும் (Substitute) கருதலாம்.”[35]**

என்று கூறுகின்றார்.தலைவன் பிரிந்த நிலையில் நற்றிணைத் தலைவி ஒருத்தி கண்ட கனவு இவ்வாறு அமைகிறது. பிரிந்து சென்ற தலைவனையும், கூடியிருந்த போது அவனோடு கொண்ட இன்ப நினைவுகளையும் மனதில் நினைத்தவாறு பகற்பொழுது ஒன்றில் உறக்கம் மேற்கொள்கிறாள். அப்போது தலைவனோடு கூடி முயக்கம் கொள்வதுபோல் கனவு காண்கிறாள். விழித்தவுடன் தலைவனோடு கூடிய இன்பத்தை இழந்தவள் ஆகின்றாள். ஊரில் உள்ள உயர்ந்த மரத்தின் கிளையில் தொங்கிய வௌவால் தூங்கியவாறு அழிசியின் காட்டிலுள்ள நெல்லிக்கனியை உண்டது போல் தன் கனவுக்கு உவமைக் கூறி தோழியிடம் வருந்துகிறாள். இதனை நக்கண்ணையார்,

> **''வெல்போர்ச் சோழ ரழிசியம் பெருங்காட்டு**
> **நெல்லியம் புளிச்சுவைக் கனவில் யாஅங்**
> **கதுகழிந் தனறே தோழி....''[36]**

என்று தலைவி கூறுவதாகப் பாடியுள்ளார். தலைவன் உடனிருந்தபோது பெற்ற இன்ப நுகர்வுகள் அவன் இல்லாதபோது கனவில் வந்து வருத்தமுறச் செய்தன என்பதைக் கூறுகின்றாள்.

**பசலை நோய்**

தலைவனைப் பிரிந்து வாடும் நிலையில் தலைவிக்கு உண்டாகும் ஒருவித உடல்மெலிவு 'பசலை' எனப்படும். காம வேட்கையினால் ஏற்பட்ட துன்பமிகுதியாலும் எதிர்காலம் குறித்த அச்சத்தாலும் தலைவன் பிரிவு, அலர், இற்செறிப்பு போன்ற காரணங்களாலும் தலைவிக்குப் பசலை நோய் உண்டாகும். இதில் தலைவியின் இயற்கை நலம் கெட்டொழிந்து மேனி வாட்ட முறும். பசலை குறித்து பி.நா.ஐயர்,

> **''இது கண்ணாடி மேல், வாயினாலூதிய ஆவிபட்டு அக்கண்ணாடி மழுக்கமடைவது போலத் தலைவியின் நெற்றியிலுள்ள ஒளி தலைவனைப் பிரிதலால் மருங்கித் தோன்றுதல்; இதனை பீர் எனவும் பொன் எனவுமுரைப்பர்.''[37]**

என்று கூறுவதால் அதன் தன்மை அறியப்படுகின்றது. மேலும், தலைவிக்கு உண்டான பசலையானது பீர்க்கம் பூவின் நிறத்திணை ஒத்திருந்தது என்பதை வெள்ளிவீதியார்,

"--------- --------- ------ மாமை
யரிநுண் பசலை பாஅய்ப்பீரத்
தெழின் மலர் புரைதல் வேண்டும்"[38]

என்ற தமது பாடலடிகள் வாயிலாகக் கூறுகின்றார். பசலை நிறத்திற்கு பீர்க்கம் மலர் இன்னும் பல இடங்களிலும் (நற். 197, 277, 326) (குறுந்.98) உவமையாகக் கூறப்படுகின்றது.

**பசலை நோய்ப் பரவுதல்**

தலைவனைப் பிரிந்த வழி தலைவிக்குப் பசலை நோய் பரவுகிறது. இவ்வாறு வருந்தும் நெய்தல் நிலத் தலைவி ஒருத்தி பகற்பொழுது முழுதும் தலைவனுடன் கடற்சோலையில் கூடித் திளைக்கின்றாள். மாலை நேரம் நெருங்கியதால் தலைவன் தன் ஊர் நோக்கிப் புறப்பட்டான். இதுவரை இன்பமளித்த கடற்சோலை தலைவிக்குத் தற்போது துன்பத்தைத் தருவதாய் அமைந்தது. தலைவனைப் பிரிந்த மறுகணமே பசலை நோயும் மேனியெங்கும் பரவியது. தன்துன்ப நிலையைத் தலைவி,

"மெய்ம்மலி காமத் தியாந்தொழு தொழியத்
தேடுஞ் செல்புற மறையு மூரோ
டியாங்கா வதுகொ றானே தேம்பட
-------- ----- ------- ----------
இன்னகை மேவநா மாடிய பொழிலே"[39]

என்று கூறவதாக ஔவையாரின் பாடலடிகள் அமைந்துள்ளன. தலைவன் வரும்போது அவனைக் கைதொழுது வரவேற்பதும், செல்லும் போது புறந்தொழுது வழியனுப்புதலும் கற்புடைய மகளிரின் வழக்கமாக இருந்தமையை ஔவையார் இப்பாடலின் வழி கூறுகின்றார். பாலைநிலத் தலைமகள் ஒருத்தி தலைவன் பகற்குறிக்கண் வந்துச் செல்லும் பொழுதைவிட வராத பொழுதே அதிகமாக இருந்தமையால் உடல்மெலிந்து பசலை கொள்கிறாள். தன்னை ஆற்றுவிக்க முயலும் தோழியிடம், வரைந்து கொள்வேன் என்னும் ஒரு சொல்லைத் தலைவன் சொல்லினால் தமக்கு ஏற்பட்ட பசலை நீங்கி இன்பம் கொள்வோம் என்று கூறுகின்றாள். இதனைப் பூங்கணுத்திரையார் என்னும் புலவர்,

"நன்னுதல் பசலை நீங்க வன்ன
நசையாகு பண்பினொரு சொல்
இசையாது கொல்லோ காதலர் தமக்கே"[40]

என்று கூறுவதால் அறியமுடிகிறது. தலைவி தன் பசலைக்குத் தலைவனின் வரைவு குறித்த சொல் ஒன்றே மருந்தாக அமையும் என்பதைத் தோழிக்குச் சுட்டிக் காட்டியது இதன் வழி அறியப்படுகிறது.

**பசலையின் தன்மை**

பாலை நிலத் தலைவி ஒருத்தி தனக்கு உண்டான பசலை நோயின் தன்மையை இவ்வாறு கூறுகின்றாள். பசுவின் இனிய பால் அதன் கன்றினாலும் உண்ணப்படாமல், பயன்பாட்டிற்குக் கலத்திலும் கறந்துக் கொள்ளாமல், தரையில் சிந்தி வீணாவது போல், தனது மேனியின் அழகானது தனக்கும் பொலிவு தராமல் தன்னால் விரும்பப்படும் தலைவனுக்கும் இன்பம் தராமல் வீணாகப் பசலை என்னும் நோய் உண்ணுவதாயிற்று எனக் கூறி வருந்துகின்றாள். இதனை,

**"கன்று முண்ணாது கலத்தினும் படாது**
**நல்லான் தீம்பா னிலத்துக் காஅங்**
**கெனக்கு மாகா தென்னைக்கு முதவாது**
**பசலை யுணீஇயர் வேண்டும்**
**திதலை யல்குலென் மாமைக் கவினே"**[41]

என்னும் வெள்ளிவீதியாரின் பாடலடிகள் வாயிலாக அறியலாகின்றது. பசலைக்குப் பசுவின் பால் உவமை கூறப்பட்டது. பசலை படர்ந்ததால் தனக்கும் தலைவனுக்கும் அதனால் யாதொரு நன்மையும் இல்லாமை குறித்து மனம் வெறுத்துப் புலம்புவதாக வெள்ளி வீதியாரால் பாடப்பட்டுள்ளது.

**பிரிவில் உண்டாகும் பசலை**

களவொழுக்கம் மேற்கொண்டு வந்த தலைவன் பொருட்பிரிவின் காரணமாகத் தலைவியைப் பிரிய நேரிடுகிறது. அவனது பிரிவைத் தாங்காது இரவில் உறக்கமில்லாது வருந்துகிறாள் தலைவி. இரவில் வீசும் தென்றல் காற்றும் துன்பத்தையே தருகிறது. தனக்கு உண்டான பசலை நோய்க்குத் தலைவனின் வரவு மட்டுமே மருந்தாக அமையுமே தவிர பிற அல்ல என்று கூறுகின்றாள். இதனை,

**"தோளும் தொல்கவின் தொலைய நாளும்**
**பிரிந்தோர் பெயர்வுக் கிரங்கி**
**மருந்து பிறி தின்மையினிருந்து வினையிலேனே"**[42]

என்னும் பாடலடிகள் வாயிலாக அறியலாம். களவுக் காலத்தில் ஒழுகும் தலைமகன் பனிப்பருவத்தில் பிரிந்து செல்வது அக்கால வழக்கமாக இருந்துள்ளது. இவ்வாறு பனிப்பருவத்தில் தலைவன் பிரிந்து சென்றமையால் பசலை நோய் ஏற்பட்டுத் தனது மேனியின் அழகையெல்லாம் சிதைத்தது என்பதைத் தலைவி,

**''புலம்புனிறு தீர்த்த புதுவர லற்சிரம்
நலங்கவர் பசலை நலியவும்...''**[43]

என்று புலம்புவதாக ஔவையாரின் பாடலடிகள் அமைந்துள்ளன. தலைவிக்குத் தலைவனைப் பிரிந்த போது பசலை ஏற்படுவதும் அவனைக் கூடிய போது அது மறைந்து பழைய அழகு பெறுவதும் இயல்பு. தலைவன் பிரிந்த வழி பசலை நோயுற்றத் தலைமகள் ஒருத்தி, 'அசுணம்' என்னும் விலங்கைப் பிடிப்பவர் முதலில் இனிய இசையை எழுப்பி, அவை இசையில் மயங்கிய நிலையில் 'துடும்' எனப் பேரொலி எழுப்பிக் கொல்வர். அதுபோல் தலைவனின் உறவு கூடிய போது இன்பமும் பிரிந்த போது துன்பமும் உண்டாக்குவதாகக் கூறுகின்றாள். இக்காட்சியை மாறோக்கத்து நப்பசலையார் என்னும் புலவர்,

**''மணிமிடை பொன்னின் மாமை சாயாவ
னணிநலஞ் சிதைக்குமார் பசலை யதனா
லசுணங் கொல்பவர் கைபோ னன்று
மின்பமுந் துன்பமு முடைத்தே''**[44]

என்று காட்சிப்படுத்தியுள்ளார்.

**பசலையால் அலர் மிகுதல்**

தலைமக்களின் களவொழுக்கம் குறித்து ஊர்ப் பெண்கள் தமக்குள் பேசிக் கொள்வது அலர் ஆகும். அலர் குறித்து வ.சுப. மாணிக்கம்,

**''ஒரு குமரியின் காதலொழுக்கம் பற்றி ஊர்மக்களின் வாய்க்குள் பேசிக் கொள்வது அம்பல் எனவும், வெளிப்படையாகப் பேசுவது அலர் எனவும் பெயர் பெறும்.''**[45]

என்று கூறுகின்றார். அலர் என்பதற்கு தூற்றல், அல்லது பழிச் சொல் என்றும் பொருள் கூறப்படுகின்றது. அலர் எழுவதால் ஒரு பக்கம் துன்பம் என்றாலும் அது வரைவுக்கு அடித்தளமாய் அமைவதை அகப்பாடல்கள் சுட்டுகின்றன. தலைவனின் பிரிவால் உண்டான பசலை நோயினை இன்னதென அறியாத

ஊர்மக்கள் அதுபற்றிப் பலவாறாகப் பேசத் தொடங்கிவிட்டதை அறிகின்றாள் தலைவி. அது குறித்துத் தன் தோழியிடம் நோய் உண்டானமைக்குக் காரணம் ஒன்றிருக்க, பிறிதொன்றாகக் கூறப்படுவதற்குத் தாமே காரணமாக இருப்பது பண்பான செயல் ஆகாது என்று உரைக்கின்றாள். இதனைக் குன்றியனார் என்னும் புலவர்,

**''பிணி பிறிதாகக் கூறுவர்**
**பழிபிறி தாகல் பண்புமாரன்றே''**[46]

என்று கூறுவதன் வழி அறியலாம். அலர் நீங்குவதற்கு நிலையானதொரு வழி வரைவு மேற்கொள்ளுதலே ஆகும். தலைவியும் தோழியும் அலரினைச் சுட்டிக் காட்டி தலைவனை வரைவுக்கு விரைந்து வரக் கூறுவர்.

**பசலையை மறைத்தல்**

தலைவிக்கு உண்டாகும் பசலை குறித்துப் பலரும் பலவாறு பேசக் கூடும். இந்நேரத்தில் தோழியின் துணையும், அவள் அறிவுரையும் தலைவிக்கு மிகுந்த பயனளிக்கும். பசலையின் மிகுதியால் கைவளை கழன்று விழும் நிலையில் வருந்தும் தலைவிக்குத் தோழி, கைவளை கழன்று விழுவதாக இருப்பினும் அதை மாற்றி கைக்குத் தக்க அளவுடைய வளையை அணிந்து உடல் மெலிவை வெளிக் காட்டாமல் இருப்போம் என்று கூறுகின்றாள். இதைக் குன்றியனார் என்னும் புலவர்,

**.................. துறைவன்**
**வாரா தமையினு மமைக**
**சிறியவு முளவீண்டு விலைஞர்கை வளையே''**[47]

என்று கூறுவதன் வழி தலைவிக்குப் பசலை உண்டான போது தலைவன் வரும் வரை அதை மறைத்துக் காப்பதற்கு உரிய வழிகளை ஆராய்ந்து செயல்படுவதை அறியமுடிகிறது.

**குறிபார்த்தல்**

சங்ககால மக்களிடையே குறிபார்க்கும் வழக்கம் பெருகியிருந்ததைச் சங்க அகப்பாடல்கள் பறை சாற்றுகின்றன. குறி சொல்லும் பெண்டிர் கட்டுவிச்சி,

அகவன் மகள், நரைமுது பெண்டிர், குறத்தி என அழைக்கப்பட்டனர். குறி பார்க்கும் வழக்கம் குறித்து சு.வித்தியானந்தன்,

> **''தலைவியினுடைய காமநோயை அறியமாட்டாத தாய் அவள் அடைந்த வேறுபாட்டின் காரணத்தை ஆராயும் பொருட்டுக் கட்டுவிச்சியை அழைத்துக் கட்டுப் பார்ப்பது வழக்கம். கட்டுவிச்சி முறத்தில் நெல்லையிட்டு, அதனை எண்ணி, அதனாற் போந்த சில நிமித்தங்களை அறிந்து, இவள் முருகனால் அணங்கப்பட்டாள்' எனக் கூறுவள். கட்டுவிச்சியர் தெய்வமேறக் குறி சொல்லுதலும் உண்டு. இவர்களைப் பிற்காலத்தவர் குறத்தியரென அழைப்பர்.''[48]**

என்று விளக்குகிறார்.

தலைவியின் உடல் மெலிவையும் அவளுக்கு ஏற்பட்டுள்ள நோய் குறித்த தன்மைகளையும் இல்லத்தார் அறிந்து கொள்ளும் பொருட்டுக் குறிபார்க்கும் கட்டுவிச்சியை அழைப்பர். அவள் தலைவிக்கு உண்டான நோய் இன்னதென்று கூறும் முன்பாகத் தனது மலைவளம் நாட்டு வளம் போன்றவற்றை எடுத்துக் கூறி பின்னர் தலைவிக்கு உண்டான நோய் தீர வழி கூறுவாள். இவ்வாறு குறுந்தொகைத் தலைவி ஒருத்திக்குக் குறிபார்க்கும் நிகழ்வு நடைபெறுகிறது. அப்போது கட்டுவிச்சி தெய்வங்களை அழைத்துப் பாடல்களை ஒவ்வொன்றாகப் பாடினாள். அப்போது அருகிருந்தத் தோழி கட்டுவிச்சியை நோக்கி, நரை கூந்தலையுடைய கட்டுவிச்சியே நீ, நிறுத்தாமல் உமது பாடல்களைப் பாடுக. எமது தலைவனையும் அவனது மலையையும் குறித்துப் பாடிய பாட்டாதலால் அதை மீண்டும் மீண்டும் பாடுக என்று கூறுகின்றாள். இதனை,

> **''அகவன் மகளே பாடுகபாட்டே**
> **இன்னும் பாடுகபாட்டே அவர்**
> **நன்னெடுங் குன்றம் பாடியபாட்டே''[49]**

என்ற ஔவையாரின் பாடலடிகள் வழி அறியலாம். கட்டுவிச்சி என்பவள் வயது முதிர்ந்தவள் என்பதும், கழற்சிக்காய், மந்திரக் கோல் போன்றவற்றைக் கொண்டு தலைவியை நெல் பரப்பிய இருக்கை மீது அமர வைத்துக் குறி பார்க்கும் இயல்புடையவள் என்பதும் இதனால் பெறப்படுகிறது. பழங்காலத்தில், தலைவிக்கு உண்டான உடல் நோயைக் கட்டுவிச்சி மூலமே அறிந்து நோயைத் தணிக்கும் பொருட்டு வெறியாட்டுப் போன்றவற்றை நிகழ்த்தியுள்ளனர். மேற்கண்ட ஔவையின் பாடலில் தலைவன் அவன் எனக் குறிப்பிடாமல் 'அவர்'

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதனால், தலைவன் தலைவிக்கு தாய்வழி உறவாகலாம் எனக் கருதப்படுகிறது. பெரும்பாலான அகப் பாடல்களில் தலைவன் ‘அவன்’ என்றே குறிப்பிடப்பட்டுள்ளான்.

**வெறியாட்டு**

இளம் மகளிர்க்கு ஏற்பட்ட நோய் இன்னதென்று அறியப்படாத நிலையில் தெய்வம் குற்றத்தால் உண்டானதாகக் கூறும் கட்டுவிச்சியின் குறி சொல்லுக்கு இணங்க, வேலனை அழைத்து, பலியிட்டு நடத்தப் பெறும் ஒரு வகைச் சடங்கு வெறியாட்டு எனப்படுகிறது. இவ்வெறியாட்டினை நிகழ்த்துவதற்கென்றே ‘வேலன்’ எனக் கூறப்படும் மாந்தர்கள் அன்று இருந்தனர். இவ்வாறு வெறியாட்டு நிகழ்த்துவதன் மூலம் தெய்வத்தின் சினம் தணிந்து குற்றம் நீங்கி நோய் தீரும் என்பது அக்கால மக்களின் நம்பிக்கையாக இருந்துள்ளது. வெறியாட்டு குறித்து சு.வித்தியானந்தன்,

> **‘‘தமிழருடைய வழிபாட்டிலே வெறியாட்டு முதலிய ஆட்டங்கள் முக்கிய இடம் பெற்றன. முருக வழிபாடு கூறப்படும் இடங்களில் இத்தகைய கூத்துக்கள் வருணிக்கப்படுகின்றன. இவ்வழிபாடுகளிற் பூசாரிகள் இல்லை. வழிபடுவோர் இறைவன் தம்மிலே வந்து வெளிப்படுவான் என்னும் நம்பிக்கையுடன் கூத்தாடினர்.’’**[50]

என்று கூறுகின்றார். இத்தகைய வெறியாட்டு பழந்தமிழ்ச் சமுதாயத்தில் முக்கிய இடம் பெற்றுள்ளது. வெறியாட்டினை நிகழ்த்துதற்கு முதலில் முடிவு செய்பவர் பெண்களே. பின்னரே அம்முடிவு ஆடவர்க்கு அறிவிக்கப்படுகின்றது. வெறியாட்டில் நோய் வாய்ப்பட்ட தலைவியும், பூசைகள் நிகழ்த்தும் வேலனும் குறிபார்க்கும் கட்டுவிச்சியும், தோழியும், நற்றாயும் முக்கிய இடம் பெறுகின்றனர். வெறியாட்டு நிகழ்வு குறித்து ந.சுப்பு ரெட்டியார்,

> **‘‘வீட்டில் நல்லதோரிடத்தில் புது மணல் பரப்பிய வெறியாடற் களத்தில் பூசை தொடங்குகின்றது. முருக பூசை செய்விப்பவன் வேலன் எனப்படுவான். இவன் முருகனுக்குரிய வேலை நட்டுப் பூசை நடத்துபவன் போலும்.’’**[51]

என்று கூறுகின்றார். இத்தகைய வெறியாட்டு நிகழ்வுகளைப் பெண்பாற் புலவர்களும் தமது பாடல்களில் சிறப்பித்துள்ளனர். தம் மகளுக்கு உண்டான நோய் இன்னதென்று அறியாத நிலையில் வருந்துகிறாள் ஒரு தாய். உள்ளம் தாங்காதவளாய் கட்டுவிச்சியை அழைத்து குறிப்பார்த்தாள். கட்டுவிச்சியும்

அரிசியைப் பரப்பி உண்மையை ஆராயாது இது முருகனால் உண்டான நோய் எனத் துணிந்து கூறினாள். அதை நம்பிய தாய் முருகனை நினைத்துத் தன் மகள் பழைய அழகினைப் பெற்றுச் சிறப்புற வேண்டும் என்று வேண்டினாள். அதன் தொடர்ச்சியாக 'வேலன்' அழைக்கப்பட்டான். அவன் வெறியாட்டு நடத்தப் பெறும் களத்தைச் செப்பம் செய்து பனந்தோட்டை கடம்ப மலருடன் இணைத்துச் சூட்டினான். இசையுடன் கூடிய இனிய பாடல்களைப் பாடி முருகனின் புகழை அவ்வேளை எடுத்துரைத்தான். இத்தகைய நிகழ்வுகளையெல்லாம் கண்டு பொறுத்திருந்த தலைவி தன் தோழியிடம், தாய் வேண்டுதலின் படி நோய்த் தீர்ந்தால் தலைவன் தனக்கு ஏற்பட்ட நோய்க் குறித்து வினவுவான். வெறியாட்டு நிகழ்த்திய பின்னரும் நோய் தீராது போகுமானால் தாய்க்கு இதுவரை மறைபொருளாக இருந்துவந்த களவு வெளிப்பாடாமல் இருக்காது எனக் கூறி வருந்தினாள். இத்தகைய பொருளமைந்த காட்சியை வெறிபாடிய காமக் கண்ணியார்,

**''கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்**
**பொய்வல் பெண்டிர் பிரப்புளபு இரீஇ**
**ருக னாரணங் கென்றலி னது செத்து**
---- -------- ---- -------- --------
**பாவை யன்ன பலராய் மாண்கவின்**
**பண்டையிற் சிறக்க வென் மகட்கெனப் பரைஇ**
------- --------- --------- --------
**செல்வன் பெரும்பெய ரேத்தி வேலன்**
**வெறியயர் வியன்களம் .......''**[52]

என்ற நமது பாடலடிகள் வழி காட்சிப்படுத்திக் காட்டுகின்றார். வெறியாட்டு நிகழ்த்துகின்ற போது தலைவனால் உண்டான பசலை என்னும் நோயின் துன்பம் தலைவிக்கு மேலும் அதிகரிப்பதையே காமக்கண்ணியாரின் பாடல் எடுத்துரைக்கின்றது. வ.சுப.மாணிக்கம், ''சமுதாயச் சடங்குக்கும் கற்பொழுக்கத்துக்கும் ஒரு போராட்டத்தை வெறியாட்டிற் காணலாம்''[53] என்று உரைப்பதன் வழியும் தலைவியின் துன்ப நிலை பெறப்படுகிறது. ''சங்கச் சமுதாயத்தில்'' வெறியாட்டு எனும் நிகழ்ச்சி பரவலாகக் காணப்பட்டாலும் கூட தங்கள் இல்லத்தில் இவ்வெறியாட்டு நடைபெறுதல் தனக்கும் தன் குலத்திற்கும் பழி தருமே என்ற தலைவயின் நாண உணர்வைச் சங்கம் பாக்கள் காட்டுகின்றன''[54]

வெறியாட்டு என்பது பண்டைய சமூகத்தில் முக்கிய இடம் பெற்றுள்ளதை இதன் வழி உணரலாம்.

**தலைவனுக்கு மிகுந்த காமநோய்**

தலைவனைப் பிரிந்த நிலையில் தலைவிக்கு உண்டாகும் பசலைநோய் போல், தலைவியைப் பிரிந்த நிலையில் தலைவனுக்கும் காமநோய் ஏற்பட்டுத் துன்புறுவதைச் சங்கம் பாடல்கள் காட்சிப்படுத்துகின்றன. தனது காமநோய் முற்றிய நிலையில் தலைவன் மடலேறுதல் போன்றவற்றை நிகழ்த்துகின்றான். மடலேறும் தலைவன்,

> **“தம்மிடம் மிக்கெழுந்த காமக் காழ்ப்பினால் தமக்குள்ள நாணத்தையும் ஆண்மையையும் இழந்து உடம்பெல்லாம் நீறுபூசி மார்பில் எலும்பு மாலையையும் தலையில் எருக்கம்பூ மாலையையும் சூடிக் கொண்டு தலைவியின் வீட்டிற்கு அருகில் நாற்சந்தியில் பனங்கருக்காற் செய்யப்பெற்ற ஒரு பொய்க் குதிரையின் மேல் ஏறி நிற்பான் … இங்ஙனம் தலைவன் குதிரை மீதேறி வெளிப்படையாகத் தன் கருத்தை எல்லோர்க்கும் தெரியும்படி ஆரவாரம் செய்து நிற்றலே மடலேறுதல் என்ற பெயரால் இலக்கியங்களில் வழங்கப்பெறும்.”**[55]

என்று கூறும் ந.சுப்புரெட்டியாரின் கூற்றும் தலைவனின் காமநோய் குறித்த செய்தியை மொழிகின்றது. குறிஞ்சி நிலத் தலைவன் ஒருவன் தனக்குள் ஏற்பட்ட காமநோயின் மிகுதியை இவ்வாறு கூறுகின்றான். ஞாயிற்றின் வெப்பத்தால் சூடேறிய பாறையின் மீது வைக்கப்பட்ட வெண்ணெய் யானது உருகிப் பரவுவதைப் போல் தனக்குள் காமநோய்ப் பரவியதாகக் கூறும் அவன் தன் நிலையை கையில்லாத ஊமையன் ஒருவனோடு ஒப்பிட்டுக் கூறுகின்றான். பாறையின் மீது வெண்ணைய் உருகி வழிவதைக் கண்ட கையில்லாத ஊமையன், அதனைக் கையால் எடுத்துப் பாதுகாக்கவும் முடியாமல், வாயால் பிறரை அழைத்து பாதுகாக்கச் சொல்லவும் முடியாமல் தவிப்பதைப் போன்று தனக்குள் ஏற்பட்ட காமநோயானது தாங்கிக் கொள்ளவும் இயலாததாய், பிறரிடத்துக் கூறி வெளிப்படுத்தவும் இயலாததாய் உள்ளதாகக் கூறி வருந்துகிறான். இதனை,

> **“ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்**
> **கையி லூமன் கண்ணிற் காக்குங்**
> **வெண்ணெ யுணங்கல் போலப்**
> **பரந்தன் றிந்நோய் போன்று கொளற் கரிதே”**[56]

என்று வரும் வெள்ளிவீதியாரின் பாடலடிகள் வாயிலாக அறியலாம். களவில் உண்டாகும் காமநோய் என்பது தலைமக்கள் இருபாலருக்கும் பொதுவானதாக இருந்துள்ளமை இதனால் அறியப்படுகிறது.

**உடன் போக்கு**

களவு வெளிப்பட்ட நிலையிலும் அல்லது வெளிப்படாத நிலையிலும் தலைமக்களிடையே உடன் போக்கு நிகழும். உடன் போக்கிற்குப் பெரிதும் துணை செய்பவள் தோழியாவள். உடன் போக்கு பெரும்பாலும் பாலை நிலத்தின் வழி நிகழ்வதாகவும், அவ்வழியின் வெம்மை தாங்கவியலாது தலைவி வருந்துவதாகவும், செவிலி போன்றோர் உடன் போக்கு மேற்கொண்ட தலைமக்களைப் பற்றி போவோர் வருவோரிடம் வினவுவதாகவும் சங்கத் தொகை நூல்களில் உள்ள பாலைத்திணைப் பாடல்கள் சுட்டுகின்றன. தாய், தந்தை, நற்றாய், தோழி, தமர் போன்றோருடன் நாளும் உடனிருந்து பழகிய தலைவி, தலைவன் ஒருவனோடு காதல் வயப்பட்டு உடன்போக்குச் செல்ல நினைத்த வழி எல்லோரையும் விட்டுப் பிரிகின்றாள். உறவுகள் காட்டி வந்த அன்பை விட தலைவனின் அன்பே சிறந்தது என எண்ணுகிறாள். உடன் போக்குக் குறித்து கே.பி, அழகம்மை,

> **''சங்க இலக்கியப் பெண்கள் உடன்போக்கு நிலை திருமணத்திற்கு முன் பெண் தந்தையின் கீழ் வாழ்வது என்ற சமூக வியலாரின் கருத்தினின்றும் விலகிச் செல்வதாக உள்ளது. உடன் போக்கு நிலையில் இக்கருத்து வலுப்பெறவில்லை.''**[57]

என்று கூறுகின்றார். இவ்வாறு உடன்போக்குச் சென்ற மகளைத்தேடி பாலை நிலத்தின் வழி அலைக்கின்றாள் செவிலித்தாய். கால்கள் நடந்து நடந்து வலுவிழந்ததாகவும், கண்கள் போவோர் வருவோரைப் பார்த்துப்பார்த்து ஒளியிழந்ததாகவும் கூறுகின்றாள். வழிச் செல்வோர் பலரையும் கண்டு தன் மகளைக் காணாத அவள், வானில் தோன்றும் விண்மீன்களைப் போல் இந்த உலகினில் பலர் இருந்த போதும் தன் மகளும் அவள் விரும்பிய தலைவனும் மட்டும் காணவில்லையே எனக் கூறி வருந்துகின்றாள். இதனை வெள்ளி வீதியார்,

> **''காலே, பரிதப் பினவே கண்ணே**
> **நோக்கி நோக்கி வாளிழந் தனவே**
> **அகலிரு விசும்பின் மீனினும்**
> **பலரே மன்றவிங் வுலகத்துப் பிறரே''**[58]

என்று கூறுவதால் உடன்போக்குச் சென்ற தன் மகளை நினைத்து வருந்தும் செவிலித்தாயின் ஆற்றாமையை அறியலாம். இவ்வாறு தேடித் தேடி அலைந்த செவிலித்தாய் ஒரு வழியாகத் தன் மகள் மறவன் ஒருவனோடு உடன் போக்கு மேற்கொண்டாள் என்பதனை அறிகின்றாள். அதை நற்றாயிடம் நம் மகள் காலில் வீரக் கழல் அணிந்து கையில் வேலை உடைய வீரன் ஒருவனுடன் நட்பு கொண்டு சென்றுள்ளாள். அவன் ஊரில் பறை ஒலிக்கவும் சங்குகள் ஒலிக்கவும் கேட்டது. இதன் மூலம் தங்கள் மகள் தலைவனோடு வாழத் துவங்கியிருக்கிறாள் என்பதை உணர்த்துகிறாள் செவிலித்தாய். இத்தகைய உரையாடலை ஔவையார்,

**"சேயிலை வெள்வேல் விடலையொடு**
**தொகுவளை முன்கை மடந்தை நட்பே"[59]**

என்று காட்சிப்படுத்திக் காட்டுகின்றார். இவ்வாறு தலை மக்களின் உடன் போக்கு நிகழ்வுகளைப் பெண் பாற்புலவர்கள் தமது பாக்களில் பதிவு செய்துள்ளனர். உடன்போக்கு என்பது களவு வாழ்வின் முடிவாகவும் கற்பு வாழ்வின் தொடக்கமாகவும் அமையப் பெறுவதை அறியலாம்.

**கற்பியல்**

**கற்பு - விளக்கம்**

தலைமக்கள் இருவரும் மணம் முடித்து இல்லறத்தில் தலைப்படுவது கற்பெனப்படுகிறது. களவு வாழ்வின் முடிபாகக் கற்பு நெறி அமைகிறது. கற்பு வாழ்வில் தலைப்படுவதற்குக் களவொழுக்கம் மேற்கொண்டிருக்க வேண்டும் என்ற நிலை முக்கியமன்று. களவில் தலைப்படாமலேயே சான்றோர்களால் தலைவன் தலைவியரது தகுதி நிலைகளைப் பார்த்துப் பல்வேறு சடங்குகளுடன் கூடி மணம் முடிக்கும் வழக்கம் அன்று இருந்துள்ளது. தொல்காப்பியர் கற்பு நிலை குறித்து அக்காலச் சமூக வழக்கத்தை இவ்வாறு கூறுகின்றார்.

**"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்**
**கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்**
**கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே"[60]**

களவில் ஈடுபட்ட தலைமகன் கற்பு வாழ்வில் ஈடுபட்ட விரும்பாதவனாய் தலைவியின் அழகையும் இளமையையும் மட்டும் விரும்பி இறுதியில் வரைவு

மேற்கொள்ள மறுப்பது போன்ற காரணங்களால் ‘மணமுறை’ தொல்காப்பியர் காலத்திலேயே நெறிப்படுத்தப்பட்டிருக்கிறது. இருந்த போதும்,

> **“நிறை காக்கும் தகைமையில் களவு வழிபடாக் கற்பு நெறியைவிடக் களவு வழிபட்ட கற்பு நெறியே சிறந்தது.”[61]**

என்று மா.ரா.போ. குருசாமி தெரிவிக்கின்றார். சங்க அகப்பாடல்கள் பலவும் களவு வழிப்பட்ட கற்பு நெறியைப் போற்றுவதாகவே அமைந்துள்ளன.

> **“களவின் முடிவு கற்பு என்பது அகத்திணை வலியுறுத்தும் அறங்களுள் தலையானதாகும்.”[62]**

என்று கூறப்படுவதாலும் இதனை அறியலாம். எவ்வாறாயினும், “கற்பு என்பது பெண்களுக்குரிய மாண்புகளுள் ஒன்றாக குறிப்பிட்டுள்ளார் தொல்காப்பியர். பொருளதிகாரத்தில் பதிமூன்று இடங்களில் கற்பு என்ற சொல்லை எடுத்தாளும் அவர், எட்டு இடங்களில் கற்பு என்பதை அகத்திணைக் கோட்பாடாகவும், ஐந்து இடங்களில் கற்பைப் பெண்ணுக்குரிய பண்பாகவும் சுட்டியுள்ளார்.”[63] எனவே கற்பு என்பது அறம், பொருள், இன்பம் ஆகிய பண்பு நலன்களைப் போற்றும் வகையில் பிறர் பழித்துக் கூறும் தன்மையில்லாததாகும். பழங்கலாச் சமுதாயத்தில் பெண்களின் கற்பு பெரிதும் போற்றப்பட்டுள்ளது.

> **“மனைவியின் கற்பால் கணவன் சிறப்பதும், மகளின் கற்பால் தந்தை சிறப்பதும் பெண்மையை முன் மதிக்கும் தாய்வழிச் சமுதாய நிலையின் எச்சத்தைக் காட்டி நிற்கிறது.”[64]**

என்பதால், கற்புடையப் பெண்ணால் அவள் குடும்பமும் அவளைச் சார்ந்த சமூகமும் பெருமையடைந்து வந்திருப்பதை அறியலாம். அகன் ஐந்திணையுள் முல்லைத் திணையில் ’கற்பு’ அதிகம் வலியுறுத்திப் பேசப்படுகின்றது. கற்பு வாழ்வின் தொடக்க நிலை திருமணமாகும். இந்நிகழ்வு குறித்துத் திரு.வி.க.,

> **“மக்களின் இயற்கை அமைப்பை நோக்குழி அவர்கள் தனித்து வாழும் இயல்பினரல்லர் என்பது புலனாகும். மக்கள் கூடி வாழும் இயல்பினரே ஆவர். அக்கூட்டை நிகழ்த்துவது திருமணம். திருமணப் பேறு பெறாதார் பிறவிப் பேற்றை இழந்தவராவார்.”[65]**

எனக் கூறுகின்றார். ஆணும் பெண்ணும் கூடி வாழும் இல்லறவாழ்விற்குத் திருமணம் என்னும் சடங்கு அக்காலம் முதல் இக்காலம் வரை மிகவும் முக்கியத்துவம் பெற்ற ஒன்றாகப் போற்றப்பட்டு வருகின்றது.

**கற்பியல் வாழ்க்கை**

கற்புடன் வாழும் வாழ்க்கையையே பண்டைத் தமிழகம் சிறப்புடன் போற்றியது. மகளிரும் தாம் கற்பு நெறியிலிருந்து வழுவாமை ஒன்றையே பெரும் பேறாகக் கருதினர். 'அறிவும், ஆண்மையும் பெற்ற ஆண் மகன் ஒருவனைத் தன் ஆருயிர்த் தலைவனாகக் கருதி அவனை மணந்து கொண்டு, அவனையே வழிபடுதல் வேண்டும் எனத் தான் கொண்ட கொள்கையை நெகிழாது கடைப்பிடித்தல் கற்பாகும்"[66] என்பதை அக்கால மகளிர் நடைமுறை வாழ்வில் நிகழ்த்திக் காட்டினார். கற்பு என்பது நடைமுறை வாழ்விற்கு எவ்வளவு முக்கியமாவது என்பதை கே.பி.அழகம்மை,

> **"கற்பு தனிமனிதரின் பால் உணர்வை அடக்கி ஆளும் தன்மையை மட்டுமின்றி அனைத்து உணர்வுகளையும் தூய்மைப்படுத்த உதவுகிறது. கற்பும் தூய்மையும் திருமண முறைக்குத் தேவைப்படும் அத்தியாவசியமான அடிப்படையாகும்."[67]**

என்று கூறுவதால் அறியலாகின்றது. திருமணச் சடங்கு என்பது கற்பியல் வாழ்விற்கு மிகவும் அடிப்படையானதாகவும் சான்றோரால் போற்றப்படுவதாகவும் இருந்துள்ளது. பழந்தமிழரின் மணவினைச் சடங்கு குறித்து கு.சுந்தரமூர்த்தி,

> **"கொண்டானிற் சிறந்த தெய்வம் இல்லை எனவும், அவனை இன்னவாறு வழிபடுக எனவும் இருமுது குரவரால் கற்பித்தலானும், அந்தணர், சான்றோர், அருந்தவத்தோர் ஆகியோரிடத்து ஒழுகும் ஒழுக்கத்தைத் தலைமகன் கற்பித்தலாலும், தமிழ் மறையிடத்தும் அதன் செயல் முறையிடத்தும் விரிக்கப்பட்ட ஒழுக்கலாறுகளின் வழிக்குத் தம்மைக் கற்பித்துக் கொண்டு, தம்மை உளப்படுத்திக் கொண்டு, தலைவனும் தலைவியும் அவ்வாழ்வியல் நடத்துலானும், கொண்ட கொழுநனை இன்னவாறு நடந்து கொள்ள வேண்டும் என்றும் மணவினைச் சடங்கின்போது கற்பிக்கப்படுதலானும் இவ்வொழுக்கம் கற்பெனப் பெயர் பெறுவதாயிற்று."[68]**

என்று மொழிவதால் அறியலாகின்றது.

திருமண வாழ்விற்கு முன்பாகவும் மண வினை முடிந்த பின்பாகவும் மகளிரின் 'கற்பு' பெரிதும் வலியுறுத்தப்படுகிறது. 'கற்பு என்பது திருமணத்தால் மட்டும் அமைவது அல்ல. களவிலும், தலைவனுடன் உடன்போக்கு நிகழும் பொழுதும் தலைவியிடம் காணப்படுவது அவ்வியல்பு. தலைவன் மீது கொள்ளும்

அன்பும், மனம் திறம்பாத் திண்மையும், மன உரிமையும் கற்பின் பாற்படும் நிகழ்வுகளாகும்.''[69] கற்புடை மகளிரே தமது இல்லறக் கடமைகளைத் திறம்பட ஆற்றும் தகுதி படைத்தவர்கள் என்பதைச் சங்கப் புலவர்கள் வலியுறுத்தியுள்ளனர். தலைவன் பிரிந்துச் சென்றபோதும், பரத்தமை போன்ற ஒழுக்கங்களில் தலைப்பட்ட போதும் தலைவியின் வருத்தம் எவ்வாறு இருந்தது என்பதை புலவர்கள் தமது படைப்புகள் வழி காட்சிப்படுத்தியுள்ளனர். தலைவன் பலவிதத்திலும் தனக்குத் துன்பம் நல்குபவனாக இருப்பினும் அவனது நலத்தையே நாடும் மேம்பட்ட பண்பினராக அக்கால கற்புடைய மகளிர் திகழ்ந்தனர். இல்லறத்தை நல்லறமாகும் முழுப் பொறுப்பிலும் அவர்களே முன் நின்றனர். தலைவியின் கற்பு போற்றப்படுவது போன்றே தலைவனுக்கும் சங்க மரபில் கற்பு வலியுறுத்தப்பட்டுள்ளது. இருந்த போதும் அக்கால ஆடவர்கள் பரத்தமை போன்ற ஒழுக்கங்களில் ஈடுபட்டுள்ளதால் பெண்களைப் போன்று ஆண்களுக்குக் கற்பு ஒரு நெறியாக இருக்கப் பெறவில்லை என்பது பெறப்படுகின்றது. மேலும் ''சங்க காலத்திருந்த கற்புக் கோட்பாடு இன்றையக் காலத்தில் பெருமாற்றங்களை எய்தியுள்ளது''[70] என்பதையும் இலக்கியங்கள் காட்டுகின்றன.

**இல்லறம்**

சான்றோர்களால் நிச்சயிக்கப்பட்டு பலர் ஒன்று கூடி ஆணும் பெண்ணும் இணைந்து இல்லற வாழ்வில் தலைப்படுவதற்குக் காரணமாய் அமைவது திருமணமாகும். இது களவு வழியாகவும் அல்லது பெரியோர்களால் ஏற்படுத்தப்பட்டும் இருவேறு நிலைகளில் நடைபெறும். திருமணத்திற்குப் பின்பே தலைமக்களின் பொறுப்புணர்வுகள் அதிகரிக்கின்றன. இல்லற வாழ்வியல் குறித்து சி.இலக்குவனார்,

> **''காதலித்தோரை மணந்து, ஒருவனும் ஒருத்தியுமாய் ஓரிடத்தே இல்லமைத்து மக்களைப் பெற்றுத் தம் மக்களுக்காகவும் பிறருக்காகவும் உழைத்தலே தம் கடன் என்று கொண்டு வாழத் தொடங்கிய காலமே மக்கள் நாகரிக வாழ்வை நண்ணிய காலமாகும். அதுவே இல்லற வாழ்வின் இனிய தோற்றக் காலமாகும்.''[71]**

என்று கூறுவதால் மேலும் அறியலாகின்றது. களவுக் காலத்தில் தலைவன் பொருள் தேடச் சென்றது திருமணச் செலவிற்காக மட்டுமே. ஆனால் இல்லற வாழ்வில்

தலைப்பட்ட பின்பு அவன் பெருள் தேடச் செல்வது அறம் செய்வதற்கும், சுற்றம் முதலியவற்றை ஓம்புவதற்காகவும் எனலாம். தலைவன் களவுக் காலத்தில் தலைவியைச் சந்தித்து முயக்கம் பெறுவதிலேயே விருப்பமுடையவனாய் இருந்தான். அப்போது, இரவுக்குறி பகற்குறி போன்றவற்றிற்குப் பெரிதும் துணை செய்தவள் தோழி; மணம் புரிந்து இல்லற வாழ்வில் தலைப்படும் வரை துணை நின்றவள். தலைவன் களவுக் காலத்தில் தலைவியைக் கூடுதற்கு அச்சமுடையவனாக இருந்தான். ஆனால், மணம் முடிந்து தலைவியின் மார்பிடையே தலை வைத்து உறங்கியிருந்த போதும் அச்சம் கொண்டவனாகவே இருந்து வருவதை அறிந்த தோழி,

**“--------- ---------- -------- இவள்**
**இடைமுலைக் கிடந்து நடுங்கலானீர்”**[72]

என்று நகைப்பு உண்டாகக் கூறுகின்றாள். களவுக் காலத்தில் தலைவனின் பண்பு நலன்களை நன்கு அறிந்தவள் தோழி. தலைவி வருந்தி இருக்கையில், தலைவன் உயர் குடியில் பிறந்தவன் என்றும், தன்னுடன் கூடுகின்றவர்களைப் பிரியாத பண்பாளன் என்றும் கூறுகின்றாள். இவ்வாறு தலைவி கூறிய வார்த்தைகள் உண்மை என்பதை மணம் புரிந்து இல்லற வாழ்வில் தலைப்படுகையில் அறிகிறாள் தலைவி. இதைத் தன் தோழியிடம் ,

**“குடிநன் குடையன் கூடுநர்ப் பிரியலன்**
**கெடுநா மொழியலன் அன்பின் எனநீ**
**வல்ல கூறி வாய்வதிற் புணர்த்தோய்**
**நல்லை காணீற் இனிகாதலந் தோழீ இ”**[73]

என்றுகூறி நினைவுப்படுத்துகின்றாள் தலைவி. மணம் புரிந்த முதல்நாள் புணர்ச்சிக் காலத்தைவிட தற்போது மிகவும் இனிமையுடையவனாகத் தலைவன் இருக்கின்றான் என்பதைத் தலைவி,

**“வதுவை நாளினும் இனியனால் எமக்கே”**[74]

என்று கூறித் தம் இல்லற வாழ்வு குறித்துப் பெருமிதம் அடைவதை அஞ்சி அத்தை மகள் நாகையார் காட்சிப் படுத்துகின்றார்.

**தலைவியின் பூப்புகாலம்**

இல்லற வாழ்வில் தலைவனோடு மனம் ஒன்று பட்டு வாழும் தலைமகள் ஒருத்தி தாம் பூப்பெய்தியக் காலத்தில் தலைவனைக் கூடியிருக்க முடியாது என நினைத்து அச்சமுற்றாள். இவ்வறான தனது துயரநிலையைத் தலைவி வெளிப்படுத்துகின்றாள் . தலைவனோடு உறக்கம் கொண்டிருந்த வைகறைப் பொழுதில் கோழி 'குக்கூ' என்று கூவ, அதைக் கேட்டு எழுந்ததாகவும், அப்போது தான் பூப்பெய்திருப்பதை உணர்ந்து தலைவனைப் பிரிந்திருக்க நேரிடும் என நினைத்து வருந்தியதாகவும் கூறும் தலைவி ஒருத்தியின் நிலையை அள்ளூர் நன்முல்லையார்,

**''குக்கூ வென்றது கோழி யதனெதிர்**
**துடகென் தன்றென் தூய நெஞ்சம்**
**தோடோய் காதலர்ப் பிரிக்கும்**
**வாள்போல் வைகறை வந்தன்றா லெனவே''[75]**

என்று கூறுவதன் வழி அறியலாம்.

இல்லத்தில் வளர்க்கப்படும் கோழி போன்ற பறவைகள் தூய்மை இல்லாதவற்றை உணரும் தன்மையுடையது என்றும் இதனாலேயே வைகறைப் பொழுதிற்கு முன்பாக நீண்டக் குரலில் கத்தாது 'குக்கூ' என்றது என்றும் கூறப்படுகின்றது. இதனால், பறவைகளுக்கு நுண்ணிய மூக்குணர்ச்சித் திறன் உள்ளது என்பதை அறியலாம். தலைவி பூப்பெய்திய நாள் முதல் பன்னிரண்டு நாட்கள் வரை தலைவன் அவளை விட்டுப் பிரியாதிருப்பான் என்பதைத் தொல்காப்பியர்,

**''பூப்பின் புறப்பாடு ஈஆறு நாளும்**
**நீத்து அகன்று உரையார் என்மனார் புலவர்''[76]**

என்று கூறுகின்றார்.

**பிரிவு நிலை**

பண்டைக் காலத்தில் திருமணம் முடிந்த ஆடவர் ஓதல், காத்தல், பகை, தனி வினை, வேந்தர்க் குற்றுழி, பொருள், பரத்தமைப் போன்ற அறுவகைப் பிரிவுகளை மேற்கொண்டனர். இவ்வகைப் பிரிவுகளில் மன்னர்க்கு உதவும் பொருட்டுப்

பிரிவதும் ஒருவகை. அவ்வாறு, தலைவியை விட்டுப் பிரிந்து சென்ற தலைவன் வினை முடியாமல் மன்னரது பாசறையிலேயே தங்கி இருந்தான். அவனது வரவை எதிர் நோக்கியும் வாடைக் காற்றின் மிகுதியால் துன்புற்றும் இருக்கும் தலைமகள் தன் துன்பத்தை அறியாத அறனில்லாதவன் என்று அவனைக் கூறுகின்றாள். இதனை,

**''காய்சின வேந்தன் பாசறை நீடி**
**நந்நோய் அறியா அறனிலாளர்''**[77]

என்று வரும் பாடலடிகளின் வாயிலாக அறியலாம். மன்னர் பொருட்டுப் பிரியும் காலத்தும் வரவுக் காலம் குறித்துச் செல்வது வழக்கமாக இருந்துள்ளது.

**பொருட் பிரிவு**

உலகியல் வாழ்க்கைக்கு பொருள் முக்கியமானது என்பதை உணர்ந்து அக்கால ஆடவர் பொருள் தேடும் முயற்சியில் தலைப்பட்டனர். தமது முன்னோர்கள் தேடி வைத்த செல்வம் நிரம்ப இருந்தாலும் அவற்றைப் பயன்படுத்தாது தானே முயன்றுப் பெறும் செல்வத்தையே பெரிதும் விரும்பிப் போற்றினர். அக்கால ஆடர்கள் பொருள் பெறும் நிலைப் பற்றித் தி.சு. பாலசுந்தரம் பிள்ளையவர்கள்,

> **''தலைவன் திருமணஞ் செய்து கோடற்கு முன்னால் பொருள் தேடினா தலாலும், அதற்கு முன்னால், பொருள் தேடும் ஆண்மைப் பருவமே அவள் வரப் பெற்றிலனாதலாலும் வரைதலுக்குப் பின்னால் நிகழவிருக்கும் இல்வாழ்க்கையின் பொருட்டு அவன் முன்னமேயே பொருள் தொகுத்துக் கொள்ளுதற்கு இடனில்லை. எனவே திருமணஞ் செய்து கொண்டதன் பின்னர் தான் தலைவன் தனது இல்வாழ்க்கைக்கு வேண்டப்படும் பொருளைத் தேடுதற்கு இடம் பெற்றான்.''**[78]

என்று கூறுவதாலும் மேலும் அறியலாகின்றது. பெண்டிர் பொருளின் அருமையை உணர்ந்தவர்களாக இருப்பினும் ஆடவரை விட்டுப்பிரிய மனமில்லாதவர்களாக இருந்தனர். மணம் முடிந்த புதிதில் தலைவனும் பொருள் வேட்கை ஒரு புறம் இருப்பினும் தலைவியைப் பிரிய மனமில்லாதவனாய் வருந்துவான். தன் பிரிவைத் தலைவிக்கு நேரடியாகவும் தோழி வாயிலாகவும் உணர்த்துவதுண்டு. தலைவனின் பிரிவை விரும்பாத தலைவி தானும் உடன்வர விரும்புவாள். அதற்குத் தாம் செல்லும் வழியின் கொடுமைகளை எடுத்துரைத்து

தலைவன் மறுத்துரைப்பான். இவ்வாறு தலைமக்களிடையே பிரிவு வழி நிகழ்வுகள் சங்கப் பாடல்களில் காணப்படுகினறன. களவுக் காலத்தில் வரைவிடை வைத்துப் பொருட் பிரிவு மேற்கொள்ளும் தலைவன் கற்புக் காலத்தில் கல்வி, புகழ், பொருள், வெற்றி, பரத்தை, தூது முதலிய காரணங்களால் பிரிந்துச் செல்வான்.

பொருட்பிரிவின் காரணமாகப் பிரிந்து செல்லும் ஆடவர் பின்பனி அல்லது இளவேனிற் காலத்தில் சென்று கார்காலத்தில் இல்லம் திரும்புவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். கார் மற்றும் கூதிர்க் காலத்தில் மனையாளோடு உடனுறைந்தும், தேடிய செல்வத்தை அறம் முதலிய செயல்களுக்குப் பயன்படுத்தியும் வந்தனர். பொருட் பிரிவின் காரணமாக இளவேனிற் காலத்தில் பிரிந்துச் சென்ற தலைமகனை நினைத்து வருந்தும் தலைவி, பொருள் தேடப் பிரிந்துச் செல்வது ஆடர்வர்க்கு இயல்பு என்றாலும், இளவேனிற் காலத்தில் மனையாளோடு உடனுறைந்து இன்பம் துய்பதை வெறுத்துச் செல்வது, அறத்தைக் காட்டிலும் பொருள் சிறந்தது என்பதையே காட்டுகிறது எனக் கூறுகின்றாள். இத்தகைய தலைவியின் வருத்தத்தைக் காமக்காணி நப்சலையார்,

**''இன்னா தாகிய காலை பொருள் வயிற்**
**பிரிய லாடவர்க் இயல்பெனி**
**னரிதுமன் றம்ம வறத்தினும் பொருளே''**[79]

என்று கூறுவதன் வழி அறியலாம். அதே போல், எத்தகைய சிறந்த பொருளைப் பெறுவதாக இருப்பினும் பனிப்பருவத்தில் தலைவியோடு உடனிருப்பதை விட்டுப் பிரிவது சிறப்புடையது ஆகாது என்பதைக் கழார்க் கீரன் எயிற்றியார்,

**''எப்பொருள் பெரினும் பிரியன்மி னோவெனச்**
**செப்புவல் வாழியோ ........''**[80]

என்று சுட்டுகிறார். பிரிந்து சென்ற தலைவன் பொருள் தேடுதலையே பெரிதாக எண்ணி தம்மை மறந்து விட்டாரோ இல்லை, செய்யும் செயலின் மிகுதியால் தம்மை மறக்க நேரிட்டதோ என்று தலைவி வருந்துவதை,

**''........... .................... பொருள் புரிந்து**
**உள்ளார் கொல்லோ காதல ருள்ளியுஞ்**
**சிறந்த செய்தியின் மறந்தனர் கொல்லோ''**[81]

என்ற பாடலடிகள் வாயிலாகக் காட்டுகிறார். அக்காலப் பெண்டிர் பொருளை விரும்பினர். ஆனால் தலைவன் பொருள் தேடுதலை விரும்பினரல்லர். தலைவன்

எப்போதும் தன்னுடன் இருந்து இன்பம் துய்க்க வேண்டும் என்று விரும்பினர். இதைப் பொருள் வயிற் பிரிந்தத் தலைவனை, தலைவி ஒருவள்,

**“.......... .............. ............... நம்**
**முலையிடை முனிநர் சென்றவறே”[82]**

என்று கூறி வருந்துகிறாள். இவ்வாறு வருந்தும் தலைவியைத் தலைமகன் ஒருவாறு தேற்றிப் பிரிந்துச் செல்ல முற்படினும், தலைவி தானும் உடன் வருவதாகக் கூறுகின்றாள். அதைக் கேட்ட தலைவன் தாம் செல்ல விருக்கும் வழிக் கொடுமைகளை எடுத்துரைக்கின்றான். அதனைக் கேட்ட தோழி நீவிர் செல்லும் வழியில் வெம்மையால் நிலம் வறண்டு காய்ந்து நிற்கும் மரங்களும், வலிவு இல்லாது வருந்துகின்ற யானைப் போன்ற விலங்குகளும், கொடுமைகள் நிறைந்த பாலை நிலமும் உடன் வந்தால் தலைவிக்கு இனிமை உடையதாகும் என்று கூறுகிறாள். இத்தகைய காட்சியை ஔவையார்,

**“யானை கைம்மடித் துயவும்**
**கானமு மினியவா நும்மொடு வரினே”[83]**

என்று கூறுகிறார்.

**பிரிவுத் துயர்**

இல்லறத்தில் தலைவியோடு உடனிருந்து இன்புற வேண்டும் எனத் தலைவன் விரும்பினாலும் பொருள் தேடுவது ஆடவரின் கடமை என்பதால் ஒருவாறு பிரிந்து செல்கிறான். பொருள் தேடச் சென்ற இடத்தில் தலைவியின் நினைவுகள் மீதுறத் தவிக்கின்றான். உடனுறைந்திருந்த காலத்தில் கோடையிலும் முழுமதிநிலவைப் போன்று நடுக்கம் கொள்ளும் தன்மையுடையவன். அவ்வாறு இருக்க பகலென்றும் இரவென்றும் பிரித்தறிய முடியாத கூதிர்காலத்திலும் வாடைக் காற்று வீசும் முன் பனிப் பருவத்திலும் பின்பனிப் பருவத்திலும் எவ்வாறு ஆற்றியிருப்பாள் என்று தன் நெஞ்சிற்குக் கூறிவருந்துகிறான். இதனை,

**“நோகோ யானே நோமென் னெஞ்சே**
**-------- ------------ ----------**
**மாரிநின்ற மைய லற்சிரம்**
**யெதிர்த்த தித்தி முற்றா முலையிள்**
**யாமந்தன் ஞழைய மாகவுந் தானே**
**கோடைத் திங்களிற் பனிப்போள்**
**வாடைப் பெரும் பனிக் கென்னள் கொலெனவே”[84]**

என்று வரும் கழார்க் கீரனெயிற்றியாரின் பாடல்களின் வழி அறியலாம். கற்புக் காலத்தில் நிகழும் பொருட்பிரிவு காரணமாகக் கூதிர், முன்பனி, பின்பனி போன்ற மூன்றுப் பருவங்களும் தலைவியை பிரிய நேர்வதாக அறியப்படுகிறது. கற்புக் காலத்தின் பிரிவை விடக் களவுக் காலத்தின் பொருட் பிரிவு குறைவானதாகவே இருந்துள்ளது. இவ்வகைப் பிரிவு முன் பனிப் பருவத்துச் சென்று கார்காலத்தில் திரும்புவதாக இருந்துள்ளது.

**வழியின் கொடுமை**

பழங்காலத்தில் பொருள் தேடும் பொருட்டுச் செல்லும் ஆடவர்கள் போக்குவரத்தில் பல்வேறு இன்னல்களைச் சந்திக்க நேரிட்டது. வெயில் கொடுமை, விலங்குகளின் அச்சுறுத்தல், கள்வர் குறித்த பயம் போன்றவைகளால் பெரிதும் துன்புற்றனர். பெரும்பாலும் பொருள் தேடச் செல்லும் ஆடவர் பாலை நிலத்தின் வழிச் சென்று பல துயரங்களைச் சந்திப்பதை சங்கப் பாடல்கள் காட்சிப்படுத்துகின்றன. இதனை அ.ஆறுமுகம்,

> **பாலைத் திணைக் குரிய பொருள்வயிற் பிரிவு உழைப்பின் மூலம் வாழ்வு நடத்த வேண்டும் என்ற நியதியை வலியுறுத்துவதாகும். சோம்பலால் இல்லில் இருப்போர்க்கு ஈகையும், புகழும், இன்பமும் கிட்டுவதில்லை. உழைப்பின் மூலம், பொருள் ஈட்டச் சென்று பொருளை ஈட்டி வருகிறவர்களே ஈகை, இசை, இன்பம் இவற்றைப் பெறமுடியும்.''**[85]

என்று பாலை வழிப் பிரிவையும் அதன் தன்மைகளையும் எடுத்துரைக்கின்றார்.

கொடுமைகள் நிறைந்த பாலை நிலத்தின் வழி வினை மேற் செல்கின்றான் தலைவன். தரைப்பகுதி வெம்மையால் பல வெடிப்புகளை உடையதாய் இருந்தது. கள்ளி போன்ற செடிகள் மட்டுமே அங்கு உயிருடன் வாழ்ந்தன. இத்தகைய கொடுமை நிறைந்த வழியில் சென்ற தலைவன் வருந்தமிகுதியால் தம்மை நினையாது மறந்து விட்டோனோ எனத் தலைவி தன் தோழியிடம் கூறி இரங்குகின்றாள். இதை அள்ளூர் நன்முல்லையார் என்னும் புலவர்,

> **''உள்ளார் கொல்லோ தோழி**
> **............. ............... .............**
> **நிலம்கரி கள்ளியங் காடிறந்தோரே''**[86]

என்று பாலைவழியின் கொடுமைகளைச் சித்தரிக்கின்றார். பாலை நிலம் என்பது வளமான நிலம் மழைப் பொழிவின்மையால் வளங்குன்றி வறட்சியுறுவதாகும். இத்தகைய நிலப்பகுதியில் வெம்மை மிகுதியால் அனல் காற்று வீசியது. இதனால் வாகை மரத்தில் உள்ள காய்ந்த நெற்றுகள் ஒலி எழுப்பவும் செய்தன. இவ்வாறான தன்மையுடைய வழியில் சென்ற தலைவனை நினைத்த தலைவி பின்வருமாறு பாடுகிறாள்.

**''வெந்திறற் கடுவளி பொங்கர்ப் போந்தென**
**நெற்று விளை யுழிஞ்சில் வற்ற லார்க்கும்**
**மலையுடை யருஞ்சுர மென்ப.....''[87]**

இதன் வழி பாலை வழியின் கொடுமைகள் குறித்து அறியப்படுகின்றது.

**தலைவியின் ஆற்றாமை**

கற்புக் காலத்தில் பொருட் பிரிவின் காரணமாக ஆடவர் பிரிந்து செல்லுதல் வழக்கம். இந்நிலையில் தலைவி தனித்திருந்து வருந்துவாள். தோழி போன்றோர் பலவாறு நல்மொழிகளைக் கூறி ஆற்று வித்த போதும், தலைவி ஆற்றாமை மிகுந்தவளாய்க் காணப்படுகின்றாள். தலைவன் அன்பில்லாதவன் என்கிறாள். பனிக்காலத்தில் உடனிருந்த போது உடல் நடுக்கம் கொண்டதை நன்கு அறிந்திருந்த அவன், தனது வருத்தத்தைச் சிறிதும் அறியாதவனாக இப்போது பிரிந்து சென்றான் என்பதைத் தலைவி,

**''பனிக் கடு மையி னனிபெரி தழுங்கித்**
**துஞ்சா மாகலு மறிவோ**
**ரன்பிலர் தோழிநங் காத லோரே''[88]**

என்று கூறுவதாக அமைந்துள்ளது கழார்கீரனெயிற்றியாரின் பாடலடிகள். பனி மிகுந்த கார் காலத்தில் அக்கால ஆடவர்கள் எவ்வகைப் பிரிவிற்கும் செல்லாது மனையாளுடன் உடனுறைந்திருந்தனர் என்பது பெறப்படுகிறது. தலைவன் பிரிந்துச் செல்கின்ற போது அழுவது நன்னிமித்தமாகாது என்பதனால், அவன் சென்ற பிறகு கண்ணீர் வடிக்கிறாள் தலைவி. இவளின் துயரத்தின் காரணத்தைக் கேட்டத் தோழிக்குத் தலைவியானவள், தலைவர் பிரிந்து சென்ற அப்பிரிவிற்கு உடன்பட்டு இருந்த எனது கண்கள் வாடைக்காற்று வீசும் இக்கூதிர் காலத்தில் நாணத்தை இழந்து அழத் தொடங்கின எனக் கூறுகின்றாள். இதனை,

**“நாணில மற்றவெங் கண்ணே நாணேர்பு**
**-------- ------------- ---------- ---**
**நுண்ணுறை யழிதுளி தலைஇய**
**தண் வரல் வாடையும் பிரிந்திசினோர்க் கழலே”**[89]

என்னும் காழார்க் கீரனாரின் பாடலடிகள் வழி அறியலாம். பேயைக் கனவில் கண்டால் அதைப் பிறரிடம் கூறாதது போல் தலைவன் பிரிவால் தமக்குள் ஏற்பட்ட ஆற்றாமை மிகுதியை மறைத்து வைக்க எண்ணுகிறாள் தலைவி. இருந்த போதும் வருத்தம் தம்மை அறியாமல் வெளிப்பட்டு நிற்கிறது என்று கூறி வருந்துகிறாள். இத்தகைய தலைவி ஒருத்தியின் மனப் போராட்டத்தை ஔவையார்,

**“பேஎய் கண்ட கனவிற் பன்மா**
**ணுண்ணிதி னியைந்த காமம்”**[90]

என்று பாடுகிறார். இல்லற நெறியில் நின்றொழுகும் தலைமகளும் தலைவன் பிரிவால் தமக்குள் உண்டாகும் காமமிகுதியை பழிச் சொல் முதலியவற்றிற்கு அஞ்சி மறைத்து வைத்தனர் என்பது இதனால் பெறப்படுகின்றது. மேலும், தலைவன் குறித்துச் சென்ற பருவம் வந்து விட்டது. அதன் அறிகுறியாக விடாத அடை மழையும் பொழியத் தொடங்கியது. இந்நிலையில் காமநோய் மிகுந்து தலைவி தவிக்கலானாள். துயர் மிகுதியால் இறந்து போவதே உண்மையான அன்பாகும். அவ்வாறு இல்லாமல் உயிருடன் இருந்து வருவது தனக்குள் அன்பில்லாமையைக் காட்டுவதாக அமையாது என்றும் கூறலானாள். வேர்கள் எல்லாம் நீரால் அலசப்பட்டு கரையில் நிற்கும் மாமரத்தின் தளிர்கள் காற்றிற்கு நடுங்குதல் போலத் துயர் மிகுதியால் தன்நெஞ்சம் அலைவதாகவும் கூறினாள். இத்தகைய தலைவி ஒருத்தியின் ஆற்றாமையை ஔவையார்,

**“கரைபொரு திழிதருங் கான்யாற் றிகுகரை**
**வேர்கிளர் மாஅத் தந்தளிர் போல**
**நடுங்க லானா நெஞ்சமொ டிடும்பை**
**யங்கனந் தாங்குவென.........”**[91]

என்று காட்சிப்படுத்திக் காட்டுகின்றார். வேர்கள் வெளிப்பட்டுச் சாய்ந்து போகும் நிலையில் உள்ள மரத்திற்கு உயிரையும், காற்றிற்கு அசையும் அதன் தளிருக்கு உள்ளத்தையும் ஒப்புமை கூறித் தன் துயர்மிகுதியைத் தலைவி வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது. தலைவன் தனிமையில் தன்னை விட்டுச் சென்ற துன்பத்தைக் காட்டிலும், அவர் தனிமையுற்று இருப்பாரே என

நினைக்கையில் உண்டாகும் துன்பம் மிகுதியாக உள்ளது என்கிறாள் தலைவி. இதனை,

> **''எமியமாக வீங்குத் துறந்தோர்**
> **தமியராக வினியர் சொல்லோ**
> **------- --------- ---------**
> **தலைவரம் பறியாது வருந்துமந் நெஞ்சே''**[92]

என்று தலைவி கூறுவதாக நன்னாகையாரின் பாடலடிகள் அமைந்துள்ளன. ஆடவர் பிரிந்த நிலையில் இல்லற மகளிர், தம் வருத்த மிகுதியைப் பிறர் அறியாதவாறு பாதுகாத்து வந்தபோதும், வாடைக்காற்று, குறித்த பருவத்து மீளாமை போன்ற காரணங்களால் ஆற்றாமை மிகுந்து தவிப்பதாகப் பெண்பாற் புலவர்களின் பாடலடிகள் காட்சிப்படுத்துகின்றன.

**தலைவனின் ஆற்றாமை**

பிரிவுக் காலத்தில் உண்டாகும் துன்பம் என்பது தலைமக்கள் இருவருக்கும் பொதுவானதாக இருக்கப் பெற்றுள்ளது. தலைவியைப் பிரிந்திருந்து வினைமேற்கொண்ட காலத்தில் காமவேட்கை குறைந்திருந்ததாகவும், வினை முற்றிய நிலையில், உயர்ந்த மரத்தின் கிளையைத் தொட்டு ஓடும் பெருவெள்ளத்தைப் போல் பெருகிய தாகவும் தலைவியைக் கூடியதும் பெருகிய வெள்ளம் வற்றுவதைப் போல் காம வேட்கைத் தனக்குள் தணிந்ததாகவும் தலைவன் கூறுகின்றான். இவ்வாறு தனக்குள் உண்டான ஆற்றாமை மிகுதியைத் தலைவன்,

> **''நீடிய மரத்த கோடுதோய் மலிர்நிறை**
> **இறைத்துணச் சென்றற் றாஅங்**
> **கனைப்பெருங் காம மீண்டுகடைக் கொளவே''**[93]

என்று கூறுவதன் வழி அறியலாம். கடல்நீரை மேகமானது முகந்து சென்று மழையாய்ப் பெய்விக்கிறது. அதனால் உண்டான வெள்ளம் பெருக்கெடுத்து ஓடி இறுதியில் கடலிலேயே கலந்து விடுகிறது. அதுபோலவே காம வேட்கையானது தலைவியைப் பிரிந்ததால் பெருகியது என்றும் கூடியதால் குறைந்தது என்றும் தலைவன் கூறுவதாக ஔவையாரின் பாடற் கருத்து அமைந்துள்ளது.

**பருவ வரவு**

காா்ப் பருவத்தில் திரும்புவதாகக் கூறி தலைவன் வினை மேற்சென்றான். அவன் குறித்த பருவம் வந்துவிட்டமையின் அடையாளமாக மேகங்கள் சூல் கொண்டு இடி முழக்கத்துடன் மழையைப் பெய்வித்தன. மலையருவியில் புதுப்புனல் பெருகின. மலர்கள் மலர்ந்து மணம் வீசின. இத்தகைய காா்ப் பருவத்திற்கும் முன்னதாகவே திரும்புவதாகச் சொல்லிய தலைவன், தாம் கூறிய வாக்கையும், தன்னையும் மறந்து விட்டான் என்றும், தாம் மட்டும் அவனை மறவாமல் நினைத்து வாடுகிறோம் என்றும் தலைவி தோழியிடம் கூறுவதாக ஔவையாரின் பாடல் அமைகிறது.

**''இழிதரும் புனலும் வாரார் தோழி**
**மறந்தோர் மன்ற மறவா நாமே**
**காலமாரி மாலை மாமலை''[94]**

என்பதால், தலைவன், குறித்த பருவம் வந்துவிட்ட போதும், திரும்பிவராமை பற்றிக் கூறப்படுகின்றது. தலைவன் திரும்பாமையால் வருந்தும் தலைவிக்குத் தோழி தலைவர் சென்றுள்ள நாட்டில் நம்மைப் போல் பசலை நிறம் கொண்ட கொன்றை மலர்கள் மலர்ந்திருக்கும். ஆண்மானும் பெண்மானும் இணைந்திருக்கும் காட்சியையும் அவர் கண்டிருப்பார். அவ்வேளை நம் நினைவு மேலோங்க உடனே திரும்பி வருவார் என்று ஆறுதல் கூறித் தேற்றுகிறாள். இதனை ஔவையார்,

**''சென்ற நாட்ட கொன்றையம் பசுவீ**
**நம் போற் பசக்குங் காலைத் தம்போற்**
**சிறுதலைப் பிணையிற் றீர்ந்த நெறிகோட்**
**டிரலை மானையுங் காண்பா் கொன்நமரே''[95]**

என்று கூறுவதன் வழி அறியலாம். காா் காலத்தில் கொன்றை மலா்தலையும் மான்பிணைகள் சோ்ந்திருந்ததையும் காணும் தலைவனுக்குத் தலைவியின் நினைவு மேலோங்கி ஊா்த் திரும்பும் எண்ணம் உண்டாகியது எனலாம்.

**தலைவன் வினைமுற்றி மீளுதல்**

தலைவியை விட்டு வினைமேற்சென்ற தலைவன் வினை முடித்துத் தேரில் ஊா் திரும்புகிறான். அப்போது தன் ஊா் இருக்கும் திசையில் மழை பொழியத் தொடங்கியிருப்பதைக் காண்கிறான். தன் பிரிவால் உடல் மெலிந்து அணிகலன்கள்

கழன்று விடும்படியான நிலையில் வருந்தியிருக்கும் தலைவி பருவம் வந்துவிட தலைவன் மீளவில்லையே என வருந்தி அழத் தொடங்கியிருப்பாள். ஆயர்கள் ஊதும் குழலோசை அவளுக்கு இடியோசை போலவே ஒலிக்கும் எனத் தன் தேர்ப்பாகனிடம் கூறுகின்றான்.இதனை,

**''பெயரொடங் கினவே பெய்யாவானம்**
**நிழறிகழ் சுடர்த்தொடி ஞெகிழ வேங்கி**
**யழறொடங் கினளே யாயிழை யதனெதிர்**
**குழறொடங் கினரே கோவலர்**
**தழங்கு குர லுருமின் கங்கு லானே''**[96]

என்ற ஔவையாரின் பாடலடிகள் வழி அறியலாம். தலைவன் வினைமேற் வேற்றூர் சென்றிருந்த காலத்தும் தலைவியின் நினைவுகளே அவனுள் மேலோங்கியிருந்தன. தலைவியும் குறித்த பருவத்தில் தலைவன் வரும்வரை இல்லறக் கடமைகளை குறைவாகச் செய்து வந்தாள். பிரிவிடைக் காலத்துத் துயரம் தலைமக்கள் இருவரில் தலைவிக்கே அதிகம் கூறப்படுகிறது. தலைவனும் இதை நன்கு உணர்ந்தவனாகச் செயல்பட்டுள்ளான். தாம் குறித்தப் பருவத்தில் ஊர் சென்று சேர வேண்டுமென்ற முனைப்பு அவனுள் இருந்தது. காலம் தாழ்த்திச் செல்லுவதால் தலைவி அடையும் பல்வகையான துன்பங்களைக் குறித்தும் அறிந்திருந்தான். துன்ப நிலையைப் போக்குவதே தலைவனின் குறிக்கோளாக இருந்தது என்பதை ஔவையார் காட்சிப்படுத்தியிருக்கின்றார். பொருளீட்டிக் கொண்டு மீளும் தலைமகன் தலைவியின் நினைவு மேலோங்கும் நிலையில் தேர்ப் பாகனிடம் விரைந்து செல்க என்று அறிவுறுத்துகிறான். தலைவி இருக்குமிடம் வெகு தூரத்தில் உள்ளதாகவும், அவ்வாறு இருந்தபோதும் தன் உள்ளம் மட்டும் தழுவும் பொருட்டுப் பிரிந்து சென்று விட்டதாகவும், கைகள் இங்கிருக்க அவ்வாறு சென்று தழுவுதலால் என்ன பயன் என்று வினவி தேர்ப்பாகனிடம் விரைந்து செல்லுமாறு வேண்டுகிறான். இதனை நன்முல்லையார் என்றும் புலவர்,

**''நெஞ்சுநப் பிரிந்தன் றாயினு மெஞ்சிய**
**கைபிணி நெகிழினஃ தெவனோ நன்றும்**
**சேய வம்ம விருவா மிடையே''**[97]

என்று கூறுவதால் அறியலாம். தலைவனின் எண்ணத்தை நன்குணர்ந்த தேர்ப்பாகன் தேரினைவிரைந்து செலுத்தி தலைவனின் இல்லம் அடைந்து இறங்குக என்கிறான். பாகனின் இச் செயலைக் கண்ட தலைவன், வானில் உலவும்

காற்றைக் குதிரையின் வடிவாய்ப் பூட்டித் தேரினை ஓட்டி வந்தாயோ! இல்லை உன் மனதினைப் பூட்டி ஓட்டிவந்தாயோ என்று கூறிப் புகழ்கின்றான். இதனை ஒக்கூர் மாசாத்தியார்,

**"வான் வழங் கியற்கை வளிபூட் டினையோ**
**மானுரு வாகநின் மனம்பூட்டி னையோ**
**உரைமதி வாழியோ வலவ....."[98]**

என்று கூறுவதன் வழி மனதின் திறத்தையும், அதன் செயல்வேகத்தையும் அறிய முடிகிறது. இல்லம் வந்தடைந்த தலைவனிடம், பிரிந்திருந்தக் காலத்தில் எங்களை நினைத்திருந்தீர்களா! எனத் தோழி கேள்வி எழுப்புகிறாள். அதற்கு மறுமொழியாகத் தலைவன், இடைவிடாமல் மீண்டும் மீண்டும் உள்ளத்தில் நினைத்திருந்தேன் என்று கூறுகின்றான். இதனை ஒளவையார்,

**"உள்ளினெ னல்லனோ யானே யுள்ளி**
**நினைத்தனெ னல்லனோ பெரிதே நினைத்து**
**மருண்டனெ னல்லனோ வுலகத்துப் பண்பே"[99]**

என்று உரைப்பதின் வழி அறியலாம். பிரிந்த காலத்து இடையறாது உமது நினைவாகவே தலைவி இருந்து வந்தாள். நீங்களும் அவ்வாறான நிலை உடையவராக இருந்தீர்களா என்பது தோழியின் வினாவாக உள்ளது.

**விருந்தோம்பல்**

பழந்தமிழரின் பண்பாட்டில் முக்கிய இடம் பெருவது விருந்தோம்பல் ஆகும். 'ஐவகை நிலங்களிலும் வாழும் குடும்பத்தினர் விருந்தோம்பும் பண்பு பற்றிச் சங்க இலக்கியம் கூறுகிறது. பயணிகளாயினும் சுற்றத்தாராயினும் பசித்து வந்தோர்க்கு உணவு படைத்தலைச் சிறந்த பண்பாகக் கொண்டனர்.[100] ஆடவர் வினைமேற் சென்ற காலத்து இல்லறத்தில் இருக்கும் மகளிர் தமது கடமைகளைச் சரி வர செய்து வந்தனர். கணவன் உடன் இல்லாத நிலையில் இல்லத்திற்கு வரும் உறவினர்கள் முதலியோர்க்கு விருந்து படைத்தல், சுற்றம் ஓம்பல் முதலியவை இல்லற மகளிர்க்கும் கடமைகளாகக் கூறப்பட்டுள்ளன. தொல்காப்பியார்,

**"விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்**
**பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்"[101]**

என்று இல்லற மகளிரின் கடமைகள் குறித்துச் சுட்டுகின்றார். விருந்தோம்பல் குறித்துத் தி.சு. பாலசுந்தரம் பிள்ளையவர்கள்,

**‘‘விருந்தினரென்பார், முன்பின் அறியாதவராய்ப் பசித்து வரும் இல்லற நிலையினர் இவர் தாம் மேற்கொண்டதொரு நற்றொழிலை முன்னிட்டு ஊர்விட்டு ஊர் செல்பவர். செல்லுமிடங்களில், இடத்தாலும் காலத்தாலும் பிற வசதிகள் குறைவாலும் உணவு முதலியவற்றைத் தாமே ஏற்பாடு செய்து கொள்ளல் ஏலாதாயின், ஆங்கவர் பிறர் உதவியை நாடி நிற்பர். அஞ்ஞான்று அவரைத் தமதில்லத்திற்கு விருந்தாக ஏற்றுக் கொண்டு அவர்க்கு உண்டி முதலியன உதவுதல் இல்வாழ்வார் கடனாம்.’’**[102]

என்று சிறப்பித்துக் கூறுகின்றார். சங்கப் பெண்பாற் புலவர்களின் பாடல்களிலும் தலைவி வினை முடித்து மீளும் தலைவனுக்கு விருந்து படைக்கும் காட்சி கூறப்பட்டுள்ளது. வினை முடிவுற்ற நிலையில் இல்லம் திரும்ப நினைத்த தலைவனிடம் அவனது எண்ணத்தை உணர்ந்த சிலர், தலைவி வருத்தம் தீர்ந்து மகிழ்வான் என்றும், தலைவனுக்கு விருந்தளிக்கும் வாய்ப்பைப் பெறுவாள் என்றும் கூறினர். இதனை, ஒக்கூர் மாசாத்தியார்,

**‘‘விருந்தும் பெறுகுநள் போலுந் திருந்திழைத்**
**தடமென் பணைத்தோள் மடமொழி யரிவை’’**[103]

என்று கூறுவதனால் அறியலாம். வினை முடிந்து மீளும் தலைவனுக்குத் தலைவி விருந்து படைத்தல் என்பது அன்று வழக்கமாக இருந்துள்ளதை இது காட்டுகிறது. மன்னர்க்குத் துணையாய் நாடுகாத்தற் பொருட்டுச் சென்றிருந்தான் தலைவன். வினை முடிந்ததும் தலைவியைக் காண தேரில் புறப்பட்டான். பாகன் தேரினை விரைந்து செலுத்தினான். தன் இல்லத்தை அடைந்தவுடன் பாகனையும் உடன் அழைத்து வந்தான். தலைவன் வருகையால் தலைவி விருந்து படைக்கும் பேற்றினைப் பெறலானாள் என்று ஒக்கூர் மாசாத்தியார் கூறுகின்றார்.

**‘‘மனைக் கொண்டு புக்கன னெடுந்தகை**
**விருந்தோ பெற்றன டிருந்திழை யோளே’’**[104]

என்னும் பாடலடிகள் விருந்தயரும் காட்சியைச் சுட்டுகின்றன. விருந்தோம்பல் என்பது அக்காலத்தில் இல்லறக் கடமைகளில் முதன்மையானதாக வைத்துப் போற்றப்படுள்ளது.

**பரத்தையர் பிரிவு**

பழந்தமிழ்ச் சமூதாயத்தில் பரத்தமை ஒழுக்கம் நிலவியதைச் சங்கப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன. அக்கால ஆடவர்கள் தம் மனையாளை விட்டுப் பிரிந்து பரத்தையருடன் வாழ்ந்ததை சங்கப் புலவர்கள் தமது பாடல்களில் பதிவு செய்துள்ளனர். பரத்தமை என்பது ஐந்திணைக்கும் பொதுவானதாக இருப்பினும் மருதத் திணையில் மட்டுமே அதிகம் பேசப்படுகின்றது. பரத்தமைத் தொழிலில் ஈடுபட்ட ஆடவர் மகளிர் குறித்து ஆறுமுகம்,

> **"பரந்துபட்ட இன்பத்தைத் தருகின்றவர் பரத்தையர். பரந்து அதற்காகச் செல்பவர் பரத்தர். பரத்தர் என்ற ஆண் பாற் பெயருக்குப் பரத்தையர் என்ற பெண் பாற் பெயர் வழங்குகிறது."**[105]

என்று கூறுகின்றார். மேலும் பரத்தமைத் தொழிலில் ஈடுபட்டு வந்த மகளிர் செல்வ வளம் பெற்றோரிடம் தமது கலைகளை நிகழ்த்திப் பொருள் பெற்று வாழ்ந்தமையும் அறியப்படுகின்றது. பரத்தையர் குறித்து இளம்பூரணார் தமது தொல்காப்பிய உரையில்,

> **"பரத்தையராவர் யாவரெனின் அவர் ஆடலும் பாடலும் வல்லவராகி அழகும் இளமையுங் காட்டி இன்பமும் பொருளும் வெஃகி ஒருவர் மாட்டுந் தங்காதவர்."**[106]

என்று உரைக்கின்றார். சங்கப் பெண்பாற் புலவர்களின் பாடல்களிலும் இவ்வாறான பரத்தமைக் குறித்துப் பேசப்படுகின்றது. தலைவன் பரத்தையரிடம் பிரிந்து சென்றதனால் தலைவி கைவளை கழன்று விழுமளவிற்கு உடல் மெலிவுற்று, பசலை நோய் கொண்டு வருந்தினாள் என்பதைக் குன்றியனார் என்னும் புலவர்,

> **"இலங்குவளை நெகிழச் சாஅய்ப்**
> **புலம்பணிந் தன்றவர் மணந்த தோளே"**[107]

என்ற தமது பாடலடிகள் வாயிலாகக் கூறுகின்றார். பரத்தையரிடம் சென்ற ஆடவர்கள் அங்கேயே சிலகாலம் தங்கிவிடுதலும் உண்டு. பரத்தையரைக் கவரும் பொருட்டு அவர்களை மணம் புரிந்து வாழ்வதாகவும் கூறினர். பரத்தையரிடம் சென்று மீண்ட தலைவனிடம் தோழி, நாங்கள் அமைதியாக இருப்பினும், அயலவர்கள் நீ பரத்தை ஒருத்தியை மணம் புரிந்து வாழ்வதாகக் கூறுகின்றனர்.

அத்தகைய பழியை நாங்கள் கூற விழையவில்லை! நீ வாழ்க என்று வாழ்த்தவும் செய்கிறோம் என்று கூறுகின்றாள். இதனை நன்முல்லையார் என்னும் புலவர்,

> **"வதுவை யயர்ந்தனை யென்ப வஃதியாங்**
> **கூறேம் வாழிய.........."[108]**

என்று சுட்டுகிறார். பரத்தை மணம் நிலவியது குறித்து இதன் வழி அறிய முடிகின்றது.

**பரத்தையர் இயல்பு**

பரத்தையரில் இல்பரத்தை, சேரிப்பரத்தை என இருவகை உண்டு. இவர்கள் பொருட்பெண்டிர் எனவும் அழைக்கப் பெறுகின்றனர். இதனைக் கே.பி. அழகம்மை,

> **"பரத்தையர் குழுவாகத் தங்கியிருந்த பகுதியே பரத்தையர் சேரி என வழங்கப்பட்டது. இதனால் பரத்தையர் தங்களுக்கென்று தனி இருப்பிடத்தையே அமைத்துக் கொண்டு வாழ்ந்தது புலப்படுகின்றது."[109]**

என்று கூறுவதாலும் அறியலாகின்றது. இத்தகைய இல்பரத்தை ஒருத்தியுடன் தலைவன் உறைந்திருந்தான். வேறொரு பரத்தை இப்பரத்தையைப் பற்றி புறங் கூறினாள். அதைக் கேட்டு சினங்கொண்ட இல்பரத்தைத் தலைவன் தன்னை விரும்பி வந்து அடைந்தானே தவிர, தான் முயற்சித்து அவனை அடையவில்லை என்று பதிலுரைத்தாள். இதனை ஔவையார்,

> **"பொற்கோ லவிர்தொடித் தற்கெழு தகுவி**
> **எற்புறங் கூறுமென்ப தெற்றென"[110]**

என்று பரத்தையர் இருவரின் சண்டை குறித்து காட்சிப்படுத்துகின்றார். பரத்தையர் பிரிவு மேற்கொண்டொழுகும் ஆடவரை அடைவதற்கு பரத்தையர்களிடையே பெரும் பூசல் நடைபெற்றுள்ளது. இல்பரத்தையை நாடித் தலைவன் சென்றமையும், அதற்கும் பொறாமை கொண்டு சேரிப்பரத்தை புறங் கூறியமையும் இதனால் அறியப்படுகிறது.

> **"பரத்தமை பெண்கள் பிழைப்பதற்கு ஒருவழியாகவும் மேலும் சில நேரம் எந்த வழியையும் விட அதிகமாகப் பொருளீட்டக் கூடிய வழியாகவும் உள்ளது என்றுரைப்பர். பரத்தை விலை நலப்பெண்டு எனப் புறநானூற்றில் குறிப்பிடப்படுகிறாள். பரத்தை பொருட் பெண்டிராக இருந்த நிலைஅதில் பேசப்படுகிறது."[111]**

தலைவன் கூடியிருக்கும் பொருள் நோக்குடைய பரத்தை ஒருத்தியைத் தலைவி கடிந்துரைக்கிறாள். இதனைக் கேட்ட பரத்தை மிகுந்த சினமடைகிறாள். தன்னை நாடி வந்த விருந்தினரை அன்பு செய்தல் முறையாகும். இதைக் கண்டு தலைமகனின் உரிமையுடையவளான தலைமகள் அச்சமுறுவாளானால் தலைவனைத் தன்னோடு வைத்துக் கொள்ளட்டும் என்று மறுமொழி கூறுகிறாள். இத்தகைய பரத்தை ஒருத்தியின் வெகுளியை ஔவையார்,

**"பெரும்புனல் வந்த விருந்துறை விரும்பி**
**யாமஃ தயர்கஞ் சேறுந் தானே**
**தஞ்சுவ துடைய ளாயின்**
**------ ---------- ---------- ----------**
**கிளையொடுங் காக்க தன் கொழுநன் மார்பே"[112]**

என்று தம் பாடலடிகள் வாயிலாகக் கூறுகின்றார். இவ்வாறு பரத்தையர் பலரின் இயல்புகள் பெண்பாற் புலவர்களால் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன,

**தலைவியின் ஊடல்**

பரத்தையர் பிரிவு மேற்கொண்டு இல்லம் திரும்பும் தலைவன் மீது தலைவி ஊடல் கொள்வது இயல்பு. களவில் இன்பத்தைக் கொடுத்தத் தலைவன் பரத்தையர் சேர்க்கை காரணமாகக் கற்புக் காலத்தில் துன்பம் தருபவனாக உள்ளான் என்கிறாள் ஒரு தலைவி. இதனை, நெருஞ்சியானது முதலில் அழகிய மலரைத் தந்து பின்னர் துன்பம் தரும் முள்ளையும் தருவது போலத் தலைவன் உள்ளான் என்பதைத் தலைவி,

**"புன்புலத் தமன்ற சிறியிலை நெருஞ்சிக்**
**கட்கின் புதுமலர் முட்பயந்தா அங்**
**இனிய செய்த நங் காதலர்**
**இன்னா செய்த னோமொன் நெஞ்சே'[113]**

என்று கூறுவதாக அள்ளூர் நன்முல்லையாரின் பாடலடிகள் அமைந்துள்ளன. களவுக்காலத்தில் இனிமையுடைய தலைவன் பரத்தையர் பிரிவால் தலைவிக்கு இன்னாதவன் ஆகிறான் என்பது கூறப்படுகின்றது. இவ்வாறான பிரிவை ந.சுப்புரெட்டியார்,

**"பரத்தையிற் பிரிதல் என்பது தலைமகளை வரைந்தெய்திய பின்னர் கைவகலும் பாலே நுகர்வான் இடையே புளிங்காடியையும் நுகர்ந்து அதன் இனிமையறிந்தான் போல, அவள் நுகர்ச்சியினிமை அறிதற்குப் புறப்பெண்டிர் மாட்டுப் பிரியா நிற்றல்."**[114]

என்று கூறுவதால் மேலும் அறியப்படுகின்றது.

பரத்தையரிடம் இன்பம் துய்த்து மீண்ட தலைவன் தலைவியின் ஊடலைத் தணிக்கத் தோழியை வாயிலாக அனுப்புகிறான். தூதாக வந்த தோழிக்கு வாயில் மறுத்த தலைவி தலைவன் அன்னையும் தந்தையும் போன்ற அன்பு கொண்டவர் இல்லை; எனது அழகு நலம் கெட்டு, உடல் மெலிந்து, உயிர் பிரிவதாயினும் சரி, அவன் மீது பரிவு கொண்டு இனிய சொற்களைக் கூற வேண்டாம் என்று வெகுண்டுரைக்கின்றாள். இதனை அள்ளூர் நன்முல்லையார்,

**"இன்னுயிர் கழியினு முரைய லவர்நமக்**
**கன்னையு மத்தனு மல்லரோ தோழி**
**புலவியஃ தெவனோ வன்பிலங்கடையே"**[115]

என்று கூறுவதன் வழி அறியலாம். தலைவன் பிள்ளையின் துயர் அறிந்து போக்கும் பெற்றோரைப் போன்ற அன்பு கொண்டவனாக இருந்திருந்தால் தமதுத் துயர் அறிந்து போக்கியிருப்பான் என்று தலைவி கூறி வருந்துவதாக அமைகிறது. வளம் பொருந்திய மருதநில ஊரனுக்கு மனைவியாக இருப்பதனால் துன்பமே அதிகம் என்றும், பரத்தையிடம் இருந்து மீண்டு வந்த அவனிடம் ஊடல் கொண்டு வெறுத்து ஒதுக்காது அவனைக் கண்டவுடன் நெஞ்சமானது தழுவ நினைத்து நெகிழ்ந்தது என்றும் தலைவி ஒருத்தி தன் நிலையைக் கூறுகின்றாள். இதனை ஔவையார்,

**"தண்டுறை யூரன் பெண்டினை யாயிற்**
**பலாவ இகநின் னெஞ்சிற் படரே"**[116]

என்று கூறித் தலைவி இரங்குவதாகப் பாடியுள்ளார், இத்தகைய வகையில் பரத்தைமை ஒழுக்கத்தில் ஈடுபடும் ஆடவர் நிலையை அ.ஆறுமுகம்,

**"செல்வ வளமும், ஒரு தார மணமும் ஆண்களின் புணர்ச்சிச் சுதந்திரமும் பரத்தமை வளர்ச்சிக்குத் துணை நிற்பவைகளாம்."**[117]

என்று கூறுவதன் வழி மேலும் அறியலாகின்றது. பரத்தையரிடமிருந்து வந்த தலைவன் ஒருவன் தலைவி மீது மிகுந்த அன்புற்றவனாக முயக்கம் கொள்ள விழைகின்றான். தலைவி ஊடல் கொண்டு நீ யாரோ என்று கூறி இகழ்கின்றாள்.

தலைவியின் இச் செயல் தலைவனுக்கு நகைப்பினை உண்டாக்கியது என்பதனை நல்வெள்ளையார் என்னும் புலவர்,

> **''முயங்கல் விருப்பொடு குறுகினே மாகப்**
> **நாளிரும் கதுப்பினெங் காதலி வேறுணர்ந்து**
> **வெரூஉமான் பிணையி னொரீஇ**
> **யாரை யோவென் றிகழ்ந்துநின் றதுவே''**[118]

என்று கூறுவதனால் அறியலாம். இவ்வாறு பரத்தமைக் குறித்துப் பெண்பாற் புலவர்களின் பாடல்களில் பேசப்பட்டுள்ளது. தலைவியின் ஊடலைத் தணிக்கும் வாயில்களாக, குழந்தை, தோழி, பாணன், விருந்தினர், முதலியோர் அமைந்துள்ளனர். பரத்தையர் பிரிவு என்பது பெரும்பாலும் தலைவி கருவுற்றிருக்கும் நிலையிலும் பிள்ளைப் பேறு காலத்திலும் நடைபெற்ற தனைச் சங்க அகப்பாடல்கள் எடுத்துரைக்கின்றன. அக்காலத்தில் தலைவி முயக்கத்திற்கு உதவாதவளாக இருந்தமையால் தலைவன் பரத்தமை மேற்கொண்டான் என்பது வெளிப்படுகிறது. இவை மட்டுமல்லாது ''பொருள், ஏழ்மை, கற்பழிக்கப்பட்டவர், கணவரால் கைவிடப்பட்டவர், இளம் விதவை, பொழுது போக்கு, அதிகப் பாலுணர்வு''[119] போன்ற நிலைகளிலும் பரத்தமை நடைப்பெற்றதை அறிய முடிகிறது. இக்காரணங்களால் மட்டுமின்றி பிற காரணங்களாலும் பரத்தமை நிகழ்கிறது என்பதை கு.வெ. பாலசுப்பிரமணியன்,

> **''ஒரு சமூகத்தில் பரத்தமை என்பது செல்வ ஆடவர்களின் திமிரிய உணர்வாலும், வறுமைப்பட்ட குடும்பத்தின் பொருளாதாரத் தேட்டத்தாலும், சாதிப் பகுப்புகளின் அகமண முறைக் கோட்பாட்டாலும், மணங் கொண்டவர்களின் மனம், உடல், வாழ்க்கையுணர்வு ஆகியவற்றில் ஒத்திசைவு இன்மையாலும் விளைவது.''**[120]

என்று கூறப்படுவதாலும் அறியலாகின்றது. சங்க காலந்தொட்டு இன்றையக் காலம் வரை பரத்தமை என்பது சமூகத்தில் நிலைத்த ஒன்றாகவே இருந்து வருவதை இலக்கியங்களும் நடைமுறை நிகழ்வுகளும் பறை சாற்றுகின்றன.

**தொகுப்புரை**

1. அகன் ஐந்திணைகளோடு கைக்கிளை உட்பட ஆறுதிணைகள் பற்றிப் பெண்பாற் புலவர்கள் பாடியுள்ளனர்.
2. புறவாழ்வியல் செய்திகளைவிட அகவாழ்வியல் குறித்த செய்திகள் பெண்பாற்புலவர்களால் அதிகம் பாடப்பட்டுள்ளன. இதற்குக் காரணம்

அவர்கள் புற வாழ்வில் அதிக நாட்டமும் ஈடுபாடும் அற்றவர்களாக இருந்ததே என்று கருதப்படுகின்றது.

3. களவு, கற்பு ஆகிய இரு நிலைகளில் கற்பு பற்றி அதிகம் வலியுறுத்தப்பட்டுள்ளது.

4. பெண்பாற் புலவர்களின் களவுப்பாடல்களில் இயற்கைப் புணர்ச்சி இடந்தலைப்பாடு, பாங்கர் கூட்டம், பாங்கியர் கூட்டம், வரைவு கடாவுதல், பொருள்வயின் பிரிதல், இற்செறிப்பு உடன் போக்குப் போன்ற நிகழ்வுகள் அகத்திணை மரபுகளின் அடிப்படையில் பாடப்பட்டுள்ளன.

5. களவில் தலைவியின் நிறை தலைவனால் அழிக்கப்பட்டதும், இதனால் தலைவியின் துன்ப நிலை உடலளவிலும் மனதளவிலும் அதிகம் பெருகி வருந்தியதும் அறியப்படுகின்றது.

6. களவில் தோழியின் பங்கு அதிகம் பேசப்படுகிறது. தலைவியின் உள்ளப் பாங்கை உணர்ந்து நடப்பவளாகவும், அவளது நலனே தனது நலன் என்று கருதுபவளாகவும் காட்டப்படுகின்றாள்.

7. வரைவில் நாட்டம் கொள்ளாது குறியிடம் வந்து கூடுவதிலேயே விருப்பம் கொண்ட தலைவனுக்குத் தோழி, களவு வெளிப்படுமாயின் அலர், இற்செறிப்பு, நொதுமலர் வரைவு போன்ற காரணங்களால் தலைவியைச் சந்திக்க இயலாது எனக் கூறி வரைவுக்கு உட்படுத்துவது சிறப்பிக்கப்பட்டுள்ளது.

8. களவுக் காலத்தில் தலைவி தோழியின் வாயிலாகவும், தோழி நேரிடையாகவும் தலைவனை வரைவுக்கு உட்படுத்தினர் என்பது பெறப்படுகின்றது. தோழி வரைவு வேண்டுவதாகவே அதிகம் பாடப்பட்டுள்ளது.

9. களவு வெளிப்பட்ட நிலையில் தலைவி இற்செறிப்பில் வைக்கப்பட்டமையும் அந்நிலையில் தோழி ஆற்றுப்படுத்துவதும் பாடப்பட்டுள்ளது.

10. களவுக் காலத்தில் தலைவனின் வேட்கை மிகுதியை விட தலைவியின் வேட்கை மிகுதியே அதிகம் பேசப்படுகிறது.

11. களவுக் காலத்தில் திருமணம் செய்தற் பொருட்டு ஆடவர்கள் பொருள் தேடச் சென்ற நிலை விளக்கப்பட்டுள்ளது.

12. பிரிவுக்காலத்தில் தலைவனை நினைத்து வருந்தும் தலைவியின் கனவு நிலை புலவர்களால் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

13. தலைவியின் பசலை நோய் குறித்தும், அது பரவும் தன்மை குறித்தும், இந்நோயினை அறியாத அன்னை முதுபெண்டிரிடம் குறி பார்த்து, தெய்வக் குற்றமெனக் கருதி வேலனை அழைத்து வெறியாட்டு நிகழ்த்தியமை குறித்தும் பெண் பாற் புலவர்களின் பாக்கள் வழிச் சிறப்பிக்கப்பட்டது.

14. தோழியின் உதவியுடன் உடன்போக்கு மேற்கொண்ட தலைமக்களின் நிலையும் அவர்களைக் காணாது தேடி அலையும் செவிலியின் நிலையும் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. உடன்போக்கு அக்காலச் சமுதாயத்தில் வெறுக்கப்பட்ட நிலையில் இருக்கவில்லை என்பதைப் பெண்பாற் புலவர்களின் பாடல்கள் புலப்படுத்துகின்றன.

15. களவின் முடிவு கற்பில் தொடங்குகிறது. மகளிர் கற்புடன் வாழும் வாழ்க்கையை அக்காலச் சமுதாயம் பெரிதும் போற்றியது. மகளிரும் கற்பு நெறியில் நின்றொழுகுவதைப் பெரும் பேறாகக் கருதினர். பெண்களின் கற்புத் திறம் களவு, கற்பு ஆகிய இரு நிலைகளிலும் போற்றப்படுகின்றது.

16. இல்லறத்தை நல்லறமாக்குவது மகளிரின் கடமைகளில் முதன்மையானதாக வைத்துப் போற்றப்பட்டது.

17. களவிற் பிரிவை விட கற்பிற் பிரிவில் தலைவியின் துன்ப நிலை அதிகம் பேசப்படுகின்றது. அக்கால மகளிர் பொருளை விரும்பிய அளவிற்குத் தலைவனது பிரிவை விரும்பாதவர்களாக இருந்துள்ள நிலை அறியப்படுகின்றது.

18. பொருட்பிரிவால் தலைவனுக்கு உண்டாகும் வருத்த நிலையும்,வழியின் கொடுமையும், பொருளின் அருமையும் சிறப்பிக்கப்பட்டுள்ளன.

19. விருந்தோம்பல் என்பது தமிழர் பண்பாட்டின் நிலைக்கலன்களில் ஒன்றாகப் போற்றப்பட்டது. வினை முடித்து மீண்ட தலைவனுக்குத் தலைவி விருந்து படைக்கும் நிகழ்வு புலவர்களால் போற்றப்பட்டுள்ளது.

20. அக்கால ஆடவர்களின் பரத்தமை போன்ற தீய ஒழுக்கங்கள் பெண்பாற் புலவர்களால் கடிந்துரைக்கப்படுகின்றன. பரத்தமை எவ்வாறு தொன்று தொட்டு தமிழ்ச் சமுதாயத்தில் நிலை பெற்றுள்ளது என்பது ஆய்வில் விளக்கப்பட்டுள்ளது.

# அடிக்குறிப்புகள்

1. தொல். பொருள், நூ. 946.
2. வ.சுப. மாணிக்கம், தமிழ்க் காதல், ப. 34.
3. வ.ஜெயா, சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும், ப. 57.
4. நா.கதிரைவேற்பிள்ளை,தமிழ்மொழி அகராதி, ப. 411.
5. திருக்குறள், பிரிமேலழகருரை, ப. 407.
6. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப. 60.
7. குறுந், 32:1-3.
8. இறையனார் அகப்பொருள், நூ.32.
9. வ.சுப. மாணிக்கம், மு.கு.நூ., ப. 88.
10. ந.சுப்புரெட்டியார், மு.கு.நூ., ப. 18.
11. மே.கு.நூ., ப. 73.
12. குறுந். 299: 4-8.
13. குறுந். 97 : 1-2.
14. சரளா ராசகோபாலன், சங்க இலக்கியத்தில் தோழி, ப.47.
15. குறுந். 29 : 6-7.
16. த. வசந்தாள், தமிழிலக்கியத்தில் அகப்பொருள் மரபுகள் ஒரு வரலாற்றுப் பார்வை, ப. 42.
17. தொல். களவு. நூ. 40.
18. இராம. சண்முகம், சங்க இலக்கியங்களில் வரைவு கடாவுதலும் அறத்தொடு நிற்றலும், ப. 14.
19. ந. சுப்புரெட்டியார், தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை, ப.124.
20. தெ.கலியாண சுந்தரம், சங்க அகப்பாடல்களில் உணர்வுப் போராட்டம், ப. 53.
21. நற். 239 : 9-12.
22. இராம. சண்முகம், மு.கு.நூ., ப. 13.
23. குறுந். 118 : 3-5.
24. குறுந். 261 :3-6.
25. குறுந். 96 : 1-4.
26. ந. சுப்புரெட்டியார், மு.கு.நூ., ப 125.
27. அகம். 252 : 13-14.

28. நற். 295 : 2-8.
29. தி.சு, பாலசுந்தரம்பிள்ளை, பண்டைத் தமிழர் இன்பியல் வாழ்க்கை, ப. 107.
30. நற். 19 : 7-9.
31. நற். 335 : 8-11.
32. நற். 369 : 9-11.
33. கி.சிவகுருநாதன், (க.ஆ)., அகநானூற்றுச் சொற்பொழிவுகள், ப. 179.
34. குறுந். 30 : 2-4.
35. ச.வே. சுப்பிரமணியம், இலக்கியக் கனவுகள்,ப. 13.
36. நற். 87 : 3-5.
37. பி.நா.ஐயர், (உ.ஆ.)., நற்றிணை மூலமும் உரையும், ப. 04.
38. அகம். 45 : 6-8.
39. நற். 187 : 5-10.
40. குறுந். 48 : 5-7.
41. குறுந். 27 : 1- 5.
42. அகம். 147 : 12-14.
43. அகம். 273 : 4-5.
44. நற். 304 : 6-9.
45. வ.சுப. மாணிக்கம், மு.கு.நூ., ப. 71.
46. நற். 117, 9-10.
47. குறுந். 117 : 4-6.
48. சு.வித்தியானந்தனம், மு.கு.நூ., ப. 199.
49. குறுந். 23 : 3-5.
50. சு.வித்தியானந்தன், மு.கு.நூ., ப. 119.
51. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப. 123.
52. அகம். 98 : 8-19.
53. வ.சுப. மாணிக்கம், மு.கு.நூ., ப. 70.
54. இராம. சண்முகம், மு.கு.நூ., ப. 96.
55. ந.சுப்புரெட்டியார், மு.கு.நூ., ப. 117.
56. குறுந். 58 : 3-6.
57. கே.பி. அழகம்மை, சமூக நோக்கில் சங்க மகளிர், ப. 42.
58. குறுந். 44: 1-4.

59. குறுந், 15 : 4-6.
60. தொல். கற்பியல், நூ.1.
61. மா.ரா.பே. குருசாமி, சங்க காலம், ப. 37.
62. ந.சுப்புரெட்டியார், மு.கு.நூ., ப. 196.
63. இரா.பிரேமா, கற்பு - கலாச்சாரம், ப.9.
64. மே.கு.நூ., ப. 13.
65. திரு.வி.க., பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை, ப. 211.
66. செந்துறைமுத்து, சங்காலச் சமுதாயச் சிந்தனைகள், ப. 86.
67. கே.பி. அழகம்மை, மு.கு.நூ., ப. 185.
68. கு.சுந்தரமூர்த்தி, (ப.ஆ)., தொல்காப்பியம் பொருளதிகாரம், தொகுதி - 2, ப. 243.
69. இராம. சண்முகம், மு.கு.நூ., ப.106.
70. கு.வெ. பாலசுப்பிரமணியின், சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள், ப. 326.
71. சி.இலக்குவனார், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், ப. 51.
72. குறுந். 178 : 3-4.
73. அகம். 352 : 8-11.
74. அகம். 352 : 17.
75. குறுந். 157 : 1-4.
76. தொல். கற்பு. நூ. 46.
77. அகம். 294 : 12-13.
78. தி.சு.பாலசுந்தரம் பிள்ளை, பண்டைத் தமிழர் இன்பியல் வாழ்க்கை, ப.14.
79. நற். 243 : 9-11.
80. அகம். 217 : 14 - 15.
81. அகம். 235 : 1-3.
82. குறுந். 39 : 304.
83. குறுந். 388 : 6-7.
84. நற். 312 : 1-9.
85. அ.ஆறுமுகம், சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு, ப. 143.
86. குறுந். 67 : 1-5.
87. குறுந். 39 : 1-3.
88. நற். 281 : 9-11.

89. குறுந். 35 : 1-5.

90. அகம். 303 : 2-3.

91. நற். 381 : 3-6.

92. குறுந். 172 : 3-7.

93. குறுந். 99 : 4-6.

94. குறுந். 200 : 3-5.

95. குறுந். 183 : 1-4.

96. நற். 371 : 5-9.

97. குறுந். 237 : 2-4.

98. அகம். 384 : 9-11.

99. குறுந். 99 : 1-3.

100. அ.ஆறுமுகம், மு.கு.நூ., ப. 49.

101. தொல். கற்பு. நூ.11:3-4.

102. தி.சு. பாலசுந்தரம்பிள்ளை, மு.கு.நூ., ப. 173.

103. அகம். 324 : 1-2.

104. அகம். 384 : 14-15.

105. அ.ஆறுமுகம், மு.கு.நூ., ப. 56.

106. தொல். பொருள். இளம். ப. 295.

107. குறுந். 50 : 4-5.

108. அகம். 46 : 10-11.

109. கே.பி. அழகம்மை, மு.கு.நூ., ப. 206.

110. குறுந். 364 : 3 - 4.

111. கே.பி. அழகம்மை, மு.கு.நூ., ப. 208.

112. குறுந். 80 : 1-7.

113. குறுந். 202 : 2-5.

114. ந. சுப்புரெட்டியார், மு.கு.நூ., ப. 257.

115. குறுந். 93 : 2-4.

116. குறுந். 91 : 3-4.

117. அ. ஆறுமுகம், மு.கு.நூ., ப. 57.

118. நற். 250 : 6-10.

119. கே.பி. அழகம்மை, மு.கு.நூ., ப. 205.

120. கு.வெ. பாலசுப்பிரமணியன், மு.கு.நூ., ப. 323.

## இயல் மூன்று

# ஐவகைச் சமூகப் பகுப்பும் பார்வையும்

நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவ ராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே

– ஔவையார்

# ஐவகைச் சமூகப் பகுப்பும் பார்வையும்

ஒன்றுக்கும் மேற்பட்ட மக்கள் கூடிவாழ்கின்ற இடம் சமுதாயம் எனப்படுகிறது. பழந்தமிழகத்தின் சமுதாய அமைப்புகள் குறித்து அறிய சங்க இலக்கியங்களாகிய எட்டுத் தொகையும் பத்துப்பாட்டும் பெரும் துணைசெய்கின்றன. சங்கப் பெண்பாற் புலவர்களின் பாடல்கள் வழி கிடைக்கும் அக்காலச் சமுதாயச் சிந்தனைகள் குறித்து ஐந்திணைகளின் அடிப்படையில் இவ்வியலில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

**சமுதாய அமைப்பு**

பழந்தமிழரின் வாழ்வியல் சூழல் நில அமைப்பின் அடிப்படையிலும் பருவச் சூழல்களுக்கேற்பவும் அமைந்திருந்தது. ஐவகை நிலமான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனனும் பாகுபாடும், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில், கார், கூதிர் ஆகிய பருவ நிலைகளும் மக்களின் வாழ்வியல் சூழல் மாறுபாட்டிற்குக் காரணமாக அமைந்தன. ஒழுக்கம், பண்பாடு, நாகரிகம், பழக்கவழக்கம் ஆகியவற்றைக் கொண்டு ஒரு குறிப்பட்ட குழுவைச் சார்ந்த மக்களும் அவர்களின் ஒட்டுமொத்தச் சிந்தனைகளின் விளைவுகளும் ஆழ்ந்த உணர்வுகளும் நிலையான சமுதாய அமைப்பை உருவாக்கின எனலாம். சு.செல்லப்பன் சமுதாயம் பற்றி,

> **"மனித இனமும் சமுதாயமும் பல பரிணாம வளர்ச்சிகளைப் பெற்றுத் திகழ்கின்றது. அதை இலக்கியங்கள் வெளிக்காட்டுகின்றன. சங்க இலக்கியப் பாடல்கள் அக்கால மக்களின் அகம் புறம் ஆகிய வாழ்வியல் கூறுகளை உள்ளடக்கியுள்ளன."[1]**

என்று கூறுகின்றார். இதன் அடிப்படையில் அக்கால மக்கள் சமுதாயத்தின் சிந்தனைகள் நில அமைப்புகளுக்கு ஏற்ப பாகுபடுத்தப்படுகின்றன. அவை,

1. குறிஞ்சி நிலச் சமுதாயம்
2. முல்லை நிலச் சமுதாயம்
3. மருத நிலச் சமுதாயம்
4. நெய்தல் நிலச் சமுதாயம்
5. பாலை நிலச் சமுதாயம்
6. சமுதாயச் சிந்தனைகள்

என்னும் அடிப்படையில் இவ்வியல் ஆக்கம் பெறுகின்றது.

**சமுதாயக் கலப்பு**

ஐவகைச் சமுதாய மக்களும் ஒருவரோடு ஒருவர் நெருங்கியத் தொடர்பு கொண்டிருந்தனர். இதனால் தமது தேவைகளை எளிதில் பூர்த்தி செய்து கொண்டனர். ஒவ்வொரு நிலத் தன்மைகளுக்கும் ஏற்ப பொருள் உற்பத்தி, தொழில் ஆகியவை மாறுபட்டுள்ளன. புலவர் செந்துறை முத்து,

> **‘‘சங்க காலச் சமுதாய மக்களிடையே நிலம் பற்றிய பிரிவும், தொழில் பற்றிய பிரிவும் இருந்தன. ஆனால், இப்பிரிவினர்களிடையே உயர்ந்தவர்கள் தாழ்ந்தவர்கள் என்னும் வேறுபாடு இருந்ததில்லை. எல்லோரும் ஒத்தவர்கள், ஒத்த உரிமையினர், ஒத்த வாழ்வினர் என்னும் சரிசம நிலையிலேயே வாழ்ந்து வந்தனர்.’’[2]**

என்று அக்காலச் சமூகஅமைப்பினை மொழிகின்றார். பழந்தமிழ்ச் சமுதாய மக்களிடையே கலப்பு மணம் நடைபெற்றுள்ளது. குறிஞ்சி முதல் நெய்தல் வரையிலான நானிலங்களும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையனவாக இருந்தமையால் மக்களும் தமது வசதிக்கேற்ப குடிப்பெயர்வு செய்து கொண்டனர். நானில மக்களின் கலப்பு வாழ்வை முடத்தமக்கண்ணியார் இவ்வாறு எடுத்துரைக்கின்றார்.

நெய்தல் நிலமக்கள் குறிஞ்சிப் பண் இசைத்து மகிழ்ந்தனர். குறிஞ்சி நிலத்து மக்கள் நெய்தல் மலர்களைத் தொடுத்துத் தலையில் சூடினார். முல்லை நிலத்து மக்கள் மருதப்பண் இசைத்து மகிழ்ந்தனர். மருத நிலத்து உழவர்கள் முல்லைக் காடுகளைப் புகழ்ந்து கூறினார். முல்லை நிலத்துக் காட்டுக் கோழிகள் மருத நிலத்திற்குச் சென்று நெற்கதிர்களை உண்டு களித்தன. மருத நிலத்து வீட்டுக் கோழிகள் குறிஞ்சி நிலத்திற்குச் சென்று தினைக் கதிர்களைக் கவர்ந்தன. குறிஞ்சி நிலத்து வாழ்ந்த குரங்குகள் நெய்தல் கழனிகளுக்குச் சென்று நீராடின. நெய்தல் நிலத்தில் திரியும் நாரைக் கூட்டங்கள் குறிஞ்சி நிலத்திற்குச் சென்று தங்கின. இவ்வாறு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நானில மக்களும் மற்ற உயிரினங்களும் ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொண்டிருந்ததை முடத்தாமக்கண்ணியார்,

> **‘‘குறிஞ்சி பரதவர் பாட நெய்தல்**
> **நறும் பூங்கண்ணி குறவர் சூட**
> **கானவர் மருதம்பாட அகவர்**

**நீள்நிற முல்லைப் பல்தினை நுவல**
**கானக்கோழி கதிர் குத்த**
**மனைக்கோழி தினைக் கவர**
**வரைமந்தி கழி மூழ்க**
**கழிநாரை வரை இறுப்ப**
**தன் வைப்பின் நால் நாடு குழீஇ''**[3]

என்று காட்சிப்படுத்துகின்றார். நானில மக்களும் ஒருவருடன் ஒருவர் நல்லுறவு கொண்டிருந்தமை இதனால் அறியப்படுகின்றது.

**சமூகக் கடமைகள்**

இச்சமூகத்தில் பிறந்த அனைவருக்கும் செய்ய வேண்டிய கடமைகள் பல இருக்கின்றன. அதனை உணர்ந்து அவரவர் தத்தமது கடமைகளைச் சிறப்புற ஆற்றுதல் வேண்டும். ஒரு தாயின் கடமை பிள்ளையைப் பெற்று அன்பு பாராட்டி வளர்ப்பது. தந்தையின் கடமை பிள்ளையை அறிவாலும் ஆண்மையாலும் சான்றோனாக ஆக்குவது. நாட்டைப் பாதுகாக்கும் கடமை மேற்கோண்ட இளைய வீரனுக்கு உறுதியான வேல் முதலிய படைக்கருவிகளைச் செய்து கொடுத்தல் கருமானுக்குரிய கடமையாகும். இளைய வீரர்களுக்கு நல்லொழுக்கம் கற்பித்துத் தீநெறியில் செல்லாமல் காப்பது அரசாளும் மன்னரின் கடமையாகும். போரில் பகைவரை வீழ்த்தி நாட்டிற்கு வெற்றியைத் தேடித் தருவது வீரரின் கடமையாகும் என்பதை பொன்முடியார் என்றும் புலவர்,

**''ஈன்று புறந் தருத லென்றலைக் கடனே**
**சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே**
**வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே**
**நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே**
**ஒளிறுவா ளருஞ்சம முருக்கிக்**
**களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே''**[4]

என்று தாய், தந்தை, கொல்லன், வேந்தன், வீரன் ஆகியோர்க்கு உரிய கடமைகள் இதுவெனக் கூறுகின்றார். இத்தகைய கடமைகள் அன்றைய சமூகத்தின் மேம்பாட்டிற்கு அடிப்படையானவை என்பதை இதன் வழி தெளியலாம். ஒவ்வொருவருக்கும் கடமைகள் பல இருப்பினும் சமூக மேம்பாட்டில் ஆடவரின் கடமையே முன் நின்றது. பொன்முடியாரது பாடலிலும் இளைய ஆடவன் ஒருவனது வீரச் செயலுக்கு மற்ற அனைவரும் எத்தகைய வகையில் உதவி செய்தல் வேண்டும் என்பது வலியுறுத்தப்பட்டது.

**"ஆடவன் உள்ளத்தின் வலிமையாலும் உடலின் வலிமையாலும் சில செயல்களைச் செய்து வாழ்வான். அறிவின் ஆண்மை செயல்படும் பொழுது உரவோன் என்றும், உடலின் ஆண்மை செயல்படும்பொழுது வீரன் என்றும் வழங்கப்படும்."[5]**

என்று கூறப்படுவதாலும் அக்கால மக்களின் சமூகக் கடமைகள் மேலும் அறியப்படுகிறது. காலச் சூழலுக்கு ஏற்ப மக்களின் தேவைகளும் கடமைகளும் மாறி அமைகின்றன.

**சமூக முன்னேற்றம்**

ஒரு சமூகத்தின் முன்னேற்றம் என்பது அங்கு வாழும் மக்களின் செயல் திறனைப் பொறுத்து அமைகிறது. பழங்காலத்தில் சமூக முன்னேற்றத்தில் ஆடவர்கள் அதிகப்பங்கு கொண்டிருந்தனர். இந்த உலகம் ஓரிடத்தில் நாடாகவும் பிரிதொரு இடத்தில் காடாகவும் இன்னும் சில இடங்களில் மேடுபள்ளமாகவும் காட்சியளிக்கிறது. அதுபோல் மக்களினத்திலும் ஆண், பெண், இளையவர், முதியவர் என்ற பாகுபாடு இருந்து வருகிறது. இதில், ஆண்மையும் இளமையும் உடைய ஆண்கள் நல்லொழுக்கம் நிறைந்தவராக இருந்தால் அச்சமூகத்தில் உள்ள பிற அனைவரும் நல்லோர்களாக இருப்பர். நிலம் எத்தகைய தன்மையுடையதாயினும் அங்குள்ள மக்களினம் நல்ல பண்புடையவர்களாகவும் செயல் திறன் மிக்கவர்களாகவும் இருந்தால் அச்சமூகம் சான்றோரால் பாராட்டத்தக்க பெருமை கொண்டிருக்கும். இத்தகைய சமுதாய முன்னேற்றம் பற்றி ஔவையார்,

**"நாடா கொன்றோ காடா கொன்றோ**
**அவலா கொன்றோ மிசையா கொன்றோ**
**எவ்வழி நல்லவ ராடவர்**
**அவ்வழி நல்லை வாழிய நிலனே"[6]**

என்று கூறித் தெளிவுபடுத்துகிறார். சமுதாய முன்னேற்றம் என்பது நிலத்தன்மைகளைப் பொறுத்தது அல்ல, அங்குள்ள மக்களைப் பொறுத்தது என்பதை ஔவையின் பாடல் வழி அறியலாம். பழந்தமிழ்ச் சமுதாய முன்னேற்றம் மக்களின் செயல்திறனை அடிப்படையாகக் கொண்டது. "ஒருநாடும், அந்நாட்டின்கண் வாழும் மக்கள் சமுதாயமும் ஏற்றம் கொண்டதா; பாரம்பரியப் புகழ் மிக்கதா; நாகரிக முதிர்ச்சிப் பெற்றதா என்று கண்டறிய போதுமான சாட்சிகளாக அமையப் பெறுவது, அம்மக்கள் சார்ந்திருக்கும்

சமுதாயத்தின் மரபு, பழக்கவழக்கங்கள், நாகரிகம், பண்பாடு ஆகியவையே எனின் மிகையன்று.''[7]

## 1. குறிஞ்சி நிலச் சமுதாயம்

மலைப்பாங்கான பகுதிகளில் குறிஞ்சி மலர்கள் நிறைந்து காணப்பட்டமையால் இந்நிலம் குறிஞ்சி எனப்பட்டது. பின்பு குறிஞ்சி என்பது மலையும் அதனைச் சார்ந்த பகுதிகளையும் குறிக்கலாயிற்று. குறிஞ்சி நிலத்தில் மக்கள் வாழ்வியல் நிமித்தமான புணர்தலும் புணர்தல் நிகழ்வின் நிமித்தமும் உருக்கொள்ள ஆரம்பித்தன. இப்பகுதி வாழ்மக்கள் முருகனைத் தெய்வமாக வழிபட்டனர். இங்கு வாழும் தலைவனைச் சிலம்பன், வெற்பன், பொருப்பன் எனவும் தலைவியை கொடிச்சி, குறத்தி எனவும் அழைத்தனர். மேலும் அப்பகுதியின் காட்சிகள், மக்கள் வழிபாடு, ஊர்க்காவல், சமூக நிகழ்வுகள், தொழில் முறைகள், மக்களின் வழக்காறுகள் என்று குறிஞ்சிநிலச் சமுதாய நிகழ்வுகளைச் சித்தரிப்பதாக இப்பகுதி அமைகிறது.

### மலைக்காட்சிகள்

ஆகாயத்தைத் தொடுமளவு மலைகள் உயர்ந்து நின்றன. இக்காட்சியினை,

> **''மஞ்சு சூழ் மலையில் ஆசினியும் அசோகும் மலையை அழகு செய்யும்; தேமாவும் தீம்பலவும் மலைக்குத் தெய்வீகக் காட்சியை நல்கும். சந்தனமும் சண்பகமும் மலையை மாண்புறுத்தும். கோங்கும் வேங்கையும் மலைக்கு வனப்பூட்டும். மற்றும் பல மரங்கள் விண்ணைத் தழுவி முத்தமிடும். குறிஞ்சி, கோங்கு, மாதவி, மல்லிகை, முல்லை போன்ற மலர்கள் எம்மருங்கும் மலர்ந்து மணம் பரப்பி மனத்தை ஈர்க்கும்.''[8]**

என்று கூறுவதால் மேலும் அறியலாகிறது.

மலையின் இருபுறங்களையும் சோலைகள் அழகுபடுத்தின. இத்தகைய மலைச்சாரலில் மழை பெய்து ஓய்ந்தது. மழையில் நனைந்த மயில் ஒன்று அங்கிருந்த பாறையின் மேல் தனது அழகிய தோகையை விரித்து ஆடியது. இங்குக் குளர்ச்சியுடைய சுனைகளும் அதில் குவளை மலர்களும் பூத்திருந்தன. இத்தகைய காட்சிகளைக் கொண்டது குறிஞ்சி நில மலைச்சாரல் என்பதைக் குறமகள் குறியெயினியார் என்றும் புலவர்,

**"பீலி மஞ்ஞை யாலுஞ் சோலை**
**யங்க ணறைய வகல்வாய்ப் பைஞ்சுனை"**[9]

என்று கூறுவதால் காணலாகிறது. மேலும் இங்குள்ள மலைப்பகுதிகளில் தினைக்கதிர்கள் விளைந்து நின்றன. அக்கதிர்களைக் கிளிகள் தம் சுற்றத்தோடு வந்து கொத்தித் தின்றன. காற்று வீசுதலால் ஊதுகொம்பில் உண்டாகும் ஓசைபோல் கதிர்களை உண்ணும் கிளிகள் ஒலி எழுப்பின. இத்தகைய காட்சிகளை உடையது குறிஞ்சிநிலம் என்பதை மாறோக்கத்து நப்பசலையார் என்றும் புலவர்,

**"சாரல் வரைய கிளையுடன் குழீஇ**
**வளியெறி வயிரிற் கிளிவிளி பயிற்றும்"**[10]

என்று காட்சிப்படுத்துகின்றார். மேலும், குறிஞ்சி நிலம் இயற்கை வளம் கொண்ட சோலைகளையும் சுனைகளையும் கொண்டிருந்தது. இங்குக் கொடிய விலங்குகள் சுற்றித் திரிந்தன. மேலும் மக்கள் இனம் முதலில் தோன்றிய இடம் குறிஞ்சிநிலம் எனவும் கூறப்படுகிறது. இது குறித்து ந.சி. கந்தையா பிள்ளை,

**"மனிதன் ஆதியில் குறிஞ்சி நிலத்திலேயே தனது வாழ்க்கையைத் தொடங்கினான். கொடிய விலங்கினங்களினின்றும் அவனைக் காப்பதற்கேற்ற குகைகள் அங்குதானுண்டு. துட்ட விலங்குகளின்றும் தன்னைக் காத்துக் கொள்வதற்கே அன்றி, உணவின் பொருட்டும் அவன் வேட்டையாட வேண்டியிருந்தது. ஓரிடத்தில் தங்கியிராது இடம் விட்டு இடம் பெயர்ந்து வாழும் வாழ்க்கை உடையவனாக இருந்தான் எனத் தெரிகிறது."**[11]

என்று கூறுகிறார். குறிஞ்சி நிலச் சமூக வரலாற்றை இக்கூற்று தெளிவாக்குகிறது எனலாம்.

**மக்கள் வழிபாடு**

குறிஞ்சி நிலமக்கள் முருகனை முழுமுதற்கடவுளாகக் கொண்டு வழிபட்டு வந்தனர். இம்மக்களுக்குரிய தெய்வம் முருகன் என்பதைத் தொல்காப்பியர்,

**"சேயோன் மேய மைவரை உலகமும்"**[12]

என்று சுட்டிக் காட்டுகின்றார்.

**"முருக வழிபாட்டைப் பற்றித் திருமுருகாற்றுப்படை, பரிபாடல் முதலிய நூல்கள் விரித்துக் கூறுகின்றன. பாமரர் முதல் ஞானிகள் வரை ஒவ்வொருவரும் தத்தம் அறிவுக்கு எட்டியவரை முருகக்கடவுளைப் பலவாறு வழிபட்டனர்."**[13]

முருகன் என்னும் சொல்லுக்கு மணம், இளமை, கடவுள் தன்மை, அழகு என்று பொருள் வழங்கப்படுகின்றது. தமக்கு ஏற்படும் இன்பத்திற்கும் துன்பத்திற்கும் கடவுளே காரணம் என்ற நம்பிக்கை குறிஞ்சி நிலமக்களிடையே நிலவியது. முருகன் மலை தெய்வமாதலால் அவன் மலையில் உறைந்திருப்பதாக எண்ணினர். இதனை,

**"அணங்குடை நெடுவரை யுச்சி"**[14]

என்றும்,

**"சூருறை வெற்பன்"**[15]

என்றும் வரும் தொடர்களால் அறியலாம். மேலும் முருக வழிபாடு என்பது குறிஞ்சிநில மக்களிடம் வெறியாட்டின் மூலமே வெளிப்படுகின்றது. முருகனுக்குத் தாம் விரும்பி உண்ணும் உணவுப் பொருட்களைப் பலியுணவாகப் படைத்தனர். வெறியாட்டு நிகழ்ந்தபோது ஆட்டுக்குட்டியை அறுத்து முருகனுக்குப் படைத்தனர் என்பதை நல்வெள்ளியார் என்னும் புலவர்,

**"வெறியென வுணர்ந்த வுள்ளமொடு மறியறுத்த**
**தன்னை யயரு முருகு"**[16]

என்று கூறுகின்றார். முருகனுக்கு அன்று விலங்குகளைப் பலியிடும் வழக்கம் இருந்துள்ளது என்பது இதனால் வெளிப்படுகிறது. இதனை உறுதிசெய்யும் வகையில் வெறிபாடியகாமக்காணியார்,

**"வளநகர் சிலம்பப் பாடிப்பலிகொடுத்**
**துருவச் செந்தினை குருதியொடு தூஉய்**
**முருகாற்றுப்படுத்த வுருகெழு நடுநாள்"**[17]

என்று கூறுவதால் முருகவழிபாட்டில் பலியிடும் வழக்கம் இருந்தது என்பதை உறுதிசெய்யலாம். பலவகையான புகழை உடையவன் முருகப்பெருமான். இவன் தன்னை வணங்காத சூரபத்மன் முதலான பகைவர்களை அழித்தொழித்தவன். இவனை வழிபட்டால் துன்பம் நீங்கும் என்பது அக்கால மக்களின் நம்பிக்கையாக இருந்தது. இதனை வெறிபாடிய காமக்காணியார்,

**"படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை**
**நெடுவேட் பேணத் தணிகுவள்"**[18]

என்று பாடி நோயுற்ற தலைவியை வேலனை அழைத்து வெறியாட்டுப்படுத்தினால் நலம் பெறுவாள் எனக் கூறுகின்றார். முருகக் கடவுள் குறித்தும் அவனது வரலாறு குறித்தும் சு.வித்தியானந்தன்,

**"குறிஞ்சி நிலக் கடவுளாகிய முருகனே மக்களின் உள்ளத்தை மிகவும் கொள்ளை கொண்டவன். அவன் போரிற் சிறந்த திராவிடத் தெய்வம். 'சொல்லும் போரை வல்ல முருகன்' எனச் சிறப்பிக்கப்படுகின்றான். வெற்றி தெய்வமான கொற்றவையே அவனுடைய தாய். அவன் கடப்பம் தாரை அணிந்து கடம்பின் கீழ் வீற்றிருப்பான்."[19]**

என்று கூறிச் சிறப்பிக்கின்றார். இவ்வாறு தெய்வ வழிபாடு குறிஞ்சி நிலச் சமுதாய மக்களிடம் நிகழ்ந்துள்ளது என்பதை அறியமுடிகிறது.

**ஊர்க்காவல்**

குறிஞ்சி நில மக்கள் தம்முள் ஒன்று கூடி வாழும் சமுதாய நிலைக்கு ஆட்பட்ட பின்னர், அவர்களுக்குப் பாதுகாவல் இன்றியமையாத ஒன்றாகியது. ஊர்க்காவல் செய்யும் வீரர்கள் உடல் வருத்தத்தைத் தாங்கி விடியலுக்காக நாளிகையை எண்ணியிருந்தனர் என்பதைக் கழார்க் கீரனெயிற்றியார் என்னும் புலவர்,

**"......................... காவலர்**
**கணக்காய் வகையின் வருந்தி"[20]**

என்று கூறுவதனால் அறியலாம். இவ்வாறு ஊர்காவல் செய்யும் காவல்படையினர் களிராகிய இரையை எதிர்நோக்கி இருக்கும் புலியைப் போல் பகைவரின் வருகையை விழிப்புடன் கண்டிருந்தனர் என்பதை வெறிபாடிய காமக்காணியார்,

**"களிற்றிரை தரீஇய பார்வ லொதுக்கின்**
**ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல**
**நன்மனை நெடுநகர்க் காவலர்"[21]**

என்று கூறி அக்காலக் காவல் சிறப்பை விவரிக்கின்றார். குறிஞ்சி நிலச் சமுதாய மக்களுக்குக் கள்வர் முதலியோரிடமிருந்து எவ்விதத் துன்பமும் நேராதவாறு ஊர்க்காவல் செய்வோர் பாதுகாத்தனர் என்பதை அறியலாம்.

**நிமித்தம்**

மக்கள் வாழ்வில் அன்றாடம் நிகழும் நிகழ்வுகள் நன்மையைச் சார்ந்தும் தீமைக்கு ஏதுவாகவும் அமையும். ஒரு நற்செயலைச் செய்யத் தொடங்கிய நிலையில் அதில் தொடர்ந்து இடையூறு நேர்ந்தால் அதற்கான காரணத்தை மனம்

அறிய விழையும். ஏதேனும் ஒருவிளைவினால்தான் காரியம் நிறைவேறாது நின்றது என்ற நம்பிக்கைத் தோன்றவும் இஃது இடமளிக்கும். இக்காரணம் கருதியே மக்கள் ஒரு செயலில் ஈடுபடும் முன்பு நிமித்தங்களை எதிர்பார்த்துச் செய்வது இன்றளவும் வழக்கமாய் இருந்து வருகிறது. இத்தகைய முறையில் மக்களிடையே நிமித்தம் பார்த்தல் வழக்கம் உருவானது எனலாம்.

> **''நிமித்தம் என்பது பின்னர் நிகழும் நன்மை தீமைகளை முன்னரே அறிவிக்கும் குறி என்பர். இதன் அடிப்படையில் தான் சில அறிகுறிகளை வைத்து நன்நிமித்தம், தீநிமித்தம் எனப்பகுத்தனர்.''**[22]

என்று கூறும் சுந்தரமூர்த்தி அவர்களின் கருத்தும் இங்கு கருதத்தக்கது. நாள், பறவை, பிறவற்றினாலும் நிமித்தம் நடைபெறும் என்பதைத் தொல்காப்பியார்,

> **'நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்''**[23]

என்று தமது நூற்பாவின் வழி நிமித்தத்திற்கானக் காரணங்களைக் கூறுகின்றார். பயணம் மேற்கொள்வோருக்கு அரிவாள் போன்ற முதுகு புறத்தைக் கொண்ட ஆண் ஓந்தியை (ஓணான்) நிமித்தம் பார்த்துச் சென்றனர் என்பதை அள்ளூர் நன்முல்லையார்,

> **''வேதின வெரிநி னோதி முதுபோத்**
> **தாறுசென் மாக்கள் புட்கொளப் பொருந்தும்''**[24]

என்று கூறியுள்ளார். இவ்வாறு அக்கால மக்கள் நிமித்தத்தின் மீது ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தனர் என்பது தெரியவருகிறது. நிமித்தங்கள் பலவும் அச்சத்தின் விளைவாகத் தோன்றியிருக்கலாம் எனவும் கருதப்படுகின்றது.

**மணம் பேசுதல்**

களவு வழித் திருமணத்தையே சங்கப் பாடல்கள் பலவும் அதிகம் போற்றுகின்றன. கற்பு வழித் திருமணம் பற்றிய செய்திகள் அருகியே காணக்கிடைக்கின்றன. பழந்தமிழர்கள் நாகரிகமும் பண்பாடும் வளர்ந்தோங்கிய நிலையில் வாழ்வியலை அகம், புறம் எனப் பகுத்தனர். அகவாழ்வு அன்பின் ஐந்திணை வழிப்பட்டது. இதில் களவு கற்பு பற்றிச் சிறப்பித்துப் பேசப்படுகிறது. இதனைக் கார்மேகக் கோனார்,

**"ஐந்திணைகளுள் குறிஞ்சித் திணை களவுக்கும் முல்லையும் மருதமும் கற்புக்கும் பாலையும் நெய் தலும் களவு, கற்பு என்னும் இரண்டிற்கும் உரிய திணைகளாகும்."[25]**

என்று பாகுபடுத்தி உரைக்கின்றார். களவின் முடிவில் உடன்போக்கின் வழி தலைமக்கள் மணம் புரிவது ஒருவகை. அவ்வாறு இல்லாது தலைமக்கள் களவு வழிப்பட்டிருப்பினும் சான்றோர்கள் கூடிப்பேசி முடிப்பது மற்றொருவகை. இவ்வாறு சான்றோர்கள் பேசிமுடிக்கும் மணம் குறித்து வெள்ளிவீதியார் குறிப்பிடுகின்றார். மணம் பேசுகின்ற இடத்தில் நரைத்த தலையில் பாகை அணிந்த ஊன்று கோலுடைய பெரியவர்கள் இருந்தனர் என்றும், அவர்கள் பிரிந்தவர்களைக் கூட்டுவிக்கும் பண்பினர் என்றும் தலைமகன் சார்பில் கொண்டு வந்த அளவிற்கு அதிகமான பரிசத்தைக் கண்டு மகிழ்ந்து சம்மதம் தெரிவித்தனர் என்றும் தமது பாடல் ஒன்றில் குறிப்பிடுகின்றார்.

**"பிரிந்தோர்ப் புணர்ப்போ ரிருந்தனர் கொல்லோ**
**தண்டுடைக் கையர் வெண்டலைச் சிதலவர்**
**நன்று நன்றென்னு மாக்களொ**
**டின்று பெரி தென்று மாங்கண தவையே"[26]**

என்று கூறிச் செல்கின்றார். அக்காலத்தில் ஆண்மக்கள் பரிசம் கொடுத்து மணக்கும் முறை இருந்தமை இதனால் அறியப்படுகிறது. "பொருள் தந்து பெண்ணை மணத்தல் என்பது பெண்ணின் உயர்வு நிலையைக் காட்டுவதாகக் கருத வழியில்லை. பொருளின் மீதான ஆதிக்க உரிமை ஆணுக்கு மட்டுமே இருந்ததைத் தெளிவுபடுத்துகிறது. அதே சமயம் அப்பொருளின் தொடர்ந்த தூய்ப்புக்கும் சேமிப்புக்கும் பெண், ஒரு கருவியாகக் கருதப்பட்டாள் என்பதே இதன் பொருளாகும்"[27] என்பதாலும் அக்கால மணமுறை தெளிவுறுகிறது.

**மடலேறுதல்**

தமிழ்ச் சமுதாயத்தில் மடலேறுதல் வழக்கம் பழங்காலம் தொட்டே இருந்துள்ளது. தலைமக்கள் இருவரில் மடலேறும் வழக்கம் தலைவனுக்கு மட்டுமே உரியதாய் இருந்தது. மடலேறும் நிலை குறித்து ந. சுப்புரெட்டியார்,

**"மடலேறுதல் என்ற செயல் காம எண்ணம் முதிர்ந்து தலையெடுத்து நிற்கும்பொழுது ஆண்மக்கள் தாம்காதலித்த தலைமகளைக் கூடுவதற்கு விரும்பி மேற்கொள்வதாகும்."[28]**

என்று கூறுகின்றார். பனை மடலால் குதிரை போன்ற உருவம் செய்து, தலைவியின் உருவம் போன்ற பொம்மையைக் கையில் கொண்டு, எருக்கம் பூ மாலையை கழுத்தில் அணிந்தவாறு பொய்க்குதிரையின் மேல் ஊர்ந்து செல்லுதல் 'மடலேறுதல்' எனப்படுகிறது. மடலேறுவதால் களவு வெளிப்பட்டுச் சான்றோர்களால் விரைவில் மணம் பேசி முடிக்கப்படுவதும் உண்டு. இவ்வாறு தமது களவினை வெளிப்படுத்த நினைத்த தலைவன் ஒருவன் மடலேற எண்ணுகிறான். தனக்குள் உண்டான பெருங்காமத்தைத் தாங்கி வாழ்வது இயலாதது ஆகையால் மடலேறுவதே நன்று எனவும் நினைத்தான். இத்தகைய தலைவனின் மனப்போராட்டத்தை அள்ளூர் நன்முல்லையார் என்னும் புலவர்,

**''மாவென மடலொடு மறுகிற் தோன்றித்**
**தெற்றெனத் தூற்றலும் பழியே**
**வாழ்தலும் பழியே பிரிவுதலை வரினே''**[29]

என்று கூறுகின்றார். பெருங்காமத்தை வெளிப்படுத்தவும் திருமணத்தை விரைந்து முடிக்கவும் மடலேறுதல் ஏதுவாக அமைந்துள்ளது.

**தொழில்**

குறிஞ்சி நில மக்கள் வேட்டையாடல், தினை விதைத்தல், கழங்கு அகழ்தல், தேன் எடுத்தல், அருவி ஆடல், போன்ற தொழில்களில் சிறந்து விளங்கினர். இத்தொழில்களோடு மட்டுமல்லாது கலைசார்ந்த தொழில்களிலும் ஈடுபாடு கொண்டிருந்தனர். இங்கு வாழ்ந்த மக்கள் ஓவியக் கலை பற்றி அறிந்தவர்களாகவும், இயந்திரம் பொறிக்கப்பட்ட பாவையைக் கொண்டு கூத்து நிகழ்த்துவதில் வல்லவர்களாகவும் இருந்துள்ளனர் என்பதை,

**'ஓவத்தன்ன வினை புனை நல்லிற்''**[30]

என்றும்,

**''............................ வல்லோன்**
**பொறியமை பாவையிற் றுங்கல் வேண்டி''**[31]

என்றும் வரும் காமக்காணியாரின் பாடலடிகள் வாயிலாக அறியலாம். இவ்வாறான,

**''ஓவியக்கலை தொன்று தொட்டு மக்களிடம் இருந்து வரும் ஒரு கலையாகும். சுவர், மரம், துணி, உலோகம், தோல் போன்ற ஏதாவது ஒன்றன்மேல் கோடுகளால், நிறத்தால் உருவங்களை எழுதும் தொழிலாகும்''**[32]

என்று கூறப்படுவதாலும் மேலும் அறியலாகின்றது.

**சமூக நிகழ்வுகள்**

குறிஞ்சி நிலத்தில் உள்ள விலங்குகள் பற்றியும் அதன் சிறப்புத்தன்மைகள் பற்றியும் பெண்பாற்புலவர்கள் பாடியுள்ளனர். அவற்றின்வழி சில நிகழ்வுகள் இங்கு முன் வைக்கப்படுகின்றன.

'ஆளி' விலங்கானது புலி, யானை போன்ற பெரிய விலங்குகளையும் தாக்கி வீழ்த்தும் வலிமையுடையது என்பதை நக்கண்ணையார்,

**''இடம்படு பறியா வலம்படு வேட்டத்து**
**வாள்வரி நடுங்கப் புகல்வந்தாளி**
**உயர்நுதல் யானைப் புகர் முதத் தோற்றி**
**வெண்கோடு புய்க்கும்..''[33]**

என்று கூறிச் சிறப்பிக்கின்றார். புலியானது தான் வேட்டையாடும் விலங்குகளை வலப்பக்கத்தில் வீழ்த்தும் தன்மையுடையது என்பதும், இடப்பக்கத்தில் சாயும் விலங்குகளை உண்ணாது என்பதும், 'ஆளி' என்னும் விலங்கு யானையின் கொம்புகளைப் பறிக்கும் வலிமையும் வழக்கமும் உடையது என்பதும் பெறப்படுகிறது.

மழைக்காலத்து முழங்கும் இடிக்கு நல்ல பாம்புகள் இறக்கும் தன்மையுடையன என்று கூறப்படுகிறது. இதை ஔவையார்,

**''நெடுவரை மருங்கிற் பாம்புபட விடிக்கும்**
**கடுவிசை யுருமின்....''[34]**

என்றும்

**''கேழ்கிள ருத்தி யரவுத்தலை பனிப்பப்**
**படுமழை யுருமி னுரற் றுகுரல் ''[35]**

என்றும் கூறியுள்ளார். படம் விரித்தாடும் நாகம் மட்டுமே இறப்பதாகக் கூறுவது மேலும் ஆராயத்தக்கது. யானையால் தாக்கப்பட்டுப் பெரும்புண்பட்டு ஒடுங்கிக்கிடந்த ஆண்புலியைப் பெண்புலி காவல் செய்தது என்பதை,

**''வெண்கோட் டியானை பொருதபுண் கூர்ந்து**
**பைங்கண் வல்லியங் கல்லளைச் செறிய**
**முடுக்கரும் பன்ன வல்லுகிர் வயப்பிணவு''[36]**

என்று வரும் வெள்ளிவீதியாரின் பாடலடிகள் காட்சிப்படுத்துகின்றன. இவ்வாறு பெண்பாற்புலவர்களின் பாடல்களில் சில இயற்கை நிகழ்வுகள் காணக்கிடைக்கின்றன.

## 2. முல்லைநிலச் சமுதாயம்

மலைசார்ந்த பகுதிகளில் வாழ்ந்த மக்கள் தம் அடிப்படை வசதிகளை மேலும் பெருக்கிக் கொள்ளும் பொருட்டுப் பரந்து விரிந்து கிடந்த காட்டு நிலங்களுக்குக் குடிபெயரலாயினர். இப்பகுதியிலேயே தம் நிலையான குடியிருப்பையும் அமைத்துக் கொள்ள விரும்பினர். முல்லை நில மக்களினத்தவரில் ஆடவர் பொதுவர், இடையர், ஆயர், கோவலர் என்றும் பெண்டிரை பொதுவியர், இடைச்சியர், ஆய்ச்சியர், கோவித்தியர் என்றும் அழைக்கப்பட்டனர். குறிஞ்சி நிலத்திற்கும் மருத நிலத்திற்கும் இடைப்பட்டு அமைந்த முல்லை நிலத்தில் தான் மக்கள் சமூதாயம் நிலையானதொரு வாழ்க்கை முறையைத் தொடங்கியது. இயற்கை வளம் நிறைந்த காடுகளில் வாழ்ந்த முல்லைநில மக்கள் காட்டை அழித்துப் பண்படுத்தி உழவுத் தொழில் மேற்கொண்டனர். பருவ மழையில் விளைவிக்கப்பட்ட உணவுப் பொருட்களைப் போதுமான அளவிற்கு சேமித்தும் வைத்தனர். இவர்களின் முக்கியத்தொழில் ஆடுமாடுகளை மேய்த்தல். அதன் மூலம் கிடைக்கும் பால், தயிர், மோர் போன்றவற்றைப் பிற நிலமக்களுக்குக் கொடுத்து, அவர்களிடமிருந்து தமக்குத் தேவையான பொருட்களைப் பெற்றனர். நாடோடி வாழ்க்கை முறையைத் தவிர்த்துவிட்டு நிலையான குடியிருப்புகளை அமைத்துக்கொள்ள முற்பட்டனர். பெருங்கூட்டமாக வாழத் தொடங்கியதும் ஆயர்கள் தம்மை வழிநடத்த சிறந்ததொரு தலைவன் தேவை எனக் கருதினர். இவ்வண்ணமே அரசாட்சி முறை வித்திட்டது என்பதை நா.சி. கந்தையா பிள்ளை,

> **"இடையர்களைக் குறிக்கும் கோன் என்னுஞ் சொல் அரசனைக் குறிக்கின்றது. மந்தைகளை மேய்க்கும் இடையனது கோலே அதிகாரத்ததுக்குரிய செங்கோலாயிற்று."**[37]

என்று உரைப்பதால் முல்லை நில மக்களிடமே முதன்முதலில் அரசாட்சி முறை தோற்றம் பெற்றது என்பதை அறியலாம். இச்சமுதாய மக்களிடமே நிலையான குடியிருப்பு முறையும் நிலையான வாழ்வியல் நெறி முறையும் நிலையான வாழ்வும் அமையப் பெற்றிருந்தன. அடுத்த நிலையில் திருமணம் மற்றும் சடங்கு

முறைகளும் தோற்றம் பெற ஆரம்பித்தன. முல்லைநில மக்களிடமே நாகரிக வாழ்க்கை தோன்றியது என்பதை,

> **''முல்லை நில வாழ்வுதான் மக்களின் சிறந்த வாழ்வுக்கு அடிப்படை என்று கூறலாம். ஒருவனுக்கு ஒருத்தி என்றும் வாழ்க்கை முறையும் இந்நில வாழ்விலே தான் தொடங்கியது.''** [38]

என உரைக்கும் நா. ஆறுமுகம் அவர்களின் கருத்து ஏற்புடையதாய் அமைகிறது. முல்லை நில மக்களின் வாழ்வியல் கூறுகள் சிலவற்றை இப்பகுதி கூற விழைகிறது.

**முல்லை நிலக் காட்சிகள்**

காடுகளில் முல்லைமலர்கள் நிரம்ப இருந்தமை காரணமாக இந்நிலத்திற்கு முல்லை எனப் பெயரிடப்பட்டது. காடும் காடுசார்ந்த இந்நிலப் பரப்பில் இயற்கை எழில் ததும்பி நின்றது. இக்காடுகளில் முயல்குட்டிகள் துள்ளி விளையாடின. முல்லைநில ஊர்களில் வரகுக் கதிர்கள் விளைந்து நின்றன. இக்காட்சியை ஒக்கூர் மாசாத்தியார்,

> **முயற்பறழ் உகளுமுல்லையம் புறவிற்**
> **கவைக்கதிர் வரகின் சீறூர்''** [39]

என்று உரைக்கின்றார். மேலும், இக்காடுகளில் மழை அதிகம் பெய்தலால் இவை பயன் மிக்கதாய்த் திகழ்ந்தன. நீர்நிலைகளில் தேரைகள் வாத்திய ஓசைபோல் ஒலி எழுப்பின. பிடவம் மலர்கள் செம்மண் நிலத்தில் உதிர்ந்து அழகுபடுத்தின. காந்தள் மலர்கள் பாம்பு படம் கொண்டது போல் கட்டவிழ்ந்து நின்றன. ஆண்மான்கள் தம் துணையுடன் இன்பமாய்ச் சுற்றின. இத்தகைய காட்சிகளைக் கொண்டிருந்த முல்லைக் காட்டினை புல்லாளங்கண்ணியார் என்னும் புலவர்,

> **''திரிமருப் பிரலை தெள்ளறல் பருகிக்**
> **காமர் துணையோ டேமுற வதியக்**
> **காடுகவின் பெற்ற தண்பதப் பெருவழி''** [40]

என்று சிறப்பித்துக் கூறுகின்றார்.

**உணவு முறை**

முல்லை நிலமக்கள் தானிய வகைகளை விளைவித்து அவற்றையே உணவாகவும் உட்கொண்டனர். இந்நிலங்களில் வாழ்ந்த இடையர்கள், செம்மறி ஆட்டுப்பாலினால் உண்டாக்கப்பட்ட தயிரினைக் கரைத்து, அத்துடன் வரகு

அரிசியும், புற்றலிருந்து வெளிப்படும் ஈசலையும் சேர்த்துச் சமைத்தனர். இவ்வாறு சமைக்கப்பட்ட உணவு புளிச்சுவை கொண்டதாக இருந்தது. இவ்வுணவைச் சூடாக இருக்கும்போதே அதில் பசுநெய் கலந்து உண்டனர்.[41] மேலும், நெல் அரிசியால் சமைக்கப்பட்ட உணவில் இடையர்கள் பசுநெய் கலந்து உண்டனர் என்பதைக் காக்கைப் பாடினி நச்செள்ளையார்,

**''பல் ஆ பயந்த நெய்யின் தொண்டி**
**முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோறு''**[42]

என்று கூறுவதால் அறியலாம். முல்லைநில ஆயர்களின் உணவுப்பழக்கம் குறித்து சு.வித்தியானந்தன்,

> **''முல்லை நில மக்கள் வாழும் இடங்களில் மான்களும் முயல்களும் வான்கோழிகளும் வழங்குவன. அவற்றைக் கொன்று அவர் உண்பர். அத்துடன் பால் தயிர் முதலியவற்றையும் பண்டமாற்றினால் பெறப்படும் தானிய வகைகளையும் உண்பர்.''**[43]

என்று கூறுவதால் அக்கால இடையர் குலமக்களின் சமையல் முறைகள் குறித்து அறியலாகின்றது.

**விருந்தினர் வருகை**

முல்லைநில மக்களும் நிமித்தம் குறித்த நம்பிக்கையைப் பெற்றிருந்தனர். காக்கை கரைந்தால் விருந்தினர் இல்லம்நாடி வருவர் என்பது அவர்களின் நம்பிக்கையாக இருந்தது என்பதை நச்செள்ளையார்,

**''விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே''**[44]

என்று கூறும் செய்தியால் அறியலாம். காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர் என்ற நம்பிக்கை அன்று முதல் இன்று வரை அனைத்துச் சமுதாயத்தினரிடமும் நிலவி வருகின்றது. ''உணவு உண்ணும் முன்னர் அதில் ஒரு பகுதி காகத்திற்கு எடுத்து வைக்கும் வழக்கம் இப்பொழுதும் தமிழ் மக்களிடையே காணப்படும் ஒன்றாகும். இவ்வாறு செய்யாது விடுவது துன்பம் நேருமெனக் கருதினர்.''[45] இதனால், பலியுணவு படைத்தலும் அதன் பயன்பாடும் அறியப்படுகிறது. மேலும், காக்கைகளுக்கு விருந்திடும்போது அவை தணித்து உண்ணாமல் தம் சுற்றத்தையும் கரைந்து அழைக்கும். காக்கைகள் கரைந்தால் எவ்வாறு அவற்றின் சுற்றம் வருவது உறுதியானதோ அதுபோல் விருந்தினர் வருகையும் உறுதியானது என்பது முல்லை நில மக்களின் நம்பிக்கையாக இருந்தது.

**சமுதாய நிகழ்வுகள்**

முல்லை நிலத்து மக்களின் உரிப்பொருள் இருந்தலும் இருத்தல் நிமித்தமும் ஆகும். வினைமேற்சென்ற தலைவனது பிரிவைத் தலைவி ஆற்றியிருத்தல் பற்றியே அவ்வாறு கூறப்பட்டது. முல்லை நிலச் சமுதாயத்தில் ஆடவர் பொருள் தேடச் செல்வது முக்கிய நிகழ்வாகக் கூறப்படுகிறது. இதனை எஸ். ஆறுமுக முதலியார்,

> **"முல்லை என்னும் அகவொழுக்கத்தோடு வஞ்சி என்னும் புறவொழுக்கம் இயைபுடையதாம். 'வஞ்சிதானே முல்லையது புறனே'. மனைவி தன் காதலனைப் பிரிந்து மனைக்கண் தங்கி ஆற்றியிருப்பது போல், வேந்தர்க்குற்றுழிப் பிரிந்த அவள் கணவனும், அவளைப் பிரிந்து கார்காலத்தின் போரின்மையின் பாடி வீட்டின்கண் இருப்பான். மேலும் தலைமகள் வீடு காட்டின்கண் இருப்பதுபோல் பாடி வீடும் பகைவர் நகர்க்கு அரணான காட்டின்கண் அமைக்கப்படும்."[46]**

என்று முல்லைநிலமக்களின் உரிப்பொருள் பற்றிக் கூறும் கருத்து இங்கு ஏற்புடையதாய் அமைகிறது. வினைமேற் செல்லும் ஆடவர் தாம் மீண்டு வரும்பருவம் குறித்துச் செல்வது வழக்கம். இல்லுறை மகளிர் அவ்வாறு ஆடவர் கூறிய கார்காலத்தின் வரவை எதிர்ப்பார்த்துக் காத்திருந்தனர். மாலைக் கால நிகழ்வுகள் அவர்களைப் பெரிதும் வாட்டியது. கார்கால வரவின் அறிகுறியாக முல்லை மலர்ந்து காட்சியளித்தது. இதனை,

> **"கொல்லைப் புனத்த முல்லை மென்கொடி**
> **எயிறு என முகையும்"[47]**

என்று வரும் ஒக்கூர் மாசாத்தியாரின் பாடலடிகள் காட்சிப்படுத்துகின்றன. இவ்வாறு கார்காலத்தின் வரவால் தலைவி மிகுந்த வருத்தமடைவதாகவும், வாடைக்கற்றும், மாலைநேரமும் அவளது துன்பத்தை மேலும் அதிகரிப்பதாகவும் கூறப்படுகிறது. நீரை முகந்தவாறு மலைப்பக்கம் செல்லும் மேகங்கள் தலைவனுக்கு கார்ப்பருவத்தின் வரவை அறிவித்திருக்கும் என வருத்தமுற்றத் தலைவி ஒருத்தியின் நிலையை கச்சிப்பேட்டு நன்னாகையார்,

> **"செழும்பல் குன்றம் நோக்கிப்**
> **பெருங்கலி வானம் ஏர்தரும் பொழுதே"[48]**

என்று கூறுகின்றார். இவ்வாறு தலைவனின் வரவை எதிர்நோக்கியிருக்கும் தலைவிக்கு மாலைக்காலம் பெரும் துன்பத்தைத் தருவதாக அமைகிறது. இதனை ஒக்கூர் மாசாத்தியார்,

> **''குறுமுகை அவிழ்ந்த நறுமலப் புறவின்**
> **வண்டு சூழ் மாலையும் வாரார்''** [49]

என்றும், பொன்மணியார்,

> **''வீழ்ந்த மாமழை தழீஇப் பிரிந்தோர்**
> **கையற வந்த பையுள் மாலை''** [50]

என்றும், காட்சிப்படுத்தியுள்ளனர். இவ்வாறு முல்லை நில மகளிர் ஆடவரின் பிரிவால் வருத்தமுறுவதும், பிரிந்து சென்றவர் மீண்டு வருதலே அவர்களின் துயரத்தைப் போக்கும் மருந்தாக அமைவதையும் முல்லைத் திணைப்பாடல்கள் காட்டுகின்றன. இவ்வாறு பெண்பாற் புலவர்களின் பாக்கள் வழி முல்லைநில மக்கள் சமுதாயம் குறித்த செய்திகள் காணலாகின்றன. மேலும், ''தமிழ் மக்களுடைய நாகரிக வளர்ச்சியில் இம்முல்லை நிலமும் அந்நில வாழ்க்கையும் ஒரு சிறந்த நிலையை அடைந்துள்ளதோடு, மருதநில வாழ்க்கைக்கு அது, அடிப்படையாயு மமைந்துள்ளது.''[51] என்னும் கூற்று முல்லைநிலச் சமுதாயம் மக்களோடு மக்கள் இயைந்த வாழ்க்கையைக் கொண்டமைந்திருந்ததை உறுதிப்படுத்துகிறது எனலாம்.

### 3. மருத நிலச் சமுதாயம்

சங்க கால மக்களின் வாழ்வியல் முறை நிலத் தன்மைக்கேற்ப மாறுபட்டு அமைந்தது. வயலும் வயல்சார்ந்த பகுதிகளும் மருத நிலம் எனப்பட்டன.

> **''என்றும் வற்றாத நீரையுடைய ஆறு கால்வாய்களாகப் பிரிந்து பாயும் நிலத்தையுடையது இப்பகுதி. நில விளைபொருள்களைக் குன்றாது நல்கும். இங்கு வாழும் உழவர்கட்கு ஓய்வு நேரம் அதிகம் இருக்கும். ஓய்வு நேரத்தை அவர்கள் இன்பத்திலும் களியாட்டத்திலும் அழிப்பர்.''** [52]

என்பதும் அறியப்படுகிறது. இங்கு வாழ்ந்த மக்கள் உழவுத் தொழிலையே முதன்மையாகச் செய்து வந்தனர். மருத நிலத்து மக்கள் உழவர், உழத்தியர், கடையர், கடைச்சியர் என அழைக்கப்பட்டனர். இவர்கள் மற்ற நிலத்தவரைக்

காட்டிலும் செல்வ நிலையில் மேம்பாடு கொண்டிருந்தனர். இந்நிலத்தில்தான் ஊர்ப்பெருக்கமும் நகர அமைப்பும் கால்கொள்ளத் தொடங்கின. இதற்கு அடிப்படைக் காரணம் மக்களின் தொழில் முறையும் இயற்கை அமைப்பும் எனலாம். மருத நிலத்தன்மைகள் குறித்து நா.சி. கந்தையா பிள்ளை,

> **''மனிதன் நிலத்தை உழுது தானியங்களை உண்டாக்கவும் ஆறுகளிலிருந்து வயல்களுக்கு நீர்ப்பாய்ச்சவும் பழகிக்கொண்டான். வெள்ளத்தை இவ்வகையாக ஆண்டமையின் இவனுக்கு வெள்ளாளன் என்று பெயர் உண்டாயிற்று. ஆறுகளுக்குத் தூரத்தே இருந்த மனிதன் மழை நீரைக் குளங்களில் தேக்கி வைத்து வாய்க்கால் வழியாக அதனைப் பயிர்களுக்குப் பாய்ச்சவும், கிணறுகள் நீருற்றுகளிலிருந்து நீரைப் பயன்படுத்தவும் கற்றுக் கொண்டான். மனிதனுடைய நாகரிகம் படிப்படியாக வளர்ச்சியுற்று மருதநிலத்தில் முடிவடைந்தது.''**[53]

என்று உரைப்பதால் மருதநிலத்தின் சூழலை அறிந்து கொள்ள முடிகின்றது. வேளாண்மை மேற்கொள்ளும் வேளாளர்கள் பற்றி தேவநேயப்பாவாணர் அவர்கள்,

> **''வேளாளர் உழுதுண்பாரும் உழுவித்துண்பாரும் என இருவகையர், முன்னவர் சிறு நிலக்கிழார்; பின்னவர் பெரு நிலக்கிழார். வேளாளரின் சிறந்த பண்பு விருந்தோம்பல். அதனாலேயே உழவன் வேளாளன் எனப் பெற்றான். உழவுத் தொழிலும் வேளாண்மை எனப்பெற்றது.''**[54]

என்று கூறும் கருத்தும் இங்கு வலுசேர்ப்பதாய் அமைகின்றன. இத்தகைய முறையில் காணப்பட்ட மருத நிலச்சமூதாயம் இந்திரனைத் தம் வழிபாட்டிற்குரிய தெய்வமாகக் கொண்டிருந்தது. இதனைத் தொல்காப்பியர்,

> **''வேந்தன் மேயதீம்புனல் உலகமும்''**[55]

என்று கூறுவதால் அறியப்படுகிறது. இச்சமுதாய மக்கள் அனைவரும் ஒன்று கூடி இந்திரனுக்கு வழிபாடு செய்தமையை ஓரம்போகியார் என்னும் புலவர்,

> **''இந்திர விழாவின் பூவின் அன்ன''**[56]

என்று சுட்டிச் செல்கின்றார். இதனால் இந்திரவழிபாடு மருதநிலச் சமுதாயத்தவர்க்கு மட்டுமே உரியது என்பது புலனாகிறது. மருதநிலத் தெய்வமான இந்திரனைப் பற்றி சு. வித்தியானந்தன்,

**"சங்க காலத்தில் இந்திர வழிபாடு மக்களிடையே அவ்வளவு செல்வாக்கு பெறவில்லை. சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய தொடர்நிலைச் செய்யுட்கள் எழுந்த காலத்திலேயே இந்திரவழிபாடு சிறப்புற்று விளங்கியது. அந்நூல்களில் அவனுடைய வழிபாட்டைப் பற்றியும் அவனுக்காக எழுந்த விழாக்களைப் பற்றியும் பரக்கக் காணலாம். ஆறாம் நூற்றாண்டுக்குப் பின்னர் இந்திர வழிபாடு அறவே மறைந்து விடுகின்றது."**[57]

என்று உரைப்பதன் மூலம் இந்திர வழிபாட்டின் உண்மை நிலை புலனாகிறது. இந்திர வழிபாடு காலச் சூழ்நிலையால் மக்களால் இன்று புறக்கணிக்கப்பட்ட நிலையை அறியமுடிகிறது.

**மருத நில விழா**

பொழுது போக்கிற்காகவும் உள்ளக் களிப்பிற்காகவும் மருத நில மக்கள் சில விழாக்களை எடுத்துள்ளனர். இவ்விழாவில் ஆடவரும் பெண்டிரும் கலந்துகொண்டு தமது காதலுறவை வலுப்படுத்தினர். இவ்விழாக்களில், பரத்தையர் ஆடவரைக் கவரும்படியாகத் தழையுடை உடுத்தியிருந்தனர். கூத்தர் போன்றோர் விழாவைச் சிறப்படையச் செய்தனர். இத்தகைய நிகழ்வை அஞ்சில் அஞ்சியார் என்னும் புலவர்,

**"ஐதகல் அல்குல் அணிபெறத் தைஇ**
**விழவிற் செலீஇயர் வேண்டும்"**[58]

என்றும்,

**"ஆடியல் விழவி னழுங்கன் மூதூர்"**[59]

என்றும் கூறிச் சிறப்பித்துள்ளார்.

**துணங்கைக் கூத்து**

மகளிரும் ஆடவரும் ஒருவரை ஒருவர் தழுவி ஆடும் ஒருவகை ஆடல் துணங்கை எனப்படுகிறது. இதில் ஆடவர்கள் தமக்கு விருப்பமான மகளிரையும், மகளிர் தமக்கு விருப்பமான ஆடவரையும் தழுவி ஆடினர் என அறியப்படுகின்றது. இக்கூத்தின் இலக்கணம் குறித்து உ.வே.சா., துணங்கை என்பது ஒருவகைக் கூத்து, இதனைச் சிங்கிக் கூத்து என்றும் கூறுவர்.

**"பழுப்புடை யிருக்கை முடக்கி யடிக்கத்**
**துடங்கிய நடையது துணங்கை யாகும்"**[60]

என்பது இதன் இலக்கணம் எனக் கூறுகின்றார். இத்தகைய கூத்துப் பற்றி ஆதிமந்தியார்,

**''மகளிர் தழீஇய துணங்கை''[61]**

என்று கூறுகின்றார். துணங்கைக் கூத்தானது பரத்தையர் வாழும் சேரிப்புறங்களிலும் நடைபெற்றுள்ளது. இங்கு ஆடவர்கள் தமக்கு விருப்பமான பரத்தையரைத் தழுவி ஆடியுள்ளனர். இக்கூத்தானது ஒரு குறிப்பிட்ட பருவத்தில் நடைபெற்றுள்ளது. இத்தகைய கூத்தில் செல்வவளம்மிக்க மருதநில ஆடவர்கள் கலந்துகொண்டு சிறப்புச் செய்தனர். இத்தகைய கூத்தினை ஔவையார்,

**''வணங்கிறைப் பணைத்தோ ளெல்வளை மகளிர்**
**துணங்கை நாளும் வந்தன''[62]**

என்று குறிப்பிடுவதால் துணங்கைக் கூத்து குறிப்பிட்டதொரு காலத்தில் நடைபெற்றது என்பதை அறியலாம். ''இந்திர விழா எடுக்கும் நாட்களில் ஆடவரும் பெண்டீரும் சேர்ந்து துணங்கை ஆடியமை அறியப்படுகிறது. இக்கூத்தானது பண்டைய சேரிப்புறங்களில் பொழுதுபோக்குக் கருதி வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டுள்ளமை அறிய முடிகிறது''[63] என்பதாலும் பழந்தமிழகத்தில் நடைபெற்று வந்த துணங்கைக் கூத்தின் நிலை குறித்து அறியலாகிறது.

**இயற்கை வழிபாடு**

பழந்தமிழரிடையே இயற்கை வழிபாடுகள் நிறைந்திருந்தன, சூரியன், சந்திரன், முதுமரம், நீர்த்துறை, மலை உச்சி போன்றவற்றைப் பழந்தமிழர் வழிபடு தெய்வங்களாகக் கொண்டிருந்ததை சங்கப் பாக்கள் எடுத்துரைக்கின்றன. பிறை நிலவு உதித்தவுடன் அதைத் தெய்வத்தன்மை உடையது எனக் கருதி மக்கள் தொழுதனர் என்பதை நெடும்பல்லியத்தனார் என்றும் புலவர்,

**''தொழுது காண் பிறையிற் தோன்று''[64]**

என்று கூறுகின்றார். பிறை தொழும் வழக்கம் பழந்தமிழரிடையே இருந்து வந்தமை குறித்துக் கடம்பனூர்ச் சாண்டில்யனார் என்றும் புலவரும் தமது பாடல்வழி உறுதி செய்கின்றார்.''[65]

**மருதநிலக் காட்சிகள்**

நிலவளமும் நீர்வளமும் நிரம்பப் பெற்றது மருதம். ஆறுகளும் குளங்களும் எப்போதும் வற்றாத நீர்நிலைகளைக் கொண்டிருந்தன. அயிரை மீன்கள் மேயும் பொய்கையில் ஆம்பல் மலர்ந்திருந்தன. ஆம்பல் மலரைப் பறிப்போர், அதன் குழல் போன்ற தண்டினைக் கொண்டு தாகம் தீர நீர் உறிஞ்சிக் குடித்தனர். இதனை நெடும்பல்லியத்தனார் என்னும் புலவர்,

**"அயிரை பரந்த வந்தண் பழனத்**
**தேந்தெழின் மலரத் தூம்புடைத் திரள்கால்**
**ஆம்பல் குறுநர் நீர் வேட்டாங்கு"**[66]

என்று காட்சிப்படுத்துகின்றார். புதுப்புனல் வருகையில் மருதநிலத்துக் குளம் நிரம்பி வழிந்தது. புதுப்புனலில் மீன் பிடிப்பதற்காக விரித்த வலையில் நீர் விலங்கு மாட்டிக் கொண்டது. இதனை பூங்கணுத்திரையார் என்றும் புலவர்,

**"கடும்புன லடைகரை நெடுங்கயத்திட்ட**
**மீன்வலை மாப்பட் டாஅங்கு"**[67]

என்று சிறப்பிக்கின்றார். மேலும், மருதநில இல்லத்தில் வளர்க்கப்பட்ட கிளி ஒன்று காட்டுப்பூனையின் கூட்டம் வருவதைப் பார்த்துக் கத்தியது. அவ்வேளை வேலியோரம் இரை மேய்ந்துக்கொண்டிருந்த பெட்டைக்கோழி காட்டுப்பூனைக்கு அஞ்சி தன் குஞ்சுகளைக் கூவி அழைத்தது என்பதை ஒக்கூர் மாசாத்தியார் என்னும் புலவர்,

**"மனையுறை கோழிக் குறுங்காற் பேடை**
**வேலிவெருகின் மாலையுற்றெனப்**
**புகுமிட னறியாது தொகுப்புடன் குழீஇய**
**பைதற் பிள்ளைக் கிளிபயிர்ந் தாஅங்கு"**[68]

என்று கூறிக் காட்சிப்படுத்துகின்றார். இவ்வாறு மருதநிலச் சமுதாயத்தில் இயற்கை நிகழ்வுகள் சில நடைபெற்றமை குறித்து பெண்பாற் புலவர்களின் பாடல்கள் வழி அறியலாகின்றது.

**4. நெய்தல் நிலச்சமுதாயம்**

நெய்தல் நிலம் கடற்பகுதியைச் சார்ந்தது. இந்நிலத்திற்குரிய பொருள் இரங்கல் தன்மை கொண்டது. நெய்தல் நிலமக்கள் கடற்கறை சார்ந்த பகுதிகளில்

வாழ்ந்தமையால் மீன்பிடித்தல், உப்புவிளைவித்தல், முத்தெடுத்தல் போன்ற தொழில்களைச் செய்து வந்தனர். இந்நிலப் பகுதியிலேயே பண்டமாற்று முறையும் வணிகமும் சிறப்புற்று விளங்கின. இம்மக்கள் பரதவர், சேர்ப்பன், துறைவன், புலம்பன், செம்படவன், திமிலர், நுழையர், நுழைத்தியர், பரத்தியர் போன்ற பெயர்களால் அழைக்கப்பட்டனர். இன்றைய சமுதாயத்தில் இந்நிலப்பகுதியினர் மீனவர் என்னும் பொதுப் பெயரிலேயே அழைக்கப்படுகின்றனர். நெய்தல் நிலமக்கள் வருணனை தெய்வமாகக் கொண்டு வழிப்பட்டனர்.

**தெய்வ வழிபாடு**

மனித இனம் முதலில் இயற்கையின் அடிப்படையிலான வழிபாட்டு முறையையே மேற்கொண்டது. இதன் காரணமாக உருவானதே தெய்வ வழிபாடாகும். பரந்த நிலப்பரப்பில் வாழும் மக்கள் தமக்கென சில வழிபாட்டு முறைகளைப் பின்பற்றி வந்தனர். இவர்கள் இயற்கை சார்ந்த பொருட்களையும் இறைவனையும் பல வடிவங்களில் பல உருவங்களில் வழிபடத் தொடங்கினர். இந்தப் பழக்கத்தின் துணைகொண்டே நெய்தல் நிலமக்கள் 'வருணன்' என்னும் தெய்வத்தை வழிபட்டனர். இதனைத் தொல்காப்பியர்,

> **"வருணன் மேய பெருமணல் உலகமும்"**[69]

என்று கூறிச் செல்கின்றார். கடற்பகுதியைச் சார்ந்த மக்கள் வருணனை வழிபட்ட முறையும் வேறுபட்டுக் காணப்படுகின்றது. மேலும், வருணன் பற்றிய குறிப்பினைத் தொல்காப்பியரைத் தவிர அவருக்குப்பின் வந்த சங்கப் புலவர்கள் வேறுயாரும் குறிப்பிட்டிருக்கவில்லை. இதனை சு. வித்தியானந்தன்,

> **"தொல்காப்பியத்தின்படி வருணன் கடல் சார்ந்த நிலப்பகுதியின் கடவுளாவான். சங்க நூல்களில் அவனைப் பற்றிய செய்திகளில்லை."**[70]

என்பதும் இக்கருத்தை உறுதி செய்கிறது. தொல்காப்பியர் காலத்தில் நெய்தல் நிலச் சமுதாயத்தனரிடம் வழக்கில் இருந்த 'வருணன்' வழிபாடு நாளடைவில் அருகிவிட்டமை தெளிவுப்படுகின்றது. சங்கப்பாடல்களில் வருணன் பற்றிய குறிப்புகள் காணப்படாமையால் சங்ககால நெய்தல் நிலவாழ் சமுதாயத்தினரிடம் வருணன் வழிபாடு வழக்கிழந்துள்ளமையை உணரலாம். இதனால் வருண வழிபாடு சங்க காலத்திற்கு முந்தையதாகவும் மிகவும் பழமை கொண்டதாகவும்

கருதப்படுகின்றது. நெய்தல் நிலச்சமுதாயத்தினரின் வழிபாட்டு முறை பற்றி நா.சி. கந்தையாபிள்ளை,

> **"திரண்டு நெடிய துண்டிற் கோல்கள் சாத்தியிருக்கும் குறுகிய இறப்பையுடைய கடற்கறைக் குடியிருப்பின் நடுவில் நிலவு சேர்ந்த இருளைப் போல வலை கிடந்து உணரும் மணலுடைய மனையின் முற்றத்தில் சினையுடைய சுறாவின் கொம்பை நடுவர். நட்டு அதனிடத்து ஏறிய வலிய தெய்வங்காரணமாக விழுதுடைய தாழையின் அடியிடத்தே நின்ற வெண்டாளியின் பூவை அணிவர்; தாழையின் மலரைச் சூடுவர். பனையின் கள்ளை உண்டு ஆடுவர்."[71]**

என்று நெய்தல் நிலச் சமுதாய மக்களின் வழிபாட்டு முறையை உரைக்கின்றார்.

**கடல் விழா**

பரதவ மக்கள் கடல்விழா கொண்டாடுதலை வழக்கமாகக் கொண்டிருந்தனர். பௌர்ணமி இரவுகளில் பரதவர்கள் அனைவரும் ஒன்று கூடி மணற்பரப்பில் விழா எடுத்தனர். அப்போது பரதவ தெருக்களில் மக்களின் ஆரவாரமான ஒலி எங்கும் கேட்பதாய் இருந்தது. இத்தகைய பரதவ மக்களின் விழா பற்றி வெள்ளி வீதியார்,

> **"ஊரே யொலி வரும்சுமையொடு மலிபுதொகு பிண்டிக்**
> **கலிகெழு மறுகின் விழவயரும்மே" [72]**

என்ற கூறுகின்றார். நெய்தல் நிலமக்கள் பௌர்ணமி இரவுகளில் விழா எடுத்தமைக்க இரு காரணங்கள் முன் வைக்கப்படுகின்றன. ஒன்று பௌர்ணமி நிலவின் பிரகாசமான ஒளியும், மற்றொன்று அந்நாளில் கடல் அலைகள் இயல்பைவிட அதிகமாகப் பொங்கி எழும் என்பதும். பௌர்ணமி இரவுகளில் பெருத்த சப்தத்துடன் கடல் அலைகள் எழுந்து கரையைத் தாண்டிச் சென்றன என்னும் செய்தியை வெள்ளிவீதியார்,

> **"திங்களுஞ் திகழ்வா னேர் தரு மிளநீர்ப்**
> **பொங்குதிரைப் புணரியும் பாடோ வாதே**
> **யொலி சிறந் தோதமும் பெயரும்"[73]**

என்று கூறுவதால் அறியலாம். பௌர்ணமி நாட்களில் கடலில் வழக்கத்திற்கு மாறான பேரலைகள் வீசுவதாக இன்றும் பேசப்படுகிறது. இதனை தி.முத்துக்கண்ணப்பன்,

> **“பரதவர்கள் முழுமதி நாட்களில் மீன் வேட்டைக்குச் செல்வதில்லை. முழுமதி நாளன்று, கடல்பொங்கிக் கொந்தளித்துப் பேரலை வீசிப் பேய்க்கோலம் கொண்டு ஆடும். வெள்ளப் பெருக்கெடுத்து அலைகள் கரையிலும் நெடுந்தொலைவு மோதியடித்து அலைக்கும்.”[74]**

என்று கடல் விழா நிகழ்வு குறித்து மொழிகின்றார்.

**கடல் தெய்வம்**

கடல்வாழ் சூழலை மேற்கொண்ட நெய்தல் நில மக்கள் தெய்வ வழிபாடு குறித்து முன்னர் சுட்டப்பட்டது. இவர்கள் ஆழ்ந்த தெய்வ நம்பிக்கை உடையவர்களாகவும் இருந்தனர். தங்களுக்கு ஏற்பட்ட துன்பத்தைக கடல் தெய்வம் போக்கும் என நம்பினர். ஆறுகள் கூடுகின்ற துறையில் வெளிப்படும் தெய்வத்தின் மீது சூளுரைத்த செய்தியை போந்தைப்பசலையார்,

> **“கொடுஞ்சுழிப் புகா அர்த் தெய்வ நோக்கி**
> **கடுஞ்சூ டருகுவ னினக்கே”[75]**

என்று கூறுவதால் அறியலாம். நெய்தல்நில மக்கள் வருணனையே அவ்வாறு வழிபட்டிருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது.

**நெய்தல் நிலக்காட்சிகள்**

செங்கதிர்ச் சூரியன் மேற்கே மறையத் தொடங்கியதால் மரத்தின் நிழல் கிழக்கே சாய்ந்தது. கடற்கரையில் மலர்ந்திருந்த நெய்தல் மலர்கள் குவியத் தொடங்கின. பறவைகள் கூட்டம் கூட்டமாக வானில் பறந்து சென்றன. மாலை வேளையில் முல்லை அரும்புகளும் மலர்ந்து நின்றன. கடற்கழிகளில் பல வகையான மலர்கள் மலர்ந்திருந்த போதும் தாழையின் அரும்புகள் மலர்ந்து எங்கும் மணம் பரப்பி நின்றன. பரந்த கடல் ஆரவாரம் மிக்க முழக்கத்தைக் கொண்டிருந்தது. கழியின் நீர்ப்பெருக்கம் சில நேரம் வீட்டின் எல்லை வரை நின்றது. மீனை உண்ட பறவைக் கூட்டம் தத்தமது கூடுகளுக்குச் சென்று அடங்கியது. இத்தகைய கடற்காட்சிகளைப் பெண்பாற் புலவர்கள் பலவாறாகக் காட்சிப்படுத்தியுள்ளனர். ஔவையார்,

> **“நெய்தல் கூம்ப நிழல்குணக் கொழுகக்**
> **கல்சேர் மண்டிலஞ் சிவந்து நிலந்தணிய”[76]**

என்றும், மதுரை மேலைக் கடயத்தார் நல்வெள்ளையார்,

**''நிறைபறைக் குருகினம் விசும்புகந் தொழுக**
**எல்லை பைபயக் கழிப்பி முல்லை**
**யரும்புவா யவிழும் பெரும்புன்மாலை''**[77]

என்றும், வெள்ளிவீதியார்,

**''பல்பூங் கானன் முன்னிலைத் தாழை**
**சோறு சொரி குடைவயிற் கூம்புமுகை யவிழ**
**வளிபரந் தூட்டும் விளிவி னாற்றமொடு''**[78]

என்றும், குன்றியனார் என்றும் புலவர்,

**''பெருங்கடன் முழங்கக் கானன்மலர**
**விருங்கழி யோத மில்லிறந்து மலிர''**[79]

என்றும்,

**''நீர் நிறைப் பெருங்கடல் பாடெழுந்தொலிப்ப''**[80]

என்றும், வெண்மணிப்பூதியார் என்னும் புலவர்,

**.......................................... முந்நீர்ப்**
**புணரி இறைக்கும் புள்ளிமிழ் கானல்''**[81]

என்றும் பல்வேறு நிலைகளில் காட்சிப்படுத்தியுள்ளனர்.

**கடல் வாணிபம்**

பழங்காலத்தில் கடல் வாணிபம் சிறப்புற நடைபெற்றுள்ளது. கடற்கரைப் பகுதிகளில் புகழ்பெற்ற துறைமுகங்கள் இருந்தமைக்கான பதிவுகள் காணப்படுகின்றன. ஏற்றுமதி இறக்குமதி ஆகியவை இத்துறை முகங்களில் நாளும் நடைபெற்றன. இது சமுதாய வளர்ச்சிக்குப் பெரிதும் துணைப் புரிந்தது. ஒரு நாட்டிற்கு வாணிபம் எவ்வாறு இன்றியமையாதது என்பதை சி. இலக்குவனார்,

> **''வாணிபம் என்னும் ஒன்று இல்லையேல் மக்கள் வாழ்வு துன்பம் நிறைந்ததாகி விடும். கிடைத்துள்ள மிகு பொருளால் அதனை முழுதும் பயன்படுத்தும் வகையறியாது அல்லற்படுவதோடு இன்றியமையாது வேண்டப்படும் பொருள் கிடைக்கப் பெறாது வருந்திமடிவர். ஆதலின் வாணிகமே மக்கள் வாழ்வின் உயிர்நிலை என்று கூடக் கூறலாம். இவ்வாணிகத்தில் சிறந்துள்ள மக்களே எல்லா வகையிலும் சிறந்த மக்களாவர். வாணிகமே உலகத்தை யாள்கின்றது.**[82]

என்று உரைப்பதன் மூலம் வாணிகம் சமுதாய மேம்பாட்டில் பெறும் இடத்தை அறியலாம். கடல் வாணிபத்திற்கு அக்காலத்தில் நாவாய்கள் அதிகம் பயன்

படுத்தப்பட்டுள்ளன. பண்டங்களை சேதமின்றி எடுத்துச் செல்ல நாவாய்கள் பெரிதும் துணைபுரிந்தன. வேற்று நாடுகளில் இருந்து பல்வேறு பொருட்களை ஏற்றி வந்த நாவாய்கள் கடற்கரைத் துறைமுகங்களில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. அதனை ஔவையார்,

**“வேறுபன் னாட்டிற் காறர வந்த**
**பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறை”[83]**

என்று குறிப்பிடுவதனால் அறியமுடியும். மேலும், நாவாய்கள் நிற்கும் துறைமுகங்களில் போதைத் தரும் கள்ளினைச் சாடிகளில் வைத்து விற்றுள்ளனர். இதனை ஔவையார்,

**“பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறைக்**
**கலிமடைக் கள்ளின் சாடி.....”[84]**

என்று குறிப்பிடுகின்றார். இவ்வாறு வாணிபத்தில் ஈடுபட்டு வந்த நாவாய்களில் அடையாளக்கொடிகள் கட்டப்பட்டிருந்தன. அவை துறைமுகத்தில் நின்றிருந்த கப்பல்களில் அசைந்தவாறு இருந்தன என்பதை,

**“நெடுங்கொடி நுடங்கு நாவாய் தோன்றுது**
**காணா மொவென...”[85]**

என்று போந்தைப் பசலையார் என்னும் புலவர் கூறுவதால் அறியலாம். கடல் வாணிபம் குறித்து மயிலை. சீனி வேங்கட சாமி,

**“கடற்கரையோரங்களில் சில இடங்களிலே துறைமுகங்கள் இருந்தன. துறைமுகங்களிலேயே வாணிகக் கப்பல்கள் வந்து இறக்குமதி ஏற்றுமதி செய்தபடியால் துறைமுகப்பட்டினங்கள் வாணிகமும் செல்வமும் பெருகின. ஆகவே துறைமுகப் பட்டினங்கள் நாகரிகமும் செல்வமும் பெற்று விளங்கின.”[86]**

இவ்வாறு பழங்காலத்தில் நெய்தல் நிலச்சமுதாய மக்களிடம் கடல் வாணிபம் சிறப்புற்றுத் திகழ்ந்துள்ளமை அறியப்படுகிறது.

**உப்பு வாணிகம்**

பழங்காலத்தில் உப்பு வாணிகம் சிறப்புற நடைபெற்றுள்ளது. நெய்தல் நிலத்தில் விளைந்த உப்பினை மற்ற நிலச் சமுதாயமக்களும் பெற்றுப்

பயனடைந்தனர். உப்புவணிகர்கள் 'உமணர்' என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் எருதுகள் பூட்டப்பட்ட வண்டிகளில் உப்பினை ஏற்றிச் சென்றனர். இவ்வாறு உப்பினை வண்டிகளில் ஏற்றிச் செல்லும் உமணர்கள் எருதுகளை அதட்டும் போராலியைக் கேட்ட பிணைமான்கள் அஞ்சி ஓடின என்று முள்ளியூர் பூதியார் என்னும் புலவர்,

**"பகடுதுறை யேற்றத் துமன்விளி வெரீஇ**
**உழைமா னம்பிணை யினனிந்தோட"**[87]

எனும் அடிகளில் கூறுகின்றார். உமணர்கள் நெய்தல் நிலத்தில் பெற்ற உப்பினை மற்ற நிலங்களுக்கு கொண்டு சென்று விற்றனர். இவ்வாறு உப்பினை ஏற்றிச் சென்ற வண்டிகள் மரங்கள் வரிசையில் நிற்பது போன்று காட்சியளித்தன என்பதை ஔவையார்,

**"உமணெருத் தொழுகைக் கோடு நிரைத்தன்ன"** [88]

என்று கூறுகின்றார். நெய்தல் நிலமக்கள் உப்பினைக் கொடுத்து வேறு பொருட்களைப் பெற்றுக் கொண்டனர். இவ்வாறு சங்க காலத்தில் உப்பு வாணிகம் நடைபெற்றது என்பதைக் காணலாகிறது.

**கடல் விளையாட்டு**

இளம் மகளிர் கடற் சோலைகளுக்குச் சென்று அங்குள்ள மணல் பரப்பில் சிறு வீடுகட்டியும், சிறுசோறு சமைத்தும் விளையாடினர். பின்னர், தோழியர் கூட்டத்தோடு சென்று கடலில் நீராடி மகிழ்ந்தனர். இவ்வாறு நீண்ட நேரம் விளையாடிய களைப்பால் மீண்டும் மலர்ச் சோலைக்கு வந்து இளைப்பாறினர். இக்காட்சியைப் போந்தைப் பசலையார்,

**"தொடலை ஆயமொடு கடலுடனாடியுஞ்**
**சிற்றி லிழைத்துஞ் சிறுசோறு குவைஇயும்**
**வருந்திய வருத்தந்தீர யாஞ் சிறி**
**திருந்தனமாக..."** [89]

என்று தமது பாடலடிகள் வாயிலாகச் சிறப்பித்துள்ளார்.

**கடல் நிகழ்வுகள்**

கடல் தனக்குள் பல அரிய பொருட்களைக் கொண்டிலங்குகிறது. பல்வேறு அதிசய உயிரினங்களும் அங்கு வாழ்கின்றன. கடல் ஆமையின் வாழ்வு குறித்து குமுழிஞாழலார் நப்பசலையார் என்னும் புலவர் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

கருப்பம் அடைந்த பெண் ஆமை கடற்கரையின் மேட்டிற்கு வந்து முட்டைகளை ஈன்றது. அம்முட்டைகள் புலால் நாற்றமுடையதாய் இருந்தன. மேலும், யானைக் கொம்பினால் செய்த வட்டு போன்ற வடிவுடையதாகவும் காணப்பட்டன. பெண் ஆமை ஈன்ற முட்டைகளை அதிலிருந்து குஞ்சுகள் வெளிப்படும் வரை ஆண் ஆமை அடைக்காத்தது என்ற செய்தியை,

> **''நிறைச்சூழ் யாமை மறைத்தீன்று புதைத்த**
> **கோட்டுவட் குருவின் புலவுநாறு முட்டைப்**
> **பார்ப்பிட னாகு மளவைப் பகுவாய்க்**
> **கணவ னோம்புங் கானல அம்''**[90]

என பாடியுள்ளார். பெண் ஆமை இட்ட முட்டைகளை ஆண் ஆமை அடைக்காத்த நிகழ்வை,

> **''தாயின் முட்டை போல உட்கிடந்து**
> **- - - - - - - - - - - - - - - - - - - - - -**
> **யாமை பார்ப்பி னன்ன''**[91]

என்றும், ஆண் ஆமையால் அடைக்காத்துப் பொறிக்கப்பட்டக் குஞ்சுகள் தாய்முகம் நோக்கி வளர்ந்தன என்பதை,

> **''தீம்பெரும் பொய்கை யாமையிளம் பார்ப்புத்**
> **தாய்முக நோக்கி வளர்ந்திசினா அங்கு''**[92]

என்று வரும் ஒரம்போகியர் போன்ற பிற புலவர்களின் பாடல் அடிகளும் சுட்டுகின்றன.

**5. பாலைநிலச் சமுதாயம்**

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நால்வகை நிலமும் நிலைபேறு உடையன. இவ்வுலகமானது இந்த நானிலத்துள் அடங்கும். இந்நானிலம்

நீங்கலாகப் பாலை என்னும் நிலத்தன்மையும் உண்டு. பாலை தனித்த நிலமன்று. குறிஞ்சி மற்றும் முல்லை நிலங்கள் மழைவளம் குன்றிய நிலையில் பாலையாக மாறும். இதனை,

**''முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து**
**நல்லியல்பு அழிந்து நடுங்குதுயர் உறுத்துப்**
**பாலை என்பதோர் படிவம் கொள்ளும்''[93]**

என்று சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் கூறுவதால் அறியலாம். மேலும் பாலைநிலம் குறித்துப் புலவர் செந்துறைமுத்து,

**''எல்லாப் பருவ காலங்களிலும் பாலையாகவே விளங்கும் நிலப்பகுதி தமிழகத்தில் இல்லை. ஆகையால் பாலை நிலம் எனத் தனியே ஒரு பிரிவினைப் பண்டைத்தமிழ்ச் சமூதாயம் வகுத்துக் கொள்ளவில்லை.''[94]**

என்று கூறுவதால் பாலை நிலச் சமூதாயம் குறித்து மேலும் தெளிவுறுகிறது. இப்பாலை நிலம் துயர நிலையையே உணர்ந்துவதாய் சங்கப் புலவர்கள் பலரும் பாடல் புனைந்துள்ளனர். பாலை நிலம் பற்றி அ.கி. பரந்தாமனார்,

**''பாலைக்கு நிலம் இல்லை என்பர். ஆயின் நிலக்கலப்பே அதற்கு நிலமாகும். நால்நிலங்களும் தம் இயற்கை திரிந்து பாலையாகும் என்றலுமுண்டு.''[95]**

எனக் குறிப்பிடுகின்றார். குறிஞ்சி, முல்லை நிலங்களோடு மருதம், நெய்தல் ஆகிய நிலமும் வளம் குன்றிய நிலையில் பாலை நிலமாகவே கருதப்படும் என்ற கருத்து இதனால் பெறப்படுகிறது. பாலைத்திணையின் உரிப்பொருள் பிரிதல் ஆகும். இதனை முருக இலக்குவனார்,

**பாலை நிகழ்ச்சியின்றேல் கூடுதலும், இருத்தலும், ஊடுதலும், இரங்கலும் நிகழுமாறில்லை யன்றோ! எனவே பாலைத் திணையை அடிப்படையாகக் கொண்டே ஏனைத்திணைகள் முகிழ்ந்தனவாதல் அறிகின்றோம்.''[96]**

என்று பாலைத்திணையின் சிறப்புக் குறித்துக் கூறுகின்றார். இவ்வாறு பாலைநிலம் குறித்து சங்கப்புலவர்கள் பிரிவு நிமித்தப் பொருளிலும் மழைவளம் இன்றிக் காட்சியளிக்கும் துயர நிலையையும் வழிச்செல்வோர் படும் இன்னல்களையும் சித்திரிக்கும் விதமாகவே பாடல் புனைந்துள்ளனர். இங்கு மக்களும் ஏனைய உயிரினங்களும் துயரம் கொள்ளும்படியான சூழல் அமைந்தது. நிலவளம்

குன்றியதால் இங்கு வாழ்ந்த மக்கள் வழிப்பறித் தொழிலில் ஈடுபட்டனர். ''அவ்வாறு நேரினும், பண்பாட்டைக் கைவிடவில்லை. தெய்வ வணக்கம், எளியார் பொருளைக் கவராமை, புலவரையும் முனைவரையும் விருந்தோம்பல், அரசப்பற்று, ஈகையாளரைக் காத்தல் முதலிய நற்கொள்கைகளைக் கடைப்பிடித்தனர்.''[97] இவ்வாறு பாலைநிலச் சமுதாய நிகழ்வுகள் புலவர்களால் காட்சிப்படுத்தப்படுகின்றன. மேலும், இந்நிலம் மழைவளம் ஓங்கிய போது வளம் கொண்ட பகுதியாக மாறும்தன்மையுடையது.

**சமுதாயச் சூழல்**

பாலை நிலத்தில் வாழ்ந்த மக்கள் எயினர், வேட்டுவர், எயிற்றியர், மறவர், மறத்தியர் என்னும் பெயரில் அழைக்கப்பட்டனர். ''எயினர் என்ற சொல்லின் வரலாறு தெரியவில்லை. சங்க நூல் பாலை நிலமக்களைக் குறிப்பதற்கே இச்சொல் வழங்கும்''[98] என்று கூறப்படுகிறது. இங்கு வாழ்ந்த மக்கள் வறுமை நிலையிலேயே தமது வாழ்வை மேற்கொள்ள வேண்டியிருந்தது. இவர்கள் பாலை நிலத்தின் வழியே பொருள் எடுத்துச் செல்வோர் வருவோரைத் துன்புறுத்தி வழிப்பறி செய்தனர். அவ்வாறு கிடைத்த பொருட்களைக் கொண்டு தம் தேவைகளை நிறைவு செய்தனர். இவர்களின் வாழ்வியல் முறையை நா.சி. கந்தையாபிள்ளை,

> **''எயினர் அரணிடத்தே உள்ள அகன்ற வீடுகளில் குத்திய கூறிய வேல்களும் பரிசைகளும் அம்புக்கட்டுகளும் விற்களும் நிரையாகச் சார்த்திக் கிடக்கும். உயர்ந்த மதில்கள் ஊகம் புல்லால் வேயப்பட்டிருக்கும். தலை வாயில்களில் தேன் கூட்டைப் போன்ற அம்புக்கட்டுகளும் துடியும் தூங்கும். வீட்டு வாயிலில் சங்கிலியால் கட்டப்பெற்ற நாய்கள் நிற்கும். இவ்வகைக் குடியிருப்பு முள்வேலியினையும் அதனைச் சூழ்ந்த காவற் காட்டையும் உடையதாக இருக்கும். வாயிலிடத்தே நீண்ட முனையுடைய கழு மரங்கள் நிரையாக நாட்டப்பெற்றிருக்கும். அங்குறைவோர் நெற் சோற்றையும் நாய் வேட்டையாடிக் கொணர்ந்த சங்குமணி போலும் முட்டையுடைய உடும்பின் பொறியலையும் உணவாகக் கொள்வர்''[99]**

என்று பாலை நில சமுதாய மக்களின் வாழ்வியல் சூழலைக் காட்சிப்படுத்துகின்றார். மேலும் ''பாலைநிலம் மக்கள் குடியேறி வாழ்வதற்கேற்ற நிலமாக இருக்கவில்லை. அவர்கள் முல்லை நில ஒதுக்குகளிலும் குறிஞ்சி நில ஒதுக்குகளிலும் மனைவி மக்களோடு வாழ்ந்தனர்.''[100] என்றும் கூறுவர்.

**பாலை நிலக் காட்சிகள்**

சுரமும் சுரம் சார்ந்த பகுதிகளும் பாலை எனப்படும். இங்கு வளமிழந்த வறண்ட சூழல் தென்படும். சூரியனும் நெருப்புப் போன்ற கதிர்களை வீசிச் சென்றது. மழை இன்மையால் குளங்கள் நீரற்றுக் கிடந்தன. செடிகொடிகளும் காய்ந்து உருகின. இலவமரங்கள் இலைகளை உதிர்த்தவாறு நின்றிருந்தன. சாய்ந்த முள்ளிச் செடியின் காய்கள் சத்தத்துடன் வெடித்ததில் கூடியிருந்த புறாக்கள் பிரிந்தன. இத்தகைய அவல நிலைகளைக் கொண்டது பாலை நிலம் என்பதை ஔவையார்,

**''வானம் ஊர்ந்த வயங்கொளி மண்டிலம்**
**-------- -------- -------- -------**
**கயந்துக ளாகிய பயந்தபு கானம்''** [101]

என்றும், வெண்பூதியார் என்னும் புலவர்,

**''கவைமுட் கள்ளிக் காய்விடு கடுநொடி**
**துதைமென் றுவித் துணைப்புற விரிக்கும்''** [102]

என்றும் காட்சிப்படுத்துகின்றனர். பாலை நிலத்தில் நிலவிய மிகுதியான வெம்மையால் விலங்கினங்களும் துன்புற்றன. கயங்களில் நீரின்மையால் தாகத்தில் வருந்தின. யானைகள் பசியால் மரங்களை ஒடித்து உண்டன. சிறிதளவே இருந்த மரநிழலில் ஆண்மான் படுத்து உறங்கியது. குட்டிகளை ஈன்ற புலி பசியுடன் குகைக்குள்ளாகவே ஓய்ந்திருந்தது. ஆண்புலி பெண்புலியின் பசியினைப் போக்க மான் முதலிய விலங்குகளை எதிர்பார்த்திருந்தது. இத்தகைய பாலை நில நிகழ்வுகளை ஊண் பித்தை என்னும் புலவர்,

**''மரற்புகா வருந்திய மாவெருத் திரலை**
**- - - - - - - - - - - - - - - - - - - - - - - - -**
**உரற்கால் யானை யொடித்துண் டெஞ்சிய**
**யாஅ வரிநிழற் றுஞ்சும்''** [103]

என்றும், ஔவையார்,

**''உறுகல் விடரளைப் பிணவுப்பசி கூர்ந்தெனப்**
**பொறிகிள ருழுவைப் போழ்வா யேற்றை**
**யறுகோட் டுழைமா னாண்குர லோர்க்கும்''** [104]

என்றும் காட்சிப்படுத்துகின்றனர். இதனால், பாலை நிலச் சமுதாயத்தில் நிலவிய கடும் வறட்சியும், மக்களும் மற்றைய உயிரினங்களும் அடைந்த துயர நிலையும் அறியலாகின்றது.

**தெய்வ வழிபாடு**

பாலை நில மக்கள் கொற்றவையைத் தெய்வமாகக் கொண்டு வழிபட்டனர். பாலை நிலத்தின் வழிச் செல்வோர் துன்பங்கள் நேராதிருக்க இத்தெய்வத்தை வழிபட்டனர்.

> **''கொற்றவை முருகப் பெருமானின் தாய் என்றும், இவள் வழிபாடு வெறியாட்டுடன் நடைபெற்றது என்றும் கூறப்படுகிறது. கொற்றவைக்குப் பலி கொடுத்து வாழ்த்துதலைக் கொற்றவை நிலை எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது.''**[105]

பாலை நிலமக்கள் இசைக்கருவிகளை மீட்டி தெய்வத்தின் மீது பாடினர். இலைகள் உதிர்ந்து வலைபோல் காட்சியளித்த ஒரு மரத்தின் அடியில் வீற்றிருந்த தெய்வத்திற்கு நேர்த்திக்கடனைச் செலுத்தினர் என்பதை முடத்தாமகண்ணியார் என்னும் புலவர்,

> **''இலைஇல் மராஅத்த எவ்வம் தாங்கி**
> **வலை வலந்தன்ன மென்நிழல் மருங்கில்**
> **காடுஉறை கடவுட்கடன் கழிப்பிய பின்றை''**[106]

என்று கூறுவதால் அறியலாம். பாலை நிலமக்கள், மரத்தில் தெய்வம் உறைந்திருப்பதாக நம்பியதால் அத்தகைய மரத்திற்கு தமது வழிபாட்டைச் செலுத்தினர் என்பதும் காட்டு வழியில் செல்கின்றபோது கொடிய விலங்குகள் முதலியவற்றிடமிருந்து பாதுகாப்பு வேண்டியும் தெய்வ வழிபாடு செய்துள்ளனர் என்பதும் உணரலாகிறது.

**சமுதாயச் சிந்தனைகள்**

சங்ககாலச் சமுதாயத்தில் ஆடவர் பெண்டிர் ஆகிய இருவரும் சமுதாய மேம்பாட்டில் சமபங்கு வகித்தனர். ஆடவர் நாட்டுக் கடமையிலும் பெண்டிர் வீட்டுக் கடமையிலும் தம்மை முழுதும் ஈடுபடுத்திக் கொண்டனர். பொருள் தேடல், போர்புரிதல், நாடுகாத்தல் போன்றவற்றில் ஆடவரும், விருந்தோம்பல், குழந்தை வளர்ப்பு போன்றவற்றில் பெண்களும் சிறப்புற்று விளங்கினர்.

சமூகத்தில் இருபாலரும் சம உரிமை உடையவர்களாயினும் பெண்கள் சில செயல்பாடுகளை நிகழ்த்துவதிலிருந்தும், பங்கு பெறுவதிலிருந்தும் புறந்தள்ளப்பட்டனர். அதனடிப்படையில் சங்க கால மகளிர் வாழ்வியல் நிலை குறித்தும் நடுகல் வழிபாடு, பண்டமாற்று, வரலாற்று நிகழ்வுகள் போன்றவை குறித்தும் இப்பகுதி விளக்குகிறது.

**சங்க கால மகளிர் நிலை**

சங்க காலப் பெண்கள் சமூதாயம் ஆடவரின் துணையின்றி கணவன் மறைவிற்குப் பின் வாழத் துணிவின்றி இருந்தமை அறியப்படுகிறது. பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டுவின் வாழ்வே இதற்குச் சான்றாக அமைகிறது. பூதப்பாண்டியன் இறந்த நிலையில் பெருங்கோப்பெண்டு தானும் தீயில் பாய்ந்து உயிர்விடத் துணிகிறாள். நாட்டிலுள்ள சான்றோர் பலரும் அவளுக்கு அறிவுரை கூறியும் கேளாதவளாய் தன்முடிவில் உறுதியாக நின்றாள். மேலும், இது குறித்துத் தன் முடிவினை ஒரு பாடலாகவும் வடித்தாள். அறிவுடைய சான்றோர்களாகிய இவர்கள் தலைவனுடன் உடன் செல்க எனக் கூறாது, இருந்து வாழவேண்டும் எனக் கூறுகின்றனர். இது அவர்களின் தகுதிக்குக் குறைபாடாகவே உள்ளது. கணவன் மறைவிற்குப் பின் வாழும் கைம்பெண்களின் நிலை நினைத்து இரங்கத்தக்கது. கைம்பெண்கள் நெய்கலந்த உணவைத் தவிர்த்தும் நீர்ச் சோற்றை எள்துவையல் மற்றும் வேளைக்கீரையுடன் கலந்து உண்டும், பாயில்லாமல் படுத்துறங்கியும் நாளும் துயர் எய்துகின்றனர். அவ்வாறான நிலைக்குத் தான் ஆளாவதைவிட ஈமத்தீயில் மூழ்குவதே நன்று எனக் கூறுகின்றார். இதைப் பெருங்கோப் பெண்டு,

**“தடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்**
**வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட**
**வேளை வெந்தை வல்சி யாகப்**
**பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்**
**உயவற் பெண்டிரே மல்லே மாதோ”**[107]

என்று தனது பாடல் வழிக் கூறுகின்றார். சங்க காலச் சமூதாயத்தில் உடன்கட்டை ஏறுதல் என்பது கட்டாயமான ஒன்றாக இருந்திருக்கவில்லை. அவ்வாறு இருந்திருக்குமாயின் சான்றோர்கள் ஒருங்குக்கூடி பெருங்கோப்பெண்டுவின் உடன்கட்டை ஏறுதலைத் தடுக்க முற்பட்டிருக்க மாட்டார்கள்.

பெருங்கோப்பெண்டு நாட்டின் அரசியாக இருந்தும் துன்ப மிகுதியால் எடுத்த முடிவாகவே உள்ளது. கணவன் மீது கொண்ட அன்பை வெளிப்படுத்தியதைவிட கைமைநோன்பின் கொடுமையைத் தம் பாடலில் அதிகம் வெளிப்படுத்தியுள்ளார். அன்றைய சமூகத்தில் கைம்பெண்களுக்கு இருந்த சடங்கு முறைகளும் கட்டுப்பாடுகளும் உயிர்துறக்கும் அளவிற்கு வலியதாய் இருந்துள்ளன என்பதையே பெருங்கோப்பெண்டுவின் செயல் காட்டுகிறது. இத்தகைய சடங்கு முறைகள் குடிமக்களுக்கும் அரசர் குடும்பத்திற்கும் பொதுவான ஒன்றாகவே இருந்துள்ளது. இல்லறமகளிரின் கற்பொழுக்கமே இதற்கு அடிப்படைக் காரணம் எனவும் கூறப்படுகின்றது. பெண்டிரின் கற்பொழுக்கம் தலைக்கற்பு, இடைக்கற்பு, கடைகற்பு என மூன்று வகையில் அமைகின்றது. *''கணவன் இறந்தவுடன் அப்பொழுதே தன்னுயிரை விடுதல் தலைக்கற்பு என்றும் கணவன் இறந்தபின்னர் ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு போன்ற மகளிர் நெருப்பை வளர்த்து அதனுள் பாய்ந்து தன்னுயிரை விடுதல் இடைக்கற்பு என்றும் கணவன் இறந்த பின்னரும் சில காரணங்களுக்காக உயிருடன் இருந்து மறுமையில் அவனைக் கூடி வாழ கைமைநோன்பிருத்தல் என்பது கடைக்கற்பு என்றும் சான்றோர்களால் கூறப்படுகின்றது.''*[108] கற்புடை மகளிரே உடன்கட்டை ஏறுதல் போன்ற செயல்களில் ஈடுபட்டுள்ளனர் என்பது பெறப்படுகின்றது.

**கைம்பெண்கள்**

கணவனை இழந்த மகளிர் கைம்பெண்கள் என அழைக்கப்படுகின்றனர். இவர்கள் சமூதாய மக்களுடன் ஒன்றுபட்ட வாழ்வை மேற்கொள்ள இயலாதவர்களாக இருந்தனர். இதற்குக் காரணம் அக்காலச் சமூதாயச் சூழலே ஆகும். கணவன் இறந்த நிலையில், தலைமழிக்கப்பட்டு அணிகலன்கள் களையப்பட்டது. சுவையில்லாத 'அல்லி அரிசி' உணவே அளிக்கப்பட்டது. இத்தகைய சமூகச் சடங்குகளை அக்கால மகளிர் வெறுத்தே வந்தனர். வாழ்நாள் முழுதும் இத்தகைய கொடுமைகளை அனுபவிப்பதை வெறுத்து உடன்கட்டை ஏறவும் துணிந்தனர். கணவனை இழந்த நிலையில் வாழும் வாழ்க்கையை நினைக்கையில் வருத்தமே மேலிடுகிறது என்பதை ,

**''மண்ணுறு மழிந்தலைத் தெண்ணீர் வாரத்**
**தொன்றுதா முடுத்த வம்பகைத் தெரியற்**
**சிறுவெள்ளாம்ப லல்லி யுண்ணும்**
**கழிகல மகளிர் போல**
**வழிநினைந் திருத்த லதனினு மரிதே''**[109]

என்ற நப்பசலையாரின் பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன. தாயங்கண்ணியார் என்னும் புலவர்,

**'கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி**
**அல்லி யுணவின் மனைவி யோ டினியே''**[110]

என்று கைம்பெண்களின் வாழ்வியல் சூழலை வெளிக்காட்டுகின்றார். கைமை நோன்பு நோற்கும் பெண்கள் தாம் சமைத்த சுவையில்லாத உணவை மெழுகிய சிறு இடத்தில் தருப்பை என்னும் புல்லைப் பரப்பி அதன்மீது வைத்துப் படையல் செய்தனர். இவ்வாறு சடங்கு மேற்கொண்ட பின்னரே தாம் உண்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதை வெள்ளெருக்கிலையார் என்னும் புலவர்,

**''தன்னமர் காதலி புன்மேல் வைத்த**
**இச்சிறு பிண்டம்''**[111]

எனக் குறிப்பிடுகின்றார். இத்தகைய சடங்குகள் இல்லற மகளிர்க்கே அதிகம் வலியுறுத்தப்பட்டன. கைம்பெண்களுக்கு மறுமணம் அறவே வெறுக்கப்பட்டது. ''பெண் என்பவள் ஆடவனுக்காக உயிர் வாழ்பவள் என்ற கருத்து அன்றைய சமுதாயத்தில் நிலைபெற்றிருந்தது. தன் கணவனின் இறப்பிற்குப் பின்னால் தன் தேவைகள் அனைத்தையும் பெண் இழக்க நேரிட்டது. உடன்கட்டை ஏறினால் கணவனோடு சுவர்க்கம் புகலாம் என்ற சமுதாய நம்பிக்கையை உள்ளவாறே அக்காலப் பெண்கள் நம்பினர். ஆடவர்க்கு மகளிரே உயிர் எனக் கருதப்பட்டமையால் அவன் இறப்பிற்குப் பின்னால் தனித்து வாழவியலாத நிலையைக் காணலாம்.''[112] என்ற கூற்றும் சங்ககாலக் கைம்பெண்டிரின் அவலநிலையைப் படம்பிடித்துக் காட்டுகின்றது.

**நடுகல் வழிபாடு**

நடுகல் என்பது நட்டக்கல் அல்லது நடப்பட்ட கல் என்று விளக்கம் தரப்படுகின்றது. 'எழுத்துடை நடுகல் என' அகநானாறு குறிப்பிடுகின்றது. இத்தகைய நடுகல்லைச் சுற்றி வேல்களும், கேடயங்களும் நடப்பட்டு இருந்ததாகச் சங்கப்பாடல்கள் குறிப்பது, அந்நடுகல்லிற்குரிய வீரர்கள் பயன்படுத்திய போர்க்கருவிகளாகவே இருக்கும் என ஊகிக்கலாம்.[113] இறந்த வீரர்களின் நினைவாக நடப்பட்ட கல்லில் தெய்வம் உறைந்திருப்பதாக எண்ணி, மயிற் பீலி சூட்டி, பூச்சொரிந்து, விரும்பிய உணவு வகைகள் படைக்கப்பட்டு நடத்தப்பெறும்

ஒருவகைச் சடங்கு நடுகல் வழிபாடாகும். போரில் மடிந்த வீரர்களுக்கு அக்காலத்தில் நடுகல் எடுக்கப்பட்டது. அதில் அவ்வீரனைக் குறித்த வரலாறுகள் இடம்பெற்றிருந்தன. இவ்வாறு தமது முன்னோரின் நினைவாக வைக்கப்பட்ட நடுகல்லை மறக்குடி மகள் ஒருத்தி வழிப்பட்டாள். அப்போது, விருந்தினர்கள் இல்லம் நாடி வருதல் வேண்டும் என்றும், விரைவில் போர் உண்டாக வேண்டும் என்றும், அப்போரில் தன் கணவன் வெற்றி வாகை சூட வேண்டும் என்றும் வேண்டினாள். இவ்வாறான நடுகல் வழிபாட்டை அள்ளூர் நன்முல்லையார் என்னும் புலவர்,

**''ஒலிமென் கூந்த லொண்ணுத லரிவை**
**நடுகற் கைதொழுது பரவுமொடியாது''**[114]

என்று கூறுகின்றார். ஒரு குடியைச் சார்ந்த வீரர்களுக்கு நடப்பட்ட நடுகல் அக்குடியினரால் மட்டுமே வழிபடப்பட்டுள்ளது. இது பொதுவானதொரு வழிபாடாக இருக்கப் பெறவில்லை.

**பண்டமாற்று**

பழந்தமிழ்ச் சமுதாய மக்கள் தம் தேவைகளை நிறைவு செய்துகொள்ள பண்டமாற்று முறையை மேற்கொண்டனர். நாட்டின் ஓரிடத்தில் விளையும் பொருட்கள் மற்றொரு இடத்தில் விளையாத காரணத்தினால் அக்கால மக்கள் பண்டமாற்று முறையை தமது வழக்கத்தில் கொண்டிருந்தனர். பால், தயிர், நெல், உப்பு, மீன், இறைச்சி போன்ற பொருட்களை பண்டமாற்று முறையில் பரிமாறிக் கொண்டனர். சமுதாயத்தின் அனைத்துத் தரப்பு மக்களும் தமது தேவைகளை நிறைவு செய்து கொள்ளும் பொருட்டு பண்டமாற்று முறையைப் பின்பற்றினார். இத்தகைய பண்டமாற்று முறை குறித்து மா. இராசமாணிக்கனார்,

**''பண்டைக் காலத்தில் நாணயங்கள் கண்டறியப்படுவதற்கு முன் ஒரு பொருளைக் கொடுத்து மற்றொரு பொருளை வாங்கும் முறையே வழக்கில் இருந்தது. இது பண்ட மாற்று முறை (பண்டத்தை மாற்றி வேறொன்றைக் கொள்ளும் முறை). மலை நாட்டு மக்கள் தங்கள் மலைபடு பொருள்களை மருதநிலத்தில் விற்று நெல்லும் பிறவும் பெற்றுக் கொள்வர். முல்லைநில மக்கள் பால், தயிர், முதலியவற்றைக் கொடுத்து நெய்தல் நிலத்தில் மீன் உப்பு முதலியவற்றைப் பெறுவர். காய வைத்த மீனையும் புதிதாகப் பிடித்த மீனையும் கொடுத்து நெய்தல் நில மக்கள் மருதநிலத்தில் நெல் முதலிய பொருட்களைப் பெறுவர். இம்முறையே பண்டமாற்று முறை எனப்படும்.''**[115]

என்று வரையறை செய்கின்றார். நானில மக்கள் அனைவரும் பண்டமாற்று முறையினை வழக்கத்தில் கொண்டிருந்தனர். குறிஞ்சி நில மக்கள் தம் நிலத்தில் கிடைத்த தேனையும் கிழங்கையும் நெய்தல் நில மக்களிடம் கொடுத்து அதற்குப் பதிலாக மீனையும் கள்ளுணவையும் பெற்றனர். மருத நிலத்து மக்கள் தம் நிலத்தில் விளைந்த கரும்பையும் அவலையும் கொடுத்து முல்லை நிலத்தவரிடம் மான் இறைச்சியையும் மதுவையும் பெற்றனர். இவ்வாறு சோழநாட்டு மக்கள் பண்டமாற்று மூலம் தமது தேவைகளை நிறைவேற்றினார் என்பதை முடத்தாமக் கண்ணியார்,

**"தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்**
**மீன் நெய்யொடு நறவு மறுகவும்**
**தீங்கரும்போடு அவல் வகுத்தோர்**
**மான் இறையொடு மது மறுகவும்"**[116]

என்ற தமது பாடலடிகள் வாயிலாக உரைக்கின்றார். இவ்வாறு சங்ககால மக்கள் தமது தேவைகளைப் பிற சமுதாயத்தினரிடம் பெற்று பெருவாழ்வு வாழ்ந்தனர்.

**கார்த்திகை விழா**

கார்த்திகை நாளில் பெண்கள் விளக்கு ஏற்றி விழா நடத்தியது பற்றிய குறிப்பு காணக்கிடக்கிறது. கார்த்திகை நன்னாளில் மக்கள் ஆரவாரத்துடன் ஒன்று கூடினர். ஒவ்வொருவரும் மிகுந்த விருப்பத்துடன் விளக்கெடுத்தனர். அக்காட்சி காண்பதற்கு அழகிய தோற்றமுடையதாய் இருந்தது என்பதை ஔவையார்,

**"கலிகொளாயம் மலிபுதொகு பெடுத்த**
**அஞ்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றி"**[117]

என்று கூறுகிறார். கார்த்திகை விழா மிகத் தொன்மையான வரலாறு உடையது என்பதை இதன்மூலம் உணரலாம்.

**துறவு நிலை**

ஐம்புல இன்பங்களைத் துறந்து உலகப் பற்றினை விடுதலே துறவின் உண்மை நிலையாகும். இல்லற வாழ்வை வெறுத்துக் காடேகுதலும் துறவு வழிப்பட்டதாக அமைகிறது. இத்தகைய துறவு நிலைகுறித்து சங்கப் பெண்பாற் புலவரின் பாடலொன்றில் காணக் கிடைக்கிறது. இளமையில் பல பெண்கள் விரும்பும் பேரழகு வாய்க்கப்பெற்ற ஒருவன், பிற்காலத்தில் காட்டிற்குச் சென்று

துறவு மேற்கொண்டான். அருவியில் நீராடிய அவன் முதுகு வரை வளர்ந்திருந்த தனது சடைமுடியைத் தீயில் காட்டி உலர்த்தினான். இவ்வாறு நீராடி உலர்த்தியதால் தலைமுடி நிறம் மாறி வெளுத்துக் காணப்பட்டது. இல்லற வாழ்வை மேற்கொண்டிருந்து அவ்வாழ்வை வெறுத்தமையால் துறவு கொண்டு காட்டிற்குச் சென்ற ஒருவனது வாழ்வை மாற்பித்தியார் என்னும் புலவர்,

**''இல்வழங்கு மடமயில் பிணிக்கும்**
**சொல்வலை வேட்டுவனாயினன் முன்னே''**[118]

என்று, தவசியின் இல்வாழ்வு பற்றிக் கூறுகின்றார். மேலும்,

**''கடுந்தெறற் செந்தீ வேட்டுப்**
**புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே''**[119]

என்றும்,

**''கறங்கு வெள்ளருவி யேற்றலினிறம் பெயர்ந்து**
**தில்லை யன்ன புல்லென் சடையோடு''**[120]

என்றும், தவசியின் துறவு நிலை குறித்துக் கூறுகின்றார்.

**நல்வினை**

தாம் வாழும் காலத்துப் பிறர்க்கு உதவி செய்து அவரின் துயர் துடைத்தல் நலம் பயக்கும். தாம் இறக்கும் காலத்தில் வாழ்ந்த காலத்துச் செய்த நல்வினைகள் மட்டுமே உடன் வரும். இதனை உணர்ந்து ஒவ்வொருவரும் தமக்கு வரையறுக்கப்பட்ட வாழ்நாளை கழிக்க வேண்டும். இதுவே நல்வாழ்விற்கு அடையாளமாய் அமையும் என்பதை ஔவையார்,

**''வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்**
**வாழச் செய்த நல்வினை யல்ல**
**தாழுங்காலைப் புணைபிறிதில்லை''**[121]

என்று, வாழ்விற்குரிய நல்வினை குறித்து கருத்துரைக்கின்றார். இவ்வாறான வாழ்வே சான்றோர் போற்றும் வாழ்வாக அமைந்தது.

**தொகுப்புரை**

1. பழந்தமிழ்ச் சமுதாய அமைப்புகள் குறிஞ்சி, முல்லை, மருதம் நெய்தல், பாலை என்றும் அடிப்படையில் அமையப் பெற்றனவாகும். ஒவ்வொரு சமுதாயத்தினர்க்கும் தேவைகளின் அடிப்படையில் நெருங்கிய உறவுநிலை இருந்தது. இவை சமுதாயக் கலப்பு என்ற நிலையில் ஆராயப்பட்டுள்ளது.

2. சிறியவர் முதல் பெரியவர் வரை சமூகத்தில் வாழ்கின்ற அனைவர்க்கும் கடமைகள் வலியுறுத்தப்பட்டன. ஒவ்வொரு வரும் தத்தமது கடமையிலிருந்து வழுவாது இருக்க வேண்டும் எனவும் அறிவுறுத்தப் பட்டது. சமூக முன்னேற்றம் என்பது மக்களின் நற்பண்புகளை உள்ளடக்கியது என்பது ஆய்வில் கூறப்பட்டுள்ளது.

3. ஐவகைச் சமுதாயத்தில் முதலாவதாக அமையப்பெறுவது குறிஞ்சி நிலச் சமுதாயமாகும். மக்கள் இனம் முதலில் தோற்றம் பெற்றது இப்பகுதியில் என்பது குறிப்பிடத்தக்கது. இது இயற்கை அரண்களுடன் எழில் சார்ந்த அமைப்புடையது. இங்குள்ள மக்கள் நாடோடிகளாகவும் சிற்றூர்களில் நிலைத்து வாழ்பவர்களாகவும் காணப்படுகின்றனர். வேட்டையாடல், தினைவிதைத்தல், கழங்ககழ்தல் போன்றவை இங்குள்ள மக்களின் முக்கியத் தொழில்களாகும். மக்கள் தெய்வம், நிமித்தம் போன்றவற்றில் நம்பிக்கைமிக்கவர்களாக இருக்கப்பெற்றனர். குறிஞ்சி நிலத்தில் ஊர்க்காவல் முறையும் காணப்படுகிறது. ஓவியம், கூத்து போன்ற கலைகளிலும் இந்நிலமக்கள் தேர்ச்சியுடையவர்களாகப் புலவர்களால் காட்டப்படுகின்றனர்.

4. நிலையான வாழ்வியல் நெறிகளுடன் கூடியது முல்லை நிலச்சமுதாயம். நாகரிகத்தின் தொடக்கநிலை இச்சமுதாயத்திற்கு உரியது. மணமுறையும் குடும்ப அமைப்பும் முல்லை நிலச் சமுதாயத்தில் ஏற்படுத்தப்பட்டன. பெண்களின் கற்பு குறித்து இச்சமூகத்தில் அதிகம் பேசப்படுகின்றது. ஆற்றியிருத்தல் இம்மக்களின் உரிப்பொருளாகக் கூறப்பட்டுள்ளது.

5. நிலவளமும் நீர்வளமும் செல்வ வளமும் ஒருங்கே பெற்றது மருத நிலச் சமுதாயமாகும். நகர அமைப்பும் நாகரிக வாழ்வும் இங்குத் தோற்றம் பெற்றன. இங்குள்ள மக்களின் முக்கியத் தொழில் உழவு. பிற சமுதாயத்தவரின் தேவைகளைப் போக்கும் வலிமையை இவர்கள்

பெற்றிருந்தனர். தெய்வ நம்பிக்கையும், இயற்கை வழிபாடும் இச்சமுதாய மக்களிடம் காணப்படுகிறது. வளமிகுதியால் மருத நிலச் சமுதாய ஆடவர் பரத்தமை போன்ற களியாட்டங்களில் ஈடுபட்டனர்.

6. கடல்சார்ந்த வாழ்வை மேற்கொண்டது நெய்தல் நிலச் சமுதாயமாகும். வருணன் இச்சமுதாய மக்களின் தெய்வமாகப் போற்றப்படுகின்றான். இவர்களின் முக்கியத் தொழில்களாக மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல், முத்தெடுத்தல் போன்றவை அமைகின்றது. கடல்விழா இம்மக்களால் சிறப்புறக் கொண்டாடப்பட்டது. கடல் தெய்வம் தமது குறைகளைத் தீர்க்கும் என நம்பினர். கடற்கரைகளில் உப்பு வாணிகமும் துறைமுகப்பட்டினங்களில் கடல் வாணிகமும் சிறப்புற நடைபெற்றன.

7. குறிஞ்சியும் முல்லையும் வளமிழந்த நிலையில் உருவாவது பாலையாகும். பாலைநில மக்கள் எயினர், எயிற்றியர் எனப்பட்டனர். இங்கு வளம் குறைவாதலால் கொள்ளை போன்ற தொழில்களில் இம்மக்கள் ஈடுபடலாயினர். பாலை நில வெம்மையும் அவ்வழிச் செல்வோர் படும் இன்னல்களும் புலவர்களால் அதிகம் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

8. சங்ககாலச் சமுதாய அமைப்பில் ஆடவர் சில உரிமைகளைப் பெற்றவர்களாகவும் மகளிர் உரிமையின்றி சமூகக் கட்டுபாடுகளுக்கு அடங்கி நடப்பவர்களாகவும் காட்டப்படுகின்றனர்.

9. பழந்தமிழ்ச் சமூகத்தில் கைம்பெண்களின் நிலை மிகவும் துயரமுடையதாகக் கூறப்படுகிறது. வாழ்வதை விட உயிர்துறப்பதே சிறப்பு எனக் கருதிய பெண்டிரும் காட்டப்படுகின்றனர். சமுதாயக் கட்டுப்பாடும் சடங்குமுறைகளும் கைம்பெண்களின் வாழ்வை அலைகழிக்கச் செய்துள்ளன.

10. சிறந்த வீரர்களின் நினைவாக நாட்டப்பட்டு, அவர்தம் வரலாற்றைப் போற்றும் சின்னமாக அமைவது நடுகல் முறையாகும். இதனை மக்கள் வழிபடவும் செய்தனர்.

11. சங்கத் சமுதாயத்தில் பண்டமாற்று முறை முக்கிய இடம்பெற்றது. மேலும் துறவு நிலை, நல்வினை, தீவினை போன்றவற்றின் பயன்கள், போன்றனவும் பெண்பாற் புலவர்களால் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

# அடிக்குறிப்புகள்

1. சு. செல்லப்பன், சங்க இலக்கியமும் சமூகவியலும், ப.18.
2. செந்துறை முத்து, சங்ககாலச் சமுதாயச் சிந்தனைகள், ப.31.
3. பொ.ஆ., 218-226.
4. புறம். 312:1-6.
5. செந்துறை முத்து, தமிழர் வாழ்வியல், ப.8.
6. புறம். 187:1-4.
7. மே. வேங்கடேசன், தமிழ்ச் சமுதாயம், ப.3.
8. ந. சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.36.
9. நற். 357:6-7.
10. நற். 304: 2-3.
11. ந.சி.கந்தையா பிள்ளை, தமிழர் சரித்திரம், பக். 40-41.
12. தொல். அகத். நூ. 4:2.
13. ந.சி. கந்தையா பிள்ளை, மு.கு.நூ., ப.110.
14. அகம். 22:1.
15. அகம் . 98:5.
16. நற். 47 : 9-10.
17. அகம். 22:9-11.
18. அகம். 22 : 5-6.
19. சு. வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப.129.
20. குறுந். 261 : 6-7.
21. அகம். 22:14-6.
22. இ.சுந்தரமூர்த்தி, இலக்கியச் சுடர், ப.11.
23. தொல். புறத் நூ. 30.
24. குறுந். 140:1-2.
25. தி.ஆ. கார்மேகக் கோனார், ஐங்குறு நூற்றுச் சொற்பொழிவுகள், ப.19.
26. குறுந். 146:2-5.
27. அ.ஆறுமுகம், சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு, ப.15.
28. ந. சுப்புரெட்டியார், ஐந்திணைக் கொள்கைகள், பக்.116-117.
29. குறுந். 32:4-6.
30. அகம். 98:11.

31. அகம். 98:19-20.
32. வி.சி. சசிவல்லி, பண்டைத்தமிழர் தொழில்கள், ப.250.
33. அகம். 252:1-4.
34. குறுந் .158:1-2.
35. நற். 129: 7-8.
36. அகம். 362:3-5.
37. நா.சி. கந்தையா பிள்ளை, மு.கு.நூ., ப.48.
38. நா. ஆறுமுகம், முல்லை வாழ்க்கை, ப.11.
39. அகம். 384:5-6.
40. அகம். 154:8-10.
41. அகம். 394 : 2-7.
42. குறுந். 210 :2-3.
43. சு. வித்தியானந்தன், மு.கு.நூ., ப.204.
44. குறுந். 210:6.
45. சு. வித்தியானந்தன், மு.கு.நூ., பக். 200-201.
46. எஸ். ஆறுமுக முதலியார், (க.ஆ.)., அகநானூறுற்றுச் சொற்பொழிவுகள், ப.109.
47. குறுந். 186:2-3.
48. குறுந் . 287 : 7-8.
49. குறுந் .220:5-6.
50. குறுந் .391:5-6.
51. எஸ். ஆறுமுக முதலியார், (க.ஆ.)., மு.கு.நூ., ப.98.
52. ந. சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.39.
53. நா.சி. கந்தையாபிள்ளை, மு.கு.நூ., பக். 54-55.
54. ஞா. தேவநேயப் பாவாணர், பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.188.
55. தொல். அகத் நூ.5.
56. ஐங். 62:1.
57. சு. வித்தியானந்தன், மு.கு.நூ., பக். 147-148.
58. நற் . 390:5-6.
59. நற் . 90:1.
60. உ.வே. சா., (உ.ஆ.)., குறுந்தொகை மூலம் உரையும், ப.80.

61. குறுந். *31:2.*
62. குறுந். *364:5-6.*
63. பொன் அழகு கிருஷ்ணன், சிலப்பதிகாரம் காட்டும் பண்பாடும் சமுதாய வரலாறும், ப.*148.*
64. குறுந் .*178:5.*
65. குறுந். *307.*
66. குறுந். *178:1-3.*
67. குறுந். *171:2-3.*
68. குறுந். *193:-4.*
69. தொல். அகத்.நூ.*5.*
70. சு. வித்தியானந்தன், மு.கு.நூ., ப.*148*
71. நா.சி. கந்தையா பிள்ளை, மு.கு.நூ., ப.*61.*
72. நற். *348 : 3-4.*
73. நற். *335 : 1-3.*
74. தி. முத்துக்கண்ணப்பன், சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம், ப.*209.*
75. அகம். *110:4-5.*
76. நற். *187:1-2.*
77. நற். *369:2-4.*
78. நற். *335 : 4-6.*
79. நற். *117 : 1-2.*
80. அகம் . *40 : 2.*
81. குறுந் *299 : 1-2.*
82. சி. இளக்குவனார், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், ப.*120.*
83. நற். *295 : 5-6.*
84. நற். *295 : 6-7.*
85. அகம். *110 : 18-19.*
86. மயிலை சீனி வேங்கடசாமி, பழந்தமிழர் வாணிகம், பக். *100-111.*
87. அகம். *173:10-11.*
88. குறுந். *388:4.*
89. அகம். *110:6-9.*
90. அகம் *160: 5-8*
91. குறுந் *152:4-5*

92. ஐங். மரு.44
93. சிலம்பு. காடுகாண் : 64.
94. செந்துறை முத்து, மு.கு.நூ., ப.17.
95. அ.கி. பரந்தாமனார், (க.ஆ)., ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள், ப.176.
96. முருக இலக்குவனார், (க.ஆ)., அகநாற்றுச் சொற்பொழிவுகள், ப.141.
97. ஞா. தேவநேயப் பாவாணர், மு.கு.நூ., ப.189.
98. சு. வித்தியானந்தன், மு.கு.நூ., ப.217.
99. நா.சி. கந்தையா பிள்ளை, மு.கு.நூ., ப. 66.
100. மே.கு.நூ. ப.65.
101. அகம். 11:1-6.
102. குறுந். 174:2-3.
103. குறுந். 232:3-5.
104. அகம். 147:5-7.
105. சு.வித்தியானந்தன், மு.கு.நூ., பக். 139-140.
106. பொ.ஆ. 50 - 52.
107. புறம். 246 : 6-10.
108. செந்துறை முத்து, மு.கு.நூ., ப.64.
109. புறம். 280 : 11-15.
110. புறம். 250:4-5.
111. புறம். 234: 3-4.
112. இரா. உமாராணி, (க.ஆ)., சங்க இலக்கியம் கருத்தியல் வளம், ப.68.
113. வெ. கேசவராஜ், நடுகல் வழிபாடு, ப.12.
114. புறம். 306 : 3-4.
115. மா. இராச மாணிக்கனார், தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.28.
116. பொ.ஆ. 214-217.
117. அகம். 11:4-5.
118. புறம். 252:4-5.
119. புறம். 251:6-7.
120. புறம். 252: 1-2.
121. புறம். 367 : 9-11.

## இயல் நான்கு

# புறவாழ்வு நோக்கு

''அற்றைத் திங்க ளவ்வெண் ணிலவின்
எந்தையு முடையேமெங் குன்றும் பிறர்கொளார்
இற்றைத் திங்க ளிவ்வெண் ணிலவின்
வென்றெறி முரசின் வேந்தரெம்
குன்றுங் கொண்டார்யா மெந்தையு மிலமே''

– பாரிமகளிர்

# புறவாழ்வு நோக்கு

சங்ககால மக்களின் வாழ்வியல் அகம்புறம் என இருகூறாகப் பகுக்கப்படுகின்றது. அகவாழ்வியல் களவு, கற்பு என்ற முறையில் அமைகிறது. புறவாழ்வு மன்னரது கல்வி, வீரம், புகழ், கொடை, போர்முறை, வெற்றி போன்வற்றையும் மக்களது வாழ்வியலையும் உள்ளடக்கியது. அகவாழ்வியல் புறவாழ்வயில் ஆகிய இரண்டும் ஒன்றோடொன்று தொடர்புடையன. 'புறவாழ்வு நோக்கு' என்னும் இவ்வியலில் முடிவேந்தர்கள் மற்றும் சிற்றரசர்கள் பற்றிப் புறப்பாடல்களில் பெண்பாற்புலவர்கள் எவ்வாறு சித்தரித்துள்ளனர் என்பது குறித்தும் அக்காலப் போர்ச் சூழல்கள் மற்றும் மக்களது வாழ்வியல் நிகழ்வுகள் குறித்தும் விரிவாக ஆராயப்படுகிறது.

**முடிவேந்தர்கள்**

பழங்கால மன்னர்களின் வாழ்வியல் பற்றி அறிவதற்குச் சிறந்த கருவூலமாக இருப்பது சங்க இலக்கியங்களாகும். சேர, சோழ, பாண்டியர் ஆகிய முடிவேந்தர் மூவரும் தமிழகத்தைப் பகுத்து ஆண்டு வந்தனர். அவர்கள் தலைமுறை தலைமுறையாக முடிசூடி ஆட்சிப் பொறுப்பினை ஏற்றுச் செயல்பட்டதால் முடிவேந்தர்கள் எனவும் அழைக்கப்பட்டனர். இவ்வாறு பழந்தமிழகத்தில் நிலவிய மூவேந்தரின் அமைப்பினைத் தொல்காப்பியர்,

"வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு"

என்று கூறுவதால் அறியலாம். அக்கால மன்னர் சமுதாயம் சிலகாலம் போர்ப்பூசல் கொண்டும், சிலகாலம் ஒற்றுமையை நிலைநாட்டியும் இருந்தது. இத்தகயை போர்ச் சமுதாயம் பிறநாட்டு மன்னனை வீழ்த்தி அவனது உடைமைகளைத் தமக்குரியனவாகக் கொள்வதை முதல் நோக்கமாகக் கொண்டிருந்தது. கொடுங்கோலாட்சி செலுத்திய மன்னர்கள் மக்களால் தூற்றப்பட்டும், செங்கோலாட்சி செலுத்திய மன்னர்கள் இறைவனுக்கு ஒப்பாகப் போற்றப்பட்டும் வந்துள்ளமை அறியப்படுகிறது. முடிவேந்தர்கள் தம்நாட்டு வளத்தைப் பெருக்கி குடிமக்களைத் துன்பமின்றி காத்து வந்தனர். சங்க கால மன்னர்கள் குறித்து சு.வித்தியானந்தன்,

**“தமது உள்ள அமைதிக்கு ஏற்றவாறு தமது ஆட்சியை நடத்தினர். ஆனால் அவர் அறிவிலும் கல்வியிலும் சிறந்த அறிஞரின் அறிவுரைகளையும் புலவரின் பொன்னுரைகளையும் போற்றி நின்றே ஆட்சி செலுத்தினர். அரசன் விருப்பத்திற்கு மாறாக மக்கள் கிளர்ந்து எழுந்ததாகச் சங்க நூல்களில் யாங்கணும் இல்லை. மன்னர் யாவரும் மக்கள் வாழ்க்கையில் அமைதி நிலவ வேண்டும் என்பதை உணர்ந்து அதைப் போற்றிப் பாதுகாத்தனர்.”[2]**

என்று கூறுவதால் மேலும் அறியலாகின்றது. தம்மை நாடிவரும் இரவலர்க்கு வாரி வழங்கும் வள்ளல்களாகவும் அம்மன்னர்கள் திகழ்ந்தனர். இத்தகைய சூழலில் வாழ்ந்த அக்கால முடிவேந்தர்களின் வாழ்வியல் குறித்துப் பெண்பாற் புலவர்களின் புறப்பாடல்கள் கூறும் அடிப்படையில் ஆராயப்படுகிறது. சேரநாட்டு மன்னர்களில்,

1. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்
2. கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன்
3. சேரமான் கடலோட்டிய வேல்கெழுகுட்டுவன்
4. பாலை பாடிய பெருங்கடுங்கோ,
5. பெருஞ்சேரலிரும் பொறை

போன்றோர் குறித்த செய்திகள் காணப்படுகின்றன. சோழ நாட்டு மன்னர்களில்,

1. கரிகால் பெருவளத்தான்
2. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்
3. சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி

ஆகியோர் குறித்த செய்திகள் காணக்கிடக்கின்றன. முடிவேந்தர்களாகிய பாண்டிய மன்னர்கள் பற்றிய செய்திகள் பெண்பாற்புலவர்களின் பாடல்களில் இடம் பெற்றிருக்கவில்லை.

**மூவேந்தர்களின் ஒன்றுமை**

மூவேந்தர்களின் வரலாறு என்பது வரலாற்றுக் காலத்திற்கும் முற்பட்டதாகக் கூறப்படுகிறது.

**“நினைவுக்கு எட்டாத மிகப் பழைய காலத்திலிருந்தே மூவேந்தராகிய சேர, சோழ, பாண்டியன் தமிழகத்தில் ஆட்சி செலுத்தி வந்தனர் என அறிஞர் பலர் கருத்துரைத்துள்ளனர்.”[3]**

என்று மூவேந்தர்களின் தொன்மை கூறப்படுகிறது.

**“கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே**
**வாளோடு முன்தோன்றி மூத்த குடி”[4]**

என்று தமிழ்க் குடிகள் சிறப்பித்துக் கூறப்படுகின்றன. மூவேந்தர்களின் வரலாறுகள் படைப்புக் காலத்திற்கும் முற்பட்ட நிலையில் இருந்துள்ளது. இதனை வ.குருநாதன்,

**“பழந்தமிழ்நாட்டில் மக்கள் தோன்றிய காலந்தொட்டே மேம்பட்டு விளங்கிய பழங்குடிகள் மூவேந்தர் குடிகள் என்பது போதரும்.”[5]**

என்று கூறுவதாலும் தொன்மை புலனாகிறது. மூவேந்தரும் தத்தமது நாட்டின் எல்லைகளுக்குட்பட்ட மக்களைப் போற்றிப் பாதுகாத்தனர். சிற்றரசர்கள் பலர் இவர்களது ஆட்சிக்குட்பட்டு இருந்து வந்தனர். தமிழகத்தை ஆளும் மூவேந்தரும் ஒற்றுமையுடன் ஒருங்கே கூடியிருப்பதைக் கண்ட ஔவையார் மிகுந்த மகிழ்ச்சியுற்றார். அவர்களை வாழ்த்தவும் செய்தார். பொருள் வேண்டி இரந்து நிற்கும் பார்ப்பனர்க்குக் கைநிறைய பொன் பொருள் கொடுத்தும், தம்மை நாடி வரும் வறியவர்களுக்கு அவர்கள் வேண்டிய பொருளைக் குறைவில்லாமல் கொடுத்தும் இவ்வுலகில் வரையறுக்கப்பட்ட நாள் முழுதும் நலமுடன் வாழ்தல் வேண்டும். நாம் வாழும் காலத்துச் செய்த நல்வினை மட்டுமே இறக்கும் காலத்து உயிருக்குத் துணையாய் நிற்கும். வீடுபேற்றை அடைய விரும்பும் அந்தணர்கள் எடுக்கும் முத்தீயைப் போன்று ஒன்று கூடியிருக்கும் வெண்கொற்றக் குடையை உடைய வேந்தவர்களே! இதுவே முடிவான உண்மையும் ஆகும். மூவரும் இதை உணர்ந்து பகைமை ஏதுமின்றி ஒற்றுமையுடன் வானத்து விண்மீன்களை விடவும், கனமழைக்காலத்துத் துளிகளை விடவும் அதிகமான நாட்கள் வாழ வேண்டும் என்றும் வாழ்த்தினார். இதனை ஔவையார்,

**“கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்திர்**
**யானறி யளவையோ விதுவே வானத்து**
**வயங்கித் தோன்று மீனினு மிம்மென**
**இயங்கு மாமழை யுறையினும்**
**உயர்ந்துமேற் தோன்றிப் பொலிக நும் நாளே”[6]**

என்று மூவேந்தரும் நெடிதுகாலம் ஒற்றுமையுடன் வாழ்ந்து மக்களுக்கு நன்மை செய்யும்படி வேண்டினார். போரும் பூசலும் நடைபெற்று வந்த அந்நாளில் மூவேந்தரும் ஒற்றுமையுடன் விளங்குவது என்பது அரிது. ஒருவரையொருவர் வஞ்சித்து நாட்டைப் பிடிக்கும் ஆசையால் பல தீவினைகளுக்கு மக்கள் ஆளாகக்

கூடும். பிறந்த அனைவரும் இறப்பது உறுதி. அவ்வாறு இறக்கும் போது நாம் செய்த நல்வினைகள் மட்டுமே பேசப்படும். அதனால் வாழும் காலத்து இல்லையென வருவோர்க்குக் கொடுத்து மன்னர் மூவரும் ஒற்றுமையுடன் வாழவேண்டும் என்பதே ஔவையின் கருத்தாக அமைந்தது. மேலும், நிலையாமை உடையது இவ்வுலகம். போரிட்டு ஒரு நாட்டைக் கையகப்படுத்தும் மன்னர் இறக்கும்போது அதை உடன் கொண்டு போவதில்லை. பின்னர் வரும் தொடர்பில்லாத யாரோ ஒருவர் அதை ஆள நேரிடுகிறது. இது உலகியல் நிலை என்பதை ஔவையார்,

> **''நாகத் தன்ன பாகார் மண்டிலம்**
> **தமவே யாயினுந் தம்மொடு செல்லா**
> **வேற்றோ ராயினு நோற்றோர்க் கொழியும்''**[7]

என்று கூறி உலக நிலையாமையை ஆளும் மன்னர்க்கு எடுத்துக் கூறுகின்றார். முடிவேந்தர்கள் முறை தவறிய வழி ஔவையார் போன்ற அக்காலப் புலவர்கள் அவர்களை நெறிப்படுத்தவும் செய்தனர் என்பது இதனால் பெறப்படுகின்றது. இத்தகைய நல்லாட்சி முறைகளை மக்கள் விரும்பிப் போற்றினர். இதனை சி.இலக்குவனார்,

> **''அரசர் நாட்டை நன்முறையில் காத்தனர். அவரை அவருடைய நல்லாட்சி காத்தது. நாட்டு மக்கட்குத் தீங்கு செய்து தீ நெறியில் சென்றோரை இரக்கமின்றி ஒறுத்து, விளை நிலத்தில் தோன்றிய களையைப் போக்குவது போல் போக்கினர். குடிபுறங்காத்து ஓம்ப மக்கள் குற்றத்தைக் கடிதல் அரசரின் ஆளும் தொழிலுக்குரியதே என உலகம் கருதியது.''**[8]

என்று அக்கால மன்னரது ஆட்சி முறையினை எடுத்துரைக்கின்றார். பழந்தமிழகத்தில் முடிவேந்தராகிய சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவரின் ஆட்சியே நெடுங்காலம் நிலைபெற்றிருந்தது.

**சேரமன்னர் வரலாறு**

சேரமன்னர்கள் மலைப்பாங்கான பகுதிகளில் ஆட்சி செலுத்தி வந்தமையால் இவர்கள் சோழர், பாண்டியரைக் காட்டிலும் தொன்மையான குடிகள் என்று போற்றப்படுகின்றனர். மக்கள் இனம் முதலில் மலைப்பாங்கான

பகுதிகளில் தோன்றியது என்று கூறும் காரணமே அவ்வாறு கூறுவதற்கு அடிப்படையாகும்.

> **"சங்கத்தமிழ்ச் சேரநாடு இன்றைய திருவாங்கூர், கொச்சி, மலபார் ஆகியவற்றோடே குடகு, மைசூர், தென்கன்னட நாடுகளையும் உள்ளடக்கியிருந்தமை உணரப்படும்."[9]**

என்று கூறப்படுவதால் சேரநாட்டின் எல்லை குறித்து அறியலாகின்றது. கொங்கு நாடு, குடநாடு, துளுவாடு, கொண்கான நாடு, கட்டிய நாடு போன்றனவும் அன்றைய சேரநாட்டின் தலைசிறந்த பகுதிகளாகத் திகழ்ந்துள்ளன. அதேபோல், சேரர் குடிப்பெயர்களாக சேரலர், உதியர், பொறையர், குடவர், குட்டுவர், வானவர் போன்றனவும் அரசர்களுக்கு வழங்கப்பட்டு வந்துள்ளது. சேரநாட்டின் பெயர்க் காரணம் குறித்து சாமி.சிதம்பரனார்,

> **"சேரல் என்றால் மலை அடுக்கு என்று பொருள் சேர் - சேர்ந்து, பிணை, மலை அடுக்குகள் அடுத்தடுத்து பிணைந்து நெருங்கி இருப்பதற்குச் சேரல் என்று பெயர். மேற்குத் தொடர்ச்சி மலையானது பல அடுக்குகளைக் கொண்டது. அம்மலையை உட்கொண்டு, மலைக்கும் கடலுக்கும் இடையில் உள்ள நாடு முழுவதும் சேரல் நாடு எனப்படும். அதனால் அந்த நாட்டு அரசர்களுக்குச் சேரலர் என்று பெயர் அமைந்தது."[10]**

என்று விளக்கம் தருகின்றார். பழந்தமிழகத்தின் சேரநாடென்பது "அசோகர் கல்வெட்டில் கேரள புத்தர நாடு என்று குறிப்பிடப்படுகிறது. இன்று கேரள மாநிலமாகத் திகழ்கிறது."[11] இன்றைய கேரள நாடு முழுமையும் கன்னட நாட்டின் ஒருசில பகுதிகளும் தமிழகத்தின் கொங்கு மண்டலம் முழுமையும் பழங்கால சேர நாடென்று பெறப்படுகின்றது. "ஆன்பொருநை ஆற்றங்கரையில் அமைந்த வஞ்சி சேரநாட்டின் தலைநகரமாகும். பிற்காலத்தில் வஞ்சி, கருவூர் என்றழைக்கப்பட்டது."[12] மலைவளம் மிக்க சேர நாட்டின் பல பகுதிகளைப் பல்வேறு காலக்கட்டங்களில் ஆண்டு வந்த சங்கப் பெண்பாற்புலவர்களால் பாடப்பட்டுள்ள சேர மன்னர் குறித்த வரலாறு இங்கு ஆராயப்படுகின்றது.

### 1. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்

குடக்கோ நெடுஞ்சேரலாதனுக்கும் வேளாவிக் கோமான் மகளுக்கும் பிறந்தவன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்பது பதிற்றுப்பத்தின் ஆறாம்பத்தின் பதிகம்,

**''குடக்கோ நெடுஞ்சேர லாதற்கு வேஎள்
ஆவிக் கோமான் றேவி யீன்றமகன்''[13]**

என்று கூறுவதால் அறியப்படுகின்றது. சேரநாட்டின் தொண்டியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட சேரலாதன், பகைவரால் திருடிச் செல்லப்பட்ட ஆடுகளை மீட்டுத் தன் நகருக்குக் கொண்டு வந்தான். அதனால், இவன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்ற பெயருக்கு உரியவனான். இவனது பெயரமைவு குறித்து வ.குருநாதன்,

**''ஆடென்பதற்குச் சங்ககாலத்துப் பயின்று வழங்கிய சொல் யாடென்பதே. ஆடென்ற சொல் அக்காலத்து ஆட்டினத்தைக் குறித்தன்று. வெற்றியையே குறித்ததாம். ஆடுகோள் காரணமாக இவனுக்குப் பெயரமைவதாயின் அக்கால மொழிப்படி யாடுகோட்பாட்டுச் சேரலாதன் என்றே அமைந்திருத்தல் வேண்டும்.''[14]**

என்று கருத்துத் தெரிவிக்கின்றார். இதனை வி.பி.புருஷோத்தம்,

**''ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் போர்க்களத்தில் வாளை உயர்த்தி ஆடியதாலும், மகளிரோடு துணங்கைக் கூத்து ஆடியதாலும் இப்பெயரைப் பெற்றான். இவன் நறவு என்ற இடத்தில் ஆடல் பாடல் விநோதங்களிலும் மகளிர் மையலிலும் காலங்கஷ்த்தான்.''[15]**

என்று ''ஆடல்'' காரணமாக இப்பெயர் பெற்றான் எனக் கூறுகின்றார். ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் பகையரசர்களின் ஆடுகளை ஓட்டி வந்தமை குறித்துச் சாமி சிதம்பரனார்,

**''ஆரிய அரசர்கள் பேரில் போர் தொடுத்துப் போர் தொடங்குவதன் முன்னம் அங்குள்ள வருடை என்ற இனத்தைச் சார்ந்த வெள்ளாடுகளையும், ஏனைய கால்நடைகளையும், பெண்களையும், தாபதர்களையும் தீங்கு ஏற்படாமல் அப்புறப்படுத்தித் தொண்டிக்கு அனுப்பிவிட்டுப் போர் தொடங்கி வெற்றி பெற்றான்.''[16]**

என்று கூறியுள்ளார். சேரலாதனின் பெயரமைவிற்கான காரணம் இதன் மூலம் தெளியப்படுகின்றது. 'ஆநிரை கவர்தல்' வழக்கம் அன்றைய போர்முறையில் காணப்படுவதால் இவன் கால்நடைகளை ஓட்டி வந்ததன் காரணமாகவோ அல்லது மீட்டுவந்ததன் காரணமாகவோ இப்பெயர் பெற்றிருக்கலாம் எனக் கருதப்படுகின்றது.

“இவனைப் பாடிய பெண் புலவர் நச்செள்ளையார்க்கு அணிகலன்களுக்காக வேண்டிய பொன்னும் பொருளும் கொடுத்து, அத்தாணி மண்டபத்தில் தன் பக்கத்தில் உயரிருக்கையில் உட்காரும் பதவியையும் கொடுத்துச் சிறப்பு செய்தான்.”[17] என்பதால் இவனது கொடைச் சிறப்பும் புலவர்களைப் போற்றிய தன்மையும் விளங்குகின்றது. இவன் வேண்டிய அளவு பசுக்களையும், குடநாட்டின் ஒரு பகுதியையும் பார்பனர்க்குக் கொடுத்து மகிழ்ந்தான். ‘வானவரம்பன்’ என்ற சிறப்புப் பெயருக்கு உரிய இவன் மழவர் கூட்டத்தைப் போரில் வென்று அவர்களது வலிமையைக் குன்றச் செய்தான். குழந்தையைப் பேணும் தாயைப்போன்று தன் நாட்டு மக்களைக் காத்து வந்தான். எப்போதும் அறத்தை விரும்பும் மனம் கொண்டவனாகவும் இருந்தான். இதனை,

**“குழவி கொள் வாரிற் குடிபுறந் தந்து**
**நாடல் சான்ற நயனுடை நெஞ்சின்**
**ஆடுகோட்பாட்டுச் சேரலாதனை”**[18]

என்று நச்செள்ளையார் பலவாறு சிறப்பித்துள்ளார்.

**கொடைச் சிறப்பு**

இடியை ஒத்த பகைவரை அழிக்கின்ற வலிமையுடைய சேரனின் கைகள் இரப்பவர்களுக்கு வேண்டிவற்றைக் கொடுக்கும்போது மட்டுமே கவிழும் தன்மை உடையன. பிறரிடம் இல்லை என்று ஒருபோதும் இரத்தல் பொருட்டு விரிதலை அறியாதன. அத்தகைய கைகள் பிறமகளிரைத் தழுவி துணங்கைக் கூத்தாடியதைக் கண்டு ஊடல் கொண்ட அரசியார் தன் கரத்தில் உள்ள செங்குவளை மலரை எறிய வந்தபோது அதைக் கொடுப்பாயாக என இரந்து நின்றன. இத்தகைய காட்சியை நச்செள்ளையார்,

**“எறிய ரோக்கிய சிறுசெங் குவளை**
**ஈயென விரப்பபு மொல்லா ணீயெமக்**
**கியாரை யோவெனப் பெயர்வோள்”**[19]

என்று கூறி சேரனின் கொடைத் தன்மையைச் சிறப்பிக்கின்றார். மேலும், நாட்டில் வறுமையுடையவர்கள் இல்லாது போனதால் இரவலர்கள் எவரும் மன்னனை நாடி வராமல் இருந்தனர். தன் நாட்டில் இரவலர்கள் இல்லாமையை அறிந்த சேரலாதன் பிறநாடுகளுக்குத் தமது தேர்களை அனுப்பி அங்குள்ள இரவலர்களை அழைத்து

வந்து பரிசளித்து இன்புறுத்தினான். இத்தகையவன் பகைவரும் கேட்க விருப்பம் கொள்ளும் மெய்மொழியை உடையவனாகவும் இருந்தான்.

**''வாரா ராயினு மிரவலர் வேண்டித்**
**தேரிற் றந்தவர்க் கார்ப தனல்கும்**
**நசைசால் வாய்மொழி யிசை சாறோன்றல்''[20]**

என்று நச்செள்ளையார் பாடுவதன் வழி இது அறியலாகின்றது. ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் ஆட்சிக் காலத்தில் சேரநாடு வறியவர் என்பதே இல்லாத அளவிற்கு வளம் நிறைந்ததாக இருந்தது என்பதை இதன் வழி அறியமுடிகின்றது.

**கல்விச் சிறப்பு**

உலக நன்மை தீமைகளை அறிந்து அனைத்து உயிர்களையும் தன்னுயிர்போல் நேசிக்கும் குணத்தை அளிப்பது கல்வியேயாகும். அத்தகைய மேம்பாடு கொண்ட கல்வியைச் சேரன் பெற்றிருந்தான். அதேபோல், படைவீரர்களுக்குக் கவசம் போன்றவனாகவும், தன்னை நம்பி அடைக்கலமாய் வந்தவர்க்குக் காப்பு போன்றவனாகவும் இருந்து வந்தான். இதனை,

**''உலகந் தாங்கிய மேம்படு கற்பின்**
**வில்லோர் மெய்ம்மறை வீற்றிருங் கொற்றத்துச்**
**செல்வர் செல்வ சேர்ந்தோர்க் கரணம்''[21]**

என்று நச்செள்ளையார் சிறப்பிக்கின்றார். சேரன் சிறந்த கல்விப் புலமையுடையவன் என்பதையும் வீரர்களையும் பிறரையும் போற்றிப் பாதுகாக்கும் தன்மையுடையவன் என்பதையும் இதனால் அறியலாம். ''இளமையிலேயே பல கலைகளையும் கற்று, பல்வகைப் படைப்பயிற்சியும் பெற்று வேட்டையாடுவதிலும் தேர்ச்சியுற்று, அறிவு ஆற்றல் அன்பு அறம் மறம் முதலிய குணங்களை ஒருங்கே உடையவனாய், பல அருஞ்செயலும் அறச்செயலும் ஆற்றிக் குடிகளின் உள்ளத்தைக் கவர்ந்தவனாய் இருத்தல் வேண்டும்''[22] என்பது ஒரு மன்னனுக்குரிய தன்மைகளாகக் கூறப்பட்டன. இத்தகைய அனைத்துத் தகுதிகளையும் சேரலாதன் பெற்றிருந்தமை அறியலாகின்றது.

**வீரம்**

சேரலாதன் பலபோர்களைக் கண்டவன். வலிமைமிக்க படைபலத்தை உடையவன். சேரன் தலைமை தாங்கிச் சென்ற போரில், உயிர்க்காக்கும் கவசத்தை அணிய வேண்டும் எனக் கருதாமல் வேலையும், வாளையும், கேடகத்தையும் தாங்கிய அஞ்சாமையுடைய வீரர்கள் பலர் பங்கு பெற்றனர். அவர்கள் போரில் மடிந்து வீரசுவர்க்கத்தை அடையும்படியாகப் பல போர்களைச் செய்தவன் சேரலாதன். இவன் பகைவரைத் தாக்கி அழிப்பதில் வல்லமை பெற்றவன். கூற்றம் தாம் கைப்பற்ற நினைத்த உயிரைத் தவறாது கவர்வதுபோல போர்க்களத்தில் பகைவரின் உயிரைப் போக்கும் வலிமைக் கொண்டவன் என்பதை நச்செள்ளையார்,

**''மாற்றருஞ் சீற்றத்து மாயிருங் கூற்றம்**
**வலைவிரித் தன்ன நோக்கலை**
**கடியையா னெருந்தகை செருவத் தானே''**[23]

என்று கூறுவதால் சேரனின் வீரமிகுதி அறியப்படுகின்றது. அதேபோல் வீரமிக்கப் படைபலத்தைக் கொண்ட சேரலாதன் பகைவரை வென்று அவர் நாட்டுச் செல்வங்களைத் தன் நாட்டிற்குக் கொண்டு வரத் தகுந்த இடத்தில் தங்கிச் செயலாற்றியவன். இதைக் கண்ட பகைவர் இவனை வெல்வது அரிது என எண்ணி தம் நாட்டிலுள்ள செல்வங்களை வலிய வந்து கொடுத்துத் தமக்கு அருள வேண்டும் எனப் பணிந்து நின்றனர். இவ்வாறு வந்தவர்களைப் பணிவுடன் ஏற்று நட்புடன் அருள் புரியும் தன்மையுடையவனாகவும் இருந்தான். இதனை நச்செள்ளையார்,

**''வாடா யாணர் நாடுதிறை கொடுப்ப**
**நல்கினை யாகுமதி...''**[24]

என்று கூறுகின்றார். சேரன் வீரமிக்கவனாக மட்டுமல்லாது வலிமைமிகுந்த படைபலத்தைக் கொண்டவனாகவும் இருக்கப்பெற்றுள்ளான்.

**கடமையுணர்வு**

நாட்டு மக்களின் தேவையறிந்து செயலாற்றுபவன் மன்னருள் சிறந்தவனாவான். அக்கால மன்னர்கள் தமது கடமைகளின்றும் தவறிய வழி, சான்றோர்கள் அறிவுறுத்தவும் செய்தனர். மன்னர்கள் தம் நாட்டுச் செல்வங்களைப் போற்றிப் பாதுகாப்பது அவர்களின் கடமைகளில் முதன்மையானதாகப்

போற்றப்பட்டது. பல நாடுகளில் இருந்து வந்து சேர்ந்த பொருட்களையும், தம் நாட்டின் மலை, கடல் போன்றவற்றிலிருந்து கிடைத்த பொருட்களையும் கொண்டு அறச்செயல்களைத் தவறாமல் செய்வதும், வருவாய் மிகுதியாய்த் தரும் நாடுகளைப் பாதுகாப்பதும் ஒரு நாட்டு மன்னரது கடமையாகும். இதனை நச்செள்ளையார்,

**''மலையவுங் கடலவும் பண்ணியம் பகுக்கும்**
**ஆறுமுட்டுறாஅ தறம்புரிந் தொழுகும்**
**நாடல் சான்ற துப்பிற் பணைத்தோட்**
**பாடுசா னன்கலந் தரூஉம்**
**நாடுபுறந் தருத னினக்குமார் கடனே''**[25]

என்று கூறுவதன் வழி அறியலாம். ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் இத்தகைய கடமைகளில் சிறந்து விளங்கினான் என்பது புலவரால் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

**நாட்டு வளம்**

வேற்று நாடுகளில் இருந்து கடல் வழியாகக் கொண்டு வரப்பட்ட அணிகலன்கள் பண்டகச் சாலையில் சேர்த்து வைக்கப்பட்டிருந்தன. இதனை,

**''இன்னிசைப் புணரி யிரங்கும் பௌவத்து**
**நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தர்''**[26]

என்று கூறுவதால் பழங்காலத்தில் வேற்று நாடுகளிலிருந்தும் பொருட்கள் இறக்குமதி செய்யப்பட்டமை குறித்து அறியலாகிறது. மேலும், சேர நாட்டு உழவர்கள் தம் நாட்டின் வளத்தைப் பெருக்கும் பொருட்டு புன்செய் நிலங்களில் இருந்த வேலம் மரங்களை அழித்து நிலத்தைப் பண்படுத்தினர். பின்னர் உழவு மாடுகளைக் கொண்டு ஏர்பூட்டி விதைப்புச் செய்தனர். இவ்வாறு ஏர் ஓட்டுகின்றபோது ஏரின் கொழுமுனை சென்ற படைசாலில் ஒளிமிக்க மணிகள் வெளிப்பட்டுத் தோன்றின. இத்தகைய வளம் கொண்டது சேரநாடு என்பது,

**''நாஞ்சி லாடிய கொழுவழி மருங்கின்**
**அலங்குகதிர்த் திருமணி பெறூஉம்''**[27]

என்று நச்செள்ளையார் கூறுவதன் வழி அறியப்படுகின்றது. இவ்வாறு சேரலாதன் கல்வி, கொடை, வீரம், புகழ், முதலியவற்றில் சிறந்து விளங்கினான் என்பதைப் பதிற்றுப்பத்தில் காக்கைப்பாடினி நச்செள்ளையார் காட்சிப்படுத்துகின்றார்.

## 2. கடல் பிறக்கோட்டிய செங்கட்டுவன்

வஞ்சியைத் தலைநகராகக்கொண்டு சேரநாடு முழுவதையும் ஆட்சி செய்தவன் சேரன் செங்குட்டுவன். தொண்டி, மரந்தை போன்ற அக்காலப் புகழ்ப்பெற்ற துறைமுகங்களும் இவனது ஆட்சிக்கு உட்பட்டிருந்தன. இவனது காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு எனக் கணித்துரைக்கப்படுகிறது. சிலம்பு பாடிய இளங்கோவடிகளுக்கு இவன் தமையனாவான். தம்மை இகழ்ந்துரைத்த வடநாட்டு அரசர் கனகவிசயரை பணியச் செய்து கண்ணகிக்குச் சிலை வடிக்கும் பொருட்டு இமயத்திலிருந்து கல்லெடுத்து அவ்வரசர் தலைமீது சுமத்தி வந்த திறமுடையவன். இதை சாமி சிதம்பரனார்,

> **''செங்குட்டுவன் கொடுங்கோஹூரில் கண்ணகி பிரதிட்டை செய்ததைப் பார்த்துக்கொண்டிருந்த ஏனைய அரசர்களில் நூற்றுவர் கன்ன மாளுத்திலும் (Melwa) கயவாகு இலங்கையிலும் (Cylon), நெடுங்கிள்ளி-எ பெருநற்கிள்ளி உறந்தையிலும், பாண்டியன் வெற்றிவேற் செழியன் கொற்கையிலும், கொங்கு இளங்கோசர் துளுநாட்டிலும் கண்ணகிக்குக் கோயில்கள் எடுத்தார்கள்.''**[28]

என்று செங்குட்டுவனால் கண்ணகிக்கு உண்டான பெருமை பற்றிக் கூறுகின்றார். இவனைப் பற்றி நற்றிணையில் அம்மூவனார், முடத்திருமாறன் போன்ற புலவர்களும் பாடியுள்ளனர்.

> **''பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பத்தில் வடவர் அஞ்சும் குடவர் கோமான் நெடுஞ்சேரலாதனுக்கும், சோழன் மணக்கிள்ளியின் மகளுக்கும் மகனாகப் பிறந்தவன் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் எனப் பரணர் இவனைச் சிறப்பிக்கின்றார்.''**[29]

இவன் கடலில் கலம் செலுத்துதற்கு இடையூராக இருந்து வந்த குறும்பர்கள் மீது படையெடுத்துச் சென்று அவர்களை வெற்றி கொண்டான். அதற்குப் பின்னர் அக்கடலில் பிறர் யாரும் கலம் செலுத்தவில்லை. அக்கடற்பரப்பு முழுதும் சேரனுக்கு உரிமையுடையதாக இருந்தது. இச்செய்தியை மாறோக்கத்து நப்பசைலையார் என்னும் பெண்பாற் புலவர்,

> **''சினமிகு தானை வானவன் குடகடல்**
> **பொலந்தரு நாவா யோட்டிய வவ்வழிப்**
> **பிறர்கலஞ் செல்கலாது...''**[30]

என்று கூறுவதால் அறியலாம். சேரன் செங்குட்டுவன் கடற்போரில் குறும்பர்களை வென்றமையால் இவன் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் என்று

அழைக்கப்பட்டான். இவன் 'வானவரம்பன்' எனவும் கடலோட்டிய வேல்கெழுகுட்டுவன் எனவும் அழைக்கப்படுகின்றான். இவனை உ.வே.சா.,

> **"மோக்கூர் மன்னன் பழையனது காவல் மரத்தினை பல துண்டங்களாகத் துமித்தவன். இவன் தன்னைப் பாடிய பரணர்க்கு உம்பற்காட்டு வாரியையும் தன்மகன் குட்டுவன் சேரலையும் பரிசாகக் கொடுத்தான் என்பது பதிற்றுப் பத்தின் ஐந்தாம் பத்தின் பதிக உடையால் அறியப்படுகிறது.**[31]

என்று கூறுகின்றார். இவன் கடலில் உண்டான போரில் வெற்றி பெற்றவன் என்றும் பகைவர் அச்சமுறும்படியான தாக்குதலை உடையவன் என்றும் பகைவரின் பல அரண்களையும் கடந்து கோட்டையின் அரணை உடைத்து அதில் உள்ளோரை அச்சத்தால் உறக்கமில்லாமல் செய்பவன் என்றும் இவனது போர்த்திறம் சிறப்பிக்கப்படுகிறது. இவனது தாக்குதலுக்கு அஞ்சி மதிலுக்குள் இருந்த பகைவர் தவித்ததைப் போல தலைவனைப் பிரிந்தத் தலைவி உறங்காது தவித்தாள் என்பதை,

> **"கடல்கால் கிளர்ந்த வென்றி நல்வேல்**
> **வானவரம்பன் அடன்முனைக் கலங்கிய**
> **வுடைமதில் ஓராண் போல**
> **வஞ்சுவரு நோயொடு துஞ்சாதேனே"**[32]

என்று வெள்ளிவீதியார் தமது பாடலடிகள் வழி கூறுகின்றார். "குடிகளெல்லாம் இவனாட்சியில் மகிழ்ச்சி மிக்கவர்களாய்த் தம் அரசன் வெற்றியைத் தமக்குரிய பெருமையாகவே கொண்டு மகிழந்தனர்"[33] என்றும் அறியப்படுகின்றது.

**3. பாலைபாடிய பெருங்கடுங்கோ**

வானளாவிய புகழையும் வெற்றியையும் உடைய சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ கருவூரைத் தலைநகராகக் கொண்டு சிறப்புற ஆட்சி செலுத்தியவன் ஆவான்.

> **"இச்சேரமான் முடிவேந்தர் மூவருள் ஒருவனாதலேயன்றி, நல்லிசைச் செய்யுள் பாடும் சான்றோர் கூட்டத்தும் ஒருவனாவான். இவன் பாடிய பாட்டுக்கள் பலவும் பாலைத் திணைக்கு உரியனவாம். பாலைக்கலி முற்றும் இவன் பாடியனவே. நற்றிணை, குறுந்தொகை, அகம் முதலிய நூல்களுள் காணப்படும் பாலைப்பாட்டுக்களுள் பல இவனால் பாடப்பட்டவை. இப்பாட்டுக்கள் அனைத்தும் இலக்கிய வளமும், அறவுணர்வும் நல்லிசை மாண்பும் உடையன."**[34]

என்று கூறப்படுவதால் சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோவின் வரலாறு அறியப்படுகிறது. மேலும் இவ்வரசனைப் பற்றி பா.சூரியநாராயணன்,

> **“கலித்தொகையில் உள்ள ஒரு பாட்டில் ‘பெருங்கடுங்கோன்பாலை’ என்று குறிப்பிடப்படுகிறான்... இவ்வரச புலவருடைய பாட்டுகளின் சில பகுதிகள் கணவனைப் பிரிந்து இருக்கும் ஒரு சிறந்த மனைவியின் துன்பத்தை நுண்ணறிவுடன் கூறும் இவருடைய திறத்தை எடுத்துக்காட்டுகின்றன.”[35]**

என்று குறிப்பிடுகிறார். இவன் கடைச்சங்கப் புலவருள் ஒருவனாவான். இவனது காலம் கி.மு. மூன்றாம் நூற்றாண்டின் முற்பகுதி என வரையறுக்கப்படுகிறது. இவனைப் பற்றி பெண்பாற் புலவர்களுள் பேய்மகள் இளவெயினினார் பலவாறு சிறப்பிக்கின்றார். இவன் புலவரால் போற்றப்படும் வெற்றியுடையவன். பகைவரின் காவல் மிக்க அரணை வென்று, தன்னை எதிர்த்து வந்தவர்களைப் புறமுதுகிட்டு ஓடச் செய்து அக்காட்சியைக் காணும் தன்மையுடையவன். இவனது வீரத்தைப் பாடிய பாடினி நன்மை தரும் அணிகலன்களைப் பரிசாகப் பெற்றாள். அவளோடு வந்த பாணன் வெள்ளி நாரால் தொடுக்கப்பட்ட பொன்னாலான தாமரையைப் பெற்றான். அவ்விருவரும் பெற்ற அத்தகைய பரிசினைப் தான் பெறவில்லை என்று பொருள்படும்படி பேய்மகள் இளவெயினியார் தம் பாடல் வழி கூறுகின்றார். இதனை,

> **“மறம்பாடிய பாடினியும்மே**
> **ஏருடைய விழுக்கழஞ்சிற்**
> **சீருடைய விழைபெற்றிசினே**
> **இழை பெற்ற பாடினிக்கும்**
> **குரல் புணர்சீர்க் கொளைவல் பாண்மகனும்மே**
> **என வாங்கு**
> **ஒள்ளழல் புரிந்த தாமரை**
> **வெள்ளி நாராற் பூப்பெற்றிசினே”[36]**

என்று பாடல் பாடி பரிசில் பெற்ற பாடினியும் பான்மகனும் பற்றி கூறப்பட்டுள்ளது. அக்காலத்தில் பொன்னைத் தீயிலிட்டுப் பதப்படுத்தி தாமரை மலர் போன்ற வடிவில் ஆபரணம் செய்யப்பட்டுள்ளது. அத்தகைய மலர் வடிவிலான ஆபரணத்தை வெள்ளி நாரால் கட்டி மாலை செய்யப்பட்டுள்ளது என்பது பேய்மகள் இளவெயினியின் பாட்டால் அறியப்படுகிறது.

**4. பெருஞ்சேரலிரும் பொறை**

இவன் பதிற்றுப்பத்தில் எட்டாம் பத்தின் தலைவனாக அரிசில் கிழார் என்னும் புலவரால் பாடப்பட்டுள்ளான். கி.பி.இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த இவன் சேரநாட்டில் பதினேழு ஆண்டுகள் ஆட்சி செலுத்தியுள்ளான்.

> **“இவன் செல்வக் கடுங்கோவுக்கும் வேள் ஆவிக்கோ பதுமனின் இரண்டாவது மகளுக்கும் பிறந்தவன் என்றும், இருபெரு வேந்தராகிய சோழர்-பாண்டியரையும் அவர்களுக்குத் துணையாக வந்த குறுநில மன்னர்களாகிய கொல்லிக் கூற்றத்து வல்வில் ஓரியையும் தகடூர் அதியமான் அஞ்சியையும் வென்று வாகை சூடினான் என்றும் பதிக வரலாற்றால் அறியப்படுகிறது.”**[37]

தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும் பொறை வல்வில் ஓரியை வென்ற பிறகு கொல்லி மலை சேரநாட்டுடன் இணைக்கப்பட்டது. இவனது கொல்லி மலை மிகுந்த வளம் பொருந்தியது. தெய்வம் விரும்பி வந்து தங்கும் சிறப்புடையது. இங்குள்ள அகன்ற இடத்தில் மேகம் விரும்பி மழையைப் பொழியும். இம்மலையின் உச்சியில் இருந்து விழும் அருவி மிகுந்த ஒலியுடையது. இத்தகைய காட்சியினை,

> **“.................... வென்வேள்**
> **மறமிகு தானைப் பசும்பூட் பொறையன்**
> **கார்புகன் றெடுத்த சூர்புக னனந்தலை**
> **மாயிருங் கொல்லி உச்சித் தாஅய்த்**
> **ததைந்துசெல் லருவியின்”**[38]

என்ற ஔவையின் பாடலடிகள் காட்டுகின்றன. பெருஞ்சேரலிரும் பொறை தகடூரை ஆண்ட அதியமானை வென்ற பிறகே ‘தகடூர் எறிந்த’ என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றான். இவன் மிகுந்த தமிழ்ப் பற்றுடையவன். தமிழறிந்த சான்றோர்களைப் போற்றிப் புரந்த பெருமையுடையவன். இவனது தமிழ்ப்பற்றினை விளக்கும் விதமாக இரண்டு நிகழ்வுகளைக் கூறலாம்.

> **“ஒன்று, முரசுகட்டில் அறியாதேறிய மோசிக் கீரரைத் தவறு செய்யாது, அவன் துயிலெழுந்துணையும் கவரி கொண்டு வீசியது ; மற்றொன்று, தன்னைப் பாடிய அரிசில் கிழார்க்குத், ‘தானும் கோயிலாளும் புறம் போந்து நின்று, கோயிலுள்ள வெல்லாம் கொண்மின்’ என்று காணம் ஒன்பது நூறாயிரத்தோடு அரசு கட்டிற்கொடுத்த அந்த அருமையுடைய செம்மல்.”**[39]

என்று கூறப்படுவதால் இவனது தமிழ்ப் பற்றும் தியாக உணர்வும் வெளிப்படுகிறது.

**சோழ மன்னர் வரலாறு**

சோழ மன்னர்கள் உறந்தையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செலுத்தி வந்தனர். ''சேரர் அக்கினி குலத்தவராகவும், பாண்டியர் சந்திர குலத்தவராகவும் கூறப்படுவதைப் போல சோழ வேந்தர் சூரிய குலத்தைச் சேர்ந்தவரென்பதை 'செங்கதிர்ச் செல்வன் திருக்குலம்'' என்று மணிமேகலை ஆசிரியர் குறித்துள்ளார்.''[40] அதேபோல், இவர்களின் அடையாளச் சின்னம் புலி உருவம் பொறிக்கப்பட்டதாகும். இவர்களது அடையாள மாலை ஆத்திப்பூ மாலையாகும். இமயத்தில் புலிப்பொறி நாட்டிய பெருமையும் சோழர்களுக்கு உண்டு. சோழரின் 'உறந்தை அவையம்' அக்காலத்தில் புகழ்பெற்று இருந்தமையை சங்கப்பாடல்கள் எடுத்துரைக்கின்றன. கரிகால் பெருவளத்தான் போன்றோர் காவிரிப் பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்துள்ளனர். சோழநாடு நீர்வளமும் நிலவளமும் நிறைந்தது. இங்கு கடல் வாணிபம் சிறப்புற நடைபெற்றது. சோழ மன்னர்கள் 'கிள்ளி', 'சென்னி', என்னும் குடிப்பெயர்களைக் கொண்டு திகழ்கின்றனர். சோழ மன்னர்கள் சேரர் பாண்டியர் ஆகியோருக்குப் பிற்காலத்தவர் என்ற கருத்தும் நிலவுகின்றது. தொல்காப்பியர் சேர, சோழ, பாண்டியர் மூவரையும் ஒருசேர குறிப்பிடுவதால் இக்கருத்து மறுப்புக்குள்ளாகின்றது. சோழ முடிவேந்தர்களில்,

1. கரிகால் பெருவளத்தான்
2. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்
3. சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி

ஆகிய மூவர் மட்டுமே பெண்பாற் புலவர்களால் சிறப்பிக்கப்பட்டுள்ளனர். அவர்களின் வாழ்வியல் வரலாறு மட்டுமே இங்கு ஆராயப்படுகிறது.

**1. கரிகால் பெருவளத்தான்**

சோழ மன்னர்களில் தலைசிறந்து விளங்கியவன் கரிகால் பெருவளத்தான். இவனைப் பற்றி வெண்ணிக் குயத்தியார், முடத்தாமக் கண்ணியார் ஆகிய இரு பெண்பாற்புலவர்கள் பாடிச் சிறப்பித்துள்ளனர்.

**“இவன் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்து அரசாண்டவன் எனப் பட்டினப்பாலை கூறுகிறது. இவன் சோழன் உருவப் பல்தேர் இளஞ்சேட் சென்னியின் புதல்வன். இளமையில் நெருப்பால் சுடப்பட்டதால் கால் கரியாயிற்று என்பதால் கரிகாலன் என்ற பெயரைப் பெற்றதாகவும் கூறுவர்.”[41]**

என்பதனால் இவனது வரலாறு ஓரளவு அறியலாகின்றது. “இவன் பிற்காலத்தில் தன் நாட்டை வளம்படுத்திய சிறப்பால் ‘வளவன்’ என்றும், கரிகால் வளவன் என்றும் புகழப்பட்டான். காவிரிக்கு இருமருங்கிலும் கரைகளமைத்து நீர்வளத்தையும், நிலவளத்தையும் பெருகச் செய்ததோடு வாணிகத்தையும் வளர்த்துச் செல்வம் செழிக்கச் செய்ததால் கரிகாற் பெருவளத்தான் என்றும், திருமாவளவன் என்றும் புலவர்களால் போற்றப்பட்டான்.”[42] இவன் இளஞ்சேட் சென்னியின் மகன் என்பது,

**“உருவப் பல்தேர் இளையோன் சிறுவன்”[43]**

என்று முடத்தாமக் கண்ணியாரால் குறிப்பிடப்படுவதால் அறியப்படுகின்றது.

**அரசுரிமை**

கரிகால் பெருவளத்தான் தாய் வயிற்றில் இருக்கும்பொழுதே இவனது தந்தை இறந்துவிட்டார். அதனால், கருவில் இருந்தபோதே அரசுரிமை பெற்ற பெருமையுடையவனானான். இளம் வயதிலேயே பேராண்மை கொண்டவனாகவும் அறிவிற் சிறந்த சான்றோனாகவும் திகழ்ந்தான். இதனை,

**“தாய் வயிற்றிலிருந்து தாயம் எய்தி
எய்யாத் தெவ்வர் ஏவல் கேட்ப
செய்யார் தேஎம் தெருமரல் கலிப்ப”[44]**

என்று பாடியுள்ளனர். இளம் வயதிலேயே அரசுரிமை கொண்டவனாதலால் இவனை அழித்தொழிக்கப் பகைவர்கள் பல முயற்சிகளை மேற்கொண்டும் இறுதியில் இவனிடம் தோல்வியுற்றே நின்றனர்.

**நல்லாட்சி**

சோழநாட்டின் நானிலப் பகுதிகளில் வாழும் மக்கள் அனைவருக்கும் ஒரு குறையும் நேராதவாறு நாடு முழுவதும் தன் ஒரு குடையின் கீழ் கொண்டு நல்லாட்சி புரிந்தவன் கரிகால் பெருவளத்தான். வெற்றி தரும் வேலை உடைய இவன்

அறநெறியில் நின்று செங்கோலாட்சி செலுத்தி மக்களை நல்வழிப்படுத்தினான். இதனை முடத்தாமக் கண்ணியார்,

**"ஒரு குடையான் ஒன்று கூற**
**பெரிது ஆண்ட பெருங்கேண்மை**
**அறனொடு புணர்ந்த திறன் அறிசெங்கோல்**
**அன்னோன் வாழி வென்வேற் குரிசில்"[45]**

என்று கூறுவதால் இவனது ஆட்சித்திறம் அறியப்படுகின்றது.

### சோழ நாட்டு வளம்

கிழக்குக் கடற்கரையை ஒட்டி அமையப்பெற்றது சோழநாடு. காவிரிப் பூம்பட்டினம் கரிகாலனது தலைநகராக இருந்தது. இவனது ஆட்சியில் சோழநாடு மிகுந்த வளமுடையதாகத் திகழ்ந்தது. மருதநிலத்தில் விளைச்சல் பெருகியது. மருதநிலத்து மக்கள் இட்ட பலியுணவை உண்டதனால் காக்கைகள் சோற்றுணவை வெறுத்தன. கடற்கரை அருகே உள்ள நொச்சி மரப்புதர்களில் ஆமைகள் குட்டிகளை ஈன்று பாதுகாத்தன. பசிக்கும் போது உண்பதற்காக ஆமைக்குட்டிகளை எடுத்துக் காக்கைகள் மறைத்து வைத்தன. கடற்கரையின் மணல் திட்டுகளில் மருதநிலத்து உழத்தியர் சிறுவீடுகட்டி விளையாடினர். பலாப் பழத்தையும் பாகற்பழத்தையும் உண்ட ஆண்மயில்கள் பெண்மயில்களை அகவியவாறு மருத மரங்களிடையே பறந்து திரிந்தன. யாழிசை போன்ற வண்டின் இனிமையான ஓசையைக் கேட்டு அம்மயில்கள் நடனமாடின. கரும்பு பயிர்களை அறுவடை செய்கின்றவர்களின் பாடல் ஒலியைக் கேட்ட நாரைகள் அச்சமுற்று அங்கிருந்து நீங்கி பகன்றைக் கொடிகள் படர்ந்த இடத்திற்குச் சென்றன. அங்கு தங்குவதற்கு வெறுப்புற்றுக் கடற்கரை அருகே உள்ள சோலைகளில் தங்கின. அங்கு இருக்கவும் வெறுப்புற்று முல்லை மலர்கள் நிறைந்த காடுகளுக்குச் சென்றன. முல்லைக் காடுகளில் இருக்கவும் வெறுப்பு ஏற்பட்டதால் சுறாமீன் நிறைந்த கடற்கரைக்கு வந்து இறால் மீன்களைத் தின்று அருகிலிருந்த புன்னை மரங்களில் சென்று அமர்ந்தன. கடலலையின் பேரொலியால் அச்சம் கொண்ட நாரைகள் அங்கிருந்தும் நீங்கி அருகிலிருந்த பனைமரங்களுக்குச் சென்று தங்கின. இத்தகைய வளமும் வனப்பும் உடையது கரிகால் பெருவளத்தான் ஆண்ட சோழநாடு என்பதை முடத்தாமக்கண்ணியார்,

**“................. ஒல்லெனத்**
**திரை பிறழிய இரும் பௌவத்துக்**
**கரை சூழ்ந்த அகன் கிடக்கை**
**மா மாவின் வயின் வயின் நெல்**
**------ -------- --------- -------**
**------- --------- --------------**
**இறவு அருந்திய இன நாரை**
**பூம்புன்னைச் சினைச் சேப்பின்**
**ஓங்கு திரை ஒலிவெரீஇ**
**தீம்பெண்ணை மடல் சேப்பவும்’’**[46]

என்று கூறிக் காட்சிப்படுத்துகின்றார். மேலும் காவிரியாறு பாய்கின்ற சோழ நாட்டின் மருதநிலத்து வயல் வளம் பற்றியும் சிறப்பித்துள்ளார். சோழநாட்டின் மருதநிலத்தில் நீர்வளமும் நிலவளமும் மிகுதியாக இருந்ததால் ஒரு வேலி நிலத்தில் ஆயிரம் கலம் நெல் விளையப்பெற்றது. அத்தகைய வளத்தைத் தருவதற்குக் காரணமாக அமைந்தது காவிரியாறு. இத்தகைய வளம் கொண்ட நாட்டிற்குத் தலைவன் கரிகால் பெருவளத்தான் என்பதை,

**“சாலி நெல்லின் சிறைகொள் வேலி**
**ஆயிரம் விளையிட்டு ஆக**
**காவிரி புரக்கும் நாடு கிழவோனே’’**[47]

என்னும் பாடலடிகள் காட்டுகின்றன.

**கரிகாலனின் பண்பு நலன்**

கரிகாலன் தன்னை நாடி வந்த இரவலர்களை அன்புடன் வரவேற்றுத் தன் பக்கத்தில் இருக்கச் செய்து இனிமை தரும் மொழிகளைப் பேசினான். இரவலரின் அழுக்கடைந்த ஆடைகளைக் களைந்து புதிய ஆடைகளைக் கொடுத்து உடுக்கச் செய்தான். பொற்கலன்களில் பலமுறை தேறல் கொடுக்கச் செய்து உண்பித்தான். இரவலர்கள் பலமுறை தேறலை அருந்தியதால் வழியின் களைப்பு நீங்கப் பெற்றனர். அரண்மனையின் ஒருபுறத்தில் தங்க இடமளித்து அவர்களை மேலும் மகிழ்வித்தான். இரவலரும் தவம் செய்த முனிவர்கள் அடைந்த பயனைப் போன்று துன்பம் நீங்கிக் களிப்புற்று இருந்தனர். தேறல் அதிகமாக உண்டதால் அவர்களுக்கு மனதில் ஏற்பட்ட மயக்கத்தையும் நடுக்கத்தையும் தவிர வேறு துன்பம் எதுவும்

இல்லாமல் இருந்தது. இவ்வாறு இரவலரைப் போற்றி உபசரிக்கும் பண்புடையவன் கரிகாலன் என்பதை முடத்தாமக்கண்ணியார்,

> **''ஆறுசெல் வருத்தம் அகல நீக்கி**
> **அனந்தர் நடுக்கம் அல்லது யாவதும்**
> **மனம் கவில்பு இன்றி...''**[48]

என்று கூறுவதனால் தெளியலாம். சங்ககால மன்னர்கள் இரவலர்களை நாடிச் சென்று கொடை வழங்கியதாகத் தெரியவில்லை. அதேபோல், இரவலரும் தமது வறுமையைப் போக்கிக் கொள்ளும் பொருட்டு மன்னரின் பெருமைகளைக் கூறி புகழ்ந்துள்ளனர் என்றும் உணரலாகிறது. புலவர்களும் இதற்கு விதிவிலக்கில்லாமல் இருந்துள்ளனர். புலவர்கள் மன்னனைப் புகழ்ந்து பாடி பரிசில் பெற்ற நிலையை பதிற்றுப்பத்து எடுத்துரைக்கிறது. இவ்வாறு அக்காலம் முதல் இக்காலம் வரையிலும் சில மரபுகள் பிறழாமல் கடைபிடிக்கப்பட்டு வந்துள்ளன.

**வெண்ணிப்போர்**

சோழர்க்குரிய ஆத்தி மாலையைத் தரித்தவன் கரிகாலன். இவனை எதிர்த்துப் பனந்தோட் மாலை அணிந்த சேரனும் வேம்பு மாலை அணிந்த பாண்டியனும் ஒருசேர படைதிரட்டி வந்தனர். அவ்விரு முடிவேந்தர்களையும் சோழநாட்டிலுள்ள வெண்ணி என்னுமிடத்தில் போரிட்டுத் தோற்றோடச் செய்தான் கரிகாலன். இப்போர் குறித்துப் பொறுநராற்றுப் படையில் முடத்தாமக் கண்ணியார்,

> **''இருபெரு வேந்தரும் ஒருகளத்து அவிய**
> **வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்தாள்**
> **கண்ஆர் கண்ணி கரிகால் வளவன்''**[49]

என்று கூறுகின்றார். கரிகாற் பெருவளத்தான் சேரர், பாண்டியர் ஆகிய இருவரையும் வெற்றி கொண்டது 'முதல் வெண்ணிப் போர்' என்றும், இதே இடத்தில் சேரமான் பெருஞ்சேரலாதனுக்கும் கரிகாலனுக்குமிடையே நடைபெற்ற போர் 'இரண்டாம் வெண்ணிப்போர்' என்றும் கூறப்படுகிறது. கரிகாலனுக்கும் பெருஞ்சேரலாதனுக்கும் வெண்ணிப் பறந்தலையில் கடும்போர் நடைபெற்றது. இப்போரில் சேரமான் புறப்புண்பட்டு தன்மானம் கருதி வடக்கிருந்து உயிர் துறந்தான். இந்நிகழ்ச்சியை வெண்ணிக் குயத்தியார் நேரில் கண்டு பாடியுள்ளார். சோழனின் பேராற்றலைச் சிறப்பித்துக் கூறும் இவர் சேரனின் வடக்கிருந்த மான

உணர்வையும் வியந்து கூறுகின்றார். சேரனை வென்ற களிப்பில் இருந்த கரிகாலனிடம் சென்ற குயத்தியார், வெற்றியால் உண்டான புகழை உனக்குத் தந்து, உன்னால் எய்த அம்பினால் புறப்புண்பட்டு வடக்கிருந்து உயிர்துறந்த சேரமான் உன்னை விடவும் பெரும் புகழ் அடைந்தான். நீ பெற்ற புகழை விடவும் சேரன் பெற்ற புகழ் போற்றத்தக்கது என்பதை,

**''களியியல் யானை கரிகால் வளவ**
**சென்றமர்க் கடந்தநின் னாற்ற றோன்ற**
**வென்றோய் நின்னினு நல்ல னன்றோ**
**கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை**
**மிகப்புக ழுலக மெய்திப்**
**புறப்புண் ணாணி வடக்கிருந் தோனே''**[50]

என்று கூறிச் சிறப்பித்துள்ளார். சேரன் வடக்கிருந்தபோது பலரும் அவனுடன் வடக்கிருந்து உயிர்த்துறந்ததாக அறியப்படுகிறது. சேரனின் தன்மான உணர்வை மதியாதவனாகக் கரிகாலன் இருந்தபோது அவனுக்கு உண்மை நிலையை உணர்த்தும் பொருட்டு வெண்ணிக் குயத்தியார் இப்பாடலைப் பாடியதாகவும் கூறப்படுகின்றது. ''இவ்வாறான கரிகாலனின் கன்னிப்போர், வெற்றி பெற்றதைக் குறித்துச் சோழநாட்டு மக்கள் யாவரும் வெற்றி விழாக்கொண்டாடிக் களிப்புற்றனர். அன்று முதல் சோழன் புகழ் நாடெங்கும் பரவியது.''[51] கரிகாலனின் வெற்றியைச் சிறப்பித்துப் பாடிய வெண்ணிக்குயத்தியார், தாம் வாழ்ந்த காலத்தில் கரிகாலனின் முன்னோர் பற்றி வழங்கி வந்த புராணக்கதை ஒன்றையும் கூறுகின்றார். கரிகாலனின் முன்னோர்களில் ஒருவன் கடலில் மரக்கலத்தைச் செலுத்தியபோது காற்று வீசாது போகவே, காற்று தேவனை அழைத்து வீசும்படி கட்டளையிடும் வலிமையுடையவனாக இருந்தான் என்பதை,

**''நளியிரு முந்நீர் நாவா யோட்டி**
**வளிதொழி லாண்ட வுரவோன்மருக''**[52]

என்று கூறுவதால் முன்னோர் குறித்த செய்தி பெறப்படுகின்றது. மேலும், பருவக்காற்றின் உதவியுடன் மரக்கலத்தை முதன்முதல் செலுத்தக் கற்றுக்கொண்டவர்கள் பழந்தமிழர் என்பது இதனால் பெறப்படுகின்றது. வாணிபத்திற்கும் கடற்போர் செய்தற்கும் அக்காலத்தில் மரக்கலம் பயன்படுத்தப்பட்டுள்ளது.

## 2. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

சோழர் மரபில் புறாவின் துயர் போக்கிய சிபிச் சக்கரவர்த்தியின் வழித்தோன்றலாகிய கிள்ளிவளவன் உறையூரைத் தலைநகராகக் கொண்டு சோழநாடு முழுவதையும் ஆட்சிச் செலுத்தியவன்.

> **"இவன் இளைஞனாக இருந்த போதே சோழநாட்டின் மன்னனாகப் பதவி ஏற்று ஆட்சி செலுத்தி வந்தான் எனவும் அப்போது தன் மரபில் இருந்த சுற்றத்தாரின் பகைக்கு அஞ்சிய நிலையில், இவனுக்கு மாமன் முறையான செங்குட்டுவன் தம் பெரும்படையுடன் வந்து பகைவர்களை வீழ்த்தி கிள்ளிவளவனின் நிலையான ஆட்சி செலுத்த வழிகோலினான்."[53]**

என்று கூறப்படுவதால் இவனது வரலாறு அறியலாகின்றது.

### கிள்ளிவளவனின் புகழ்

கிள்ளிவளவன் புறாவின் துயர் போக்கிய செம்பியன் மரபில் வந்தவனாகையால் இரவலர்க்குக் கொடுப்பது என்பது அவனது இயல்பாக அமைந்தது. அதனால் அவனுக்குப் புகழ் இல்லை என்றும் பகைவர்கள் அஞ்சத்தக்க பேராற்றல் வாய்ந்த தூங்கெயில் எறிந்த தொடிதோட்செம்பியன் இவனது முன்னோன் ஆகையால் பகைவரைக் கொல்லும் செயல் இவனுக்குப் புகழ் சேர்க்காது என்றும் சோழரின் உறையூரில் உள்ள அவையத்தில் அறம் எப்போதும் நிலைபெற்றிருப்பதால் அதனை இவன் செய்வதில் புகழ் இல்லை என்றும் இமயத்தில் வில்பொறி நாட்டிய சேரனின் பாதுகாப்பு மிகுந்த கருவூரை அழித்துப் பெற்ற வெற்றியே இவனுக்கு முறையான புகழைச் சேர்க்கும் ஒன்று என்றும் நப்பசலையாரால் சிறப்பிக்கப்படுகின்றான். இவனது புகழ் குறித்து நப்பசலையார்,

> **"இமயஞ் சுட்டிய வேம விற்பொறி**
> **மாண்வினை நெடுந்தேர் வளவன் றொலைய**
> **வாடா வஞ்சி வாட்டுநின்**
> **பீடுகழ நோன்றாள் பாடுங்காலே"[54]**

என்று சிறப்பிக்கப்படுவதின் மூலம் கிள்ளிவளவன், இமயத்தில் வில்பொறி நாட்டிய இமயவரம்பன் சேரலாதனோடு போரிட்டு அவனது தலைநகராகிய கருவூரை அழித்தான் என்பது பெறப்படுகின்றது.

**வெற்றிச் சிறப்பு**

கிள்ளிவளவன் மிகுந்த போர்த்திறம் கொண்டவன். பகைவரது நாட்டிலுள்ள அரசு நல்லவை என்று பாராமல் அதை அழித்தொழிக்கும் நோக்கிலேயே இருந்தான். பகைவரின் நாட்டிற்குள் புகும்போது சினமுற்ற ஐந்துதலை நாகம்போல் புகுந்தும் மலைக்குகையில் இடிஇடித்ததுபோல் முழங்கியும், மிக ஆழமான முதலைகள் நிரம்பிய அகழியையும், செம்பைக் கலந்து உருவாக்கிய மதிலையும் உடைய பழமையான அரசு நல்லது என்றும் பாராமல் அழிக்கும் வன்மையுடையவனாகவும் இருந்து வந்தான் என்பதை மாறோக்கத்து நட்பசலையார்,

> **''செம்புறம் புரிசைச் செம்மன்மூதூர்**
> **------ ---------- ---------- ---**
> **நல்ல வென்னாது சிதைத்தல்**
> **வல்லையா னெடுந்தகை செருவத்தானே''**[55]

என்று கூறுகின்றார். இதனால் இவனது போர்வன்மை புலப்படுகின்றது. அதோபோல் இவனது நாட்டில் பகைமன்னர்கள் நுழைந்துவிடாதபடி எந்நேரமும் தக்க பாதுகாப்பு இருந்தது. கோட்டையைச் சுற்றிலும் அகழி அமைக்கப்பட்டு அதில் முதலைகள் விடப்பட்டிருந்தன. கோட்டையின் மதிற் சுவர்கள் செம்பினைக் கூட்டி செய்யப்பட்ட உறுதியுடையன. இரவு நேரங்களில் காவலர்கள் தீபந்தத்தைப் பிடித்தவாறு காவல் செய்து வந்தனர். இதனால் பகைமன்னர் இவனை வெற்றி கொள்வது என்பது அரிதானதாக இருந்தது.

**வயல் வளம்**

கிள்ளிவளவன் கொடையில் சிறந்தவன் என்பதை மாறோக்கத்து நப்பசலையார் இரு இடங்களில் இவனது முன்னோனான சிபிச் சோழனோடு ஒப்பிட்டுக் கூறுகின்றார். இவனது 'வெண்ணி' என்ற ஊர் தற்போது கோயில் வெண்ணி என வழங்கப்படுகிறது. இவ்வூர் வயல் வளம் நிறைந்தது. இங்குள்ள பொய்கையில் வாளை மீன்கள் பிறழ்வதைக் கண்ட நீர்நாய் பசியின்மையால் அதை உண்ணாது உறக்கத்தை மேற்கொண்டிருந்தது. கோயில் வெண்ணியைச் சுற்றியிருந்த வயல்களில் ஆம்பல் மலர்கள் நிரம்பியிருந்தன. இதனை ஔவையார்,

> **''கைவண் கிள்ளி வெண்ணி சூழ்ந்த**
> **வயல்வெள் ளாம்ப லுருவ நெறித்தழை''**[56]

என்று கூறுகின்றார். இவனது வழிவந்தோராக நெடுங்கிள்ளியும், பெருநற்கிள்ளியும் கூறப்படுகின்றனர். கோயில் வெண்ணி என்பது இன்று தஞ்சை மாவட்டதிலுள்ள கோயில் வெண்ணியைக் குறிப்பதாகும்.

**கிள்ளி வளவனின் மறைவு**

இவன் குறமுற்றம் என்னுமிடத்தில் உயிர்த் துறந்ததால் 'குறமுற்றத்துத் துஞ்சிய' என்னும் அடை கொடுத்து அழைக்கப்பெற்றான். இவனது போர் வெற்றியையும், படைவன்மையையும், கொடை வன்மையையும் பலவாறு சிறப்பித்துள்ள நப்பசலையார் இவனது மறைவு குறித்தும் மனமுருகிப் பாடியுள்ளார். வளவனின் உயிரைப் பறித்த கூற்றம், அவன் மீது சினங்கொண்டோ அல்லது மெய்தீண்டியோ அல்லது பகைமைக் கொண்டோ உயிரைக் கவர்ந்திருக்க முடியாது. அதனால், பாடுவோர் போல சென்று கையால் அவனைத் தொழுது நின்று வாழ்த்தி, இரந்து அவனது உயிரைக் கொண்டிருத்தல் வேண்டும் என்று மனம் கசிந்து கூறுகின்றார். இதனை,

> **''பாடுநர் போலக் கைதொழுது தேந்தி**
> **இரந்தன் றாகல் வேண்டும்**
> **--------- -------- ---------**
> **திண்டேர் வளவற் கொண்ட கூற்றே''[57]**

என்ற நப்பசலையாரின் பாடலடிகள் பறைசாற்றுகின்றன. மேலும், இவனது இறப்பு குறித்து ஆடுதுறை மாசாத்தனார் என்னும் புலவரும் (புறம் 227), ஐயூர் முடவனார் என்னும் புலவரும் (புறம் 228) பலவாறு இரங்கிப் பாடியுள்ளனர். இவ்வாறு கிள்ளிவளவனது வரலாறு பேசப்படுகிறது.

**3. சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி**

இவன் சோழர் மரபில் தோன்றிய சிறந்த வீரன். இவனது தந்தை தித்தன் என்ற சோழ மன்னாவன். இவனது வரலாறு பற்றி வ.குருநாதன்,

> **''தந்தையின் ஆட்சிக் காலத்தில் யாது காரணத்தாலோ அவனோடு கருத்து வேறுபட்டு அவனிடத்திலிருந்து நீங்கிப் போய்ப் புல்லரிசி யுணவை உண்ணும் வறியவனாகியும் (புறம்.84) வலியனாய் மற்போர் முதலான போர்ப் பயிற்சிகளில் தேர்ந்து திகழ்ந்தான்''[58]**

என்று கூறியுள்ளார்.

**போர்த்திறம்**

கோப்பெருநற் கிள்ளி மிகுந்த போர்த்திறம் கொண்டவன் என்பது நக்கண்ணையாரின் பாடற் கருத்தால் அறியப்படுகின்றது. விழா நடைபெறும் இடத்தில் ‘கல்’ என்னும் ஓசை இருப்பதைப் போன்று இவன் போர் நிகழ்த்தும் இடத்திலும் அத்தகைய ஓசை இருக்கும். கடல் துறையின் ஏற்ற இறக்கத்தைக் கண்டு அஞ்சும் உமணர்களைப் போல் தமது வீரம் குறித்து தாமே பெருமை பேசி வந்த வீரர்கள் இவன் போர்க்களம் புகுந்ததும் அஞ்சி ஒதுங்கினர். இவன் தன் தந்தையாகிய தித்தனுடன் கருத்து வேறுபாடு கொண்டு ஆமூர் என்னும் ஊரில் வந்து தங்கியிருந்தான். அப்போது மல்லன் ஒருவனோடு போரிட நேர்ந்தது. இக்காட்சியை ஊர்மக்கள் பலரும் கண்டனர். காண்போரில் ஒருவராக இருந்த நக்கண்ணையார் அங்குக் கூடியிருந்த மக்கள் வெற்றி குறித்துப் பலவாறு பேசலுற்றதைக் கேட்கிறார். இறுதியில் பெருநற்கிள்ளி வெற்றி பெற்றான் என்பதை அறிந்து பெரிதும் மகிழ்வுற்றதாகத் தமது பாடலில் குறிப்பிட்டுள்ளார். இவனது போர்த்திறத்தை நக்கண்ணையார்,

**“ஏமுற்றுக் கழிந்த மள்ளர்க்**
**குமணர் வெரூஉந் துறையின் னன்னே”[59]**

என்றும், மக்கள் அனைவரும் கூடிக்கண்டு களித்த போர்க்காட்சி பற்றி,

**“முழாவரைப் போந்தை பொருந்திநின்**
**யான் கண்டனவை னாடாகுதலே”[60]**

என்றும் கூறுகின்றார். இதனால் பெருநற்கிள்ளி மிகுந்த போர்வன்மை உடையவன் என்பது பெறப்படுகின்றது. இவனது ஆமூர் போர் குறித்து சாத்தந்தையார் என்னும் புலவரும் சிறப்பித்துள்ளார். “ஓர் யானை மூங்கிலை உடைப்பது போல கோப்பெருநற்கிள்ளி ஆமூர் மல்லனின் தலையையும் காலையும் உடைத்தான் என்றும் தித்தன் தனது மகனிடத்தில் அன்பு உடையவனாயினும், அல்லாதவனாயினும் சரி, தனது மகன் அடைந்த வெற்றியைத் தானே காணுதல் வேண்டுமென்று கூறுகின்றார்.”[61] நக்கண்ணையார் போரவைக் கோப்பெருநற் கிள்ளியின் மீது ஒருதலைக் காதலுற்று இருந்ததாகவும் கூறப்படுகின்றது. இப்புலவரின் மூன்று பாடலும் சோழனை மன்னனாகப் பாவிப்பதைவிட தமது நெருங்கிய உறவுடையோனகவே நினைத்துப் பாடப்பட்டிருப்பதாகத் தோன்றுகிறது. பசலை படர்ந்து மேனிவாட்டமுற்றுத் தொடி கழலுவதும், தாய்

மகளின் நோய் அறியாது வெறியாட்டு நிகழ்த்துவதும், தலைமக்களது காதலை ஊர் அறிய நேர்ந்தால் அலர் தூற்றுவதும் அகத்திணை மரபாக இருந்தபோதிலும், இதனை நக்கண்ணையார் புறத்தில் வைத்துப் பாடியுள்ளார். இதனால், இவர் போரவைக் கோப்பெருநற்கிள்ளியின் மீது ஒருதலைக் காதல் கொண்டு பாடியிருக்கலாம் எனவும் கருதத் தோன்றுகிறது.

**சிற்றரசர்கள் வரலாறு**

பழந்தமிழகத்தைச் சிறப்புற ஆண்ட பெருமை முடிவேந்தர்களுக்குரியது. அவர்களுக்கு அடுத்த நிலையில் வைத்துப் போற்றப்படும் பெருமைக்குரியவர்கள் சிற்றரசர்கள். இவர்கள் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் ஆட்சி செலுத்தினர். முடிவேந்தர்களைப் போலவே சிற்றரசர்களும் தமது குடிமக்களைச் சிறப்புறப் பாதுகாத்து வந்தனர். சிற்றரசர் பலர் கொடை வள்ளல்களாகவும் போர்த்திறம் மிக்கவர்களாகவும் திகழ்ந்தனர். இவ்வாறு சிறப்புற ஆட்சி செலுத்திய சிற்றரசர்கள் பலரைப் பெண்பாற் புலவர்கள் சிறப்பித்துப் பாடியுள்ளனர். அதனடிப்படையில் குறுநில மன்னர்கள், வேளிர்கள், சிற்றூர் மன்னர்கள் எனப் பாகுபடுத்தி ஆய்வுக்கு உட்படுத்தப்படுகிறது.

**குறுநில மன்னர்கள்**

முடிவேந்தர்களின் ஆட்சிக்குட்பட்ட குறுகிய நிலப்பரப்பைக் கொண்டு ஆட்சி செலுத்தியவர்கள் குறுநில மன்னர்கள் ஆவர். அரசாட்சி முறையில் முதலில் இடம் பெற்றது சிற்றரசு என்றும் கூறப்படுகிறது. இதை,

> **“சங்க காலத்தில் பழங்காலச் சிற்றரசு முறையின்று விடுபட்டு பலவகை அமைப்புகளுடன் பொருந்திய பேரரசு முறை தழைத்திருந்தது. அத்தகைய ஆட்சி முறையைக் “குடிதழுவிய கோனாட்சி முறை” என்று குறிப்பிடலாம். மக்களால் விரும்பப்பட்டு மக்களுக்காக அரசோச்சிய மன்னர்களே ஆண்டு வந்தனர்.”**[62]

சிற்றரசர்கள் முடிவேந்தர்களுக்குப் படைத்தளபதிகளாகவும், தனித்தும் செயல்பட்டு வந்தனர். போர்க்காலங்களில் முடிவேந்தர்கள் குறுநில மன்னர்களின் துணையைப் பயன்படுத்திக் கொண்டனர். இத்தகைய முறையில் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளை ஆண்டு வந்த குறுநில மன்னர்களைச் சேர நாட்டைச் சேர்ந்தவர்களாக,

1. அதியமான் நெடுமான் அஞ்சி
2. அதியமான் பொகுட்டெழினி
3. ஏறைக்கோன்
4. மலையமான் சோழியவேனாதி திருக்கண்ணன்
5. மலையமான் திருமுடிக்காரி

ஆகியோரும், பாண்டியர் மரபைச் சேர்ந்த குறுநில மன்னராக,

1. நாஞ்சில் நாட்டு வள்ளுவன்

என்போனும், வேளிர் குலத்தவனாக,

1. வேள் பாரி

என்போனும், சோழ நாட்டு மன்னர்களாக,

1. அகுதை
2. அவியன்
3. அழிசி
4. அன்னி
5. முடியன்

ஆகியோரும், சோழ நாட்டைச் சார்ந்த வேளிர் குலத்தவர்களாக,

1. அழுந்தூர் வேள் திதியன்
2. வேள் எழினி
3. வேள் எவ்வி

ஆகிய மூவரும் சங்கப்பெண்பாற் புலவர்களால் சிறப்பித்துப் பாடப்பட்டுள்ளனர். இவர்களின் வாழ்வியல் சூழல் உள்ளவாறு ஆய்வுக்கு உட்படுத்தப்படுகிறது.

**சேரநாட்டு மன்னர்கள்**

**1. அதியமான் நெடுமான் அஞ்சி**

சங்க காலத்தில் இருந்த சிறப்புற்ற நகரங்களில் ஒன்று தகடூர். சேரர் மரபைச் சார்ந்த அதியமான் நெடுமான் அஞ்சி என்பவன் இந்நகரைத் தலைமையிடமாகக் கொண்டு ஆட்சி செலுத்தினான். தகடூர் பல மாடமாளிகைகளைக் கொண்டிருந்தது. அன்பர் என்பவர்க்கு மட்டுமே அங்கு இடமிருந்தது. பகைவர் எவரும் நுழைய முடியாத அளவிற்கு வீரர்களால் காவல் செய்யப்பட்டு வந்தது. இத்தகைய சிறப்பு மிக்க நகரை ஔவையார்,

**''ஆர்வலர் குறுகி னல்லது காவலர்**
**கனவினுங் குறுகாக் கடியுடை வியனகர்**
**மலைக்கணத் தன்ன மாடஞ் சிலம்ப''**[63]

என்று கூறுகின்றார். அதியமான் 'அதிகர்' மரபில் தோன்றியவன். 'அஞ்சி' என்பது இவனது இயற்பெயர். தம் பெயரையும் தாம் தோன்றிய குலமரபையும் இணைந்து 'அதியமான் நெடுமானஞ்சி' என அழைக்கப்பட்டான். இவனது பெயர்,

**''கடுமான் றோன்ற னெடுமா னஞ்சி''**[64]

என்றும்,

**''அணிபூ ணணிந்த யானை யியறேர் ரஞ்சி**
**அதியமான் .......... ''**[65]

என்றும்,

**''மடவர் மகிழ்துணை நெடுமா னஞ்சி''**[66]

என்றும், ஔவையாரால் குறிப்பிடப்பட்டுள்ளது. அதியமான் சேரர் மரபைச் சார்ந்தவனாகையால் பனம்பூ மாலையை அணிந்திருந்தான். இதனை,

**''ஈகையங் கழற்காலிரும் பனம் படையல்''**[67]

என்று ஔவையார் சுட்டுவதால் அறியலாம். அதியமான் தகடூர் பகுதி முழுதையும் ஆண்டதோடு மட்டுமல்லாமல், குறும்பொறையூர், ஆரைக்கால் என்று அழைக்கப்பட்ட இன்றைய நாமக்கல் பகுதியையும் ஒருசேர ஆண்டு வந்தான் என்று கல்வெட்டுக்கள் கூறுகின்றன. பண்டைய தகடூராகத் திகழ்ந்த இன்றைய

தர்மபுரியில் இன்றளவும் அதியமான் கோட்டை என்னும் ஓர் ஊர் அதியமான் புகழைப் பறைசாற்றும் வண்ணம் இருந்து வருகிறது. மேலும், இவனது வாழ்வியல் குறித்துப் பெ.கோவிந்த மூப்பனார்,

> **‘‘வடிவார் குழலி என்ற மங்கையை மணந்து உடலும் உயிரும்போல ஒன்றி இல்லறம் நடத்தினான். அவன் தன் தந்தை விண்ணுலகடைந்த பின்தான் தன்னுடைய நாட்டை அரசாண்டு வந்தான். அதியமான் குடையும், அவன் தன்னிடத்தே முறை வேண்டினர்க்கு நடுநிலையறிந்து கூறும்விடையும் அவன் நாட்டு மக்களை மகிழ்வித்தன.’’**[68]

என்று கூறப்படுவதாலும் மேலும் அறியலாகின்றது.

**அதியமானின் பண்பு நலன்**

அதியமான் தன் குடிமக்களைச் சிறப்புடன் போற்றிப் பாதுகாத்தான். பொருள் இருந்த காலத்து அனைவருக்கும் உணவளித்தும், அவை இல்லாத நிலையில் தம்மிடம் இருப்பதைக் கொண்டு பலரோடு பகிர்ந்து உண்டும் வாழ்ந்தவன். இத்தகைய குணமுடைய அதியமான் வறியவராகிய சுற்றத்திற்கெல்லாம் தலைவனாகவும் திகழ்ந்தான்.

> **‘‘உண்டாயிற் பதங்கொடுத்**
> **தில்லாயி னுடனுண்ணும்**
> **இல்லோ ரொக்கற் றலைவன்’’**[69]

என்று அவனது பண்பு நலன் சிறப்பித்துக் கூறப்படுகிறது. அதியமான் மிகுந்த வீரமுடையவனாக இருந்த போதும் அறநெறி தவறி போர் புரிந்திலன். தீக்கடைக்கோல் கடையாதபோது தீயை வெளிப்படுத்தாதது போல அதியமான் தன் வலிமையை அடக்கி வைத்தும், போர் உண்டானபோது தீக்கடைக் கோலிலிருந்து வெளிப்படும் தீ போல் தன் வலிமையைப் பலரும் அறியும்படி வெளிப்படுத்தும் பண்புடையவனாகவும் திகழ்ந்தான். இதனை,

> **‘‘இல்லிறைச் செரீஇய ஞெலிகோல் போலத்**
> **தோன்றா திருக்கவும் வல்லன் மற்றதன்**
> **கான்றுபடு கனையெரி போலத்**
> **தோன்றவும் வல்லன்றன் தோன்றுங் காலே’’**[70]

என்று வரும் பாடலடிகள் எடுத்துரைக்கின்றன.

**கொடைத் திறம்**

அதியமான் தம்மை நாடி வரும் வறியவர்க்கு கைமாறு கருதாமல் பொழியும் மழைபோல் காலமும் இடமும் தகுதியும் பாராது கொடையளிக்கும் தன்மையுடையவன். இவனிடம் பரிசில் வேண்டி ஒருநாள் சென்றாலும் இருநாள் சென்றாலும், அவரே பலநாட்கள் பலரோடு கூடிச் சென்றாலும், முதல் நாள் எவ்வாறு முகமலர்ச்சியுடன் வரவேற்று வேண்டிய பொருட்களை விரும்பிக் கொடுத்தானோ அதேபோல் விருப்பத்துடன் கொடையளிக்கும் தன்மையுடையவனாக இருந்தான். இதனை,

> **''ஓவா தீயுமாரி வண்கைக்**
> **கடும்பகட் டியானை நெடுந்தேரஞ்சி''[71]**

என்றும்,

> **''ஒருநாட் செல்லல மிருநாட் செல்லம்**
> **பலநாள் பயின்று பலரொடு செல்லினும்**
> **தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ''[72]**

என்றும், ஔவையார் கொடைத்திறம் குறித்துக் கூறுகின்றார். மேலும், இவன் வறியவர்களை அரவணைத்துச் செல்லும் பண்பாளனாகவும் இருந்தான். சிறிதளவு உணவு கிடைப்பினும் பெருமளவு கிடைப்பினும் அவற்றைப் பலருடன் கூடி உண்ணும் தன்மையுடையவனாக இருந்தான். வறியவர்க்குப் பொன்னையும் பொருளையும் தந்து உதவியதோடு பசிபோக உணவளித்து அவர்களோடு தானும் கலந்துண்ணும் பண்பாளனாகவும் இருந்தான். தம்மைச் சார்ந்து வாழ்பவர்க்குக் கொடுப்பதைக் காட்டிலும், இல்லையென இரந்து வருபவர்க்கு அதிகம் கொடுத்து மகிழ்ந்தான். திறனில்லாத அறிவிலிகளோடும் உடனிருந்து உண்டு மகிழும் எளிமையுடையவனாகவும் திகழ்ந்தான். இத்தகைய கொடையாளனைப் பற்றி ஔவையார்,

> **''உடைய னாயி னுண்ணவும் வல்லன்**
> **கடவர்மீது மிரப்போர்க் கீயும்**
> **மடவர் மகிழ்த்துணை நெடுமா னஞ்சி''[73]**

என்று சிறப்பித்துக் கூறுகின்றார். அதியமான் தன் நாட்டு மக்களின் குறையறிந்து குணமறிந்து ஒழுகும் பண்பாளனாகத் திகழ்ந்துள்ளான் என்பது இதனால் பெறப்படுகிறது.

**ஔவைக்கு நெல்லிக்கனி ஈதல்**

அதியமான் ஔவைக்கு நெல்லிக்கனி கொடுத்த வரலாறு அனைவரும் அறிந்ததே. இவன் ஆண்டு வந்த தகடூர் உயர்ந்த மலைப்பகுதிகள் நிறைந்தது. அத்தகைய மலைப்பிளவின் உச்சியில் விளைந்த கருநெல்லிக்கனி ஒன்றை அதியமான் பெற்றான். அக்கனி உண்பவரின் வாழ்நாளை நீட்டிக்கச் செய்யும் தன்மை கொண்டது. இதனை அறிந்த அதியமான், தான் கனியை உண்டு நீண்ட காலம் ஆட்சி செலுத்தி உலக இன்பங்களைப் பெறவேண்டும் என நினைக்காமல், புலமை சான்ற பெருமதிப்புடைய ஔவைக்குக் கொடுத்து உண்ணச் செய்தான். உண்ட பின்பு அக்கனியின் அருமை உணர்ந்த ஔவையார் இறைவனாகிய சிவபெருமான் தான் நஞ்சினை உண்டு அமுதினைத் தேவர்களுக்கு ஈந்ததுபோல் எனக்கு இறப்பினை உண்டாக்காத கனியைத் தந்து ஆயுளை நீட்டிக்கச் செய்த அதியமான் பிறைச் சந்திரனைத் தலையில் சூடியிருக்கும் சிவனைப்போல் நெடுங்காலம் வாழவேண்டும் என வாழ்த்தினார். இதனை,

**“நீலமணிமிடற் றொருவன் போல**
**மன்னுக பெரும நீயே**
**---- -------- --------- --------**
**சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா**
**தாத னின்னகத் தடக்கிச்**
**சாத னீங்க வெமக்கீந் தனையே”**[74]

என்று ஔவையார் பாடிச் சிறப்பிக்கின்றார். அதியன் ஔவைக்கு நெல்லிக்கனி கொடுத்த செய்தியைச் சிறுபாணாற்றுப்படையும் உறுதிப்படுத்துகிறது. அதில், கடையேழு வள்ளல்களில் ஒருவனாக அதியமான் வரிசைப்படுத்தும் போது,

**“----------- மால்வரைக்**
**கமழ் பூஞ்சாரல் கவினிய நெல்லி**
**அமிழ்து விளை தீம்கனி ஔவைக்கு ஈந்த**
**உரவுச் சினம் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்**
**அரவக் கடல்தானை அதிகனும்”**[75]

என்று இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தந்தனார் கூறுவதால் அறியலாகின்றது. ஔவைக்கு நெல்லிக்கனி கொடுத்த நிகழ்வே அதியமானைக் கடையேழு வள்ளல்களில் ஒருவனாகத் திகழ காரணமாக இருந்தது என்பது இதனால் பெறப்படுகிறது.

**அதியமானின் வீரமும் வெற்றியும்**

புலியின் சீற்றத்திற்கு முன் மான் கூட்டம் நிற்காது. இருள் நிறைந்த வானமும் திசைகளும் சூரியன் உதித்தால் அங்கு இருள் தங்காது. அதுபோல அதியமான் போர்க்களம் புகுந்தால் பகைவர் எவரும் எதிர்த்து நில்லாமல் அஞ்சி ஓடுவர் என்பதனை,

**"இருளுமுண்டோ ஞாயிறு சினவின்**
**------- ------- --------- -------**
**பொருநரு முளரோ நீகளம் புகினே"**[76]

என்று ஔவையார் கூறுகின்றார். மேலும், இவன், நாள் ஒன்றுக்கு எட்டுத்தேர்களைச் செய்யும் தச்சன் ஒரு மாத காலம் முயன்று ஒரு தேரினை மட்டுமே செய்தால் அத்தேர் எத்தகைய வலிமையுடையதாகவும் செப்பமுடையதாகவும் இருக்குமோ அதுபோல் வீரம் நிறைந்தவன் என்பதை,

**"எண்டேர் செய்யுந் தச்சன்**
**திங்கள் வலித்த காலன் னோனே"**[77]

என்று கூறிச் சிறப்பிக்கப்படுகிறான். சுமை ஏற்றப்பட்ட வண்டியின் சக்கரம் நிலத்தில் அமிழ்ந்தாலும் அதைத் தம் முயற்சியால் மேலிழுத்துச் செல்லும் எருதுகள் போல அதியமான் எத்தகைய தடைகளையும் பாராமல் போர்க்களம் புகுந்து தமது வீரத்தால் வெற்றி பெறுபவன் என்பதை ஔவையார்,

**"அரிமணல் ஞெமரக் கற்பக நடக்கும்**
**பெருமிதப் பகட்டுக்குத் துறையு மூண்டோ"**[78]

என்று கூறுவதால் அறியலாம். அதியமான் மிகுந்த வலிமையுடையவனாகவும் தன்னை எதிர்த்து வரும் பகைவர்களை அழித்தொழிக்கும் தன்மையுடைய வனாகவும் இருந்துள்ளான் என்பது பெறப்படுகின்றது.

**படைபலம்**

அதியமானது போர்ப்படையில், அடிக்கும் கோலுக்கு எதிர்த்து வரும் பாம்பு போன்ற இளமையுடைய வீரர்கள் இருந்தனர். அவர்கள் எந்நேரமும் போருக்கு ஆயத்தமான நிலையில் இருந்தனர். பகைவர்களின் படைகளைக் கண்டால் அவர்களைப் பாம்பின் சீற்றம் போல் பாய்ந்து தாக்கினர். இவர்களுக்குத் தலைவனாகத் திகழும் அதியமான், காற்று வீசியதால் அசைவு ஏற்பட்டு ஒலித்ததை

போர் முரசு எனக்கருதி மகிழ்ச்சி கொள்ளும் தன்மையுடையவன். இவனுடன் தொண்டை நாட்டை ஆண்ட தொண்டைமான் என்பவன் போர்புரிய நினைத்தான். அறநெறி வழுவாத அதியமான் தன்னை எதிர்த்து வந்தவர்களை அல்லாது வலிய சென்று போர்புரியும் தன்மையற்றவனாக இருந்தான். அதனால் நாட்டு மக்களுக்கு ஏற்படும் தீங்கை நினைத்துத் தொண்டைமானோடு போரிட எண்ணாமல் ஔவையைத் தூதாக அனுப்பினான். தூது சென்ற ஔவையார் அதியமானின் படைவலிமையையும் போர்த்திறத்தையும் தொண்டைமானுக்கு நயம்பட எடுத்துரைத்தார். அதியமானின் படைத்திறம் பற்றி,

**''பகைவர்க் குத்தி கோடு நுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ''**[79]

என்று தொண்டைமானிடம் கூறிச் சிறப்பிக்கின்றார். அதியமானின் வீரத்தையும் படைபலத்தையும் அறிந்த தொண்டைமான் போர் தொடுக்கும் எண்ணத்தைக் கைவிட்டான்.

**போர்வன்மை**

அதியமான் போர் செய்வதற்காகத் தனது உறையிலிருந்து எடுக்கப்பட்ட வாள் பகைவரின் தசையைக் கிழித்ததால் தனது வடிவத்தை இழந்தது. வேல்கள் காம்பு ஒடிந்து நிலைக்குலைந்தன. போர் யானைகள் பகைவரது கோட்டையின் கதவுகளை உடைத்து அரணை அழித்ததால் தனது பூண்களை இழந்து நின்றன. குதிரைகள் போர்க்களத்தில் வடிந்த குருதியில் காலை நனைத்ததால் மாறுபட்ட குளம்பை உடையதாக இருந்தன. அதியமானோ, பகைவர் எறிந்த அம்புகளால் துளையுண்டான கேடயத்தைக் கொண்டவனாக நின்றான் என்று ஔவையார் கூறுகின்றார். இதனை,

**''பொலந்தும்பைக் கழற்பாண்டிற்
கணைபொருத துறைத்தோ லன்னே''**[80]

என்ற பாடலடிகள் காட்டுகின்றன. அதியமான் பலபோர்களைக் கண்டவன் என்பது இதனால் பெறப்படும். இவனுக்கும் கோவலூரை ஆண்டு வந்த மலாடர் என்ற மன்னனுக்குமிடையே பகை ஏற்பட்டது. அவன் மீது சினந்து போர்த்தொடுக்க நினைத்த அதியமானை ஔவையார் அவனது வெற்றிச் சிறப்புகளையெல்லாம் எடுத்துரைத்து இச்சிறுபகையைப் பொருட்படுத்த

வேண்டாம் என அறிவுறுத்தினார். இருந்தபோதும் அதனைக் கேளாதவனாய் மலாடர் வேந்தனைப் போரிட்டு வென்றான். இவனது வெற்றியை பரணர் முதலானோர் பாடினர் என்பதை ஔவையார்,

**“பரணன் பாடினன் மற்கொன் மற்றுநீ**
**முரண்மிகு கோவலூர் நூறிநின்**
**அரணடு திகிரி யேந்திய தோளே”[81]**

என்று அதியமானின் கோவலூர்ப் போர் வெற்றியைச் சிறப்பித்துள்ளார். மேலும், சேரன், சோழன், பாண்டியன், திதியன், எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநன் ஆகிய ஏழு மன்னரையும் ஒருசேர வென்று அவர்களது அடையாளச் சின்னங்களான கேழல், மேழி, கலை, யாளி, வீனை, சிலை, கெண்டை, முதலிய ஏழினையும் பெற்று ஆட்சியைத் திறம்பட நடத்தியவன் என்றும் ஔவையாரால் புகழப்படுகிறான். இதனை,

**“இமிழ்குரன் முரசி னெழுவரொடு முரணிச்**
**சென்றமர் கடந்து நின் னாற்ற தோற்றிய**
**அன்றும் பாடுநர்க் கரியை... ”[82]**

என்று வரும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. அதியமானின் வலிமை குறித்து ஔவையார் அவனது பகைவரிடம் இவ்வாறு கூறுகின்றார். கால் அளவே உள்ள குறைந்த நீரிலும் முதலை யானையைக் கொன்று வீழ்த்தும் வலிமையுடையது. அம்முதலையைப் போன்ற வலிமை நிறைந்தவன் அதியமான். அவன் வெல்லுதற்கு அறியவன் என்பதை,

**“தாட்படு சின்னீர்க் களிறட்டு வீழக்கும்**
**ஈர்ப்புடைக் கராஅத் தன்ன வென்னை**
**நுண்பல் கரும நினையா**
**திளையனென் றிகழிற் பெறலரிதாடே”[83]**

என்று சிறப்பிக்கின்றார். அதியமான் இளையவனாக இருந்தபோதே பல வெற்றிகளைக் கண்டவன் என்பது அறியப்படுகிறது.

### அதியமானின் மறைவு

பெருஞ்சேரலிரும் பொறையுடன் நடைபெற்ற போரில் அதியமான் கொல்லப்பட்டான். அவன் இறந்தபோது பெற்ற தாயினால் கைவிடப்பட்ட

குழந்தையைப் போல் சுற்றங்கள் அனைத்தும் வருந்தின. அதியமானின் மார்பில் தைத்து அவனது உயிரைப் போக்கிய வேல் பாணரது உண்கலத்தைத் துளைத்து இரந்து வாழ்பவரின் கையிலும் தைத்து அவனால் பாதுகாக்கப்பட்ட சுற்றத்தாரின் கண்ணொளியை மழுங்கச் செய்து இறுதியில் சொல்லாராய்ச்சியுடைய புலவரின் நாவில் சென்று தைத்தது. அதனால் இனி பாடுவோரும் இல்லை, அவ்வாறு பாடினால் அன்பு பாராட்டிப் பொருள் கொடுப்பாரும் இல்லை என்பதை ஔவையார்,

**''அருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத் துளையுரீஇ**
**இரப்போர் கையுளும் போகிப்**
**புரப்போர் புன்கண் பாவைசோர**
**அஞ்சொனுண் டேர்ச்சிப் புலவர் நாவிற்**
**சென்று வீழ்ந் தன்றவன்**
**அருநிறத் தியங்கிய வேலே''**[84]

என்று தமது வருத்தத்தை வெளிப்படுத்தியுள்ளார். அதியமான் இறந்த பின் அவனால் பாதுகாக்கப்பட்ட சுற்றங்கள் அனைத்தும் ஆதரவின்றி தவித்தன என்பதும் அதியமானின் மறைவால் புலவர், வறியவர் முதலியோர்க்கு மேலும் துன்பமே கிட்டியது என்பதும் அறியப்படுகின்றது. அதியமானின் உடல் ஈமத்தீயில் எரிவதைக் கண்ட ஔவையார், உடல் அழிந்து சிதைந்தாலும், அவ்வாறு அழியாமல் இருந்தாலும் வானில் தோன்றும் சந்திரனைப்போன்று என்றும் அவனது புகழ் நிலைத்திருக்கும் என்பதை,

**''திங்க ளன்ன வெண்குடை**
**ஒண்ஞாயி றன்னோன் புகழ்மா யலவே''**[85]

என்று பாடுகின்றார். அதியமானின் மறைவிற்குப் பிறகு அவனுக்கு நடுகல் நடப்பட்டு வழிபாடு செய்யப்பட்டது. அப்போது அதியமான் விரும்பி உண்ட கள்ளுணவை வைத்து வழிபட்டனர். இதனை ஔவையார்,

**''நடுகற்பீலி சூட்டி நாரரி**
**சிறுகலத் துகுப்பவுங் கொள்வன் கொல்லோ''**[86]

என்று பாடுகிறார். அதியமான் நாடு முழுவதையும் கொடுத்தாலும் வேண்டாதவன், இங்குப் படைக்கப்பட்ட கள்ளுணவை ஏற்பானோ! மாட்டானே! என்று ஔவையார் கேட்பதாக அமைகிறது அவரது பாடற்கருத்து. தாம் வாழும் நாளில் விரும்பி உண்ட உணவை நடுகல்லானவர்களுக்கு மக்கள் படைத்து வழிபாடு

செய்யும் வழக்கம் கொண்டிருந்தனர். அவ்வாறே அதியமானுக்கும் மது உணவு படைக்கப்பட்டது என்பதை அறியலாம்.

## 2. அதியமான் பொகுட்டெழினி

அதியமான் நெடுமான் அஞ்சியின் மகன் பொகுட்டெழினியாவான். இவன் பிறந்த சில நாட்கள் கழித்து அதியமான் கையில் வேலும், காலில் வீரக் கழலும் அணிந்தவாறு காண வந்தான். புலியோடு போரிட்ட யானையின் சினம் தணியாதது போல் பகைவரைச் சினத்துடன் பார்த்த கண்கள் சிவந்த நிறம் பெற்றன. புதல்வனைப் பார்க்க வந்தபோதும் அவை நிறம் மாறாமலேயே இருந்தன என்பதை ஔவையார்,

**''செறுவர் நோக்கிய கண்டன்**
**சிறுவனை நோக்கியுஞ் சிவப்பானாவே''**[87]

என்று கூறி அதியமான் தன் மகனைக் காணவந்த காட்சியை விளக்குகிறார்.

> **''முடிக்குரிய முதன் மகன் பிறந்த காலத்தில் பிறந்த சிலநாள் கழித்துத் தந்தை போர்க்குரிய உடை உடுத்திச் சான்றோர் சூழச் சென்று அம்மகனைக் காண்பது பண்டைத் தமிழர் மரபு. உலகில் பிறந்த மகன் முதன் முதல் தன் தந்தையைக் காணுமிடத்து அவன் நெஞ்சில் போர்க்கோலமும் போர்மறமும் நன்கு பதிய வேண்டுமென்பது கருத்து. அக்கால நிலை போர்மறவரையே பெரிதும் வேண்டியிருந்தது.''**[88]

என்று ஔவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள் கூறுவதாலும் அதியமான் நோக்கிய காட்சி தெளிவுறுகின்றது.

### குடிப்பெருமை

பொகுட்டெழியினியின் முன்னோர் கடலுக்கு அப்பாலுள்ள நாட்டிலிருந்து பெறுவதற்கு அரிதான அமுதம் போன்ற 'கரும்பை' தமது நாட்டிற்குக் கொண்டு வந்தனர் என்பதை ஔவையார்,

**'' ----- --------- ---- அந்தரத்து**
**அரும்பெற லமிழ்த மன்ன**
**கரும்பிவட் டந்தோன் பெரும்பிறங் கடையே''**[89]

என்று கூறிச் சிறப்பிக்கின்றார். பிறிதொரு இடத்தில் அதியனின் முன்னோர்கள் பெறுவதற்கு அரிதான கரும்பை விண்ணுலகில் இருந்து இம்மண்ணுலகிற்குக் கொண்டு வந்து பயிரிடச் செய்தனர் என்னும் செய்தியை ஔவையார்,

"அரும்பெறன் மரபிற் கரும்பிவட் டந்தும்
நீரக விருக்கை யாழி சூட்டிய
தொன்னிலை மரபினின் முன்னோர் போல"[90]

என்று கூறுவதாலும் அறியப்படுகிறது. இரு இடங்களில் பொருட்டெழினியின் முன்னோர் நம் நாட்டிற்குக் கரும்பினைக் கொண்டு வந்த செய்தியை ஔவையார் கூறுகின்றார்.

**பொகுட்டெழினியின் பண்பு நலன்**

பொகுட்டெழினி வறியவர்க்குக் கொடுத்து உதவும் கவிந்த கையை உடைய பண்பாளனாகத் திகழ்ந்தான். அறிவும் நிறைவும் அருளும் முதலான குணங்களைக் கொண்டு தம் குடிமக்களை இருள் அகற்றும் முழுச் சந்திரனைப் போல் துயர் களைந்து போற்றிப் பாதுகாத்தான். இவனை நாடி வந்த வறியவரின் கிழிந்த ஆடையைக் களைந்து அதற்குப் பதிலாக நுட்பமான வேலைபாடமைந்த ஆடையைக் கொடுத்து உடுத்தச் செய்தான். அவர்களுக்கு கள்ளுணவைக் கொடுத்தும் மகிழ்வித்தான். இதனை ஔவையார்,

"நுண்ணூற் கலிங்க முடீஇ யுண்மெனத்
தேட்கடுப் பன்ன நாட்படுதேறல்
கொண்மீ னன்ன பொலங்கலத் தளைஇ
ஊண்முறை யீத்த லன்றியும்"[91]

என்று பாடி பொகுட்டெழினியின் கொடைப் பண்பைச் சிறப்பிக்கின்றார். அக்காலத்தில் கள் உண்ணுதல் என்பது பெருங்குற்றமானதாகக் கருதப்படவில்லை. மக்களை வழிநடத்திச் செல்லும் மன்னனே கள் அருந்துபவனாகவும் பிறருக்கும் கொடுத்து மகிழ்விப்பவனாகவும் இருந்துள்ளான். விருந்து உபசரிப்பிலும் கள் முக்கிய இடம் பெற்றுள்ளது.

**பொகுட்டெழினியின் வீரம்**

திறை கொடுக்காத மன்னருடைய மதிலைப் போரிட்டு அழிக்கும் வன்மையுடையவன். இவன் பகைவர்களை வீழ்த்திய போர்க்களம் தசையும் குருதியும் தோய்ந்து ஈரமுடையதாகக் காட்சியளித்தது. போரில் தோற்ற அரசனது நாட்டைக் கழுதைகளைக் கொண்டு ஏர்பூட்டி உழுது அந்நிலத்தில் வரகு, கவடி, கொள்ளு, மற்றும் முள் செடியின் விதைகள் போன்றவற்றை விதைக்கும்

இடையறாத போர் என்னும் உழவைச் செய்து வெற்றி கொண்டவன் எழினி என்பதை ஔவையார்,

**"வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி
வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்
வைக லுழவ வாழிய ..."[92]**

என்று கூறி அவனது வீரத்தைப் போற்றுகின்றார். தந்தை அதியமான் அஞ்சியைப் போன்றே பொருட்டெழினியும் கொடை, வீரம் போன்றவற்றில் சிறந்து விளங்கினான் என்பது அறியப்படுகின்றது.

### 3. ஏறைக்கோன்

குறிஞ்சி நிலத்து வாழும் குறவர்களுக்குத் தலைவனாகத் திகழ்ந்தவன் ஏறைக்கோன். தம் குடியைக் குறைவற பாதுகாக்கும் தன்மை உடையவனாக இருந்தான். நெருங்கியவர்கள் தமக்கு செய்யும் பிழையைப் பொறுத்துக் கொள்ளும் இயல்புடையவன். பிறரது வறுமை கண்டு நாணுபவன். படைக்களத்தில் பிறரால் பழித்துக் கூறப்படாத வீரமுடையவன். மன்னர்கள் கூடிய அவையில் மேம்பட்டு நடக்கும் பெருமையுடையவன். இத்தகைய பண்புகள் எமது தலைவன் ஏறைக்கோனுக்கு மட்டுமே உரியது என்று அவனது குடியைச் சார்ந்த இளவெயினியார் என்னும் பெண்பாற் புலவரால் பாராட்டப் பெறுகிறான்.

**"தமர்தற் றப்பி னதுநோன் றல்லும்
பிறர்கை யறவு தானா ணுதலும்
படைப்பழி தாரா மைந்தின னாகலும்
வேந்துடை யவையத் தோங்குபு நடத்தலும்
---- --------- --------- --------
பெருங்க னாடனெம் மேறைக்குத் தகுமே"[93]**

என்று வரும் இளவெயினியாரின் பாடலடிகள் ஏறைக்கோனின் பண்பு நலன்களைப் பறைசாற்றுகின்றன. மேலும், "உயர்ந்த மலைவளமும் சிறந்த வனவளமும் சான்ற இவனது பெருங்கல் நாடு எதுவெனத் தெரிந்திலது. ஆயினும், 'வேந்துடை அவையத்து ஓங்குபு நடத்தல்' என்ற பண்புக்குரியோனாய் இவன் பாடப்பெறுகின்ற குறிப்பினை உடன் கொண்டு காணுங்கால், இந்தப் பெருங்கல்நாடு மலைநாடான சேரநாட்டிற்குள் அடங்கியதென்பதும், இவன் அச்சேர வேந்தனது அவைக்களத்தில் இடம்பெறுகின்ற அணுக்கச்

சிறப்புடையவெனென்பதும் உய்த்துணரப்படும்''[94] என்று இவனது வரலாறு கூறப்படுகின்றது. ஒரு மன்னர்க்குரிய பண்பு நலன்கள் இத்தகையது என்பதைக் குறமகள் இளவெயினியார் தமது பாடலில் நயமுற எடுத்துரைத்துள்ளார்.

## 4. மலையமான் சோழிய வேனாதி திருக்கண்ணன்

தென்பெண்ணை ஆறு பாயும் வளம் மிக்க சுற்றுப்புறத்தைக் கொண்ட முள்ளூர் மலையின் தலைவனான மலையமான் திருமுடிக்காரியின் மகன் சோழிய வேனாதி திருக்கண்ணன் என்று கூறப்படுகிறது. மலையமான் திருமுடிக்காரியின் மகன் திருக்கண்ணன் என்பதற்குப் புறச்சான்றுகள் எதுவும் கிடைக்கப் பெறவில்லை. ஆயினும் திருமுடிக்காரியைப் பாடிய மாறோகத்து நப்பசலையார் பாடலின் அகச்சான்றே இதற்குப் போதுமானதாக அமைகிறது. 'சோழிய வேனாதி' என்பது சோழமன்னர்கள் அளித்த பட்டமாக இருக்கலாம் எனவும் கருதப்படுகிறது. புலியின் சின்னம் பொறித்த கோட்டையை உடையவனும் ஒளிவிளங்கும் அணிகலன்களையும் வண்டுகள் மொய்க்கும் மாலையையும் உடையவனது தந்தை இந்நிலவுலகில் செய்த அறத்தின் பயனை அனுபவிக்கும் பொருட்டு தெய்வ உலகம் சென்றான் என்று மாறோக்கத்து நப்பசலையாரால் திருக்கண்ணனின் வரலாறு பாடப்பட்டுள்ளது. இதனை,

> **''விடர்ப்புலி பொறித்த கோட்டைச் சுடர்ப்பூட்**
> **சுரும்பார் கண்ணிப் பெரும்பெயர் நும்முன்**
> **ஈண்டுச்செய் நல்வினை யாண்டுச்சென் றுணீயர்**
> **உயர்ந்தோ ருலகத்துப் பெயர்ந்தனன்...''[95]**

என்று வரும் அவரது பாடலடிகளால் திருக்கண்ணனின் முன்னோன் மலையமான் என்பதும் இவன் சோழர்க்குத் துணையாக இருந்ததால் தனது கோட்டையில் சோழரின் சின்னமாகிய புலிப்பொறியை வைத்திருந்தான் என்பதும் அறியப்படுகின்றது. திருமுடிக்காரியின் மறைவுக்குப் பின் முள்ளூர் மக்கள் மழை காணாத பயிர்போல் வாடி நின்றனர். நாடும், நாட்டு மக்களும் பொலிவிழந்து இருந்த நேரத்தில் வறட்சியுற்ற கோடைக்காலத்தில் பெய்யும் மழை எவ்வாறு நிலத்தைக் குளிர்விக்குமோ அதுபோல் மக்களின் மனம் குளிரும்படி திருக்கண்ணன் ஆட்சிப் பொறுப்பை ஏற்றான். அதன் பின்னர் முள்ளூர் நாடு குறை எதுவும் இல்லாததாக விளங்கியது. இச்செய்தியினை,

**"கவலை நெஞ்சத் தவலந் தீர**
**நீதோன் றினையே நிரைத்தா ரண்ணல்**
**---- -------- --------- --------**
**கோடை நீடிய பைதறுகாலை**
**இருநில நெளிய வீண்டி**
**உருமுரறு கருவிய மழைபொழிந் தாங்கே"[96]**

என்று நப்பசலையார் கூறுகிறார். மலையமான் திருமுடிக்காரியின் மறைவிற்குப் பின் அவனது மகன் திருக்கண்ணன் அரசுப் பொறுப்பேற்று மக்களை வழிநடத்தினான் என்பது இதன் மூலம் பெறப்படுகிறது. மேலும், இவனது ஆட்சிக்காலத்தில் சோழ மன்னருள் ஒருவன் பகைவர்க்கு அஞ்சி முள்ளூர் மலையில் ஒளிந்திருந்தான். சோழனின் தலைமறைவால் அவனது நாட்டு மக்கள் பெரிதும் வருந்தினர். இதை அறிந்த திருக்கண்ணன் தன் படைகளைக் கொண்டு மறைந்திருந்த சோழனுக்கு உதவி புரிந்து அவனை மீண்டும் அரியணையில் அமரச் செய்தான். இதனை நப்பசலையார்,

**"எள்ளறு சிறப்பின் முள்ளூர் மீமிசை**
**அருவழி யிருந்த பெருவிறல் வளவன்**
**மதிமருள் வெண்குடை காட்டியக்குடை**
**புதுமையினிறுத்த புகழ்மேம்படுந"[97]**

என்று கூறுவதன் வாயிலாகத் திருக்கண்ணன் முடிவேந்தர்க்கு துணைபுரியும் அளவிற்குப் படைபலம் மிக்கவனாக இருந்துள்ளான் என்பது பெறப்படுகிறது. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை நப்பசலையார் 'வளவன்' என்று குறிப்பிட்டள்ளார். இதனால், முள்ளூர் மலையில் மறைவுற்று இருந்தவன் கிள்ளிவளவன் என்பது உய்த்துணரப்படுகிறது. மேலும், திருக்கண்ணனுக்குச் 'சோழிய வேனாதி' என்ற பட்டமும் சோழ மன்னரால் வழங்கப்பட்டுள்ளது. அதேபோல் திருக்கண்ணன் 'திருக்கிள்ளி' என்று அழைக்கப் பெற்றதாகவும் பாடலின் அடிக்குறிப்பு தெரிவிக்கிறது. இதனால் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனோடு சோழிய வேனாதி திருக்கண்ணன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தான் என்பது புலப்படும்.

## 5. மலையமான் திருமுடிக்காரி

கடைச் சங்க காலத்தில் வாழ்ந்த வள்ளல்களுள் ஒருவன் திருமுடிக்காரி. இவன் திருக்கோவலூரினைச் சிறப்புற ஆண்டவன். இவனைக் காரி எனவும்,

மலையன் எனவும், தேர்வண் மலையன் எனவும் அழைப்பர். மேலும், 'முள்ளூர் மன்னன்' என்ற சிறப்பும் இவனுக்கு உரியதாக அமைகிறது. இவன் வாழ்ந்த காலத்துப் பெருவீரனாகத் திகழ்ந்துள்ளான். வடக்கிருந்து வந்த ஆரியப்படை திருக்கோவலூரை முற்றுகையிட்டபோது, அஞ்சாது வடவரை எதிர்த்துப் புறமோடச் செய்த பெருமையுடையவன். மேலும் கொல்லி மலையை ஆண்ட வல்வில் ஓரியையும் போரிலே வெற்றி கொண்டு வீழ்த்தினான். இவன் பெருவீரனாக மட்டுமல்லாது சிறந்த பண்பாளனாகவும் திகழ்ந்தான். காரியின் வீரவாழ்வு குறித்து கோவிந்த மூப்பனார் அவர்கள்,

> **"தமிழ்நாட்டு மன்னரும் வீரர்களும் காரிமன்னன் வலிமை மிகுந்தவன் என்று வாயாரப் புகழவும், செந்தமிழ்ப் புலவர்கள் அவன் சீர்களை எடுத்துப் பாடவும் தன் நாட்டைக் காவல் செய்து வந்தான். பின்பு தன்னை வென்ற அதியமானையும் வென்று தன் நாட்டைப் பெற்று நன்கு ஆட்சி செய்து இறுதியில் விண்ணுலகடைந்தான்."**[98]

என்று கூறியுள்ளார்.

## திருமுடிக்காரியின் புகழ்

சோழ நாட்டின் எல்லைக்கு உட்பட்டது முள்ளூர் மலை. இது பகலிலும் இரவின் தன்மையை ஒத்த அடர்ந்த காட்டையும் பறை ஒலியை ஒத்த அருவியின் ஓசையும் தென்பெண்ணை ஆறு பாயும் வளத்தையும் உடையது. முள்ளூரின் தலைவனான திருமுடிக்காரி போர் முரசம் ஒலித்தால் பாம்பைக் கொல்லும் இடியைப் போன்று எதிர்த்து வரும் பகைவரைப் போர்க்களத்தில் மடியச் செய்யும் ஆற்றலுடையவன். கபிலர் போன்ற பெரும்புலவரால் பாடும் புகழ் வாய்ந்த பேராண்மை கொண்டவன். இத்தகைய புகழ் கொண்டவனைப் பாட நினைத்த நப்பசலையார், ஒன்றைக் கற்றிருப்பினும் கல்லாது இருப்பினும் உமது புகழ்பாடும் அளவிற்கு எமக்குத் திறம் இல்லை என்றும் வறுமை செலுத்தவே மலையானது பெருமைகளில் சிலவற்றைச் சொல்ல முற்பட்டதாகவும் கூறுகின்றார். இதனை,

> **"இன்மை துரப்ப விசைதர வந்துநின்**
> **வண்மையிற் றொடுத்தனம் யாமே"**[99]

என்று மலையமானது போர்த்திறத்தையும், நாட்டு வளத்தையும் நப்பசலையார் சிறப்பித்துள்ளார்.

**பாண்டிய நாட்டு குறுநில மன்னர்**

சங்க இலக்கியத்தில் அதிகப் பாடல்களைப் பாடியவர்கள் பாண்டிய நாட்டைச் சார்ந்த புலவர்களாவர். தமிழுக்குத் தொண்டு செய்ததில் பாண்டிய மன்னர்களே முதன்மை பெறுகின்றனர். பாண்டிய நாட்டு முடிவேந்தர்களைப் பற்றிப் பெண்பாற்புலவர்களின் பாடல்களில் குறிப்பு எதுவும் காணப்பெறவில்லை. குறுநில மன்னர்களில் 'நாஞ்சில் வள்ளுவன்' என்ற ஒருவன் மட்டுமே சிறப்பிக்கப்பட்டுள்ளான்.

**1. நாஞ்சில் வள்ளுவன்**

பொதிகை மலைத் தொடர்களுள் ஒன்றான நாஞ்சில் மலையையும் அதனைச் சூழ்ந்த நாடுகளையும் ஆட்சி செலுத்தியவன் நாஞ்சில் வள்ளுவன் என்ற மன்னனாவான். இவன் 'நாஞ்சில் பொருநன்' என்றும் 'வல்வேல் கந்தன்' என்றும் அழைக்கப்படுகிறான். இவனது கொடைத்தன்மையைப் பற்றி ஔவையார் சிறப்பித்துள்ளார். கீரையுடன் சேர்த்து வேக வைக்க சிறிது அரிசி (பருப்பு) வேண்டி சென்றபோது நாஞ்சில் வள்ளுவன் யானை சுமக்கும் அளவிற்கு அரிசியைக் கொடுத்தான். வரிசையறிந்து கொடுக்கும் அவன் தமது தகுதி அறிந்து இத்தகைய பெரும்பொருளைக் கொடையாகக் கொடுத்தான் என்று ஔவையார் பெருமிதம் கொள்கிறார். இதனை,

**''அரிசி வேண்டினெ மாகத் தான்பிற**
**வரிசை யறிதலிற் தன்னுந் தூக்கி**
**---- ---------- ----------- ----**
**பெருங்களிறு நல்கியோனே ...''**[100]

என்று கூறி நாஞ்சில் வள்ளுவனது கொடைத் தன்மையைப் புலப்படுத்துகின்றார். மேலும், பெரியவர்கள் தாம் செய்யும் செயலை ஆராய்ந்து செய்யும் தன்மையுடையவர் ஆவர். அவர்கள் எப்போதும் வழிபிறழ்ந்து நடப்பதில்லை. ஒருவர்க்கு ஒன்றைத் தரும்போது அவரது தகுதி அறிந்து கொடுத்தலே சிறப்பு என்பதை ஔவையார்,

**''தோன்றா வீகையு முளதுகொல்**
**போற்றா ரம்ம பெரியோர் தங் கடனே''**[101]

என்று கூறி, தமது தேவை சிறிதளவே ஆயினும் நாஞ்சில் வள்ளுவன் யானை சுமக்குமளவு பெரும்பொருளைக் கொடுத்தது சான்றோர் செயலை மீறியது என்பதைச் சுட்டி அவனது கொடைத் தன்மையைச் சிறப்பிக்கின்றார்.

**சோழ நாட்டு மன்னர்கள்**

**1. அகுதை**

இவன் சோழர் குலமரபிற் தோன்றியவன். அஃதை யென்றும் அகுதை யென்றும் அழைக்கப் பெறுகின்றான். இவனது வரலாறு குறித்து ஒளவை சு.துரைசாமிப் பிள்ளை,

> **''அகுதை என்பவன் பண்டை நாளில் கடல் சார்ந்த ஊராகிய கூடல் என்ற ஊருக்குத் தலைவன். மறப்போர் புரியும் சான்றாண்மையும் பரிசிலர்க்குக் களிறு வழங்கும் கைவண்மையும் உடையவன். இவன் பெரிய தானையையுடையவன் என்ப. இவன்பால் பொற்கிரி யுண்டு, ஆதலின் இவனை வெல்வது எவர்க்கும் ஆகாதென்றொரு பெருமொழி நாடெங்கணும் பரவியிருந்தது. அதனால் பலரும் அவனை அஞ்சியிருந்தனர். முடிவில் ஒருகால் போருண்டாகிய போது அகுதை கொல்லப்பட்டான். பொற்றிகிரி உண்டென்பது பொய்யாயிற்று.''[102]**

என்று கூறுகின்றார். இவனிடம் பொன்னால் செய்யப்பட்ட சக்கரம் இருந்தது பொய்யென்பதை வெள்ளெருக்கிலையார் என்னும் புலவர்,

> **''சீர்கெழு நோன்றா ளகுதைகட் டோன்றிய**
> **பொன்புனை திகிரியிற் பொய்யா கியரோ''[103]**

என்று கூறுவதால் அறியலாம். மேலும், இவன் வாழ்ந்த கூடலூர் பற்றி வ.குருநாதன்,

> **''இவ்வூர் இக்காலத்தே மாவட்டத் தலைநகராய்க் கீழைக்கடலோரத்தே கடலூரென விளங்குகின்றது. இதற்கு இன்றும் கூடலூர் என்ற பெயர் வழக்கமுண்டு''[104]**

எனக் கூறுகின்றார். இதனால் அகுதை என்பவன் இன்றைய கடலூரையும் அதனைச் சார்ந்த பகுதிகளையும் முன்பொருகாலத்தில் ஆட்சி செலுத்தியவன் என்பது பெறப்படுகின்றது.

## 2. அவியன்

சோழர் மரபைச் சேர்ந்த சிற்றசர்களுள் ஒருவன் அவியன். இவனைக் குறித்து ஔவை சு. துரைசாமிப்பிள்ளை,

> **"அவியன் திருமுனைப்பாடி நாட்டில் வாழ்ந்தவன். அவன் பெயரால் அவியனூரென்றோர் ஊர் பண்டை நாளில் இருந்தது. அஃது அவியனூர் நாட்டுக்குத் தலைநகராகவும் இருந்ததைத் திருவதிகைக் கல்வெட்டொன்று கூறுகிறது."[105]**

என்று இவனது வரலாற்றைக் கூறுகின்றார். அவியனைக் குறித்துப் பெண்பாற்புலவர்களில் மாறோக்கத்து நப்பசலையார் பாடிய பாடல் ஒன்று மட்டுமே காணக்கிடைக்கிறது. அவியனைக் காணச் சென்ற நப்பசலையார் அவனது நாட்டு வளத்தையும் கொடைத் தன்மையையும் சிறப்பிக்க எண்ணினார். அவியனின் ஆட்சிக் காலத்தில் வெள்ளிமீன் தெற்கு நோக்கிச் சாய்ந்தது. அவ்வாறு வெள்ளிமீன் தெற்குப்புறம் சாய்ந்தால் நாட்டில் வறுமை மேலிடும் என்பது மக்களின் நம்பிக்கையாக இருந்தது. இதனால் மக்கள் பலரும் வரப்போகும் துயரம் குறித்துப் பலவாறு பேசினர். இதைக் கேள்வியுற்ற நப்பசலையார் குன்றுகள் நிறைந்த வளமிக்க நம் நாட்டிற்குத் தலைவன் அவியன். அவன் தன் கடமையிலிருந்து வழுவாதவன். வறியவரைப் போற்றிப் புரக்கும் தன்மையுடையவன். இத்தகையவனோடு நாம் உடனிருப்பதால் வெள்ளி மீன் நிலை பிறழ்ந்தது பற்றி வருந்த வேண்டியதில்லை என்று தேற்றினார். இதனை,

> **"-------- --------- குன்றுபல கெழீஇய**
> **கான்கெழு நாடன் கடுந்தே ரவியனென**
> **ஒருவனை யுடையேன் மன்னே**
> **அறானெவன் பரிகோ வெள்ளியது நிலையே"[106]**

என்னும் பாடல் சுட்டுகிறது. மேலும், பொருநன் ஒருவன் கூற்றில் அவியனது உழவு எருதுகளையும் நாட்டுவளத்தையும் நப்பசலையார் சிறப்பித்துள்ளார். இவர் கூறும் வெள்ளிமீன் பற்றிய குறிப்பு நன்னாகனார் என்ற புலவரின் பாடலிலும் (புறம்.384) காணக் கிடைக்கின்றது. இது பழந்தமிழரின் வானியல் அறிவைக் காட்டுவதாக அமைகிறது.

## 3. அழிசி

சோழர் குடியிற் தோன்றிய சிற்றரசன் அழிசி ஆவான். இவன் கொடைத் தன்மை மிக்கவன். "சோழ நாட்டிலுள்ள ஆர்க்காட்டையும் அதனைச் சார்ந்த சில

ஊர்களையும் ஆண்டு வந்தவன். அந்நாளில் இவனுக்கு மகன் ஒருவன் பிறந்தான். அவனுக்கு சேந்தன் எனப் பெயரிட்டு வளர்த்தான்.''[107] இவன் ஆட்சி செலுத்தி வந்த ஆர்க்காடு மிகுந்த வளமுடையது. ஆர்க்காட்டின் தெருக்கள் ஒலிக்கின்ற மணியை உடைய யானைகளையும் விரைந்தோடும் தேர்களையும் உடையன. இத்தெருக்களில் ஆங்காங்கே சோழரின் சின்னம் பொறித்த கொடிகள் அசைந்தாடிய வண்ணம் இருந்தன. இத்தகைய வளமிக்க அழிசியின் ஆர்க்காட்டினை நக்கண்ணையார்,

**''வெல்போர்ச் சோழ ரழிசியம் பெருங்காட்டு''[108]**

என்று பாடிச் சிறப்பிக்கின்றார்.

### 4. அன்னி

சோழர் குடியில் உதிந்தவன் அன்னி. இவனைப் பற்றி பி.நா.ஐயர்,

> **''இவன் சோழநாட்டுப் பாபவிநாசம் ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகிலுள்ள ஒரு கிராமத்திலிருந்த சிற்றரசன். இவன் இருந்த ஊர் பிற்காலத்தில் இவன் பெயராலே அன்னிகுடியென்று வழங்கி வருகின்றது.''[109]**

என்று கூறுவதால் இவனது குடி வரலாறு அறியப்படுகிறது. அன்னி பெருவீரமுடையவன் என்பதைப் பல புலவர்கள் போற்றியுள்ளனர். இவனது போர்த்திறம் குறித்து உ.வே.சா.,

> **''இவன் திதியற்குப் பகைவன் அன்னி மிஞிலிக்கு தந்தை. குறுக்கை என்னும் ஊரிலிருந்தவன். இவன் திதியனொடு பொருதபோது அவனாற் கண்களையப்பட்டான். இவனது காவன் மரமும் துமிக்கப்பட்டது. இதற்காக இவனுடைய மகள் அன்னி மிஞிலி என்பாள் ஆறாச் சினத்தாளாய் கலத்து முண்ணாது வாலிது முடாதிருந்து அத்திதியன் வழியினரைக் குறும்பியன் என்பான் போர் தொடுத்தபோது தன் சினமாறி மிகக்களிப்புடன் திதியனுடைய அருந்தையூர் கண் புகலாயினள்.''[110]**

என்று கூறுகின்றார். அன்னி திதியனின் காவல் மரமாகிய புன்னையை வெட்டி வீழ்த்திய போது இவனது புகழை அங்குக் கூடியிருந்த பாணர் முதலான பலரும் ஆரவாரத்துடன் பாடி மகிழ்ந்தனர் என்பதை வெள்ளிவீதியார்,

**''அன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்<br>தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணிப்<br>புன்னை குறைத்த ஞான்றை வயிரியர்<br>இன்னிசை ஆர்ப்பினும் பெரிதே''[111]**

என்று கூறுவதனால் அறியலாகிறது. அன்னி திதியனின் காவல் மரத்தை வெட்டிய பிறகு திதியன் இவன் மீது படையெடுத்து வந்து இவனது கண்களைப் பறித்தான் என்பது புலனாகிறது.

## 5. முடியன்

மலைநாட்டை ஆண்ட அரசன் முடியன். இவனது மலைப்பகுதி இயற்கை எழில் நலம் கொண்டது. மேலும், இவனது வரலாறு பற்றி ஔவை சு. துரைசாமிப்பிள்ளை,

> **முடியன் என்பான், தென்னார்க்காடு மாவட்டத்துத் திருக்கோவலூர் வட்டத்தின் தென்பகுதியில் வாழ்ந்த ஒரு வள்ளல். அவன் பெயர் தாங்கிய நல்ல ஊர் ஒன்று இன்று உளது. அதனை முடியனூர்க் கல்வெட்டுகள்... குறுக்கைக் கூற்றத்து முடியனூர் என்று குறிக்கின்றன. மற்றொரு கல்வெட்டு இம்முடியனூரை, 'பெண்ணைத் தென்கரை மகதை மண்டலத்துக் கீழ்துண்ட நாட்டு முடியனூர்'' என்று கூறுகின்றது. இம்முடியனுக்குரிய மலைகள் கள்ளக் குறிச்சிப்பகுதியில் உள்ளன.''**[112]

என்று கூறுகின்றார். மேலும், சங்கப்பாடல்களில் ஔவையார் மட்டுமே இவனைப் பற்றி பாடியுள்ளதாகத் தெரிகிறது. இவன் மலை போன்ற யானைகளைக் கொண்டிருந்தான் எனவும் வாய்மொழி தவறாத பண்புடையவன் எனவும் ஔவையார் கூறுகின்றார். முடியனின் மலையிலுள்ள மூங்கிலின் வனப்பைத் தலைவியின் தோள்களுக்கு உவமம் கூறிச் சிறப்பிக்கின்றார். இதனை,

> **''வரைபோல் யானை வாய்மொழி முடியன்**
> **வரைவேய் புரையு நற்றோ**
> **ளளிய தோழி தொலையுந பலவே''**[113]

என்று வரும் பாடலடிகளால் அறியலாம். முடியனைக் குறித்த வேறு சான்றுகள் எதுவும் கிடைக்கப்பெறவில்லை.

## வேளிர்கள்

சிற்றரசர்களுள் மேன்மை பொருந்தியவர்களாக வேளிர்கள் கருதப்பட்டனர். பண்டைய சமூகத்தில் வேளிர்கள் முடியுடை மன்னர்க்கு அடுத்த நிலையில் வைத்துப் போற்றப்பட்டனர். இவர்கள் பழந்தமிழகத்தின் பெரும்பகுதியை ஆட்சி செலுத்தி வந்தனர். வேளிர்களின் குடிப்பெருமையை பரணர்,

> **''தொன்முதிர் வேளிர்''**[114]

என்று பாடிச் சிறப்பிக்கின்றார். மேலும் சங்கப்பாடல்களில் வேளிர் குறித்துப் பல இடங்களில் பேசப்பட்டுள்ளது.

**"பதினொரு வேளிரொடு வேந்தர் சாய"**[115]
**"நாற்பத்தொன்பது வழிமுறை வந்த வேளிர்"**[116]
**"இருபெரு வேந்தரொடு வேளிர் சாய"**[117]
**"வேந்தரும் வேளிரும் பின்வந்து பணிய"**[118]

என்று வரும் பாடலடிகளால் வேளிர்களின் சிறப்பு குறித்து அறியப்படுகிறது. வேளிர்கள் தமிழகத்தின் பூர்விகக் குடிகள் அல்லர்; வடநாட்டிலிருந்து வந்தவர்கள் என்ற கருத்தும் நிலவுகிறது. சங்கப் பெண்பாற் புலவர்கள் பாடிய வேளிர்களின் வரலாறு மட்டும் இங்கு ஆய்வுக்கு எடுத்தாளப்படுகிறது. பெண்பாற்புலவர்களின் பாடல்களில் பாண்டிய நாட்டைச் சார்ந்த (1) வேள்பாரி, சோழநாட்டைச் சார்ந்த (2) அழுந்தூர் வேள் திதியன், (3) வேள் எவ்வி, (4) வேள் எழினி ஆகிய மூவர் பற்றிய குறிப்புகளும் காணக்கிடைக்கின்றன.

## 1. வேள் பாரி

சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த பெருமை பாண்டிய நாட்டைச் சாரும். அந்நாட்டில் பறம்பு என்ற மலை ஒன்றுண்டு. அது முந்நூறு ஊர்களைக் கொண்டு வளமுடன் திகழ்ந்தது. இத்தகைய சிறப்பு மிக்க மலையின் தலைவன் வேள்பாரி ஆவான். கடையேழு வள்ளல்களில் ஒருவனாகப் போற்றப்பட்டான். முல்லைக்குத் தேர் ஈந்த பெருமையுடையவன். இவனது மலை வளம் கருதி முடியுடை வேந்தர்கள் மூவரும் கைப்பற்றும் நோக்குடன் முற்றுகையிட்டு நின்றனர். பாரி இரவலர்க்கு வரையாது வழங்கும் வள்ளலாக இருந்தபோதும் மூவேந்தரின் முற்றுகையால் வறிய நிலை எய்தினான். அப்போது பாரியின் நெருங்கிய உயிர் நண்பரும் அவைக்கள புலவருமான கபிலர் பறம்பு நாட்டிலுள்ள குருவிகளை வேற்று இடங்களுக்கு ஏவி அங்கிருந்து நெற்கதிர்களைக் கொணருமாறு செய்து பறம்பிலுள்ளோர்க்கு உணவளித்தார். இவ்வாறு நெற்கதிர்களைச் கொணரச் சென்ற குருவிக் கூட்டங்கள் ஞாயிறு மறைந்தவுடன் தமது நாட்டிற்குத் திரும்பின என்பதை ஔவையார்,

**"உரைசால் வன்மகிழ்ப் பாரி பறம்பி
னிரைபறைக் குரீஇயினங் காலைப்போகி
முடங்குபுறச் செந்நெற் றரீஇய ரோராங்
கிரைதேர் கொட்டிபின வாகிப் பொழுதுபடப்
படர்கொண் மாலைப் படர்தந் தாங்கு"**[119]

என்ற பாடலடிகளின் வழி காட்சிப்படுத்தியுள்ளார். இறுதியில் பாரி முடிவேந்தர்களுடன் நடைபெற்ற போரில் இறந்துபட்டான். பாரியின் உயிர் நண்பராகிய கபிலரும் இவன் இறந்தவுடன் தானும் வடக்கிருந்து உயிர்த்துறந்து புகழடைந்தார்.

**சோழநாட்டு வேளிர்**

**1. அழுந்தூர் வேள் திதியன்**

வேளிர் குலத்தைச் சார்ந்த திதியன் அழுந்தூர் என்னும் ஊரினன். இவ்வூர் இன்று தேரெழுந்தூர் என்று வழங்கப்படுகின்றது.

**''கடுந்தேர்த் திதியன் அழுந்தை''**[120]

என்று அகநானூற்றில் கூறப்படுவதாலும் இவனது ஊர் அழுந்தூர் என்பது பெறலாகிறது. அன்னி என்பவன் திதியனது காவல் மரமான புன்னையை வெட்டி வீழ்த்தியபோது ஏற்பட்ட ஆரவாரத்தை வெள்ளிவீதியார்,

**''அன்னி குறுக்கைப் பறந்தலைத் திதியன்**
**தொன்னிலை முழுமுதல் துமியப் பண்ணி''**[121]

என்று கூறுகின்றார். திதியனோடு பொருதிய அன்னி இறுதியில் மடிந்தொழிந்தான்.

**2. வேள் எவ்வி**

வேளிர் குலத்தின் வழிவந்தவன் வேள் எவ்வி. பறம்புமலை ஆண்ட பாரிக்கும் முன்னோன். இவனது ஊர் 'நீடூர்' என்பதாகும். இதனால் இவன் 'நீடூர் கிழவன்' என்றும் போற்றப்படுகின்றான். இவன் சோழநாட்டின் கீழைக்கடற்கரையைச் சார்ந்த மிழலைக் கூற்றம் என்னும் பகுதியையும் ஆண்டு வந்தான் எனத் தெரிகிறது. அன்னி என்பவன் திதியனோடு போர்தொடுக்க எண்ணியதை அறிந்து அவனுக்கு அறிவுரை நல்கவும் செய்தான். அரசியல் மதிநுட்பம் வாய்ந்தவனாகத் திகழ்ந்த எவ்வி தலையாலங்கானத்து பாண்டியன் நெடுஞ்செழியனால் போரில் வீழ்த்தப்பட்டான். இவ்வாறு பகைவருடன் போரிட்டு முகத்திலும் மார்பிலும் விழுப்புண்பட்டு மடிந்தான் என்னும் செய்தி விடியற்காலைப் பொழுதொன்றில் வெள்ளெருக்கிலையாருக்கு எட்டுகிறது. அகுதை என்பவனிடம் பொன்னால் செய்யப்பட்ட சக்கரம் உள்ளதென்று கூறிய செய்தி பொய்யானது போல் வேள் எவ்வி மடிந்தான் என்னும் தான் கேட்ட

செய்தியும் பொய்யாக வேண்டும் என்று வருந்தினார். இத்தகைய தமது எண்ணத்தை,

**"போரடு தானை யெவ்வி மார்பின்**
**எஃகுறு விழுப்புண் பலவென**
**வைகுறு விடிய லியம்பிய குரலே"**[122]

என்று பாடி வெளிப்படுத்தியுள்ளார். இவன் புலவரைப் போற்றிப் புரக்கும் வள்ளல் என்பது வெள்ளெருக்கிலையாரின் பாட்டால் அறியப்படுகின்றது.

### 3. வேள் எழினி

சோழ நாட்டின் கீழைக் கடற்கரைக்கு அருகிலுள்ள செல்லூர் என்னும் ஊரைச் சார்ந்தவன் எழினி. இவன் சோழர் குல வேளிர் மரபைச் சார்ந்தவன். இவன் மிகுந்த போர்த்திறம் கொண்டவன். பகைவரைத் தோற்றோடச் செய்யும் வேற்படையைப் பெற்றிருந்தான். பகைவரின் ஆநிரைகளைக் கவர்ந்து வரும் வண்மையுடையவனாகவும் இருந்தான். இவனைக் குறித்து ஔவையார்,

**"----- -------- ------- வெம்போர்**
**நுகம்படக் கடக்கும் பல்வே லெழினி**
**முனையான் பெருநிரை"**[123]

என்று கூறுவதால் இவனது போர்த்திறமும் படை வலிமையும் அறியப்படுகிறது. இவன் 'ஆதன் எழினி' எனவும் அழைக்கப்படுகிறான். தலை சிறந்த வேளிர் கூட்டத்துள் ஒருவனாகவும் காணப்படுகின்றான்.

### கோசர்

கோசர் என்பவர் குழுவாக வாழ்ந்த ஒரு கூட்டத்தினர். மோக்கூர் மன்னனான பழையன் மீது மோரியர் படையெடுத்து வந்தபோது கோசர்கள் பழையவனுக்கு உதவியதாகவும் இவர்கள் ஊரில் தொன்மையான ஆலமரம் ஒன்று இருந்ததாகவும் மாமூலனார் (அகம் 251) குறிப்பிடுகின்றார். மேலும், ரா.ராகவையங்கார்,

**"மோக்கூரை அடுத்து ஆலம்பலமும் கோசப்பாடியும் இன்றைக்கும் கள்ளக் குறிச்சிப் புறத்திருத்தல் காணலாம்."**[124]

எனக் கூறுகின்றார். இத்தகைய பெருமையுடைய கோசர்களின் மலையில் பழமையான ஆலமரம் உண்டென்பதையும், அதன் அடியில் நல்ல பல தீர்ப்புகளை வழங்கும் மன்றம் இருந்ததையும் ஔவையார்,

> **"தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய**
> **நல்லூர்க் கோசர் நன்மொழி போல"**[125]

என்று கூறுவதால் அறியலாகின்றது. இக்கோசர் கூட்டத்தினர் யாவர்க்கும் தீங்கு பயவாத இயல்புடையவர்களாகவும், மிகுந்த படைவலிமைக் கொண்டவர்களாகவும் இருந்துள்ளனர். இத்தகைய கோசர் குலத்தைச் சார்ந்த மறவன் ஒருவன் தலைவியை உடனழைத்துச் சென்றதாகவும், அதைக்கண்ட செவிலித்தாய் நற்றாய்க்குக் கூறுவதாகவும் ஔவையாரின் குறுந்தொகைப் பாடல் (குறுந்.15) அமைந்துள்ளது.

**புறத்திணை வாழ்வியல்**

சங்க காலத்தில் மன்னரும் மக்களும் மிகுந்த நாட்டுப்பற்றுக் கொண்டவர்களாக இருந்தனர். தமது உயிரை இழப்பினும் உரிமையை இழக்கத் துணிந்திலர். வீரமே அவர்களின் அடிப்படைச் செல்வமாக இருந்தது. ஆடவர் மட்டுமின்றி பெண்டிரும் போர் நிகழ்வுகளில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தனர். இதனை ச.அகத்தியலிங்கம்,

> **"வளையலேந்திய கைகள் வாளேந்திப் போர்க்களம் சென்று மாற்றாரைப் புறங்காணும் மாட்சிமையுடைய மகளிரை ஈன்றெடுத்த பெருமை தமிழ் மண்ணிற்கு உண்டு. மகளிரின் மறமாண்பு பற்றிச் சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன."**[126]

என்று கூறுகின்றார். பெண்கள் போர்க்களம் புகுந்து வாளேந்தி சண்டையிட்டதை சங்கப்பாடல்கள் எதுவும் காட்சிப்படுத்தவில்லை. "போர்ப் பாசறையில் படைத்தலைவர்களுக்கு உதவி செய்பவர்களாக பெண்கள் இருக்கப் பெற்றனர் என்பது பெறப்படுகின்றது."[127] இவ்வாறு வீரர்களின் வெற்றிக்கு உறுதுணையாய் இருந்த மகளிரைச் சங்கப் பாடல்கள் காட்சிப்படுத்துகின்றன. அதனடிப்படையில் சங்கப் பெண்பாற் புலவர்களின் பாடற்கருத்துக்களைக் கொண்டு இவ்வாறு பாகுபடுத்தப்படுகிறது.

1. வீரமகளிர்
2. போர்க்களக் காட்சிகள்

இதனடிப்படையில் புறத்திணை வாழ்வியல் என்னும் இப்பகுதியில் ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## 1. வீரமகளிர்

சங்க மகளிர் ஆயுதங்கொண்டு போர் புரியவில்லையாயினும் வீரர்களுக்கு ஆயுதந்தந்து வெற்றி பெற முன்நின்றனர். போர் வெற்றியில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தனர். சிறந்த மறவனையே கணவனாக ஏற்றனர். போரில் வெற்றி வாகை சூடும் மகவையே ஈன்று புறந்தந்தனர். தாம் ஒரு வீரனின் தாய் எனக் கேட்பதில் ஈன்றெடுத்த நாளினும் பெரிதும் மகிழ்ந்தனர். இத்தகைய வீரமகளிர் குறித்து சு.வித்தியானந்தன்,

> **"மறப்பண்பு படைத்த தமிழரின் பெண்பாலரும் வீரம் செறிந்த குணத்துடன் விளங்கினர். தன் வயிற்றில் பிறந்த தம் முலைப்பாலுண்ட மக்கள் மறம் குன்றாத மானமும், வீரமும் செறிந்த வீராப்பும் உடையராதல் வேண்டுமென்பது தமிழ்த்தாய்மாரின் குறிக்கோள்."**[128]

என்று கூறிச் சிறப்பிக்கின்றார். இத்தகைய துணிவுள்ள வீரமகளிரை 'மூதின் மகள்' என்று அழைத்தனர். ஒக்கூர் மாசாத்தியார்,

> **"கெடுக சிந்தை கடிதிவடுணிவே**
> **மூதின் மகளிராத றகுமே"**[129]

என்று இம்மகளிரைச் சிறப்பிக்கின்றார். இத்தகைய வீரமகளிர் குறித்த செய்திகளைப் பெண்பாற்புலவர்கள் உணர்ச்சித் ததும்பப் பாடி பெருமை பெற்றுள்ளனர்.

### வீரத்தாயின் பெருமிதம்

பகைவரின் அம்பு மார்பில் தைத்தவாறு தனது கேடகத்தின் மீது வீழ்கிறான் இளைய வீரன் ஒருவன். அவனை ஈன்ற தாய் இளம் வயதில் சிறுகலத்தில் ஏந்திய பாலை உண்ண மறுத்தவனை சிறுகோல் கொண்டு அடிக்க ஓங்கியபோது அஞ்சினான். அத்தகையவன், பகைவரின் அம்பு மார்பில் தைத்திருப்பதைக் காட்டியபோது, அதைத் தான் அறியவில்லை என்கிறான் என்று தன் மகனின் வீரச்செயலைக் கண்டு பெருமிதம் கொள்கிறாள். இதனைப் பொன்முடியார்,

> **"முன்னாள் வீழ்ந்தவுரவோர் மகனே**
> **உன்னிலெ னென்னும் புண்ணொன் றம்பு"**[130]

என்று பாடிச் சிறப்பித்துள்ளார். தன் மகன் போரில் பல வீரர்களை வீழ்த்தி இறுதியில் வெட்டுண்டு உடல் சிதைந்து கிடக்கின்றான். இதனைக் கண்ட அவனது தாய் தன் மகனின் வீரமாண்பைக் கண்டு ஈன்ற பொழுதைவிட பெரிதும் மகிழ்வுற்றாள். மேலும், அவளின் வற்றிய மார்பில் மகனது வீரச்செயலைக் கண்டு பொங்கிய அன்பால் பால் சுரந்து நின்றது என்பதை ஔவையார்,

**"வாடுமுலை யூறிச் சுரந்தன**
**ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே"**[131]

என்று பாடி வீரத்தாய் ஒருத்தியின் பேருவகையைச் சிறப்பித்துள்ளார். வீரத்தாய் ஒருத்தி போருக்குச் சென்ற தனது மகன் உயிருடன் திரும்பியதைக் கண்டு, தன்னைப் போற்றிப் புரந்த மன்னன் கண்ணீர் விடும்படி போரில் மடிவதே பெருமையுடைய செயல், அவ்வாறு இல்லாமல் வெற்றியுடன் திரும்பினாலும் அது தனக்கு வருத்தத்தையே அளிக்கிறது என்று கூறுகின்றாள்.

**"கால்கழி கட்டிலிற் கிடப்பித்**
**தூவெள் ளறுவை போர்ப்பித் திலதே"**[132]

என்று வீரத்தாயின் மனநிலையை ஔவையார் காட்சிப்படுத்துகின்றார். முதியதாய் ஒருத்தி தன் மகனுடன் சென்ற வீரர்கள் ஊர் திரும்புவதைக் கண்டு அவர்களிடம் தன் மகனைக் குறித்து வினவுகிறாள். 'புறப்புண்பட்டு மடிந்தான்' என அவர்கள் கூறக்கேட்ட அத்தாய் சினம் கொண்டு வெகுண்டு அவ்வாறு இறந்திருப்பானாயின் அவன் வாய் வைத்து உண்ட இம்மார்பை அறுத்தெறிவேன் என வஞ்சினம் கூறி கையில் வாளொடு போர்களம் செல்கிறாள். அங்கு தன் மகன் முகத்திலும் மார்பிலும் விழுப்புண் பட்டு இறந்துக்கிடப்பதைக் கண்ட அவளுக்குச் சினம் தணிந்து உள்ளத்தில் கருணை பொங்கியது. தமது குடிக்கும் நாட்டிற்கும் பெருமை சேர்த்த தன் மகனின் செயலைக் கண்டு ஈன்றபொழுதைக் காட்டிலும் பெரிதும் மகிழ்வுற்றாள் என்பதைக் காக்கைக் பாடினி நச்செள்ளையார்,

**"படுமகன் கிடக்கை காணூஉ**
**ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்த னளே"**[133]

என்று பாடி வீரத்தாய் ஒருத்தியின் செயலைப் பறைசாற்றுகின்றார். இதேபோல் போர்க்களம் புகுந்த இளைய வீரன் ஒருவன் பகைவரின் களிறுகளை வீழ்த்தித் தானும் இறந்துபோனான். இச்செய்தியைக் கேட்ட அவனது முதிய தாய் ஈன்ற

பொழுதினும் பெரிதும் மகிழ்ந்தாள் என்பதைப் பூங்கணுத்திரையார் என்னும் பெண்பாற் புலவர்,

**“---- -------- ---முதியோள் சிறுவன்**
**களிறெறிந்து பட்டன னென்னு முவகை**
**ஈன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர்”**[134]

என்று பாடி மறக்குடி மகள் ஒருத்தியின் மறமாண்பை வெளிப்படுத்துகின்றார். வீரத்தாய் ஒருத்தியிடம் உன் மகன் எங்குள்ளான் என வினவுகிறாள் ஒருத்தி. அதற்கு அத்தாயானவள் புலி தங்கி நீங்கிய கற்குகை போல அவனைப் பெற்றெடுத்த வயிறு இது. அவனுக்கும் எனக்கும் உள்ள தொடர்பு புலிக்கும் குகைக்கும் உள்ள உறவைப் போன்றது. அவன் எங்கு இருப்பானாயினும் போர்க்களத்தில் தோன்றுவான் என்று தன் மறக்குடி மாண்பைக் கூறினாள். இதனைக் காவற் பெண்டு என்னும் புலவர்,

**“புலி சேர்ந்து போகிய கல்லளைபோல**
**ஈன்ற வயிறோ விதுவே**
**தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே”**[135]

என்று கூறிச் சிறப்பிக்கின்றார். இத்தகைய மறக்குடியில் பிறந்த வீரமகள் ஒருத்தி முதல் நாள் போரில் தன் கணவனையும் அதற்கும் முதல் நாள் போரில் தன் தந்தையையும் இழக்கின்றாள். அடுத்த நாளும் போர் நடைபெறத் தொடங்கியது. அப்போது, தெருவில் விளையாடியிருந்த தன் ஒரே புதல்வனை அழைத்து வந்து புத்தாடை உடுத்தி, தலைக்கு எண்ணெய் தடவி ஒப்பனை செய்து, கையில் வேல் ஒன்றைக் கொடுத்துப் போர்க்களம் அனுப்பினாள் என்பதை ஒக்கூர் மாசாத்தியார் என்னும் புலவர்,

**“வேல்கைக் கொடுத்து வெளிது விரித் துடீஇப்**
**பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி**
**ஒருமகனல்ல தில்லோள்**
**செருமுக நோக்கிச் செல்கென விடுமே”**[136]

என்று மறக்குடி மகளின் வீரவுணர்வைச் சிறப்பிக்கின்றார். கணவனையும் தந்தையையும் இழந்த நிலையிலும் போர்ப்பயிற்சியே இல்லாத தன் ஒரே புதல்வனைப் போருக்கு அனுப்பிய அந்த வீரமகளின் செயல் அக்கால மகளிரின் வீரமாண்பை பறைசாற்றுவதாய் அமைகிறது.

## 2. போர்க்களக் காட்சிகள்

சங்ககாலத்தில் நடைபெற்ற போர்கள் அளவிடற்கரியனவாகும். போரினால் அழிந்த மன்னர்களும் வீரர்களும் எண்ணிலடங்கார். ''ஒருவனையொருவன் அடுதலும் தொலைதலும் புதுவதன்று; இவ்வுலகத்து இயற்கை[137] என்ற சங்க காலச் சான்றோராகிய இடைக்குன்றூர் கிழாரின் கூற்றும் இங்குக் கருதத்தக்கது. தோற்ற அரசனது நாடு வெந்து கருகிய காட்டிற்கு ஒப்பானதாகவே இருந்தது. போரில் பகைவரைக் கொல்வதும் சிறைபிடிப்பதும் வழக்கமாக இருந்தபோதிலும் பகைவரின் கண்களும், பற்களும் பறிக்கப்பட்ட நிகழ்வும் சங்கப்பாக்களில் இடம் பெற்றுள்ளன. பகையரசர்களின் உரிமை மகளிரும் சிறைப்பிடிக்கப்பட்டனர். போர்க்களம் குருதி வழிந்தோடும் செங்களமாகவும் காட்சியளித்தது. வீரர்கள் அணிந்திருந்த நொச்சி மாலை குருதியில் தோய்ந்து உருமாறியிருந்ததை அறியாத பருந்து தசை எனக் கருதி எடுத்துச் சென்றது. இத்தகைய காட்சியுடையது போர்க்களம் என்பதை வெறியாடிய காமக்கண்ணியார்,

> **''பருந்து கொண் டுகப்பயாங் கண்டனம்**
> **பறம்புகன் மைந்தன் மலைந்த மாறே''[138]**

என்று கூறிக் காட்சிப்படுத்துகிறார். மேலும், போரில் புண்பட்ட வீரர்களுக்கு மருத்துவமும் செய்யப்பட்டது. வீரர்களின் புண்களை ஆற்றும் பொருட்டு வேப்பிலையை வீட்டின் முன் கூரையில் செருகி வைத்தனர். வெண்சிறுகடுகை நெய்யிலிட்டுப் புகை எழுப்பினர். நிலையாமையைக் குறித்துப்பாடும் காஞ்சிப் பண்ணும் இசைக்கப்பட்டது. போரில் விழுப்புண்பட்டு மீண்ட வீரர்களின் இல்லங்கள்தோறும் 'கல்' என்னும் ஓசை உடையதாய் இருந்தது என்பதை வெள்ளைமாளர் என்னும் புலவர்,

> **''வேம்புசினை யொடிப்பவுங் காஞ்சி பாடவும்**
> **நெய்யுடைக் கைய ரையவி புகைப்பவும்''[139]**

என்று போர் மறவர்கள் உற்ற துயர நிகழ்வைப் பறைசாற்றுகின்றார். இவ்வாறான போர்களக் காட்சிகள் பெண்பாற்புலவர்களின் பாக்களில் காட்சிப்படுத்தப் பட்டுள்ளன.

**தொகுப்புரை**

1. புறத்திணைப் பாக்களின் கருத்து நிலைக்கேற்ப சங்ககாலப் புறவாழ்வியல் நோக்கப்பட்டது.

2. சங்ககாலப் போர்முறை, வெற்றிச் சிறப்பு, மன்னரது கொடை, புகழ்நிலை போன்றவை குறித்தும் மக்களது புறவாழ்வியல் சூழல்கள் குறித்தும் பெண் பாற்புலவர்களால் அதிகம் பாடப்பட்டுள்ளன.

3. முடிவேந்தர்களில் சேரமன்னர் ஐவரும் சோழ மன்னர் மூவரும் பெண்பாற்புலவர்களால் சிறப்பிக்கப்பட்டுள்ளனர். பாண்டிய நாட்டு முடிவேந்தர்களைப் பற்றிய குறிப்புகள் பெண்பாலர்களின் பாடல்களில் காணப்படவில்லை.

4. ஔவையார் புறத்திணை பாடிய பெண்பாலர்களில் முதன்மை பெறுகின்றார். இவர் முடிவேந்தர்களின் ஒற்றுமை குறித்தும் சமாதானம் குறித்தும் போர்ச் சூழல், மன்னரது படைத்திறம், நாட்டுவளம், ஈகைச் சிறப்பு, நல்வினை, தீவினை போன்றவை குறித்தும் அதிகம் பாடியுள்ளார்.

5. ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் பிறப்பு, கல்விச் சிறப்பு, வீரம், கடமையுணர்வு, அவன் ஆட்சி செலுத்திய சேர நாட்டு வளம் ஆகியவை முடத்தாமக்கண்ணியாரால் சிறப்பிக்கப்பட்டடுள்ளது.

6. சேரன் செங்குட்டுவன் கடற்போரில் குறும்பர்களை வென்று தனது வலிமையை நிலைநாட்டினான். கடற்போர் நிகழ்த்தியமையால் இவன் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் எனவும் அழைக்கப்பட்டான். இவனது தாக்குதலுக்கு அஞ்சிப் பகைவர்கள் உறக்கமில்லாது தவித்தமை போன்று தலைவனைப் பிரிந்த தலைவி தவிப்பதாக வெள்ளிவீதியார் பாடியுள்ளார்.

7. புலவர்களால் போற்றப்படும் பெருமையுடையவனாகவும் செங்கோலாட்சி செலுத்திய மன்னனாகவும் பாலைத்திணை பாடுவதில் வல்லவனாகவும் பாலை பாடிய பெருங்கடுங்கோ பெண்பாற்

புலவர்களால் குறிப்பிடப்படுகிறான். இவனது வீரம், கொடைச்சிறப்பு முதலியவை இளவெயினியாரால் சிறப்பிக்கப்பட்டது.

8. தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறையின் ஆட்சிக்குட்பட்ட கொல்லிமலை தெய்வம் விரும்பி வந்துறையும் சிறப்புடையது என்று ஔவையார் மொழிகின்றார். இவனது தமிழ்ப்பற்று புலவர் அனைவராலும் விரும்பிப் போற்றப்பட்டது.

9. சோழ மன்னர்கள் உறந்தை, காவிரிப்பூம்பட்டினம் போன்றவற்றைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செலுத்தினர். கரிகால் பெருவளத்தான் சோழ மன்னர்களில் தலைசிறந்தவனாகப் போற்றப்படுகிறான். இவன் தாய் வயிற்றில் இருந்தபோதே அரசுரிமை பூண்ட செய்தியும் இவனது நெறி நின்ற நல்லாட்சியும், சோழ நாட்டு வயல் வளமும், இரவலரைப் போற்றும் அவனது பண்பு நலமும், வரலாற்றுச் சிறப்புமிக்க வெண்ணிப்போர் குறித்தும் முடத்தாமக்கண்ணியாரால் சிறப்பிக்கப்படுகிறது. மேலும் பெருஞ்சேரலாதன் வடக்கிருந்து உயிர்துறந்து புகழடைந்தமை குறித்தும் அறியப்பட்டது.

10. சோழரின் கடல் வாணிபம் சிறந்து விளங்கியமையும் சிபிச் சோழன் போன்றோரின் புகழ் நிலையும், கிள்ளிவளவனின் ஆட்சிக் காலத்தில் சிறந்து விளங்கிய உறைந்தை அவையத்தில் நீதி வழங்கும் முறைமையும் விளக்கப்பட்டுள்ளன.

11. சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி என்ற மன்னன் ஒருவன் மட்டுமே நக்கண்ணையாரால் கைக்கிளைத் திணையில் வைத்துப் பாடப்பட்டுள்ளான். இவன் தன் தந்தையுடன் பகைமை கொண்டு ஆமூரில் வந்து தங்கிய செய்தியும் அங்கு மல்லன் ஒருவனோடு போர் நிகழ்த்திய செய்தியும் அறியப்பட்டன.

12. முடிவேந்தர்களுக்கு அடுத்த நிலையில் குறுநில மன்னர்கள், வேளிர்கள், சீறூர் மன்னர்கள் போன்றோர் பெண்பாற்புலவர்களால் சிறப்பிக்கப்பட்டுள்ளனர்.

13. குறுநில மன்னர்களில் சேரநாட்டவராக ஐவரும் பாண்டிய நாட்டவராக ஒருவரும், சோழநாட்டவராக ஐவரும் மொத்தம் பதினொருவர் பெண்பாலர்களால் சிறப்புச் செய்யப்பட்டுள்ளனர். வேளிர்களில் பாண்டியர் மரபைச் சார்ந்த ஒருவரும், சோழர் மரபைச் சார்ந்த மூவரும் பாடப்பட்டுள்ளனர். சேரநாட்டு வேளிர்கள் பற்றிய குறிப்பு பெண்பாலர்களது பாக்களில் இல்லை.

14. முடிவேந்தர்களின் நிலைபெற்ற ஆட்சி முறைக்கு முதலில் வித்திட்டோர் சிற்றரசர்கள் என்பது கண்டறியப்பட்டது.

15. சிற்றரசர்கள் முடிவேந்தர்களுக்கு அடங்கியும், தனித்தும் ஆட்சிச் செலுத்தினர். இவர்கள் ஆட்சி முறையில் முடிவேந்தர்களுக்கு நிகரானவர்களாகக் காணப்படுகின்றனர். போர்க்காலங்களில் முடிவேந்தர்களுக்கு சிற்றரசர்களின் உதவி பெரிதும் தேவைப்பட்டது.

16. சங்ககாலத்தில் இருந்து வந்த வாய்மை தவறாத கோசர் என்ற இனத்தவர் குறித்தும் விளக்கப்பட்டுள்ளது.

17. சங்ககால மகளிர் வாளேந்திப் போர்க்களம் புகவில்லையாயினும் போர்க்களத்தினின்று வீரர்களுக்குப் பல உதவிகளைச் செய்துள்ளனர் என்பது அறியப்படுகிறது.

18. மறக்குடி மகளிரது வீரவாழ்வு குறித்து உணர்ச்சி பொங்க தாய்மைப்பற்றுடன் பெண்பாற்புலவர்கள் பாடியுள்ளனர்.

19. பெண்கள் போர்க்காட்சிகளை நேரில் காண வாய்ப்பு அதிகமில்லாத காரணத்தால் பெண்பாற்புலவர்களின் பாக்களில் போர் பற்றிய செய்திகள் குறைந்த அளவே இடம் பெற்றுள்ளன எனலாம்.

# அடிக்குறிப்புகள்

1. தொல்.பொருள். நூ.384:3.
2. சு. வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப.48.
3. அரங்க. இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர், ப.32.
4. புறப்பொருள் வெண்பா மாலை, நூ.2:14.
5. வ.குருநாதன், சங்ககால அரசர் வரிசை, ப.46.
6. புறம். 367 : 14-18.
7. புறம். 367:1-3.
8. சி.இலக்குவனார், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல், ப.39.
9. வ.குருநாதன், மு.கு.நூ., ப.29.
10. சாமி. சிதம்பரனார், சேரர் வரலாறு, ப.8.
11. வி.பி.புருஷோத்தமன், சங்ககால மன்னர் காலநிலை வரலாறு, ப.106.
12. மே.கு.நூ., ப.106.
13. பதிற்று. பதிகம் 6:1-2.
14. வ. குருநாதன், மு.கு.நூ., ப.126.
15. வி.பி. புருஷோத்தமன், மு.கு.நூ., ப.291.
16. சாமி. சிதம்பரனார், மு.கு.நூ., ப.87.
17. மே.கு.நூ., ப.87.
18. பதிற்று. பதிகம் : 6:9-11.
19. பதிற்று. 52 : 22-24.
20. பதிற்று. 55:10-12.
21. பதிற்று. 59:8-10.
22. ஞா. தேவநேயன், பழந்தமிழாட்சி, ப.20.
23. பதிற்று. 51 : 35-37.
24. பதிற்று. 53 : 2-3.
25. பதிற்று. 59:15-19.
26. பதிற்று. 55:2-3.
27. பதிற்று. 58:17-18.

28. சிதம்பரனார், மு.கு.நூ., ப.79.

29. வ.குருநாதன், மு.கு.நூ., ப.103-104.

30. புறம். 126:14-16.

31. உ.வே.சா., அகநானூறு, களிற்றியானை நிரை, ப.153.

32. அகம். 45:16-19.

33. மு. இராகவையங்கார், சேரன் செங்குட்டுவன், ப.127.

34. சாமி சிதம்பரனார், மு.கு.நூ., ப.131.

35. பா. சூரியநாராயணன், தமிழ்நாட்டு வரலாற்றில் இலக்கிய ஆதாரங்கள், பக்.158-159.

36. புறம். 11:11-18.

37. சாமி. சிதம்பரனார், மு.கு.நூ., பக்.170-171.

38. அகம். 303:3-7.

39. புலியூர் கேசிகன், தகடூர் யாத்திரை, ப.19.

40. சி.கோவிந்தராசன், சோழ மன்னர் வரலாறு, ப.3.

41. ச.வே.சுப்பிரமணியன், பத்துப்பாட்டு மூலமும் உரையும், ப.122.

42. ஐயன் பெருமாள் கோனார், தமிழ்நாட்டுப் போர்க்களங்கள், ப.13.

43. பொ. ஆ : 130.

44. பொ. ஆ : 132-134.

45. பொ. ஆ : 228-231.

46. பொ. ஆ : 178-207.

47. பொ. ஆ : 246-248.

48. பொ. ஆ : 93-95.

49. பொ. ஆ : 146-148.

50. புறம். 66:3-8.

51. ஐயன்பெருமாள் கோனார், மு.கு.நூ., ப.18.

52. புறம். 66 : 1-2.

53. வ.குருநாதன், மு.கு.நூ., ப.241.

54. புறம். 39 : 16-19.

55. புறம். 37 : 11-14.

56. நற். 390 : 3-4.
57. புறம். 226 : 3-6.
58. வ.குருநாதன், மு.கு.நூ., ப.195.
59. புறம். 84:5-6.
60. புறம். 85:7-8.
61. பா. சூரியநாராயணன், மு.கு.நூ., ப.213.
62. இரா. ஜெகதீசன், (ப.ஆ)., புறநானூறு ஆய்வுக்கோவை, பக்.683-684.
63. புறம். 390:5-7.
64. புறம். 206:6.
65. புறம். 101:4-5.
66. புறம். 315:3.
67. புறம். 99:5.
68. பெ.கோவிந்த மூப்பனார், சங்ககாலத்து வேந்தரும் வேளிரும், ப.106.
69. புறம். 95:6-8.
70. புறம். 315:4-7.
71. குறுந். 91:5-6.
72. புறம். 101:1-3.
73. புறம். 315:1-3.
74. புறம். 91:6-11.
75. சிறுபாண். 99-103.
76. புறம். 90 : 5-13.
77. புறம். 87 : 1-4.
78. புறம். 90 : 8-9.
79. புறம். 95 : 4-5.
80. புறம். 97 : 15-16.
81. புறம். 99 : 12-14.
82. புறம். 99 : 9-11.
83. புறம். 104 : 3-6.
84. புறம். 235 : 10-15.

85. புறம். 231 : 5-6.

86. புறம். 232 : 3-4.

87. புறம். 100:11-12.

88. ஔவை சு.துரைசாமிப் பிள்ளை, புறநானூறு மூலமும் உரையும், முதற்பகுதி, ப.231.

89. புறம். 392 : 19-21.

90. புறம். 99 : 2-4.

91. புறம். 392 : 16-19.

92. புறம். 392 : 9-11.

93. புறம். 157 : 1-13.

94. வ.குருநாதன், மு.கு.நூ., ப.326.

95. புறம். 174 : 17-20.

96. புறம். 174 : 22-28.

97. புறம். 174 : 13-16.

98. பெ.கோவிந்த மூப்பனார், மு.கு.நூ., ப.104.

99. புறம். 126 : 17-18.

100. புறம். 140 : 5-8.

101. புறம். 140 : 9-10.

102. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, மு.கு.நூ., ப.74.

103. புறம். 233 : 3-4.

104. வ.குருநாதன், மு.கு.நூ., ப.353.

105. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, மு.கு.நூ., ப.398.

106. புறம். 383 : 22-25.

107. பி.நா.ஐயர், நற்றிணை மூலமும் உரையும், ப.85.

108. நற். 87:3.

109. பி.நா.ஐயர், மு.கு.நூ., ப.85.

110. உ.வே.சாமிநாதையர், மு.கு.நூ., ப.151.

111. அகம். 45 : 9-12.

112. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை, நற்றிணை மூலமும் உரையும், ப.1466.

113. நற். 390 : 9-11.

114. நற். 280:8.

115. அகம். 246:12.

116. புறம். 201 : 11-12.

117. மதுரைக்காஞ்சி. 55.

118. பதிற்று. ப.88.

119. அகம். 303:10-14.

120. அகம். 196:11.

121. அகம். 45:9-10.

122. புறம். 233:6-8.

123. குறுந். 80:4-6.

124. ரா.இராகவையங்கார், குறுந்தொகை விளக்கம், ப.54.

125. குறுந். 15:3-4.

126. ச.அகத்தியலிங்கம், (ப.ஆ.), இருபதாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி 1, ப.517.

127. சு.வித்தியானந்தன், மு.கு.நூ., ப.264.

128. மே.கு.நூ., ப.78.

129. புறம். 279 : 1-2.

130. புறம். 310 : 5-6.

131. புறம். 295 : 7-8.

132. புறம். 286 : 4-5.

133. புறம். 278 : 8-9.

134. புறம். 277 : 2-4.

135. புறம். 88 : 4-6.

136. புறம். 279 : 8-11.

137. ஐயம்பெருமாள் கோனார், மு.கு.நூ., ப.33.

138. புறம். 271 : 7-8.

139. புறம். 296 : 1-2.

# இயல் ஐந்து

# படைப்பாக்க உத்திகள்

''குக்கூ வென்றது கோழி யதனெதிர்
துட்கென் றன்றென் றூய நெஞ்சம்
தோடோய் காதலர்ப் பிரிக்கும்
வாள்போல் வைகறை வந்தன்றா லெனவே''

– அள்ளூர் நன்முல்லையார்

# படைப்பாக்க உத்திகள்

சங்கப் பெண்பாற் புலவர்களின் பாடல்களில் அணிநலன் குறித்த சிந்தனைகள் காணக்கிடைக்கின்றன. அகம்புறம் ஆகிய இரு நிலைகளிலும் அவை இடம்பெற்றுள்ளன. இயல்பான நிகழ்வை மேலும் சிறப்புற விளங்கச் செய்வதற்காகப் பெண்பாற் புலவர்கள் அணிநலன் உத்திகளைக் கையாண்டுள்ளனர். இவை பாடலுக்கு மேலும் சிறப்புச் சேர்ப்பதாய் அமைந்துள்ளன. இதில் மக்களின் வாழ்வியல் சார்ந்த சிந்தனைகள் அதிகம் இடம் பெற்றுள்ளன. அதனை விளக்கும் முகமாக 'படைப்பாக்க உத்திகள்' என்னும் இவ்வியல் அமைகிறது.

### அணிநலன்கள்

இயல்பான அழகிற்கு அணிகலன் அழகு சேர்ப்பது போன்று, பாடலுக்கு இலக்கிய அணிநலன் அழகு சேர்க்கிறது. இதன் அடிப்படையில் சங்கப் பெண்பாற் புலவர்களின் பாடல்கள் வழி காணக்கிடைக்கும் அணிநலன்கள் கீழ்வரும் பாகுபாட்டின் அடிப்படையில் அமைகிறது.

1. கற்பனை
2. உவமை
3. உள்ளுறை
4. இறைச்சி
5. நடை

என்னும் வரிசையில் கிடைக்கப் பெற்ற செய்திகள் ஆராயப்படுகின்றன.

### அணிநலன் பற்றிய பார்வை

பெண்பாற் புலவர்களின் பாடல்களின் அணிநலன்கள் இடம்பெற்றுள்ள நிலை குறித்து இப்பகுதி ஆராய விழைகிறது. உயர்திணை, அஃறிணை என்னும் இருநிலைகளில் கற்பனை, உவமை, உள்ளுறை, இறைச்சி, நடை ஆகிய அணிநல உத்திகள் இடம் பெற்றுள்ள விதம் குறித்தும் அணிநலன் அடிப்படையில் பாடல்கள் தரும் கருத்துக்களின் தன்மைக் குறித்தும் மேற்கண்ட பகுப்பிற்குள் அணிநலன் பற்றிய பார்வை அமைகிறது.

**கற்பனை - வரையறை**

உலகில் நடைபெறும் எல்லாவிதமான செயல்களும் முதலில் மனத்தில் உருவான கற்பனைகளே ஆகும். அவை, மேலும் மேலும் சிந்தனை வழி செம்மைப்படுத்தப்பட்டுச் செயல்வடிவங்களாக மாறுகின்றன. இலக்கியமும் படைப்பாளியின் மனதில் தோன்றிய கற்பனையின் வடிவேயன்றி வேறில்லை. புலவர் தன் அகவாழ்விலும் புறவாழ்விலும் தான் அனுபவித்த மற்றும் கண்டு கேட்டுணர்ந்த செய்திகளை உள்ளவாறே கூறாமல் கற்போரைக் கவர்ந்திடும் வகையிலும் இன்பம் பயக்கும் வகையிலும் படைக்கத் துணை செய்வது கற்பனை எனலாம். கற்பனை என்ற சொல் சங்க இலக்கியங்களில் காணப்பெறவில்லை. ஆனால் கற்பனை என்னும் பொருளில் சங்க இலக்கியங்களில் 'புனைந்துரை' கட்டுரை என்னும் சொற்கள் பயின்று வந்துள்ளன. தான் ஆழ்ந்து சிந்தித்த எண்ணங்களையும் அவற்றால் உருவான காட்சிகளையும் புலவர்கள் தன் கற்பனா சக்திக்கு ஏற்ற வகையில் படிப்பவர் களிப்புறும்படி பாடலாக வடிக்கின்றனர்.

> **"ஒரு சிறந்த கலைஞன் தான் காணும் அழகிய காட்சியின் கூறுகளைப் பிரித்துப் பார்க்கிறான். சிலவற்றை ஒதுக்குகிறான். சிலவற்றை ஏற்கிறான். ஏற்பன சிலவற்றைத் தொகுத்து ஒரு புதிய முழுமையான காட்சியினைப் படைக்கிறான். அத்தகைய படைப்பு அவனனுடைய கற்பனைத் திறனின் விளைவாகும்."**[1]

என்று கூறும் இரா.மாயாண்டியின் கருத்தும் இங்கு ஏற்புடையதாய் அமைகிறது. புலவன் தான் வாழ்ந்த காலத்து கண்ட காட்சிகளைக் கற்பனை நயத்துடன் படைக்கிறான். உள்ளதை உள்ளவாறே கேட்பதற்கும் படிப்பதற்கும் மனம் விழைவு கொள்ளாது. ஆகையால் புலவர்கள் தம் பாடலில் புனைவுகளைக் கையள வேண்டிய நிலை ஏற்பட்டது. புலவன் தான் காணுகின்ற காட்சிகளில் மனம் ஒன்றும் போது அவனுக்குள் பலவிதமான கற்பனைகள் பிறக்கின்றன. தாம் அனுபவித்த சுவையைப் பிறரும் அருந்தி மகிழ வேண்டும் என்ற நோக்குடன் பலவித புனைவுகளோடு தமது படைப்பைப் புலவர்கள் படைத்தளிக்கின்றனர். இராம செளந்தரவள்ளி,

> **"கற்பனை என்பது மனதின் படைப்பு. அதற்கு கட்டுப்பாடோ வரையறையோ, கால, இடசெயல் எல்லைகளோ இல்லை."**[2]

என்று விளக்கம் தருகின்றார். இதனால் கற்பனைக்கு எல்லையில்லாத மன உணர்வுகளே அடிப்படைக் காரணமாய் அமைவதை அறியலாம். புலவனின் மனதில் தோன்றிய பலவித கற்பனைகளே இலக்கியத்தில் உவமை, உருவகம்,

உள்ளுறை, இறைச்சி, நடை என பலவித அணிகளாகப் பரிணமிக்கின்றன. இதனை இரா.மாயாண்டி,

> **“ஒரு கவிஞனின் கற்பனைத் திறன் சிறந்து விளங்குமானால் பாடப்படும் பொருள் அவன் எதிரில் இல்லாத நிலையிலும் அவனுடைய புனைவுரை சிறப்பாக அமையும். அவனது வெறுங் கற்பனைத் திறன் சிறந்து விளங்குமானால் கவிதையின் அணிநலம் போற்றத்தக்கவாறு அமையும்.”**[3]

என்று கூறுவதால் கற்பனை வழி அணிநலன் அமைவதை அறியலாம். உண்மை நிகழ்வையும் கற்பனை கலந்தே சங்கப்புலவர்கள் பாடியுள்ளனர். இத்தகைய முறையில் சங்கப் பெண்பாற் புலவர்களின் பாடல்களில் இடம்பெற்றுள்ள கற்பனைகள் இப்பகுதியில் ஆராயப்படுகின்றன.

**கற்பனையின் வகைகள்**

சங்கப் பெண்பாற்புலவர்கள் அகம், புறம் ஆகிய இருநிலைகளிலும் தமது கற்பனையைச் செலுத்தியுள்ளனர். அதனடிப்படையில் கீழ்வரும் பாகுபாட்டிற்குள் பகுத்து ஆராயப்படுகிறது.

1. கருத்து விளக்கக் கற்பனை
2. அகப் பொருள் கற்பனை
3. புறப்பொருள் கற்பனை
4. இயற்கைக் கற்பனை

என்னும் வரிசையில் கற்பனைத் திறன் காட்சிப்படுத்தப்படுகிறது.

**1. கருத்து விளக்கக் கற்பனை**

உண்மை நிகழ்வுகளை உள்ளவாறே கூறாமல் அவை விளங்குமாறு கற்பனை நயத்துடன் கூறுவதாக கருத்து விளக்கக் கற்பனை அமைகிறது. புலவர்களின் இத்தன்மை குறித்து இரா.மாயாண்டி,

> **“பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் உள்ளவாறே படைக்காமல் அவை உணர்ந்தும் உட்பொருள்களைப் புலப்படுத்திக் கற்பனை செய்வதும், இயற்கை நிகழ்ச்சி ஒன்றனுக்குப் புலவர் தாமொரு காரணத்தைக் கற்பித்துத் தாம் கூறவிரும்பும் கருத்தினை அதனோடு தொடர்பு படுத்தி விளக்குவதும் கருத்து விளக்கக் கற்பனையாகும்.”**[4]

என்று கூறுகின்றார். புறநிகழ்வுகளைத் தம் மனதுள் காட்சிப்படுத்திய பின்னரே புலவர்கள் அவற்றைப் பாடலாக வடிக்கின்றனர் என்பது அறியப்படுகிறது.

இவ்வுலக வாழ்க்கை நிலையற்றது என்பது அனைவரும் அறிந்த உண்மையாகும். இதைத் தலைவி ஒருத்தி தம்மைவிட்டுப் பிரிந்து செல்லும் தலைவனுக்கு நிலையாமையை உணர்த்தும் பொருட்டு, இவ்வுலக வாழ்க்கை சூதாடு கருவி போல் மாறி விழும் நிலையற்ற தன்மை உடையது. இதை உணர்ந்த அறிவுடைய மக்கள் தம் துணையைப் பிரிந்து செல்வது முறையற்ற செயல் என்று சோலையில் இருக்கும் குயில் கூறுவதாக நப்பசலையார் என்னும் புலவர் காட்சிப்படுத்துகிறார்.

**“கவறுபெயர்ந் தன்ன நில்லா வாழ்க்கையிட்**
**டகறல் ஓம்புமின் அறிவுடையீ ரெனக்**
**கையறத் துறப்போர்க் கழறுவ போல**
**மெய்யுற இருந்து மேவர நுவல”**[5]

என்று வரும் பாடலடிகள் தலைவி தலைவனைப் பிரிந்து செல்லுதல் வேண்டாம் என்று கூறும் கருத்து விளக்கக் கற்பனையாக அமைந்துள்ளன.

### அகப்பொருள் கற்பனை

அகத்துறைப் பாடல்கள் தலைவன் தலைவியரது வாழ்வியலைப் பற்றி பேசுவதாக அமைகின்றன. களவு, கற்பு ஆகிய இரு நிலைகளிலும் சங்கப் புலவர்கள் தமது கற்பனைத் திறன்களைப் பதிவு செய்துள்ளனர். இதனை செ.சாரதாம்பாள்,

> **“ஒவ்வொரு பாடலும் நுட்பமான இயற்கைக் கூறுபாடுகளைக் கொண்டதாக மிக நுணுகி விளக்கப்பட்டுள்ளது. மனித உணர்வும் இயற்கையும் பின்னிப் பிணைந்துள்ளமையே காணப்படுகிறது. காதல் உணர்வும் இயற்கை உணர்வும் இரண்டறக் கலந்துள்ளன.”**[6]

என்று தெளிவுபட விளக்குகின்றார். தொல்காப்பியர் அகத்தினை இலக்கணம் பற்றிக் கூறுகையில்,

**“சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்”**[7]

என்று கூறுவதனால் அகத்துறை இலக்கியம் தனி மனிதனுக்காகப் படைக்கப்படாமல் சமுதாய மக்கள் அனைவரின் வாழ்வியலை உள்ளடக்கிய பொதுத் தன்மை கொண்டதாகப் படைக்கப்பட்டுள்ளது என்பதை உணரலாம். தெ.கலியாண சுந்தரம்,

> **“காதல் என்னும் அடிப்படை மானுட உணர்ச்சியைப் பாடுபொருளாகக் கொள்ளுமிடத்துப் பிறநாட்டு இலக்கியங்களைப் போலச் சங்ககாலப் புலவன் தன்னுள்ளத்தே தோன்றிய**

> **உணர்ச்சிகளைத் தன் மனத்தை ஈர்த்தவர் மீது இட்டுப் பாடியனவாக இல்லை. இவ்வுணர்ச்சி மானுடப் பொதுமையாதலின், எல்லாரது வாழ்க்கை அனுபவத்திற்கும் ஏற்பத் தொகுத்துப் பின்னர் பாகுபடுத்தித் திணை, கைக்கோள், கூற்று என வகுத்துப்பாடுவது என்பதை, அகம், புறம் என்ற இலக்கிய வகையைப் படைத்ததைத்தான் இங்கு முதற்காரணமாகக் கற்பனை என்று கூறுகிறோம்.''[8]**

என்று உரைப்பதும் இங்குப் பொருந்துவதாய் அமைகிறது. அகத்திணையில் படைக்கப்பட்டுள்ள தலைவன், தலைவி, தோழி, பாணன், செவிலி நற்றாய், தமர் போன்ற பாத்திரங்கள் அனைத்தும் புலவர்களின் கற்பனையில் முகிழ்ந்தவையன்றி வேறல்ல என்பதை அறியலாம். இவ்வாறு சங்கப் பெண் பாலர்களின் அகத்துறைப் பாடல்கள் வழி தலைவன் தலைவியரது வாழ்வியல் கூறுகளை எடுத்தியம்பும் பொருட்டு அமைந்துள்ள கற்பனைகளை விளக்குதாக இப்பகுதி அமைகிறது.

**பிரிவு நிலை**

சூரியன் நெருப்பைப் போன்று சுட்டெரித்ததால் வெம்மை மிகுந்து நிலப்பரப்பு கானல் நீராகக் காட்சியளித்தது. அத்தகைய காட்டின் வழி தலைவன் பொருள் தேடச் சென்றான். அவனது பிரிவைத் தாங்க இயலாத தலைவி தன்னையும் உடனழைத்துச் சென்றிருந்தால் தலைவனும் முயக்கத்தைப் பெற்றிருப்பான், நீரற்றக் குளத்தை நிறைக்கப் பெய்யும் மழைபோல ஒழுகும் எனது கண்களும் உறக்கம் கொண்டிருக்கும் என்று கூறிப் புலம்புவதாக ஔவையார் தமது ஆழ்ந்த கற்பனையின் வழி காட்சிப்படுத்துகின்றார். இதனை,

> **''தறுகுள நிறைக்குந போல வல்கலும்**
> **அழுதன் மேவல வாகிப்**
> **பழிதீர் கண்ணும் படுகுவ மன்னே''[9]**

என்று வரும் அவரது பாடலடிகள் தலைவனது பிரிவும், அவன் சென்ற வழியின் கொடுமையும் தலைவியின் மனவருத்தமும் கற்பனை நயத்துடன் விளக்குவதாக அமைந்துள்ளன.

தலைவனது பிரிவு தலைவியின் அழகைச் சிதைத்து ஒழித்ததாகக் கற்பனை செய்கிறார் வெள்ளி வீதியார் பசுவின்பால் அதன் கன்றும் உண்ணப்படாமல் கலத்திலும் கறந்து கொள்ளாமல் வீணாக நிலத்தில் சிந்துவதைப் போல் மேனியின் அழகு தனக்கும் இன்பம் தராமல் தலைவனுக்கும் இன்பம் தராமல் பசலை என்னும் நோயால் உண்ணப்பட்டு அழிவதாகத் தலைவி புலம்பும் நிலையைப் புலவர்

கற்பனை செய்து பாடியுள்ளார்.[10] தலைவன் மீண்டு வருவதாகக் கூறிய கார்ப்பருவம் வரப்பெற்றதும் அவன் மீளாமை கண்டு தலைவி வருந்துகிறாள். தன் தோழியிடம் கார் காலத்தில் மலர்ந்த முல்லை மலர்கள் நமது நிலையைக் கண்டு பற்கள் விளக்குமாறு நகைப்பைச் செய்யும் தன்மையுடையதாய் உள்ளன என்று கூறுவதாக ஒக்கூர் மாசத்தியார் முல்லை மலரை ஒரு பெண்ணாகக் கற்பனை செய்துள்ளார். இதனை,

**"தொகுமுகை யிலங்கு எயிறு ஆக**
**நகுமே தோழி நறுந்தண் காரே"**[11]

என்று தலைவி உரைப்பதாக சுட்டுகின்றார்.

**குறியிடம் பற்றிய கற்பனை**

தலைவன் இரவுக் குறியின் வழி தலைவியைக் கூடுதற்கு வருகிறான். சிறைப்புறமாக நிற்கும் அவனைத் தோழி காண்கிறாள். வரைதல் வேட்கையை அவனுக்குள் உண்டு செய்யும் வகையில் தோழி அறிவுரை புகட்டுவதாக நெடுவெண்ணிலவனாரின் பாடல் ஒன்று அமைந்துள்ளது. அச்சம் தரும் இரவு பொழுதில், பிறர் எளிதில் கண்டுணரும்படியான நிலவு வெளிச்சத்தில் தலைவியைக் கண்டு கூடுவது துன்பம் தரும் செயலாகும். அதனால் அத்துயரினைப் போக்கும் வழி வரைவு மேற்கொள்ளுதலே ஆகும் என்பதைத் தோழி,

**"எல்லி வருநர் களவிற்கு**
**நல்லை யல்லை நெடுவெண் ணிலவே"**[12]

என்று கூறுவதாக அமைகிறது. நிலவு குறிப்பிட்டக் கால அளவிற்குள் மறைந்து விடும் தன்மையுடையதாக இருப்பினும் அதை 'நெடுவெண்ணிலவே' என்று தோழி கூறுவதாக அமையப் பெற்றது புலவரின் கற்பனைத் திறத்தை விளக்குவதாய் உள்ளது. இவ்வாறு குறியிடம் வந்த தலைவன் ஒருவனுக்குத் தலைவியை உடன்படுத்த எண்ணி அன்னையின் உறக்கத்தை அறிய விழைகிறாள் தோழி. முதலில் அருவியின் இனிய ஒலியைக் கேட்டாயோ என வினவுகிறாள். அதற்கு மறுமொழி எதுவும் வராததைக் கண்டு அன்னை உறங்குகிறாள் என்பதை உணர்கிறாள். இருந்த போதும் அதனை உறுதி செய்யும் பொருட்டு அசோக மரத்திலுள்ள ஊஞ்சல் கயிற்றைப் பாம்பெனக் கருதி விழுந்த இடியோசைக் கேட்கவில்லையோ என வினவுகிறாள். அப்போதும் மறுமொழி எதுவும் வராமையால் அன்னை உறங்குவதை ஐயத்திற்கு இடமின்றி

உறுதிப்படுத்துகிறாள் தோழி. அதன் பின்னரே தலைவியைக் குறியிடத்திற்கு அனுப்பினாள் என்ற பொருள் பொதிந்த கற்பனையை ஔவையார்,

**“ஓங்குசினைத் தொடுத்த ஊசல் பாம்பென**
**முழுமுதல் துமிய வுரும் எறிந்தன்றே**
**பின்னும் கேட்டியோ எனவும் அஃது அறியாள்**
**அன்னையும் கனைதுயில் மறந்தனள்”[13]**

என்று கூறுவதன் வழி அறியலாம்.

### அறத்தொடு நிற்றல் வழி கற்பனை

தலைவன் வரைவு மறுக்கப்பட்ட நிலையில் தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்பாள். தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்பாள். செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்பாள். இது அலர் தோன்றிய வழி நிகழும் நிகழ்வாகும். இவ்வாறான அறத்தொடு நிற்றல் துறையில் அமைந்தது ஆதிமந்தியாரின் கற்பனை கலந்தபாடல் ஒன்று. கைவளை நெகிழ்வதற்குக் காரணமான தலைவன் வீரர்கள் கூடிய இடத்திலும் பரத்தையர் ஆடும் துணங்கைக் கூத்திலும் காணப்பெறவில்லை. இன்னும் பிற இடங்களில் தேடியும் காணப்பெறாத அவன் ஆடுதற்குரிய தகுதியுடையவன் என்பதை,

**“யானும் ஓர் ஆடுகள மகளே என்கைக்**
**கோடு ஈர்இலங்கு வளை நெகிழ்த்த**
**பீடுகெடு குரிசிலும் ஓர் ஆடுகள மகனே”[14]**

என்று கூறி, நொதுமலர் வரைவின் போது தலைவி தன் களவொழுக்கத்தை வெளிப்படுத்துவதாக கற்பனை நயத்துடன் விளக்குகிறார்.

### உடன்போக்கு வழி கற்பனை

தலைமக்கள் இருவரும் உடன்போக்கு மேற்கொண்டனர். அவர்கள் சென்ற வழி பாலையாதலால் மிகுந்த துயரமுடையதாக இருந்தது. இத்தகைய உடன்போக்கிற்குத் தோழி உறுதுணையாக இருந்தாள். தலைவியின் உடன்போக்கை அறிந்த செவிலித்தாய் தலைமக்கள் இருவரும் பாலை வழியே சென்றிருக்கக் கூடும் என்ற கற்பனையில் தேடி அலைந்தாள். எங்குத் தேடியும் காணாமல் வருந்தும் செவிலிக்கு நடந்து நடந்து கால்கள் தளர்ந்து விட்டன. பார்த்துப் பார்த்து கண்கள் ஒளி மங்கிவிட்டன. இத்தகைய செவிலி ஒருத்தியின் துன்பநிலையை வெள்ளி வீதியார்,

**“காலே பரிதப்பினவே கண்ணே**
**நோக்கி நோக்கி வளியிழந் தனவே”[15]**

என்று கற்பனை நயத்துடன் மொழிந்துள்ளார். பாலை வழி போவோர் வருவோரையெல்லாம் எண்ணுகையில் வானத்து மீன்களைக் காட்டிலும் அதிகமாக இருப்பினும் தன் மகளையும் அவள் தலைவனையும் மட்டும் காண முடியவில்லையே என ஏங்கும் செவிலியின் அவலாக்காட்சி வெள்ளி வீதியாரின் கற்பனையில் பிறந்த காட்சியாகும். பொருட்பிரிவின் வழி சொல்லும் ஒரு தலைவனிடம் தலைவியின் நிலையைத் தோழி இவ்வாறு எடுத்துரைக்கிறாள். தனக்கு அடியிலேயே நீரினைப் பெற்றிருக்கும் குவளை மலர் மேல் காற்று வீசினாலும் வாடாத தன்மை உடையது. அதுபோல யானை தன் துதிக்கையை மடித்து வருந்துகின்ற பாலை வழியும் நும்மோடு வந்தால் தலைவிக்கு இன்பம் உடையதே ஆகும் என்பதை,

**“யானை கைம்மடித்து உயவும்**
**கானமும் இனியஆம் நும்மொடு வரினே”[16]**

என்று சொல்லி தோழி தலைவனைப் போக்குடன் படுத்துவதாக ஔவையாரின் கற்பனை அமையப் பெற்றுள்ளது.

**இல்லற வழி கற்பனை**

தலைமக்கள் இருவரும் இல்வாழ்க்கையில் தலைப்பட்டிருந்தனர். இவர்களின் இன்புற்ற வாழ்வைத் தோழி காண்கின்றாள். தலைவி அருகில் இருந்த போதும் தலைவன் மிகுந்த வேட்கை உடையவனாக இருந்தான். இதைக் கண்ட தோழி, நீர் நிறைந்த பொய்கையில் ஆம்பல் மலரைப் பறிப்போர் நீர் வேட்கை அடைந்தது போல் தலைவியின் மார்பிடையே துயலப் பெற்றும் தலைவன் வேட்கை தணியாதவனாக இருந்தான் என்பதை,

**“ஆம்பல் குறுநர் நீர் வேட்டாங்கு இவள்**
**இடைமுலைக் கிடந்தும் நடுங்கல் ஆனீர்”[17]**

என்று வரும் நெடும்பல்லியத்தனாரின் பாடலடிகள் தெரிவிக்கின்றன. தலைமக்களின் இல்வாழ்க்கை கற்பனை நயத்துடன் விளக்கப் பெற்றுள்ளது.

**ஊடல் வழி கற்பனை**

பரத்தையர் பிரிவு மேற்கொண்டு இல்லம் திரும்ப விழைந்த தலைவன் தலைவியின் ஊடலைத் தணிக்க தோழியின் உதவியை நாடினான். வாயிலாக வந்த

தோழிக்குத் தலைமகள், தலைவனது செயலைக் கண்டு எனது நெஞ்சம் மிகவும் வருந்துகிறது. நெருஞ்சியின் கண்ணுக்கினிய புதியமலர், பின்னர்க் காலில் தைக்கும் முள்ளினைத் தருவது போல மணமான புதிதில் இன்பம் தந்த தலைவன் இப்போது பரத்தையரிடம் பிரிந்து பெருந்துன்பத்தைத் தருபவனாக உள்ளான் என்று கூறி வருந்தினாள். இவ்வாறான இயைபு கற்பனையில் அள்ளூர் நன்முல்லையார்,

**"இனிய செய்த நம் காதலர்**
**இன்னா செய்தல் நோம் என் நெஞ்சே"**[18]

என்று கூறுவதன் வழி அறியலாகின்றது.

**புறப்பொருள் கற்பனை**

மன்னர்களின் வாழ்வும் முடிவும் மறவர்களின் போர்களக் காட்சியும் பலவிதப் புனைவுகளோடு பெண்பாற்புலவர்களால் பாடப் பெற்றுள்ளன. படைக்கலத்தின் மிகுதியைக் கடல் போன்றது எனக் கூறுமிடத்து ஔவையார்,

**"அவன்தானும் நிலம் திரைக்கும் கடல்தானை"**[19]

என்று கற்பனை நயத்துடன் கூறுகின்றார். வீரர்களின் ஆற்றலைக் கூறுமிடத்து அடிக்கும் கோலுக்கு அஞ்சாது எதிர்த்துச் சீறும் அரவுபோல் இருந்தனர் என்று ஔவையார் சிறப்பிக்கின்றார்.[20] இவ்வாறு மறவர்களின் வீரவாழ்வு குறித்துப் பேசிய ஔவையார் அதியமானின் வீரத்தைக் கூற விழைகின்றார். புலியின் முன் நில்லாத மான் போலவும், சூரிய ஒளிக்கு முன் நில்லாத இருள் போலவும் அதியமான் முன்பு பகைவர்கள் நிற்க அஞ்சுவர் என்று தமது கற்பனையில் காட்சிப் படுத்துகின்றார்.[21]

**இறப்பு சடங்கு**

அதியமான், வேள்எவ்வி ஆகிய இருவரும் தாம் வாழ்ந்த காலத்து பெரும் வள்ளல்களாகத் திகழ்ந்தனர். இவர்கள் இறந்த நிலையில் ஔவையார் அதியமானைப் பற்றியும், வெள்ளெருக்கிலையார் வேள் எவ்வியைப் பற்றியும் கற்பனைச் சிறப்புடன் பாடிள்ளனர். வாழ்ந்த காலத்தில் நாடு முழுவதும் கொடுத்தாலும் பெறாத தன்மையுடைய அதியமான் நடுகல்லான போது சிறுகலத்தில் படைக்கும் கள்ளுணவை ஏற்பானோ என்று ஔவையார் பாடியுள்ளார். தாம் வாழ்ந்த காலத்தில் பலரோடு கூடியிருந்து உண்டு மகிழ்ந்த வேள் எவ்வி, இறந்த பின் அவனது மனனவியர் படைக்கும் சிறிதளவு உணவை

உண்பானோ என்று வெள்ளெருக்கிலையாரும் வருந்திய உள்ளத்தோடு பாடியுள்ளார். ஔவையார்,

**''சிறு கலத்து உகுப்பவும் கொள்வன் கொல்லோ''[22]**

என்று அதியமானையும், வெள்ளெக்கிலையார்,

**''இச்சிறு பிண்டம் யாங்கு உண் டனன்கொல்''[23]**

என்று வேள் எவ்வியையும் தமது கற்பனை வழி சிறப்பித்துள்ளனர். வாழ்ந்த காலத்தில் பிறருக்குக் கொடுத்து வள்ளல்களாகத் திகழ்ந்த அவ்விரு மன்னரும் தாம் இறந்த காலத்தும் பிறரிடம் பெற்றுவாழும் தன்மை இல்லாதவர்கள் என்பது இங்குக் கருத்தாய் அமையப் பெற்றது. அதியமான் வாழ்ந்தபோது இரவலரைப் போற்றிப் புரக்கும் வள்ளலாகத் திகழ்ந்தான். அவனிடம் பொருள்பெறச் சென்ற விறலி ஒருத்தி தன்புலால் நாற்றமுடைய தலையை நரந்தம் பூவின் மணமுடைய தனது கையால் பரிவுடன் தடவி பரிசுபல கொடுத்தான் என்று கூறுவதாக ஔவையார் தமது கற்பனை வழி கூறுகின்றார்.[24]

**இயற்கை வழி கற்பனை**

இயற்கை நிகழ்வுகளைச் சங்கப் பெண்பாற் புலவர்கள் பல இடங்களில் காட்சிப்படுத்தியுள்ளார். தலைவிக்கு உண்டான காம வெள்ளம் கங்கை ஆற்றின் கரையை உடைத்துக் கொண்டு பாயும் இமயத்தின் அருவி போன்றது என்று மதுரை ஓலக்கடையத்தார் நல்வெள்ளையார் என்னும் புலவர்,

**''கங்கைஅம் பேர்யாற்றுக் கரை இறந்து இழிதரும்**
**சிறை அடுகடும் புனல் அன்ன என்**
**நிறை அடுகாமம் நீந்துமாறே''[25]**

என்று தலைவி தன் காம வேட்கையை வெளிப்படுத்துவதாக கற்பனை செய்கின்றார். முல்லைக் காடுகளில் மலரும் கருவிளை மலரைத் தலைவனைப் பிரிந்து கையற்று வருந்தும் தலைவியின் நீர் ததும்பும் கண்களுக்கு ஒப்புமை கூறும் புலவர் அம்மலர்களைக் காணும் தலைவனுக்கும் தலைவியின் நினைவு மேலிடும் என்று உரைக்கின்றார். இந்நிகழ்வைக் கழார்க் கீரன் எயிற்றியார்,

**''காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்**
**நீர்வார் கண்ணிள் கருவிளை மலர''[26]**

என்று காட்சிப்படுத்துகின்றார். கார்காலத்தில் பொழியும் தொடர்மழையால் தேங்கிய மழைநீர் பள்ளங்களில் பலவகை இசைக்கருவிகள் ஒலிப்பதைப்

போன்று தேரைகள் ஒலி எழுப்பியதாக பொதும்பிற் புல்லாலங் கண்ணியார் என்னும் புலவர் காட்சியப்படுத்தியுள்ளார்.[27]

மருதநிலக் காட்சிகளை அள்ளூர் நன்முல்லையார் தமது கற்பனையில் இவ்வாறு சிறப்பிக்கின்றார். சிவந்த கண்களையுடைய எருமை சேற்றில் நிற்பதை வெறுத்து யாமத்தில் கயிற்றை அறுத்து முள்வேலியைத் தனது கொம்புகளால் தகர்த்து வயல்களில் உள்ள மீன்கள் அஞ்சி ஒடும்படியாக நடந்து சென்றது. அங்குள்ள வள்ளைக் கொடிகளையெல்லாம் நிலைகுலையச் செய்த பின்னர் தாமரை மலரை உண்டது. இதனை,

**''சேற்றுநிலை முனைஇய செங்கட்காரான்**
**ஊர்மடி கங்குலில் நோன்தளை பரிந்து**
**-------- --------- --------- ---------**
**அம்தூம்பு வள்ளை மயக்கி தாமரை**
**வண்டு ஊது பனிமலர் ஆரும்''**[28]

என்று வரும் பாடலடிகள் மூலம் காட்டுகின்றார். தலைவியை விட்டுப் பிரிந்து பரத்தையரிடம் சென்று இன்பம் துய்க்கும் தலைவனது செயலை விளக்கவே புலவர் இத்தகைய கற்பனையை வடித்துள்ளார். மேலும், மருத நிலத்துப் பொய்கையில் நீர் நாய்கள் உணவை வெறுத்து உறக்கம் கொண்டதாகவும், பொய்கையில் வீழ்ந்த கனிகளை மீன்கள் கவ்வி உண்டதாகவும், புலவர்கள் தமது கற்பனையில் காட்சிப்படுத்தியுள்ளனர்.[29]

பாலை நிலத் தலைமக்கள் குறித்துச் சங்கப் புலவர்கள் பலரும் படிப்போர் இறங்கும் வகையில் பாடல் புனைந்துள்ளனர். சுரத்தின் வழிச் செல்வோர் படும் இன்னல்களும், அங்கு வாழும் உயிரினங்களின் துயர நிலைகளும் வறண்ட நிலச் சூழலும் பாலைத் திணையில் அதிகம் இடம் பெற்றுள்ளன. இவ்வாறான காட்சிகளைப் பெண்பாற் புலவர்களும் கையாண்டுள்ளனர்.

கோடையின் வெம்மையால் காடுகள் வளமிழந்தன. காய்ந்த மூங்கில் வெடித்ததால் அவற்றின் கணுக்களிலிருந்து தெரிந்த முத்துக்கள் அங்கிருந்த கழங்கு அகன்ற பழைய குழிகளில் வீழ்ந்து கிடந்தன என்பதை முள்ளியர் பூதியார்,

**''காடுகவின் அழிய உரைஇ கோடை**
**நின்று தினவிளிந்த அம்பணை நெடுவேய்க்**
**கண்விடத் தெறிக்கும் மண்ணா முத்தம்''**[30]

என்று காட்சிப்படுத்துகின்றார்.

**வாடையின் துயரம்**

வாடைக் காலத்தின் கொடுமைகள் குறித்துப் பெண்பாற் புலவர்கள் தமது பாடல் வழி பலவாறு சிறப்பித்துள்ளனர். வாடைக்காலம் தலைவனைப் பிரிந்து வாழும் தலைவியைத் துன்புறுத்துவதாக இருந்தமையால் அதை கழார்க் கீரனெயிற்றியார்,

**'பண்பில் வாடை'**[31]

என்றும்,

**''குன்று நெகிழ்ப்பன்ன குளிர்கொள் வாடை''**[32]

என்றும் கூறுகின்றார். தாழை தளருமாறு வீசும் வாடைக்காற்று பிரிந்த மகளிரை வருந்தும் தன்மையது என்பதை குன்றியனார்,

**''தாழை தளரத் தூக்கி மாலை**
**அழிதக வந்த கொண்டலொடு''**[33]

என்று புனைந்து பாடியுள்ளார். மழை பெய்து அடங்கிய வெண்மேகமானாது கடையப் பெற்ற பஞ்சு போன்று சிறு சிறு துளிகளைத் தூவி நின்றது. வயலில் நின்ற கரும்பின் பூ வாடைக்காற்றால் அசையும் பூளைப்பூவினைப் போல் அசையப் பெற்றது. நீலநிறக் கண்ணாடி போன்ற பச்சை இலைகளைக் கொண்ட பகன்றை மரம் மலர்ந்து குலுங்கியது. அவரையின் அரும்புகள் மலர்ந்தன. விலங்கினங்கள் குளிரால் நடுக்குற்று தவித்தன. தலைவனைப் பிரிந்த மகளிரும் தம்மை அலங்காரம் செய்து கொள்வதை வெறுத்தனர்.[34]

புகையின் நிறத்தினை ஒத்த பனித் துளிகள் மலர்களில் நிறைந்திருந்தன. ஈங்கையின் தளிர்கள் இரு பிளவாகிய ஈரல் போன்று காட்சியளித்தன. கருவிகளை மலர்கள் தலைவனைப் பிரிந்து வாடும் மகளிரின் நீர்த்ததும்பும் கண்களைப் போல் இருக்கப்பெற்றன.[35] இத்தகைய வாடைக்காலத்தின் நிகழ்வுகளை எயிற்றியார் தமது கற்பனை வழி அழகுறக் காட்சிப்படுத்தியுள்ளார். கச்சிப்பேட்டு நன்னாகையார் வாடைக்காலத்தைத் தலைவி தன்னைக் கொல்ல வந்த கூற்றம் என்று கூறும்படியாக கற்பனை செய்து பாடியுள்ளார். இதனை,

**''கூதிர் உருவின் கூற்றம்**
**காதலர்ப் பிரிந்த எற்குறித்து வருமே''**[36]

என்று வரும் அவரது பாடலடிகள் வாயிலாக அறியலாம். இவ்வாறு பெண்பாற் புலவர்களின் வாடைக் காலம் பற்றிய கற்பனை நிகழ்வுகள் அமைந்துள்ளன.

**உவமை - வரையறை**

ஒரு பொருளைத் தகுந்த ஒப்புமையுடன் தொடர்பு படுத்தி விளக்கச் செய்வது உவமையின் குறிக்கோளாக அமைகிறது. வினை, பயன், மெய், உரு என்பன உவமையின் பண்புகளாக அமைவதைத் தொல்காப்பியர்,

**''வினைபயன் மெய்உரு என்ற நான்கே**
**வகைபெற வந்த உவமத் தோற்றம்''**[37]

என்று கூறுகின்றார். உவமை என்பது ஒப்புமைக்குக் காரணமாய் அமைவது உவமிக்கப்படும் பொருள் சிறந்த விளக்கம் பெறுவதே உவமையின் பயனாகும். உவமைப் பொருள் சிறந்ததாக அமைய வேண்டும் என்பதைத் தொல்காப்பியர்,

**''உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை''**[38]

என்று வலியுறுத்துகின்றார். உவமை உயர்ந்த பொருளாக அமைய வேண்டும் என்பதை ரா.சீனிவாசன்,

**''உவமை என்பது கவிஞனின் அனுபவப் பொருளாகும். பொருள் என்பது அவன் காணும் புதிய பொருளாகும். அவன் ஏற்கனவே கண்டு வைத்தப் பொருளைப் புதிதாகக் காணும் பொருளோடு பொருத்தி வைத்து அப்பொருளின் உயர்வு தாழ்வுகளை அளந்து அறிவிக்கிறான் எனக் கூறலாம். பொதுவாகப் பொருளின் சிறப்பை வற்புறுத்தவே உவமை அமைக்கப்படுகிறது. அதன் உயர்வைக் காட்ட அதினினும் உயர்ந்த பொருளையே வரையறையாக அமைக்க வேண்டியுள்ளது. எனவே உவமை பொருளைவிட உயர்ந்ததாக இருக்க வேண்டும் என்று எதிர்ப்பார்க்கப்படுகிறது.''**[39]

என்று விளக்கம் தருகின்றார். இதனால் சங்கப் பாடல்கள் உயர்ந்த உவமைகளைக் கொண்டு இருக்கின்றன என்பதை அறியலாம்.

**''சங்க இலக்கியத்தில் பெண்பாற் புலவர்கள் உவமையினை இயற்கைப் பொருட்களோடும், பண்பாட்டோடும், பழமொழியோடும், நடைமுறைப் பழக்க வழக்கங்களோடும் ஒப்புமைப்படுத்திக் கருத்தை வெளிப்படுத்தி யுள்ளார்.''**[40]

இத்தகைய முறையில் பெண்பாற் புலவர்களின் பாடல்களில் பயின்று வரும் உவமைகளை,

1. புறப்பொருள் உவமை
2. அகப்பொருள் உவமை
3. கலையியல் உவமை
4. விலங்குகள் உவமை
5. பறவைகள் உவமை
6. தாவரங்கள் உவமை
7. இயற்கை உவமை

என்று வரிசைப்படுத்தி அவற்றில் காணும் பொருளை விளக்கி ஆராயும் போக்கில் இப்பகுதி அமைகிறது.

**1. புறப்பொருள் உவமை**

பெண்பாற்புலவர்களின் பாடல்களில் காணப்பெறும் புறம் சார்ந்த செய்திகளின் அடிப்படையில் வரும் உவமைகளைக் கொண்டு அமைவது புறப்பொருள் உவமையாகும். அவை,

1. மன்னர்
2. மூதின் மகளிர்
3. போர்
4. புராணம்

என்னும் வகையில் அமைகின்றது.

**1. மன்னர் பற்றிய உவமைகள்**

**அதியமான் நெடுமான் அஞ்சி**

கடையேழு வள்ளல்களில் ஒருவனாகிய அதியமான் மிகுந்த கொடைத் தன்மை கொண்டவன். தன்னை நாடிவரும் இரவலர்க்கு தன் பெயர் நீண்ட காலம் நிலைபெற்று இருக்குமாறு தேர்களைப் பரிசாக அளிப்பவன். இத்தகைய கொடைத் தன்மை கொண்ட அதியமானின் நாள் மகிழிருக்கை போல் மழை பெய்யத் தொடங்கி மாறாத தன்மை உடையதாய் விளங்கியது என்று ஔவையார் உவமைப்படுத்திக் காட்டுகின்றார். இதனை,

**"தேர்வீசு இருக்கை போல**
**மாரி யிரீஇ மான்றன்றால் மழையே"**[41]

என்று வரும் பாடலடிகள் காட்டுகின்றன.

அதியமான் பகைவரின் ஊரினை முற்றுகையிட்ட போது அவ்வூர் மக்கள் அச்சம் கொண்டு உறங்காது தவித்ததைப் போல் தலைவியும் பிரிந்து சென்ற தலைவனை நினைத்து உறக்கம் கொள்ளாதவனாக இருந்தாள் என்னும் செய்தியை ஔவையார்,

**"...... ....... ........... நெடுந்தே ரஞ்சி**
**கொன்முனை யிரவூர் போலச்**
**சிலவ குகநீ துஞ்சு நாளே"**[42]

என்ற தமது பாடலடிகளின் வாயிலாகக் கூறுகின்றார். தலைவிக்கு ஊர் மக்களின் துயர் இங்கு உவமை கூறப்பட்டுள்ளது.

**கரிகால் வளவன்**

முடத்தாமக்கண்ணியார் என்னும் புலவலர் கரிகாலன் மீது பாடிய பொருநராற்றுப் படையில் பல்வேறு உவமைகளைக் கையாண்டுள்ளார். யாளி என்ற விலங்கு யானை, சிங்கம், புலி முதலிய பெரிய விலங்குகளை வீழ்த்தும் வலிமையுடையது. அத்தகைய யாளியின் வலிமைக்கு ஒப்பானவன் கரிகாலன் என்பதை,

**''அளிநன் மான் அணங்குடைக் குருளை**
**மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி''[43]**

என்று சிறப்பிக்கின்றார். யாளிக்குக் கூறாமல் யாளியின் குட்டிக்கு உவமைக் கூறியது இவன் இளைய வீரன் என்பதைக் காட்டுகிறது. கரிகால் பெருவளத்தான் தன்னுடைய ஆற்றல் காரணமாகப் பகைவரது நாட்டிலும் புகழ்பெற்று விளங்கினான். இருள் நீக்கமுற சூரியஒளி காரணமாய் இருப்பதைப் போன்று கரிகாலனும் தனது வலிமையால் நாள்தோறும் வளர்ச்சி பெற்று வந்தான்.[44] சூரிய ஒளிக்கு முன் இருள் நில்லாததைப் போல் இவன் வலிமைக்கு முன் பகைவர் நில்லாது ஒழிந்தனர். இவ்வாறான கரிகாலனது வலிமை சூரிய ஒளிக்கு உவமை கூறப்பட்டது.

**கரிகாலனின் கொடை**

கரிகாலன் மிகுந்த கொடைத் தன்மை கொண்டவனாக விளங்கினான். பசுவானது தன் கன்றினை நோக்குவது போல் இரவலர்களைக் கருணையுடன் நோக்கினான். இரவலரின் பாசி போன்ற நைந்த ஆடையைக் களைத்து பூ முடிச்சுக்களுடைய பட்டாடையை உடுத்தும்படி செய்தான். நெருப்பு போன்று ஒளிவீசும் பொன்னால் செய்யப்பெற்ற தாமரை மலரைப் பாடினியின் தலையில் சூடிவிட்டான். இவ்வாறு முடத்தாமக்கண்ணியார் கரிகாலனது கொடைத் தன்மையைப் பல்வேறு உவமைகளுடன் சிறப்பிக்கின்றார். இதனை,

**'ஈற்று ஆ விருப்பின் போற்றுபு நோக்கி'[45]**

என்றும்,

**''எரி அகைந்தன்ன ஏடு இல் தாமரை**
**சுரி இரும் பித்தை பொலியச் சூட்டி''[46]**

என்றும் வரும் பாடலடிகளால் அறியலாம். மேலும், கரிகாலனிடம் பரிசில் பெற்றுத் திரும்பிய பொருநன் ஒருவன், பூவேலைப்பாடுகள் நிறைந்த பாம்பின் தோல் போன்ற மிகவும் மென்மையான ஆடையைப் பரிசாகப் பெற்றேன் என்று பரிசில் பெறச் செல்லும் பொருநனைப் பார்த்துக் கூறுவதாக உவமை நயம்பட முடத்தாமக் கண்ணியார் காட்சிப்படுத்துகின்றார். ஆடைக்குப் பாம்பின் தோல் உவமை கூறப்பட்டது. அதேபோல், கரிகாலன் இசைத்துப்பாடிய உடுக்கையின் கண்கள் கைப்படுவதால் பாம்பின் படத்திலுள்ள பொறிகள் போன்ற தழும்புகள் பெற்றிருந்ததாவும் கூறுகின்றார்.[47] பழுத்த மரங்களை நாடிச் செல்லும் பறவைகள் போன்று தமது வறுமையும் பசியின் துன்பமும் நீங்க கரிகாலனிடம் சென்ற பொருநன் கூற்றில் முடத்தாமக்கண்ணியார்,

**“பழுமரம் உள்ளிய பறவையின் யானும் அவன்**
**இழுமென் சும்மை இடனுடை வரைப்பின்”**[48]

என்று உவமை நயம்படக் காட்சிப்படுத்துகின்றார்.

கரிகாலன் பழுத்த மரத்திற்கும் பொருநன் பறவைக் கூட்டத்திற்கும் இங்கு உவமைக் கூறப்பட்டுள்ளனர். கரிகால் வளவன் முருகப் பெருமானைப் போன்ற சினம் கொண்டவனாகவும் அதேபோல் அழகுடையவனாகவும் முடத்தாமக் கண்ணியாரால் சிறப்பிக்கப்படுகின்றான். இதை,

**“முருகற் சீற்றத்து உருகெழு குரிசில்”**[49]

என்ற பாடலடி சுட்டுகிறது. முருகன் சினத்துடன் சூரபத்மனை அழித்தது போல் இவனும் பகைவரை அழித்தொழிக்கும் தன்மையுடையவன் என்பதை உவமைப்படுத்திக் காட்டுகின்றார். பொருநன் இசைக்கும் யாழின் இசை மூவேந்தரும் ஒருங்குக் கூடியிருந்தால் எத்தகைய பயன் அளிக்குமோ அதுபோன்றது என்பதை முடத்தாமக்கண்ணியார்,

**“முரசு முழங்குதானை மூவருங்கூடி**
**அரசவை இருந்த தோற்றம் போல**
**பாடல் பற்றிய பயனுடை எழாஅல்”**[50]

என்று உவமிக்கிறார். யாழிசை கேட்பவர்க்கு இனிமை தருவது போல் மூவேந்தர்களின் ஒற்றுமையும் நாட்டு மக்களின் வளர்ச்சிக்கு மிகுந்த பயனளிப்பதாக அமையும் என்பது இதனால் பெறப்படும் கருத்தாகும்.

**ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்**

கொடைத்தன்மையில் சேரலாதன் மழை தரும் மேகத்திற்கு ஒப்பானவன். இத்தகையவன், மழைப் பொழிவு நின்ற பின்பு மேகம் களைவதைப் போல் என்றும் அகலாதவனாக இவ்வுலகில் நிலைபெற்று இருக்க வேண்டும் என்று காக்கைப்பாடினியார் வேண்டுகிறார். இதனை,

**"பெய்துபுறந் தந்து பொங்க லாடி**
**விண்டுச் சேர்ந்த வெண்மழை போலச்**
**சென்றா லியரோ பெரும ………"[51]**

என்று கூறிச் சிறப்பு செய்கிறார். மழை மேகம் எங்கும் ஒரே தன்மையாய்ப் பொழிவது போல சேரலாதனும் வரிசையறியாமல் வழங்கும் தன்மையுடையவன் என்பது அறியப்பட்டது. இச்சேரலாதனின் ஆற்றலை, நஞ்சை உடைய பாம்புகளை அழிக்கும் இடிக்கு ஒப்பானவன் என்றும் காக்கைப் பாடினியார் உவமைப்படுத்திக் கூறுகின்றார்.[52]

**அவியன்**

அவியனது இல்வாழ்க்கைப் பற்றி நப்பசலையார் பல்வேறு உவமை நயத்துடன் புனைந்து பாடியுள்ளார். அவியனின் கற்புடைய மனைவி பூவேலைப்பாடுகள் நிறைந்த பாம்பின் தோல் போன்றதும் மூங்கிலின் உட்புறத் தோலைப் போன்ற நூல் இழைகளைக் கொண்டு நெய்யப்பட்டதுமான ஆடையை உடுத்தியிருந்தாள். மின்னலைப் போன்ற வளைந்த இடை கொண்டவளாகவும் அழகான சுழிந்த கொப்பூழை உடையவளாகவும் இருந்தாள். இத்தகைய அழகுடைய மனைவியைத் தன் பக்கத்தில் கொண்டு தழுவியவாறு அவியன் மெல்லணையில் துயிலப் பெற்றான் என்பதை நப்பசலையார்,

**"பாம்புரி யன்ன வடிவின காம்பின்**
**கழைபடு சொலியி னிழையணி வாரா**
**ஓண்பூங் கலிங்க முடீஇ நுண்பூண்**
**வசிந்து வாங்கு நுசுப்பி னவ்வாங் குந்தி**
**கற்புடை மடந்தை தபுறம் புல்ல**
**மெல்லணைக் கிடந்தோன்"[53]**

என்று தமது பாடலடிகளால் உவமிக்கின்றார். பெண்ணழகைப் பெண்ணே போற்றிப் பாடியது இப்பாடலின் சிறப்பாக அமைந்துள்ளது.

**2. மூதின் மகளிர் பற்றிய உவமை**

மறக்குடியில் பிறந்து வளர்ந்த மகளிர் மூதின் மகளிர் ஆவர். இவர்கள் வாழ்வியல் குறித்துப் பெண்பாற் புலவர்கள் உணர்ச்சி பொங்கும் பாடல்கள் சிலவற்றைப் படைத்துள்ளனர். அவற்றில் இடம் பெற்றுள்ள ஒரு சில உவமைகள் இங்கு முன் வைக்கப்படுகின்றன.

வயது முதிர்ச்சியால் நரம்புகள் வெளிப்பட்டு தோல் சுருக்கம் விழுந்த மறக்குடி முதியவளின் வயிறு காய்ந்த தாமரை இலை போன்ற தோற்றத்தைக் கொண்டிருந்ததாக காக்கைப்பாடினி நச்சொள்ளையார் பாடியுள்ளார். இதனை,

**'மூளரி மருங்கின் முதியோள்'**[54]

என்று உவமைப்படுத்துகின்றார். மேலும், வயது முதிர்ந்த மறக்குடி மகளின் தோற்றத்தைக் கூற விழைந்த பூங்கணுத்திரையார் என்னும் புலவர் மூதாட்டியின் நரைத்த கூந்தல் கொக்கின் சிறகைப் போன்று வெண்மையானதாக இருந்தது என்று உவமிக்கின்றார். இதனை,

**''மீனுண் கொக்கின் றூவி யன்ன**
**வானரைக் கூந்தன் முதியோள்''**[55]

என்று வரும் அவரின் பாடலடிகள் சுட்டுகின்றன. உடன்கட்டை ஏற முனைந்த பெருங்கோப்பெண்டுவின் செயலுக்குச் சான்றோர் பலரும் அறிவுரை நல்கினர். அவ்வறிவுரைகளை ஏற்க மறுத்த அவர் தாமரைப் பொய்கையும் ஈமத்தீயும் தனக்கு ஒரே தன்மையுடையன என்று கூறுகிறார். இதனை பெருங்கோப்பெண்டு,

**''வள்இதழ் அவிழ்ந்த தாமரை**
**நாள் இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே''**[56]

என்று தமது பாடலடிகளால் உவமை நலம்பட கூறுகிறார்.

**3. போர் பற்றிய உவமை**

உவமையின் நோக்கம் பொருளைப் புலப்படுத்துவதாகும். புலவர்கள் தாம் தெரிவிக்க விரும்பும் பொருளை இதற்கு முன் நன்கு தெரிந்த பொருளோடு ஒப்பிட்டு விளக்குவது உவமையின் மரபாகும். அத்தகைய முறையில் சங்கப் பெண்பாற் புலவர்கள் போர்க்களத்தினை தமது பாடல் வழி பெரிதும் காட்சிப்படுத்தியுள்ளனர். அவர்கள் போர்க்கள நிகழ்வினை மேலும் சிறப்புறக்

கூறுவதற்காக உவமைகளைக் கையாண்டுள்ளனர். போரில் ஈடுபட்ட வீரர்கள் வேல், வாள், கேடயம் முதலிய ஆயதங்களைக் கொண்டு போர் செய்தனர். கேடயம் கொண்டு போரிட்ட வீரர்கள் கரியமேகங்கள் மேலெழுவதைப் போன்று அக்கேடயத்தைத் தூக்கிப் போர் புரிந்தனர். இக்காட்சியை நச்செள்ளையார்,

**“மையணிந் தெழுதரு மாயிரும் பஃறேல்”[57]**

என்று பாடுவதால் கேடயத்திற்கு மேகம் உவமை கூறப்பட்டதை அறியலாம். போர்க்களத்தில் வீரர்களால் பயன்படுத்தப்படுவது வாள், இது ஒளிரும் தன்மையுடையது. அத்தகைய வாள் போன்று வைகறைப் பொழுதும் ஒளிரும் தன்மையுடையதாய் புலர்ந்தது என்பதை அள்ளூர் நன்முல்லையார்,

**“வாள் போல் வைகறை வந்தன் றாலெனவே”[58]**

என்று உவமைநயம்பட சிறப்பித்துள்ளார்.

## 4. புராண உவமை

தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் போர் மூண்ட போது அசுரர்கள் பகல் பொழுதை இரவு போல் ஆக்கும் பொருட்டு சூரியனை மறைத்து வைத்தனர். இதனால் தேவர் உலகம் பெரும்துன்பத்தை அடைந்தது. இதனை அறிந்த திருமால் சூரியனை மீண்டும் கொண்டுவந்து அசுரரால் உலகிற்கு ஏற்பட்ட துன்பத்தைப் போக்கினான் என்னும் புராணக் கதையை நப்பசலையார் தமது பாடலில் குறிப்பிடுகின்றார். சூரியன் மறைவுற்றது போல் சோழ மன்னன் ஒருவன் பகைவர்க்கு அஞ்சி முள்ளூர் மலையில் மறைந்திருந்தான் என்பதும், தேவர் உலகம் வருந்தியதைப் போல் சோழ நாட்டு மக்கள் தவித்தனர் என்பதும், திருமால் போல் சோழிய வேனாதி திருக்கண்ணன் தோன்றி மறைவுற்றிருந்த சோழனை அழைத்து வந்து சோழநாட்டின் மன்னனாக்கி மக்களின் துயர் போக்கினான் என்பதும் மேற்கூறிய புராணக் கதையின் வழி அறியும் செய்திகளாகும். இதனை நப்பசலையார்,

**“அணங்குடை யவுணர் கணங்கொண் டொளித்தெனச்
சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு காணா
திருள்கண் கெடுத்த பருதி ஞாலத்
திடும்பைகொள் பருவர றிரக் கடுந்திறல்
அஞ்சன வுருவன் றந்து நிறுத்தாங்
கரசிழந் திருந்த வல்லற் காலை”[59]**

என்று பாடி நடைமுறை நிகழ்வைப் புராணக் கதையோடு உவமைப்படுத்தியுள்ளார். சோழன் ஞாயிருக்கும் சோழ நாடு இருள் சூழ்ந்த உலகிற்கும் சோழனை மீட்ட திருக்கண்ணனுக்குத் திருமாலும் இங்கு உம்மையாய் அமைந்தன.

## உ. அகப் பொருள் உவமை

பெண்பாற் புலவர்களின் அகத்திணை சார்ந்த பாடல்களில் தலைமக்களது வாழ்வியல் சூழலை மையமிட்ட சில உவமைகள் காணக்கிடைக்கின்றன. அவை தலைமக்களது களவு, கற்பு ஆகிய இரு நிலைகளில் ஏற்படும் நிகழ்வுகளை மையமிட்டதாக அமைந்துள்ளன. அதன்அடிப்படையில்,

1. பொதுநிலை உவமை
2. பிரிவு வழி உவமை

என இருநிலைகளில் பாகுபடுத்தப்பட்டு இப்பகுதியில் ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

### பொதுநிலை உவமைகள்

தலைவியின் உடல் வனப்பு பற்றியும் உள்ள வருத்தம் பற்றியும் பொதுவான நிலையில் பெண்பாற்புலவர்களால் பேசப்பட்டுள்ள செய்திகள் இப்பகுதியில் இடம் பெற்றுள்ளன. தலைவியின் நெற்றி பிறை நிலவிற்கு ஒப்பானது என்பதை மதுரை மேலைக்கடையத்தார் நல்வெள்ளையார்,

**‘‘பிறைவனப் புற்ற மாசறு திருநுதல்’** [60]

என்று தமது பாடலடியால் உவமைப்படுத்துகிறார். தலைவியின் ஒப்பனை செய்யப்படாத கூந்தல் தீயில் கருகிய வள்ளிக் கொடியினைப் போன்று காட்சியளித்தது என்பதை ஔவையாளர் தமது உவமை வழி கூறுகின்றார். இதனை,

**‘‘முரிந்த சிலம்பி னெரிந்த வள்ளியிற்**
**புறனழிந் தொலிவருந் தொழிருங் கூந்தல்’** [61]

என்று வரும் பாடலடிகளின் வாயிலாக அறியலாம். இலக்கணத்துடன் கூடிய குற்றமற்ற தலைவியின் தோள்கள் மூங்கிலின் வனப்பினை ஒத்திருந்தன என்று நல்வெள்ளியார் உவமைப்படுத்துகிறார்.[62] தலைவியைச் சந்தித்துக் கூட இயலாது

தவிக்கும் தலை மகன் ஒருவன், சுடப்படாத பசுமண் கலம் மழைத்துளிகளை எதிர்த்து நிற்க இயலாது கரைவது போன்று, சிறு துன்பத்தையும் தாங்க இயலாததாய் தன் நெஞ்சம் உள்ளது என்றும் இத்தகைய நெஞ்சைத்தைக் கொண்டு துன்பம் என்னும் வெள்ளத்தைத் தம்மால் கடக்க அரிதாய் உள்ளது என்றும் கூறி வருந்துவதை உவமை நயம்பட ஔவையார் காட்சிப்படுத்துகின்றார். இதனை,

**"பெயனீர்க் கேற்ற பசுங்கலம் போல**
**உள்ளந் தாங்கா வெள்ளம் நீந்தி**
**அரிதவா வுற்றனை நெஞ்சே நன்றும்"[63]**

என்று கூறுவதன் வழி அறியலாம். தலைவனது உள்ளம் சுடப்படாத பசுமண் கலத்திற்கு உவமைக் கூறப்பட்டது. இவ்வாறான தலைவனது எண்ணத்தை உணர்ந்த தோழி அதைத் தலைவிக்கு அறிவித்தாள் மலையுச்சியில் உள்ள தேனடை யாரும் கைக் கொள்ளாததால் கீழே விழுந்து சிதைவதைப் போல அவனது இனிய மொழிகளை நாம் கேட்காததால் அவன் வேறெங்கோ போயினான் என்று தலைவியிடம் மொழிந்ததாக வருமுலையாரித்தியாரின் பாடல் அமைந்துள்ளது.[64] மேலும் தலைவியின் உறவைப்பெற இயலாது திரும்பிச் செல்லும் தலைவனது உள்ளம், வேறு நாட்டில் பெய்த மழைநீர் அங்குத் தெளிவுடையதாக இருப்பினும் அயல் இடத்திற்குச் செல்கின்ற போது கலங்குவதைப் போல கலங்கிச் சென்றது என்றும் உவமை கூறிச் சிறப்பிக்கின்றார்.

**"வேறுபுல நன்னாட்டுப் பெய்த**
**ஏறுடை மழையிற் கலிழுமென்னெஞ்சே"[65]**

என்று வரும் அவரது பாடலடிகள் காட்டுகின்றன.

தலைவனின் செயலைக் கடிந்துரைக்கும் தலைவி, அவன் கூடியிருந்த காலத்துச் சிரித்து மகிழ்வித்த அவனதுவெண்ணிறமான பற்கள் முறிந்த யானையின் கொம்பைப் போல் முறியட்டும் என்றும், பாணர்கள் தாம் பிடித்த மீனை இட்டு வைத்த புலவு நாற்றமுடைய கலம் வேறு பண்டத்தை இட்டு வைக்க உதவாதது போல தலைவனது உறவு உள்ளதால் எமது உயிர் கெட்டொழியட்டும் என்றும் கூறி வருந்துவதாக வெள்ளி வீதியாரின் உவமை நலம் அமைந்துள்ளது. இதை

**"பாணர் பசுமீன் சொரிந்த மண்டை போல**
**எமக்கும் பெரும்புல வாகி**
**நும்முன் பெறேஎமிறீஇயரெம் முயிரே"[66]**

என்னும் அவரது பாடலடிகள் காட்டுகின்றன. தலைவியின் உயிர் பசுமீன் இட்டு வைத்துக் கலத்திற்கு புலவரால் உவமை கூறப்பட்டது.

## உ. பிரிவு வழி உவமைகள்

தலைவனுக்கு உடன்போக்கு உணர்த்தினாள் தோழி. அதற்கு மறுமொழியாகத் தலைவி, இதுநாள் வரை, 'நாண்' உடனிருந்து துன்பம் செய்தது. தலைவனுடன் உடன்போக்கு மேற்கொள்வதால் கரும்பின் சிறியகரை நீர் அலைதலால் கரைந்து அழிவது போல நாணமும் அழியப் பெற்றது என்று கூறினாள். இதனை வெள்ளி வீதியார்,

**''வான்பூங் கரும்பி னோங்குமணற் சிறுசிறை**
**தீம்புன னெரிதர வீந்து''**[67]

என்னும் தமது பாடலடிகள் வாயிலாகக் காட்சிப்படுத்துகின்றார். நாண் கரும்பின் கரைக்கும், நீர் பெண்மையின் ஒழுக்கத்திற்கும் இங்கு உவமிக்கப்பட்டன. நீர் பெருகி கரையையும் உடைத்து நின்றிருக்கும் கரும்பினையும் சாய்க்கும் என்பதால் தலைவிக்குள் காமம் பெருகி நாணாகிய கரையை உடைத்து பெண்மை, ஒழுக்கத்தையும் சாய்த்தது என்பது இவ்வுமையால் அறியப்பெறும் செய்தியாகும். தலைவன் பிரிவால் வருந்தும் தலைவி ஒருத்தி, பாலை நிலத்தின் வழிக் கொடுமைகளைக் கூறி, தன் காதலனைத் தேடிச் சென்ற 'வெள்ளி வீதி' என்ற பெண்ணைப் போல் தானும் தலைவனைத் தேடிச் செல்ல நினைப்பதாகக் கூறுகின்றாள். இதனை ஔவையார்,

**''நெறிபடு கவலை நிரம்பா நீளிடை**
**வெள்ளி வீதியைப் போல''**[68]

என்று பாடுகிறார். தலைவியின் போக்கிற்கு வெள்ளி வீதியாரின் வாழ்க்கையை உவமையாகக் கூறியுள்ளார். மேலும், தலைவனைப்பிரிந்து தனிமையில் வருந்தும் தலைவி நீரற்ற குளம் நிறையுமாறு பெய்யும் மழைபோல் தானும் அழுது வருந்திய கண்களுடன் உறங்காது தவித்ததாக உரைக்கின்றாள்''[69] மழை நீர் கண்ணீர்க்கு உவமை கூறப்பட்டது.

தலைவன் குறித்த பருவத்தில் மீளாமையால் வண்டுகள் உழக்கிய குவளை மலர் போல் தனது உடல் நிலை குழைந்து வாடலானேன் என்று தலைவி கூறுவதாக் கச்சிப்பேட்டு நன்னாகையாரின் உவமை அமைந்துள்ளது.[70]

பரத்தையர் பிரிவால் தலைவி ஊடல் கொண்டிருப்பதை அறிந்த தலைவன் அவளது நிலையை அறிய தூதுவரை அனுப்புகிறான். தலைவனுக்காக வாயில் வேண்டி வந்தோரிடம், கடுகைப் போன்ற சிறிய பூக்களை உடைய ஞாழல் மரம்

மருத மரத்தின் மலர்களோடு சேர்ந்து நீர்த்துறையை அழகு செய்தது. அதுபோல் தலைவனும் பலரும் காணுமாறு நீராடுதுறையில் பரத்தையருடன் சேர்ந்து ஆடினான் என்பதைத் தலைவி நயம்பட கூறி வாயில் மறுப்பதைக் குன்றியனார்,

**''ஐயவி யன்ன சிறுவீ ஞாழல்**
**செல்வீ மருதின் செம்மலொடு தாஅய்த்**
**துறையணிந் தன்றவ ரூரே'**[71]

என்று கூறி காட்சிப்படுத்துகின்றார். இங்கு ஞாழல் மலர்களுக்குக் கடுகும், ஞாழல் மலர்கள் மருத மலர்களோடு கலந்து நீர்த்துறையை அழகு செய்தமை என்றது தலைவன் பரத்தையோடு நீராடினான் என்று எடுத்துக்காட்டு உவமை மூலம் குறிப்புணர்த்துவதாக அமைந்தது.

### 3. கலையியல் உவமை

மன மகிழ்விற்காகவும் தமது திறனை வெளிப்படுத்தம் பொருட்டும் சங்க கால மக்கள் பலர் கலைஞர்களாகத் திகழ்ந்தனர். பல்வேறு சாகசங்களை நிகழ்த்தினர். இசை, பாட்டு, கூத்து, ஓவியம் எனப்பல துறைகளிலும் ஈடுபட்டனர். சங்கப் பெண்பாற் புலவர்கள் இவ்வாறான சில கலையியல் சார்ந்த நிகழ்வுகளைத் தமது பாடல்களில் உவமைவழி வெளிப்படுத்தியுள்ளார்.

பந்தல், தோல், போர்வை, ஆணி, தண்டு, வார்க்கட்டு போன்றன யாழின் உறுப்புகளாகும். பந்தல் என்னும் உறுப்பு மானின் குளம்பு பதித்த தடம் போன்று இருபுறமும் தாழ்ந்து நடுவில் உயர்ந்திருந்தது. யாழில் இழுத்துக் கட்டப்பட்ட தோல் விளக்கின் சுடர் போன்று பொன்னிறமாகக் காட்சியளித்தது. இருபகுதியையும் இணைத்துக் கட்டப்பட்ட போர்வை இளம் சூலை உடைய பெண்ணின் வயிற்றில் படர்ந்த ரோமம் போன்று இருந்தது. யாழின் இருபக்கங்களையும் இணைப்பதற்கு அடித்த ஆணி நண்டின் கண்போன்று இருந்தது. யாழில் நீட்டியிருந்த கருமையான தண்டு பாம்பு தலை நீட்டியது போன்ற அமைப்புடையதாய் இருந்தது. தண்டினை இருக்கிக் கட்டப்பட்ட வார்க்கட்டுகள் மகளிர் அணியும் கைவளைகளைப் போன்றும் விரல் வைத்து வாசிக்கப்படும் யாழின் நரம்புகள் குத்தப்பெற்ற தினை அரிசியைப் பேன்றும் இருந்தன. இத்தகைய தன்மைகளைக் கொண்ட யாழின் மொத்தமான தோற்றம் காண்பதற்கு அலங்காரம் செய்யப்பட்ட மணமகளைப் போன்று காட்சியளித்தது. இவ்வறான யாழின் இசை பாலை நிலத்தில் வழிப்பறித் தொழிலில் ஈடுபடும் கள்வனைக் கையிலுள்ள கொடிய ஆயதங்களைக் கீழே

போட்டு உள்ளத்தில் அருள்சுரந்து மயங்கி நிற்குமாறு செய்தது என்பதை முடத்தா மக்கண்ணியார்.

**"குளப்புவழி அன்ன கவடுபடு பத்தல்**
**விளக்கு அழல் உருவின் விசிஉறுபச்சை**
**எய்யா இளஞ்சூல் செய்யோள் அவ்வயிற்று**
**ஐதுமயிர் ஒழுகிய தோற்றம் போல"[72]**

என்று பாடுகிறார். யாழின் வடிவமைப்புகளை பல்வேறு பொருட்களுக்கு உவமைப்படுத்திக் காட்டுகின்றார். இதன் மூலம் பழந்தமிழ் மக்கள் பயன்படுத்தி வந்த யாழின் அமைப்பு குறித்து அறிய முடிகின்றது. பாடினியின் அங்க அழகுகளை முடிமுதல் அடிவரை பல உவமைகளுடன் முடத்தாமக்கண்ணியார் சித்தரிக்கின்றார். இதைக் கேசாதிபாதம் என்றும் பாதாதிகேசம் என்றும் கூறப்படுகிறது. அடி முதல் முடி வரையும் முடிமுதல் அடி வரையும் பெண்களை வர்ணிப்பது அக்காலப் புலவர்களின் மரபாக இருந்துள்ளது. பாடினியின் கூந்தல் ஆற்றில் உள்ள கருமணல் போன்றும், நெற்றி பிறை நிலவைப் போன்றும் புருவங்கள் வளைந்த வில்லைப் போன்றும் இருந்தன. குளிர்ச்சியுடைய அழகிய கண்கள் இரக்க உணர்வைக் கொண்டிருந்தன. உதடுகள் இலவம் பூக்களைப் போன்றும் பற்கள் வெண்மையான முத்துக்களைப் போன்றும் இருந்தன. அணிகலன்களை உடைய காதுகள் கத்தரிக்கோலின் குழச்சுபோல் அமைந்திருந்தன. பருத்த அவளின் தோள்கள் மூங்கிலை ஒத்த வனப்புடையனவாக இருந்தன. பாடினியின் மென்மையான கைவிரல்கள் காந்தள் மலரைப் போன்றும் விரலில் உள்ள நகங்கள் கிளியின் அலகைப் போன்றும் இருந்தன. கொப்பூழ் நீர்ச்சுழி போன்றிருந்தது. மெலிந்த இடையில் வண்டுகள் போன்ற மணிகள் பதித்த மேகலை அணியப் பெற்றிருந்தது. துடைகள் யானையின் தும்பிக்கைப் போன்று திரட்சி உடையதாகவும் காலடிகள் நாயின் நாக்கினைப் போன்ற மென்மையானதாகவும் இருந்தன. பரல்கற்கள் நிறைந்த வழியில் நடந்தமையால் பாதங்களில் பண்ணைப் பழம் போன்ற கொப்புளங்கள் ஏற்பட்டன. நண்பகலிலும் மாலையிலும் பயணம் செய்த காரணத்தினால் பெண்மயில் போன்ற உருவத்தினை ஒத்திருந்தாள் என்று முடத்தாமக்கண்ணியார் பாடினியின் அங்க அழகுகளை பல உவமைகளுடன் காட்சிப் படுத்துகின்றார். இதனை,

**"மரல் பழுத்தன்ன மறுகுநீர் மொக்குகள்**
**நன்பகல் அந்திநடை இடை விலங்கலின்**
**பெடைமயில் உருவின் பெருந்தகு பாடினி"[73]**

என்ற பாடலடிகள் மூலம் காட்டுகின்றார். பழங்கால மன்னர் அவைகளில் ஆடற்கலை சிறப்பிடம் பெற்றிருந்தது. ஆடுமகள் தன் உடலை வளைத்தும் நெளித்தும் ஆடுவதைப் போன்று கடவுள் குடி கொண்டிருக்கும் இமயத்தில் மணிகளை உடைய பாம்புகள் படமெடுத்து ஆடின என்றும், ஒளிபோல் விளங்கும் பற்களையும், அமுதம் போன்ற சொற்களைப் பேசும் சிவந்த இதழ்களையும் உடைய விறலியின் ஆடலை ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் கண்டு ரசித்தான் என்றும் நச்செள்ளையார்,

**''சுடர் நு தன் மடநோக்கின்**
**வாணகை யிலங்கெயிற்**
**றமிழ்து பொதிது வர்வா யசைநடை வறலியர்''**[74]

என்ற தமது பாடலடிகள் வாயிலாகக் குறிப்பிடுகின்றார். ஆடற்கலை மட்டுமல்லாது ஓவியக் கலையும் அக்காலத்தில் சிறப்புற்றிருந்தது. ஓவியம் போன்ற அழகினைக் கொண்ட இல்லத்தில் கொல்லிப் பாவை போன்ற பேரழகு வாய்ந்த இளம்மகளிர் வாழ்ந்தனர் என்று மாற்பித்தியார் என்னும் புலவர் கூறுகின்றார்.

**''ஓவத் தன்ன விடனுடை வரைப்பிற்**
**பாவை யன்ன குறுந்தொடி மகளிர்''**[75]

என்ற பாடலடிகளில் வீடு ஓவியத்திற்கும் இளம்மகளிர் கொல்லிப்பாவைக்கும் உவமையாகச் சுட்டப்பட்டுள்ளது.

### 4. விலங்குகள் பற்றிய உவமை

சங்கப் பெண்பாற் புலவர்கள் விலங்குகள் குறித்து தமது பாடல்களில் உவமை மூலம் விளக்கியுள்ளனர். யானை, குதிரை, புலி, அணில் போன்ற விலங்குகள் அவர்களால் சிறப்பிக்கப்பட்டுள்ளன. யானைப் படைகளும் குதிரைப்படைகளும் அணி அணியாக போர்க் கொடிகளை ஏற்றி வந்தன. அவை வேற்று நாடுகளிலிருந்து பொருள் ஏற்றிக் கொண்டு அசைந்தவாறு கடலில் வரும் கலம்போல் காட்சியளித்தன என்பதைக் காக்கைப்பாடினி நச்செள்ளையார்,

**''கொடி நுடங்கு நிலைய கொல்களிறு மிடைந்து**
**வடிமணி நெடுந்தேர் வேறுபுலம்பரப்பி**
**அருங்கலந் தரீஇயர் நீர்மிசை நிவக்கும்''**[76]

என்று காட்சிப்படுத்துகிறார். படைக்களத்திற்கு மரக்கலம் இங்கு உவமைப்படுத்தப்பட்டது. குதிரைகள் வளைத்து விட்ட மூங்கில் மேல்நோக்கி

விரைந்து எழுவதைப் போன்று போர்க்களத்தில் புகுந்தன என வெறிபாடியக் காமக்காணியார் சிற்பிக்கின்றார்''[77] தளர்ந்த நடையை உடைய போர்க்களக் குதிரைகள் கடலில் அசைந்து செல்லும் தோணியைப் போன்று பகைவரின் படைக்களத்தில் புகுந்தன என்பதைப் பொன்முடியார்,

**''------------- ஓய்நடைப் புரவி**
**கடன்மண்டு தோணியிற் படைமுகம் போழ''**[78]

என்று உவமிக்கின்றார். போரிட்டமையால் உடல் வலிவிழந்து சென்ற குதிரைகள் கடலில் அசைந்து செல்லும் தோணிக்கு உவமையாகக் கூறப்பட்டன. மேலும், கரிகால் பெருவளத்தான் தம்மை நாடிவந்த இரவலர்க்குப் பொன் பொருள்வழங்கி பசிதீர உணவளித்து தங்க இடமும் கொடுத்து அவர்கள் தம் ஊருக்குச் செல்ல விரும்பியபோது பால் போன்ற வெண்மையான குதிரைகள் பூட்டப்பட்ட பெரியதேரில் அனுப்பினான் என்றும் இரவலர் சென்ற போது தேருக்குப் பின்ஏழு அடி நடந்து சென்று வழியனுப்பித் திரும்பினான் என்றும் முடத்தாமக்கண்ணியாரால் சிறப்பிக்கப்படுகிறான். இதனை,

**''பால் புரை புரவி நால்குஉடன் பூட்டி**
**காலின்ஏழ் அடிப்பின் சென்று......''**[79]

என்று சுட்டுகிறார். இங்குப் பால் குதிரையின் வெண்மைக்கு உவமம் கூறப்பட்டுள்ளது. விருந்தினர்கள் இல்லம் நாடி வரும் போது ஏழடி முன் சென்று வரவேற்பதும், திரும்பிச் செல்லும் போது ஏழடிபின் சென்று வழியனுப்பி வைப்பதும் அக்கால மரபாக இருந்துள்ளது.

கொல்லும் தன்மையுடைய புலியானது, கடலலையின் ஆரவாரம் மிக்க ஒலிபோல செய்து வலமாக எழுந்து சோலையில் உலவியது என்பதை நன்முல்லையார்,

**''மாக்கடற் றிரையின் முழங்கி வலனேர்பு**
**கோட்புலி வழங்குஞ் சோலை''**[80]

என்று புலியின் உறுமலைக் கடல் ஒலிக்கு உவமைப்படுத்துகிறார்.புலி வலமாகப் படுத்துறங்கும் தன்மையுடைது என்பதும் இதனால் பெறப்படுகிறது. மலைப்பக்கத்தில் பிடவம் பூவுடன் வேங்கையும் ஒருசேர மலர்ந்தன. இம்மலர்களுடன் இடையிடையே அதன் தழைகள் வெளிப்பட்டிருப்பதைப் போன்று புலிக்குட்டியின் தோற்றம் இருந்தது. இதனை ஔவையார்,

"ஓங்குமலைச் சிலம்பிற் பிடவுடன் மலர்ந்த
வேங்கை வெறித்தழை வேறுவகுத்தன்ன
வூன்பொதி யவிழாக் கோட்டுகிர்க் குருளை"[81]

என்று காட்டியுள்ளார். யானையின் கால் நகங்கள் பேயின் பற்களைப் போன்று இருந்தன என்றும் இத்தகைய யானை பாலை நிலத்திலுள்ள மூங்கில்களைச் சிதைத்ததனால், அவை பாத்திகளில் விழுந்து கிடக்கும் கரும்புகளிடையே நிற்கும் ஒற்றைக் கரும்பு போல அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காட்சியளித்தன என்றும் நக்கண்ணையார் தமது பாடலில் உவமை நயத்துடன் காட்சிப்படுத்துகின்றார்.[82] அணிலின் முதுகில் இருக்கும் வரி போன்று வெள்ளரிக்காயின் தோற்றம் இருந்தது என்பதை பெருங்கோப்பெண்டு 'அணில் வரிக் கொடுங்காய்'[83] என்று உவமை நயத்துடன் குறிப்பிடுகின்றார்.

## 5. பறவைகள் பற்றிய உவமை

இயற்கையும் அதனைச் சார்ந்து வாழும் உயிரினங்களும் சங்கப் புலவர்களைப் பெரிதும் கவர்ந்தன. அகப்புறப் பாடல்கள் அனைத்திலும் இத்தகைய காட்சிகள் புலப்படுகின்றன. சங்கப் பெண்பாற் புலவர்கள் மயில், கிளி, குயில், குறும்பூழ், நாரை, ஆந்தை, சிச்சிலி, வண்டு போன்ற பறவை இனங்களைப் பற்றி உவமைப்படுத்தியுள்ளனர். பறவைகள் பற்றிய உவமை நலன்களை உரைக்கும் முகமாக இப்பகுதி அமைகிறது.

### மயில்

மலையில் நனைந்து உலறிய மயிலின் குடுமி நீலமணி போன்ற நிறத்தை உடையதாக இருந்தது.[84] இது யாழ்போன்ற வண்டின் இனிய இசைக்கு ஏற்ப தோகை விரித்தாடியது என்பதை முடத்தாமக்கண்ணியார்,

"யாழ்வண்டின் கொளைக்கு ஏற்ப
கவலம் விரித்த மடமஞ்ஞை"[85]

என்று பாடியுள்ளார். கோடைக் காலத்தில் வாட்ட முற்றுக் கிடந்த காயாஞ் செடியின் பூங்கொத்துகள் கார்மழை பொழிந்தவுடன் மயிலின் கழுத்தைப்போன்ற தோற்றம் உடையனவாக இருந்தன என்று ஔவையார் கூறுகின்றார்.[86]

### கிளி

வளம் நிறைந்த காடுகளில் உள்ள பயிர்கள் கிளிக் குஞ்சின் சிறகினைப் போன்று இருந்தன என்பதை ஒக்கூர் மாசாத்தியார்,

**''தளிரியற் கிள்ளை யினிதினி னெடுத்த**
**வளராப் பிள்ளைத் தூவி யன்ன''[87]**

என்று கூறுகின்றார். காடுகளின் பசுமை கிளிக்குஞ்சின் நிறத்திற்கு உவமம் செய்யப்பட்டது. பறவைகளில் வனப்புடைய கிளியானது மகளிரின் செம்மை ஊட்டப்பட்ட நகம்போன்ற சிவந்த நிறமுடைய தன் அலகில் வைத்திருந்த வேப்பம்பழம் பொற் காசினைப் போன்று இருந்ததாக அக்காட்சியைக் காணுற்ற நன்முல்லையார் கூறுகின்றார்.[88]

**குயில்**

கேட்பவரை மெய் மறக்கச் செய்யும் படியான இனிய ஓசையை உடையது குயில். இது புதர், மலர்ச் சோலை போன்ற இடங்களில் வாழும் தன்மையுடையது. இளவேனிற் காலம் இதற்கு உகந்தது. இத்தகைய கரிய நிறமுடைய குயில்கள் மலர்ச்சோலையில் உரைந்ததனால் அங்குள்ள மலர்களின் பூந்தாதுக்கள் உடல் முழுதும் சிந்தி பொன்னை உரைத்த கட்டளைக்கல்லில் பொன் துகள்கள் படிந்திருந்ததைப் போன்று காட்சியளித்ததாக நன்னாகையார் உவமைப்படுத்தியுள்ளார். இதனை,

**''மின்னின் றூவி யிருங்குயில் பொன்னின்**
**உரைதிகழ் கட்டளை கடுப்ப மாச்சினை**
**நறுந்தாது கொழுதும்..........''[89]**

என்று கூறுகிறார்.

**குறும்பூழ்**

இப்பறவை செவ்விய கால்களைக் கொண்டது. இதன் கால்களைப் போன்ற உழுந்தின் செடியில் காய்த்த காய்களை மான் கூட்டங்கள் உண்டன என்பதை நன்முல்லையார்,

**''பூழ்க்கா லன்ன செங்கா லுழுந்தின்**
**ஊழ்ப்படு முதுகா யுழையினங் கவரும்**
**அரும்பணி அற்சிரம்.............''[90]**

என்று சுட்டுகின்றார். உழுந்து புன்செய் நிலத்தில் விளையும் பயிராகும். இப்பயிர் பனிக் காலத்தில் மட்டுமே விளையும் தன்மை கொண்டது.

**கொக்கு**

இப்பறவைகள நீர்நிலைகளைச் சார்ந்து வாழும் இயல்புடையன. இவற்றில் 'நாரை' என்னும் ஒருவகை இனம் பற்றியும் பேசப்படுகிறது. மழையில் நனைந்த கொக்கு வடிவிலும் நிறத்திலும் ஆம்பல் மலரைப் போன்ற தோற்றத்தைக் கொண்டிருந்தது. இத்தகைய கொக்கினைக் கண்டு அஞ்சிய ஈர உடலைக் கொண்ட நண்டுகள் கயிற்றை அறுத்துச் செல்லும் இடையரின் எருத்தைப் போன்று வளைக்குள் சென்று பதுங்கின.

> **''மாரியாம்ப லன்ன கொக்கின்**
> **பார்வ லஞ்சிய பருவர லீர் ஞெண்டு**
> **கண்டல் வேரளைச் செலீ இய ரண்டர்**
> **கயிறரி யெருத்திற் கதழும்''**[91]

என்று வரும் பாடலடிகளால் ஆம்பல் மலர் கொக்கின் தலைக்கு உவமையாகக் கூறப்பட்டதை அறிய முடிகிறது. இக்கொக்குகள் நீள் வரிசையில் பறந்து செல்லும் இக்காட்சி காண்பதற்கு மலரால் தொடுக்கப்பட்ட மாலையை வானில் வீசி எறிந்தால் உண்டாகும் தோற்றத்தைப் போன்று இருந்தது. இவ்வாறு மாலை வேளையில் கொக்குக் கூட்டங்கள் சிறகை விரித்துக் கடற்கரைப் பகுதியில் வந்தமர்ந்த காட்சினை ஔவையார்,

> **''விசும்பு விசைத்தெரிந்த கூதளங் கோதையிற்**
> **பசுங்கால் வெண்குருகு வாப்பறை வளைஇ**
> **ஆர்கலி வளவயிற் போதொடு பரப்ப''**[92]

என்று உவமிக்கின்றார். கொக்கு நாரை இரண்டுமே வெண்மையான நிறமுடையவை. நீர்த்துறையில் துவைக்கப்பட்ட மாசற்ற ஆடையின் வெண்மையான நிறம் போன்று மீனை உண்ணும் நாரையினம் இருந்தன என்று வெள்ளி வீதியார் கூறுகின்றார். இதனை,

> **''துறைபோ கறுவைத்தூமடி யன்ன**
> **நிறங்கிளர் தூவிச் சிறுவெள்ளாங் குருகே''**[93]

என்று வரும் பாடலடிகள் காட்சிப்படுத்துகின்றன.

**ஆந்தை**

இப்பறவை 'கூகை' என்றும் அழைக்கப்படுகிறது. கடற்கரை அருகே பெரிய மணற்திட்டு இருந்தது. அங்கு பெரிய குழைகளைக் கொண்ட தென்னை

மரங்களும் வாழை மரங்களும் நிறைந்திருந்தன. காந்தள் மலர்ந்திருந்தன. சுரபுன்னை மரங்கள் பூத்துக் குலுங்கின. இத்தகைய சோலை ஒன்றில் இருந்த ஆந்தைகளின் அலறல் சப்தம் ‘துடி’ என்னும் கருவியின் முழக்கதைப் போன்று இருந்தது என்பதை முடத்தாமக்கண்ணியார்,

**“கோட் தெங்கின் குலைவாழை**
**கொழுங் காந்தன் மலர் நாகத்து**
**துடிக்குடிஞை குடிப் பாக்கத்து”**[94]

என்று உவமைப்பட கூறுகின்றார்.

**வண்டு**

இச்சிறு பறவைகள் மலர்களில் உள்ள மகரந்தம், தேன் போன்றவற்றை உண்டு களிப்புறும். இதன் சிறகுகள் சிச்சிலிப் பறவையின் சிறகைப் போன்ற தோற்றமுடையன.[95] பல வகையான வண்டுகள் இருப்பினும் சீள்வீடு என்னும் ஒரு வகை வண்டு பற்றி ஔவையார் கூறுகின்றார். இவ்வண்டுகள் பாலை நிலத்தில் வாழும் இயல்புடையன. இத்தகைய வண்டுகள், கூட்டமாகச் சேர்ந்து எழுப்பும் ஒலி, உப்புவணிகர் கூட்டமாக ஓட்டிச் செல்லும் வண்டியின் மணி ஒலிபோல் இருந்தன என்பதை ஔவையார்,

**“வறன்மரம் பொருந்திய சிள்வீ டுமணர்**
**கணநிரை மணியி னார்க்குஞ் சுரன்”**[96]

என்று தமது பாடல் வழி காட்சிப்படுத்தியுள்ளார்.

**6. தாவரம் பற்றிய உவமை**

சங்ககால மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வை மேற் கொண்டிருந்தனர். சங்கப் புலவர்கள் மரம், செடி, கொடிகளையும் இயற்கை சார்ந்த பல நிகழ்வுகளையும் தமது பாடலில் புனைந்துள்ளனர். ஒவ்வொரு திணை சார்ந்த சூழலிலும் அங்குள்ள தாவரங்கள் குறித்துப் பெண்பாற் புலவர்கள் பதிவு செய்த செய்திகள் இங்கு பின்வருமாறு அமைகின்றன.

காயா மரங்கள் பூத்துள்ள மலைப் பகுதியில் கொன்றை மரங்கள் ஆங்காங்கே பொன்னிறமாக மலர்களைக் கொண்டிருந்தன. இவ்வாறான மலைப்பகுதியில் இடி மின்னிலுடன் மேகங்கள் மழை பெய்வித்தன என்பதை ஔவையார்,

**''காயாங் குன்றத்துக் கொன்றை போல**
**மாமலை விடரகம் விளங்க மின்னி''**[97]

என்று பாடியுள்ளார். மலர்ந்த காயா மரங்கள் நீர் நிறைந்த மேகத்திற்கும், கொன்றை மலர்கள் மின்னலுக்கும் உவமை கூறிச் சிறப்பிக்கப்பட்டன. தோல் திண்மையான அரிவாளாலும் பிளக்க முடியாத முட்டை போன்ற வடிவத்தைக் கொண்ட இனிய பலாப்பழங்கள், வழிச் செல்வோரின் பசியைத் தீர்த்தன என்று காக்கைப்பாடினி நச்செள்ளையார் கூறுகின்றார்[98] வழிச் செல்வோர் உண்டு தமது பசியைப் போக்கிக் கொள்ளும் படியாக அக்காலத்தில் மா, பலா, நெல்லி போன்ற மரங்கள் பொது பயன்பாட்டிற்கு இருந்தன என்பது இதன் வழிஅறியப்படுகிறது.

வாடைக்காற்று மிகுந்து வீசும் கூதிர் காலத்தில் குவிந்த அரும்புகளைக் கொண்ட முதிர்ந்த கரும்புகள் கர்ப்பமுற்ற பச்சைப் பாம்பினது கருவின் முதிர்ச்சியைப் போலக் காட்சியளித்தன என்பதைக் கழார்க் கீரனெயிற்றியார் என்னும் புலவர்,

**''சினைப்பசும் பாம்பின் சூன்முதிர்ப் பன்ன**
**கனைத்த கரும்பின் கூம்புபொதி யவிழ''**[99]

என்று பாடியுள்ளதால் அறியலாம். கடற்கரையின் அருகே உள்ள கழிகளின் இருமருங்கிலும் பசுமையுடன் கூடிய சோலைகள் எப்பொழும் மணம் பரப்பி நின்றன. இறாமீனின் முதுகுப்புறம் போன்ற அடிப்பாகத்தை உடைய தாழையின் அரும்புகள் யானையின் கொம்பினை ஒத்துக் காணப்பட்டன. தாழை இலையின் விளிம்பில் சுறாமீனின் கொம்பு போன்ற கூரிய முட்கள் இருந்தன என்பதை,

**''இறவுப் புறத் தன்னபிணர்படு தடவுமுதற்**
**சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை''**[100]

என்று நக்கண்ணையார் கூறுகின்றார். இதே போல், தாழையின் அரும்புகள் சோற்றை எடுக்கும் அகப்பை போன்று கூம்பியிருந்தன என்று வெள்ளி வீதியாகும் சிறப்பித்துள்ளார்.[101] இவ்வாறு தாழையின் அடி, தழை, அரும்பு, மணம் போன்றவை புலவர்களால் உவமிக்கப்பட்டுள்ளன. கடற்கரைச் சோலையில் தேர்ச் சக்கரத்தின் முனையால் அறுக்கப்பட்ட நெய்தல் மலர்கள் பாம்பு மேலே தலைத் தூக்கியது போன்று காட்சியளித்தன. இதனைக் குமுழி ஞாழலார் நப்பசலையார்,

**''நுதிமுகங் குறைந்த பொதிமுகிழ் நெய்தல்**
**பாம்புயர் தலையிற் சாம்புவன நிவப்ப''**[102]

என்று உவமை நயம்பட சிறப்பித்துள்ளார்.

பாலைநிலம் வறண்ட தன்மையுடைது. இங்குள்ள தாவரங்கள் நீரின்மையால் வாடியும் காய்ந்தும் காணப்படும். வெயிலின் வெப்பத்தால் மூங்கிலின் கணுக்கள் வெடித்தன. அதிலிருந்து கழற்சிக்காய் போன்ற முத்துக்கள் வெளிப்பட்டன. இதனை முள்ளியூர் பூதியார் என்னும் புலவர்,

**"நின்றுதின விளித்த உம்பணை நெடுவேய்க்**
**கண்விடத் தெறிக்கு மண்ணா முத்தங்**
**கழங்குறழ் தோன்றல ……."**[103]

என்று கூறுகின்றார். முத்திற்கு கழற்சிக்காய் உவமை கூறப்பட்டது. முதிர்ந்த மூங்கிலில் இருந்து ஒருவகையான முத்துகள் தோன்றும் என்பது இதன்வழி பெறப்பட்டது. நீண்ட நாள் மழையின்மையால் பாலை நிலம் வறண்டு காட்சியளித்தது. வாகை மரத்தின் முற்றிய காய்ந்த நெற்றுக்கள் கூத்தாடு களத்தில் ஒலிக்கும் பறையின் ஒலியைப் போல் விட்டு விட்டு ஒலித்தன. இதனை வெள்ளி வீதியார்,

**"வாடல் லுழுஞ்சில் விளைநெற் றந்துண**
**ராடுகளப் பறைய னரிப்பன வொலிப்ப"**[104]

என்று வாகை நெற்றின் ஒலிக்கு பறையின் ஒலியை உவமித்துக் கூறுகின்றார்.

## 7. இயற்கை பற்றிய உவமை

பழந்தமிழ்ப் புலவர்கள் தாம் அனுபவித்து உணர்ந்து இயற்கைக் காட்சிகளைத் தம் பாடலிலும் பதிவு செய்தனர். பயிர்கள்,செடி, கொடி, மரங்கள் மற்றும் நிலவு போன்றவற்றிற்கு பெண்பாற் புலவர்கள் உவமைக் கூறிச் சிறப்பித்துள்ளளர். பொன்னின் நிறத்திற்கு கொன்றை மலர் உவமை கூறப்பட்டது. இதை,

**"பொன் கொன்றை"**[105]

என்று வரும் முடத்தாமக்கண்ணியாரின் பாடலடியால் அறியலாம்.

முத்தின் ஒளியைப் போலவும், மலை அருவியின் வெள்ளிய நிறத்தைப் போலவும் நிலவின் ஒளிக் கதிர்கள் மலைப்பகுதி முழுதும் பரவிநின்றன. இக்காட்சியைக் கண்ட வெள்ளிவீதியார்,

**"இலங்கு வெள்ளருவி போலவும்**
**நிலங்கொண் பனவாற் றிங்களங் கதிரே"**[106]

என்று முத்தையும், வெள்ளருவியையும் நிலவொளிக்கு உவமைக் கூறிச் சிறப்பித்துள்ளார். மைதீட்டிய கண்களைப் போன்ற குவளை மலர்கள் மலையின் சுனையில் மலர்ந்திருந்தன. அத்தகைய மலர்களைத் தலைமகன் சுனையில் நீந்திச் சென்று பறித்து வந்து தலைமகளுக்குக் கொடுத்தான் என்று குன்றியனார் உவமித்துக் கூறுகின்றார்.[107]

கடற்கரைச் சோலைகள் பற்றியும் அங்குள்ள நெய்தல் மலர்கள் பற்றியும் புலவர் பலரும் காட்சிப் படுத்தியுள்ளனர். சோலைகளில் நீலமணியினைப் போன்ற குவளை மலர்கள் மலர்ந்திருந்தன. கழிமுள்ளியின் மலர்கள் காற்று வீசியதால் கோர்க்கப்பட்ட முத்துக்கள் நூல் அறுபட்ட நிலையில் எவ்வாறு சிதறிக் கிடைக்குமோ அதுபோல் சிதறிக் கிடந்தன. இக்காட்சியைக் குன்றியனார்,

**'ஆய்மணி பொதியவிழ்ந் தாங்கு நெய்தல்'**[108]

என்றும்,

**''கூன்முண் முண்டகக் கூர்ம்பனி மாமலர்**
**நூலறு முத்திற் காலொடு பாறி''**[109]

என்றும், கூறிச் சிறப்பிக்கின்றார்.

**உள்ளுறை - வரையறை**

சங்கப் புலவர்கள் தாம் கூற முயலும் கருத்துக்கள் படிப்போர் மனதில் ஆழப்பதிய உள்ளுறையைக் கையண்டனர். இது 'தொனி' என்னும் 'குறிப்புப் பொருள்' என்றும் கூறப்படுகிறது. ''திணையை உணர்த்துவதற்கு மிகுந்த துணை செய்வது உள்ளுறை உவமமாகும். இது கருப்பொருள்களுள் தெய்வம் நீங்கலாக ஏனையவற்றை இடமாகக் கொண்டு வரும்''[110] ஒருவர் தாம் கூறக் கருதிய பொருள் 'இதனோடு ஒத்து முடிதல் வேண்டும்' என்று உட்கொண்டு அதற்குவேண்டிய கருப்பொருள்களைக் கொண்டு கூறுவதாக அமையும். இதனை தொல்காப்பியர்,

**''உள்ளுறுத்து இதனொடு ஒத்துப்பொருள் முடிகென**
**உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்''**[111]

என்று கூறுகின்றார். 'உள்ளுறை என்பது மனம், எண்ணம் உணர்வுகளோடு சம்மந்தப்படாத ஓர் உண்மையை உணர்த்துவது ஆகும்'[112] என்று தி.ரா. தாமோதரன் குறிப்பிடுகின்றார். சங்கப் புலவர்களும் கருத்தாழம் மிக்க தமது பாடல்களில் இவ்வகையான உத்திகளைக் கையாண்டுள்ளனர். உள்ளுறை அகத்திணைக்கு மட்டுமே பொருத்துவதாய் மருதத்திணையில் அதிகம் இடம் பெறுவதாய் அமைத்துப் பாடப்பட்டுள்ளது. இதனை ந.சுப்புரெட்டியார்,

> **"அகப்பொருள் பாடல்களில் பெரும்பாலும் பயின்று வருவது உள்ளுறை உவமம். இதில் வெளிப்படையாகத் தோன்றும் கருத்துகள் உள்ளே அடிப்படையாக உறைந்து கொண்டிருக்கம் கருத்துக்களுக்கு உவமையாக வரும்படி அமைக்கப் பெற்றிருக்கும். சாதாரணமாக வெளிப்படை உவமமானால் அதில் உவமேயமும் இருக்கும் உள்ளுறை உவமத்தில் உவமேயம் வெளிப்படையாகத் தெரியாது."[113]**

என்று கூறுகின்றார். உள்ளுறை என்னும் தன்மை குறிஞ்சி, நெய்தல் மற்றும் மருத நிலப்பாடல்களுக்குச் சரியாகப் பொருந்தும். ஏனெனில் இதில் தான் புலவன் தான் கருதிய பொருளை மறைமுகமாய் கருப்பொருள்களுள்ளே மறைத்துக் கூறுகின்றான். சங்கப் பாடல்களின் உள்ளுறை பெரும்பாலும் தலைவனது எதிர்மறை நடத்தைப் பற்றி கூறுவதாகவே அமைந்துள்ளது. இவ்வாறான நிலையில் பெண்பாற் புலவர்களின் அகத்திணைப் பாடல்களில் உள்ளுறை உவமம் எவ்வாறு அமைந்துள்ளது என்பதை விளக்குவதாக இப்பகுதி அமைகிறது.

**களவுப் புனைவில் உள்ளுறை**

சங்கப் பெண்பாற் புலவர்கள் தலைமக்களின் வாழ்வியல் நிகழ்வுகளை மேலும் சுவைபட கூறுவதற்கு உள்ளுறையைக் கையாண்டுள்ளனர். தலை மக்களின் களவு வாழ்க்கைச் சித்திரிப்பில் பெண் பாற் புலவர்களால் உள்ளுறை கையாளப்பட்டுள்ளது. மலைப்பகுதியில் குறிஞ்சிப் பூக்கள் நிரம்பப் பூத்திருந்தன. அதன் தண்டுப்பகுதி கரிய நிறமுடையதாய் இருந்தது. ஓவியன் தமது கற்பனையில் சித்திரித்து வரைந்த இல்லங்களைப் போல் மலைப்பகுதியிலுள்ள வேட்டுவர்களின் இல்லங்கள் பொலிவுடன் காணப்பட்டன. தேனீக்கள் குறிஞ்சி முதலிய பலவகை மலர்களிலிருந்து தேன் எடுத்து வந்து சேர்த்த அடையை வேட்டுவர்கள் அழிந்து உண்டனர். மீதமுள்ள தேனடையை தமது இல்லங்களுக்கு எடுத்துச் சென்றனர். தலைவன் மேல் தலைவி கொண்டிருந்த உறவு தேனடைக்கும் குறிஞ்சிப் பூவுக்கும் உள்ள உறவைப் போன்றதாகவும் தலைவன் அதனைஅறியாது இருந்து வருவதாகவும் தோழி உரைக்கின்றாள். இவ்வாறு உள்ளுறையாக அமைந்த கருத்தை வெறிபாடிய காமக் கண்ணியார்,

> **"கருங்காற் குறிஞ்சி மதனில வான்பூ**
> **வோவுக்கண் டன்ன வில்வரையிழைத்த**
> **நாறுகொள் பிரசமூறும்........."[114]**

என்று கூறுவதன்வழி அறியலாம். தலைவன் களவு நீட்டிப்பதை விரும்பாத தலைவி ஒருத்தி மலைப்பகுதியில் கிளி தனது சுற்றத்துடன் தினைக் கதிர்களை

உண்டு செல்வதைப் போன்று தலைவனும் தனது சுற்றத்துடன் வந்து மணம் செய்ய வேண்டுமென்று விரும்புகிறாள்.[115] அதே போல், கடற்கரைப் பகுதியில் மீன் வாங்குவோரும் விற்போரும் அங்குள்ள நெய்தல் மலர்களை மிதித்துச் சிதைத்தனர். இவ்வாறு தலைமகனும் தாம் பெற்ற செல்வத்தைத் தமருக்குக் கொடுத்து ஊரார் தூற்றும் அலரை ஒழித்துத் தலைமகளை மணம் புரிந்து அழைத்துச் செல்வான் என்பது உள்ளுறையாகக் கூறப்பட்டது. இதனைக் குன்றியனார் என்னும் புலவர்,

**''ஆய்மணி பொழிய விழ்ந்த தாங்கு நெய்தற்**
**புல்லிதழ் பொதிந்த பூத்தப மிதிக்கு....''**[116]

என்று பாடுகின்றார்.

தன் துணையாகிய களிற்றைப் புலி கொன்றதனால் பிடியானது தன் கன்றை அனைத்தவாறு பெருந்துன்பத்துடன் தளர்வுற்று நடந்து சென்றது. ஆற்ற முடியாத பெரும்புண்பட்டவரைப் போல் வருந்தியது. அதுபோல் தலைவனால் ஏற்பட்ட பசலைக்கு வருந்தும் தலைவியோடு தானும் சேர்ந்து வருந்துவதாக தோழி கூறுகின்றார். இதனை நல்வெள்ளியார்,

**''பைதலங் குழவி தழீஇ யொய்யென**
**வரும்புண் ணுறுநரின் வருந்தி''**[117]

என்று உரைப்பதனால், துணையைப் பிரிந்த பிடிக்கு பெருவருந்தமிருந்தாலும் தன் கன்றினைக் காக்கும் பண்புடையதாய் அதனைத் தழுவி நின்றது என்பதும் அதுபோல தலைவனின் பிரிவுத் துன்பத்தால் பசலை ஏற்பட்டு பொலிவிழந்து வருந்தியபோதும் தலைவி நாணுடைமையால் தான் கொண்ட களவினைக் காத்து வந்தாள் என்பதும் உள்ளுறையாகப் பெறப்படுகின்றன.

### கற்பு வாழ்க்கைப் புனைவில் உள்ளுறை

பெண்பாற் புலவர்களின் கற்புப் பாடல்களில் உள்ள உள்ளுறைச் செய்திகள் இங்கு பேசப்படுகின்றன. எருமையானது தான் கட்டப்பட்டிருந்த கொட்டிலை நீராலும் சாணத்தாலும் சேறாக்கி கயிற்றை அறுத்துக் கொண்டு வேளியைக் கொம்பால் சிதைத்து வள்ளைக் கொடிகளை நீக்கித் தாமரை மலரை உண்டது. அது போல், தலைவன் தன்னால் ஆதரித்துக் கொள்ளப்பட்ட தலைவியை வேறுபடுத்தி நாணமாகிய கட்டுக்களை அறுத்து பரத்தையர்க்குக் காவலாகிய வேலியைப் பாணன் என்னும் கோட்டால் நீக்கிப் பரத்தையரின் தாய்

மாரையும் மயக்கி, பரத்தை மகளிரை நுகர்ந்தான் என்பது இங்கு உள்ளுறையாக அமைந்தது. இதனை நன்முல்லையார்,

**“சேற்றுநிலை முணைஇய செங்கட்காரான்
ஆர்மடி கங்குலின் நோன்றளை பரிந்து
கூர்முள் வேலி கோட்டி னீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுடனிரிய
வந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமலர் ஆருமூர”**[118]

என்று பாடியுள்ளார். தலைவனை விரும்பிய பரத்தை ஒருத்தி அழகு நலம் வாய்ந்த இளமையுடன் கூடிய வேறொரு பரத்தையைக் காண்கிறாள். ஊரில் நடைபெறும் விழாவில் அப்புதிய பரத்தையைக் காண நேரிட்டால் தலைவன் அவள் மேல் காதல் கொள்வான் என்று தன் மனதில் அழுக்காறு கொள்கிறாள். பொய்கையில் வளைமீன் பிறழ்ந்தும் அதனை உண்ணாது நீர்நாய் உறங்குவதைப்போல் விழாவிற்குச் செல்ல இயலாமல் தான் இல்லத்தில் இருந்தமையை எண்ணி வருந்துகின்றாள். இதனை ஔவையார்,

**“ஐதக லல்கு லணிபெறத் தைஇ
விழவிற் செலீஇயர் வேண்டு மன்னோ
யாண ரூரன் காணுநனாயின்
வரையா மையோ வரிதே வரையின்”**[119]

என்று பாடுகிறார். தலைவனை விரும்பிய பரத்தை விழாவிற்குச் சென்று புதிய பரத்தையை தலைவன் கண்ணில் படாதவாறு கடிந்துரைத்து அனுப்பியிருக்க வேண்டும் என்பது உள்ளுறையாக அமைந்துள்ளது. இதன்வழி அக்கால ஆடவர் இல்லற மகளிரை விடுத்து பரத்தையர் பால் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதும் செல்வர்களைத் தம் வசம் வைத்துக் கொள்வதற்குப் பரத்தையர்கள் மிகுந்த காம வேட்கைக் கொண்டவர் போல் தம்மைக் காட்டியும், தழையுடை போன்ற கவர்ச்சியான உடைகளை அணிந்தும் பிற பரத்தையர்கள் தாம் விரும்பிய தலைவனை அடைந்து விடாதபடி பாதுகாத்தும் வந்தனர் என்பதும் பெறப்படுகிறது.

**இறைச்சி - வரையறை**

உவமையைப் போலவே இறைச்சிப் பொருளும் பெண்பாற்புலவர்களின் பாடல்களில் பயின்று வருகின்றது. இறைச்சி என்பது ‘உடனுறை’ என்னும் பொருளில் வழங்கப்படுவதைத் தொல்காப்பியர்,

**''உடனுறை உவமம் சுட்டு நகைச் சிறப்பெனக்
கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே''**[120]

என்று கூறுகின்றார். மேலும், 'இறைச்சிப் பொருளென்பது உரிப்பொருளின் புறத்தாகித் தோன்றும். சொல் உணர்த்தும் பொருளுக்கு மேல் ஒரு பொருள் உணர்த்துவது. அன்பை நினைவூட்டடத்தக்க நிகழ்ச்சியின் அடிப்படையில் வற்புறுத்தலாக வரும்'[121] என்றும் கூறப்படுகிறது. இதனைத் தொல்காப்பியர்,

**''இறைச்சி தானே உரிப்புறத் ததுவே''**[122]

என்று கூறுகின்றார். ந.சுப்புரெட்டியார் இறைச்சி பற்றி,

**உள்ளுறை உவமத்தைவிட நுட்பமாகக் கூறப்பெறுவது இறைச்சிப் பொருள்; உள்ளுறை உவமத்தைப் போலவே இறைச்சியும் சங்கப் பாடல்களைச் சிறப்பிக்கின்றன.''**[123].

என்று கூறுகின்றார். இவ்வாறு பெண்பாற்புலவர்களின் பாடல்களில் கிடைக்கப்பெறும் இறைச்சிப் பொருளை விளக்குவதாக இப்பகுதி அமைகிறது.

**களவில் இறைச்சி**

தலைவன் களவிலேயே அதிக ஈடுபாடு உடையவனாக இருந்தான். அவனது பிரிவால் தலைவிக்குப் பசலை நோய் உண்டாயிற்று. இந்நிலையில் தலைவி, தலைவனுக்கு உரிமையுடைய மலையில் குடிகொண்டிருக்கும் தெய்வம் தீண்டினாரை வருத்துதல் போன்று, அவனது மார்பும் தீண்டியவரை வருத்தும் தன்மையுடையது என்று கூறி வருந்தினாள் என்பதை வெறிபாடிய காமக்காணியார் என்னும் புலவர்,

**''அணங்குடை நெடுவரை யுச்சியினிழி தருங்
கணங்கொள் அருவிக் கான்கெழு நாடன்''**[124]

என்று இறைச்சிப்பொருள் தோன்றக் காட்சிப்படுத்துகின்றார். வரைந்து கொள்ளாது காலம் நீட்டிக்கும் தலைவன் ஒருவனை நினைத்து வருந்துகிறாள் தலைவி. தான் வருந்துவது தெரிந்தால் தலைவனும் வருந்தக்கூடும் என நினைக்கிறாள். மழையில் நனைந்து உலறிய மயில் மழைமுகிலை நினைத்தவுடன் தோகை விரித்தாடும் தன்மையுடையது. அதுபோல், தலைவனோடு கூடி மகிழ்ந்திருந்த அந்நாளை நினைக்கும் பொழுது அவன் வரைந்து கொள்ளும் நாள்வரை துன்பத்தைத் தாங்கி இருக்க இயலும் என்று உரைக்கின்றாள். இதனை குறியெயிற்றியார் என்னும் புலவர்,

**“நெஞ்சுவடுப் படுத்துக் கெடவறியாதே**
**..............................................**
**சார னாடனொ டாடிய நாளே”[125]**

என்று கூறியுள்ளார் இங்கு மயிலின் நினைவும், தலைவியின் நினைவும் இறைச்சிப் பொருளாக அமைந்துள்ளன. மக்கள் இடும் பலியுணவை உண்டு பழகிய காக்கை, மழைபெய்த இரவிலும் குளிரின் நடுக்கத்தில் புதிய பலியுணவை நினைத்தவாறு அமர்ந்திருந்தது. அதைப்போல் தலைவனைப் பிரிந்து தனிமைத் துயரால் நடுங்கி வாடுகின்ற தலைவி, தன் உள்ளம் தலைவனோடு முயக்கம் கொள்ளவே விரும்புகிறது என்று கூறுகின்றாள். இதனைக் கழார்க்கீரன் எயிற்றியார்,

**“நல்வகை மிகுபலிக் கொடையோ டுகுக்கு**
**மடங்காச் சொன்றி யம்பல் யாணர்**
**விடக்குடைப் பெருஞ்சோ றுள்ளவன விருப்ப**
**மழையமைந் துற்ற மாலிரு ணடுநாட்**
**டாநம் முழைய ரகவும்...”[126]**

என்று இறைச்சிப் பொருள் தோன்றப் பாடியுள்ளார்.

**பிரிவில் இறைச்சி**

தலைவன் பொருள் தேடும் பொருட்டுப் பிரிந்து சென்றான். அவனது பிரிவு தலைவிக்குப் பெரும் துன்பத்தை விளைவித்தது. இதனைஅறிந்த தோழி தலைவியின் துயரைப் போக்க நினைத்தாள். வறண்ட நிலப்பகுதியில் மழையின்மையால் வாடிய செடி கொடிகளும், மரங்களும் தழைக்குமாறு மழைப்பொழிவு ஏற்பட்டு அதன் வருத்தத்தைப் போக்கும். அதுபோல், தலைவனின் வரவால் உனது வருத்தமும் விரைவில் நீங்கும் என்றாள். மூங்கில் நெல்லை உண்ட யானை கவலையின்றி பிடியுடன் உறங்குவது போல் தலைவனுடன் சேர்ந்து இன்பம் துய்த்துத் தலைவியும் உறக்கம் பெறுவாள் என்ற இறைச்சிப் பொருள் தோன்ற நல்வெள்ளியாரின் பாடல் அமைந்துள்ளது.[127] மேலும், பொருள் தேடச் சென்ற தலைவன், பெண்புலியின் பசியினைப் போக்க மானை எதிர்பார்த்திருக்கும் ஆண் புலியைக் காண்பானாயின் நினைவு மேலிட்டு விரைந்து வருவான் என்றும், அவன் திரும்பி வருவான் என்ற நம்பிக்கையிலேயே தலைவி தன் உயிரைத் தாங்கியிருப்பதாகவும் ஔவையார் இறைச்சிப் பொருள் தோன்ற கூறுகின்றார். இதை,

**“.................பிணவுப்பசி கூர்ந்தெனப்**
**பொறிகிள ருழுவைப் போழ்வா யேற்றை**
**யறுகோட் டுழைமா னாண்குர லோர்க்கும்”[128]**

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன. இத்தகைய முறையில் அகப்பொருள் பாடல்களில் இறைச்சிப் பொருள் அமையப்பெற்றுள்ளது.

**நடைத்திறன்**

சங்கப் பாடல்கள் பலவும் ஆசிரியப்பாவால் பாடப்பட்டவையாகும். இலக்கண விதிகளுக்கு ஏற்ப அவை படைக்கப்பட்டுள்ளன. தொல்காப்பியர் கூறும் 'செய்யுள் வழக்கு' புலவர்களால் போற்றப்பட்டுள்ளது. புலவர்கள் தமது பாடல்களில் பலவகை நடையைக் கையாண்டுள்ளனர். செய்யுட்களில் பொருளினைத் திறம்படச் சொல்லும் வடிவமைப்பே நடை எனப்படும். அதிலும், உணர்ச்சிக்கேற்ப பாட்டு வடிவத்தை அமைப்பது சங்கப் புலவர்களின் தனிச்சிறப்பாகும். மொழியமைப்பின் அடிப்படையில் எழுத்து, சொல், தொடர், வாக்கியம், உரைக்கோவை ஆகியவை இணைந்து நடையமைப்பாக அமைகின்றன. நடை என்பது இன்னதெென வரையறுத்துக் கூற இயலாத நிலை அறிஞர்களிடம் இருந்து வருவதை ஜெ.நீதிவாணன்,

> **''இலக்கணத்தை எழுதும்போது விதிமுறைகளை வகுத்து, ஒரு விதியைப் பயன்படுத்தி எண்ணற்ற சொற்றொடர்களை ஆக்கிக்கொள்ள முடியுமென்று நிறுவிக் காட்டுவது போல நடையையும் விளக்க முடியாது. இலக்கண விதிகள் முன்னுரைக்கும் விதிகளாகும் (Predictive). நடையியலில், ஏற்கனவே ஆக்கப்பட்ட நடை உத்திகள் வகை செய்யப்படுகின்றன. சில விதிகளைக் கொடுத்து அவைகளைப் பயன்படுத்துவதன் மூலம் இத்தகைய நடையை ஆக்கிக் கொள்ளலாம் என்ற முறையில் நடையியல் அமையாது. அடிப்படையில், நடையியல் ஒரு 'வகைப்பாடு' நெறியேயாகும் (Classificatory).''**[129]

என்று உரைப்பதன் வழி அறியலாகிறது. நடை என்பது இத்தகையது என வரையறுத்துக் கூற இயலாத நிலை இருந்தபோதும், 'சங்கப் புலவர்கள் தாம் கூறவரும் கருத்துகளுக்கேற்ப விளிநடை, தொடர் நடை, உணர்ச்சிநடை, ஆற்றொழுக்கு நடை, அடுக்கு நடை, எண்ணுநடை என்று பிரித்தறியும் வண்ணம் பல்வேறு நடைகளைக் கையாண்டுள்ளனர்.[130] நடையின் முக்கியத்துவம் பற்றி க.பிரபாகரி,

> **''சிறந்ததொரு கருத்து செவ்விய நடையில் வெளிப்படும்பொழுது இலக்கியமாக மலர்கின்றது. எனவே இலக்கிய மலர்ச்சிக்கு முதலாவதாகவும் முதன்மையானதாகவும் அமைவது நடை ஆகும்''**[131]

என்று விளக்கம் தருகின்றார். இத்தகைய முறையில் சங்கப் பெண்பாற்புலவர்கள் நடை அமைப்பு, அவர்களின் பாடல் தொடரமைப்பினைக் கொண்டும், கருத்துக்களின் அடிப்படையிலும் *(1)* கூறியவை கூறல், *(2)* பேச்சு மொழி, *(3)* அடுக்குத்தொடர் என வகைதொகை செய்யப்பெற்று இங்கு ஆராயப்படுகிறது.

## 1. கூறியவை கூறல்

பெண்பாற் புலவர்களின் ஒரு பாடல் கருத்து மற்றொரு பாடலிலும் வேறு சூழலிலும் அதே பொருளுடன் பல இடங்களில் இடம் பெற்றுள்ளது. ஒரு புலவர் ஒரே கருத்தைத் தமது பல பாடல்களிலும் பதிவுசெய்துள்ளார். ஒரே கருத்தமைவில் சில தொடர்களை மீண்டும் மீண்டும் பயன்படுத்தியுள்ளனர். சில பாடல் கருத்துகள் ஒரே சூழலில் பாடியனவாக அமைந்துள்ளன. அவற்றின் அடிப்படையில், *(1)* தலைமக்களின் வாழ்வு பற்றியவை, *(2)* இயற்கை சார்ந்தவை, *(3)* பழம் மரபுகள் என்னும் அடிப்படையில் 'கூறியவைக் கூறல்' பகுதி அமைகிறது.

## 1. தலைமக்களின் வாழ்வியல் சார்ந்தவை

தலைவனது நினைவால் வருந்தும் தலைவி நடுயாமம் வரை யாழ் வாசிக்கப்படுகின்ற ஒலியைக் கேட்கிறாள். அவ்வொலி வாசிக்கப்படுபவர்க்கும் கேட்பவர்க்கும் இன்பம் தருவதாக இருந்தாலும் தலைவன் இன்மையால் தனக்குத் துன்பம் தருவதாகவே உள்ளது என்று தலைவி தெரிவிக்கின்றாள். இதை வெள்ளிவீதியார்,

> **''விரல்கவர்ந் துழந்த கவர்வி னல்யாழ்**
> **யாம முய்யாமை நின்றன்று**
> **காமம் பெரிதே களைஞரோ விலரே''**[132]

என்று தலைவி தன் ஆற்றாமையைக் கூறுவதாகப் பாடியுள்ளார். அதேபோல், தலைவி தலைவனை நினைத்து இரங்கிக் கொண்டிருந்த மற்றொரு இரவுப் பொழுதின் நிகழ்வையும் வெள்ளிவீதியார் காட்சிப் படுத்துகின்றார். கடற்கரைச் சோலையில் வண்டுகள் தம் துணையோடு ஒலித்துக் கொண்டிருந்தன. மக்களும் இரவு முழுதும் விழா கொண்டாடி மகிழ்ந்தனர். அவ்வேளை, தலைவி மட்டும் தலைவனை நினைத்து நெடுநேரம் உறங்காமல் வருந்தினாள் என்பதை,

> **''யானே புனையிழை நெகிழ்ந்த புலம்புகொளவலாமாடு**
> **கனையிருங் கங்குலுங் கண்படையிலனே''**[133]

என்று தலைவி கூற்றில் பாடியுள்ளார். மேற்கண்ட இரண்டு பாடல்களும் நெய்தல் திணை சார்ந்தவை. இதில் புற நிகழ்வுகள் இன்பம் தருவதாகவும், அவை

தலைவியின் துயரை மேலும் மிகுவிப்பதாகவும் சுட்டப்பட்டுள்ளன. இருபாடல்களும் இரவு நேரக் காட்சிகளை வர்ணிப்பதோடு தலைவி கூற்றில் அமைந்துள்ளன. பாடலின் கருத்தும் ஒன்று போலவே கூறப்பட்டுள்ளது. இப்பாடல்கள் இரண்டும் ஒரே நேரத்தில், ஒரே காலச் சூழலில், ஒரே மனநிலையில் வெள்ளி வீதியாரால் பாடப்பட்டிருக்கலாம் எனக் கருத இடமளிக்கிறது.

**வாடைக் காற்று**

வாடைக் காற்றின் மிகுதியால் வருந்தும் நிலை பற்றி கழார்க்கீரனெயிற்றியார் தமது பாடல்கள் வழி காட்சிப்படுத்துகின்றார். வாடையின் மிகுதியால் பற்கள் தீ உண்டாகும்படி படபடவென கடித்தன என்றும், மலை நடுங்கும் படியாக வாடைக்காற்று வீசியது என்றும் சித்திரிக்கின்றார். இதனை,

**"எயிறுதீப் பிறப்பத் திருகி**
**நடுங்குதும் பிரியின்யாங் கடும்பனி"**[134]

என்றும்

**"குன்றுநெகிழப் பன்ன குளிர்கொள் வாடை"**[135]

என்றும், வரும் அவர்தம் அகநானூற்றுப் பாடலடிகள் பறைசாற்றுகின்றன.

**விருந்தயர்தல்**

வினை முடித்து மீண்டு வந்த தலைவனுக்குத் தலைவி விருந்து படைக்கும் பேற்றைப் பெற்றாள் என்று ஏவலர் கூறுவதாக அமைந்தன ஒக்கூர் மாசாத்தியாரின் பாடலடிகள். இதனை,

**"விருந்தும் பெருகுவள் போலுந் திருந்திழைத்**
**தடமென் பணைத்தோண் மடமொழி யரிவை"**[136]

என்றும்,

**"மனைக்கொண்டு புக்கன னெடுந்தகை**
**விருந்தோ பெற்றன டிருந்திழை யோளே"**[137]

என்றும் கூறுவதால் வினை முற்றி மீளும் தலை மகனுக்கு விருந்து படைக்கும் அக்கால வழக்கம் பற்றி அறியப்படுகின்றது.

**பொருட்பிரிவு**

பொருள் தேடிப் பிரிந்து சென்ற தலைவனை நினைத்து அவன் எங்குள்ளானோ எனத் தலைவி வருந்துகின்றாள். இதனை நன்னாகையார்,

**"ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ"**[138]

என்றும், வருமுலையாரித்தியார்,

**“ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ”**[139]

என்றும் பயன்படுத்தியுள்ளனர். ஒரே தொடரை இரு புலவர்களும் கையாண்டுள்ளதைக் காண முடிகிறது.

**மாலை நேரக் காட்சிகள்**

பகல் முழுதும் வெம்மைக் கதிர்களைப் பரப்பிய ஞாயிறு, மாலை நேரத்தில் வெம்மை தணிந்து சிவந்த நிறமுடையதாய் மேற்கு மலையின் பின் சென்று மறைந்தது. இக்காட்சியைக் கண்ட குன்றியனார்,

**“ஞான்ற ஞாயிறு குடமலை மறைய**
**மான்ற மாலை....”**[140]

என்றும்,

**“செல்சுடர் மழுங்கச் சிவந்துவாங்கு மண்டிலம்”**[141]

என்றும் சித்திரிக்கின்றார். இதே காட்சியை ஔவையார்,

**“கல்சேர் மண்டிலஞ் சிவந்து நிலந்தணிய”**[142]

என்றும், நல்வெள்ளையார் என்னும் புலவர்,

**“சுடர்சினம் தணிந்து குன்றம் சேர”**[143]

என்றும், ஒரே நிகழ்வை பல்வேறு நிலைகளில் காட்சிப் படுத்தியுள்ளனர்.

**நிலவின் காட்சி**

நிலவானது நீல நிறமுடைய வானில் தனது வெண்மையான கதிர்களைப் பரப்பி பால் நிறைந்த கடல்போல் காட்சியளித்தது. இதனைக் கண்ட வெள்ளிவீதியார்,

**“திங்களும் திகழ்வான் ஏர் தரும்”**[144]

என்றும்,

**“நிலவே நீனிற விசும்பிற் பல்கதிர் பரப்பிப்**
**பான்மலி கடலிற் பரந்துபட்டன்றே”**[145]

என்றும் உரைக்கின்றார்.

இவ்விரு பாடல்களும் நெய்தல் திணையில் தலைவி கூற்றில் வைத்துப் பாடப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கது.

**பழம் மரபுகள்**

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனின் பெருமைகளைக் கூறும் நப்பசலையார், அவனைப் புறாவின் துயர் போக்கிய சிபிச் சோழனின் மரபில் வந்தவன் என்கிறார். இதனை,

**''புள்ளுறு புன்கண் டீர்த்த வெள்வேற்**
**சினங்கெழு தானைச் செம்பியன் மருக''[146]**

என்று கூறுகின்றார். மேலும், பிறிதொரு பாடலில், புறாவின் வருத்தத்தைப் போக்க, யானையின் தந்தங்களைக் கொண்டு கடைந்து செய்யப்பட்ட துலாக் கோலில் தானே ஏறி நின்ற சிபிச் சோழனின் மரபில் வந்தவன் என்றும் குறிப்பிடுகின்றார். இதனை,

**''புறவினல்லல் சொல்லிய கறையடி**
**யானை வான்மருப் பெறித்த வெண்கடைக்**
**கோனிறை துலாஅம் புக்கோன் மருக''[147]**

என்று வரும் அவரது பாடலடிகள் சோழரின் பழம் மரபுக் கதையை உரைக்கின்றன.

**பொற்றாமரை மலர்**

சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோவைப் பாடிய பேய் மகள் இளவெயினியார், பாடினி அணிகலன்களைப் பெற்றதாகவும், பாணன் பொன்னால் செய்யப்பட்டு வெள்ளிநாரால் தொகுக்கப்பட்ட தாமரை மலரைப் பரிசாகப் பெற்றதாகவும் கூறுகின்றார். இதனை,

**''ஒள்ளழல் புரிந்த தாமரை**
**வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே''[148]**

என்று வரும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன. இதையே மாறோக்கத்து நப்பசலையார், பகைவரின் யானைப் பட்டத்திலிருந்து எடுக்கப்பட்ட பொன்னைக் கொண்டு தாமரை மலர் செய்து, அதைப் பாணரின் தலையில் சூடி அழகு பார்த்தனர் என்பதை,

**''பாணர் சென்னி பொலியத் தைஇ**
**வாடாத் தாமரை சூட்டிய''[149]**

என்னும் தமது பாடலடிகளில் காட்டியுள்ளார். பாணர்கள் பொன்னாலாகிய தாமரைமலரைச் சூடவும் புலவர்கள் அலங்கரிக்கப்பட்ட தேரினை யானையுடன் பெறவும் காரணமாக இருந்தவன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பதை நெட்டிமையார்,

**"பாணர் தாமரை மலையவும் புலவர்**
**பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்"[150]**

என்று கூறுகின்றார். பொன்னால் செய்யப்பட்ட தாமரைமலர் மன்னரால் இரவலர்க்குக் கொடுத்துச் சிறப்பிக்கப்படுவது வழக்கமாய் இருந்தது என்பது இதனால் அறியப்படும். உரையாசிரியர் ஒளவை சு. துரைசாமிப்பிள்ளை,

**"பொன்னால் தாமரைப்பூ செய்து அதனை வெள்ளியாற் செய்த நாரிடைத் தொடுத்தது பொன்னரி மாலை; இதனை பாணர்க்கு வழங்குதல் மரபு."[151]**

என்று கூறுகின்றார். பொற்றாமரை மலர்களைச் சூடியர்களும் அதனைச் சிறப்பித்துப் பாடியவர்களும் பெண்பாலர் என்பது சிந்திக்கத்தக்கது.

**சமகாலத்துப்புலவர்**

சங்கப் புலவர்களுள் அதிகப் பாடல்களைப் பாடிய பெருமைக் கொண்டவர் கபிலர். அக்காலப்புலவர் பலரும் அவரைப் பெரும் மதிப்புடன் போற்றினார். கபிலரின் சமகாலத்துப் புலவரான மாறோக்கத்து நப்பசலையார், அவனை இந்நிலவுலகில் வாழ்கின்ற மக்கள் எல்லோரைக் காட்டிலும் அறிவிற் சிறந்த குற்றமில்லாத அந்தணாளன் என்றும் பொய்யாத நாவினை உடையவர் என்றும் சிறப்பிக்கின்றார். இதனை,

**"நிலமிசைப் பரந்த மக்கட் கெல்லாம்**
**புலனழுக் கற்ற வந்தணாளன்"[152]**

என்றும்

**"பொய்யா நாவிற் கபிலன்"[153]**

என்றும், வரும் அவரது பாடலடிகள் சுட்டுகின்றன. மறோக்கத்து நப்பசலையார் கபிலர் மீது தாம் கொண்டிருந்த பெருமதிப்பை இதன் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். கபிலர் நப்பசலையாரின் காலத்தவர் என்பதும் கபிலரின் புலமைத் திறத்தை நப்பசலையார் நன்கு அறிந்தவர் என்பதும் இதனால் பெறப்படும்.

**பேச்சுமொழி**

பெண்பாற் புலவர்களின் சில பாடல்களில் உரையாடல் போன்ற அமைப்பு கையாளப்பட்டுள்ளது. தலைவி, தோழி, நற்றாய் போன்றோர் தமது கருத்துக்களை ஒருவரிடமிருந்து மற்றொருவருக்குக் கூறும்போது இயல்பான பேச்சுநடையில் வைத்துப் பாடியுள்ளனர். தலைவனுடன் கூடியிருந்த நாளினை நினைத்து வருந்துகிறாள் தலைவி, தனது நிலையை நன்கு அறிந்தவள் தோழி என்பதால், தன்மனதில் தோன்றிய கருத்தைக் கூறி, தோழியே இதற்கு உனது கருத்து என்ன என்று கேட்டதாய் அமைந்துள்ளது குறமகள் இளவெயினியாரின் பாடலடி. இதனை,

**''நின்குறிப் பெவனோ தோழி யென்குறிப்பு''[154]**

என்று கூறுவதால் தலைவி தோழி ஆகிய இருவரிடையே நடைபெற்ற பேச்சு மொழி விளங்குகிறது. மேலும், தலைவன் நேரில் வருவதால் எழும் மணி ஓசையா, இல்லை பசுக்களின் கழுத்தில் கட்டப்பட்ட மணியின் ஓசையா என்பதை அறிய, உயர்ந்த கல்மீது ஏறிப்பார்த்தால் தமக்குள் எழுந்த ஐயம் நீங்கும் என நினைத்த தோழி தலைவியை,

**''...................... கல்லுய ரேறிக்**
**கண்டனம் வருகஞ் சென்மோ தோழி''[155]**

என்று கூறி அழைப்பதாக ஒக்கூர் மாசாத்தியாரின் பாடலடிகள் பேச்சுநடையில் அமைந்துள்ளன.

**தோழியும் நற்றாயும்**

நற்றாயிடம் தோழி உரையாடுவதுபோல் போந்தைப் பசலையாரின் அகநானூற்றுப் பாடல் அமைந்துள்ளது. கடற்சோலையில் தோழியர் கூட்டத்தோடு விளையாடி இருந்தபோது ஒருவன் அருகே வந்து அன்பான மொழி பேசினான். தான் மிகவும் களைப்புடன் இருப்பதாகக் கூறினான். நாங்கள் விளையாட்டின் போது கட்டிய சிறு வீட்டிலேயே தங்கி சமைத்த சிறுசோற்றை உண்டால் உங்களுக்கு இடையூறு உண்டாகுமோ எனவும் கேட்டான். அதற்கு மறுமொழியாக இந்த உணவு உமக்கு ஏற்றது இல்லை, இது கொழுமீன் கொண்டு சமைந்தவை என்று நாங்கள் கூறினோம் என நடந்தவற்றைத் தோழி நற்றாயிடம் பகிர்ந்து கொண்டாள். இதனை,

**"மெல்லிலைப் பரப்பின் விருந்துண் டியானுமிக்**
**கல்லென் சிறுகுடித் தங்கின்மற் றெவனோ**
**என மொழிந் தனனே."[156]**

என்று தலைவன் கேட்பதாகவும், அதற்கு மறுப்புரையாக,

**"இவை நுமக்குரிய அல்ல விழிந்த**
**கொழுமீன் வல்சி என்றனம்"[157]**

என்று தோழி கூறியதாகவும் வரும் போந்தைப்பசலையாரின் பாடலடிகள் பேச்சுவழக்கில் உரையாடல் அமைப்பில் அமைந்துள்ளன.

**அந்தாதி அமைப்பு**

ஒரு தொடரின் இறுதி சொல் அடுத்த தொடரின் முதல் சொல்லாய் வருவது அந்தாதி எனப்படும். வெள்ளிவீதியார் தமது பாடலொன்றில் இம்முறையைக் கையாண்டுள்ளார். தலைவனை நினைத்து இரங்கும் ஒரு தலைவி இந்த உலகம் என்னோடு போர் செய்து என்னை அழிக்குமோ, இல்லை மாறுபாடாக நிகழும் பல நிகழ்வுகளைக் கண்டு என் நெஞ்சம் இந்த உலகத்தோடு போர் செய்யத் துணியுமோ தெரியவில்லை என்று புலம்புகின்றாள். இதனை வெள்ளிவீதியார்,

**"...... என்னோடு பொருங்கொல் இவ்வுலகம்**
**உலகமொடு பொருங்கொல்என் அலவுது நெஞ்சே"[158]**

என்று அந்தாதி அமைப்பில் வைத்துப் பாடியுள்ளார்.

**அடுக்குமொழி**

ஒரு சொல் அதே தொடரில் மீண்டும் இடம்பெற்றும் அதே சொல் அடுத்த தொடரிலும் அடுக்கு மொழியாய் இடம்பெற்றும் படிப்போர்க்குச் சுவைதரும் நோக்கில் புலவர்களால் பாடப்பட்டுள்ளது. பெண்பாற் புலவர்களின் பாடல்களில் இடம்பெற்றுள்ள அடுக்கு மொழிகள் இங்கு எடுத்துரைக்கப்படுகின்றன.

**அகப்பாடல் அமைப்பு**

தலைவனின் செயலால் உள்ளம் வருந்துகிறாள் தலைவி. இதைக் கூறும் நன்முல்லையார்,

**"நோமென் னெஞ்சே நோமென் நெஞ்சே**
**- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -**
**இனிய செய்த நங் காதலர்**
**இன்னா செய்த னோமென் னெஞ்சே"[159]**

என்று அடுக்குத் தொடரமைப்பில் சொற்களை அமைத்துப் பாடியுள்ளார். அதேபோல், ஔவையார் குறுந்தொகைப் பாடலொன்றில் கட்டு விச்சியை அழைக்கும்போது அகவன் மகளே! அகவன் மகளே! என்று இருமுறை அழைக்கின்றார். மேலும், பாடிய பாடலை மீண்டும் பாடுக என்றும் கேட்கின்றார். இதனை,

**"அகவன் மகளே யகவன் மகளே**
**மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்**
**அகவன் மகளே......"**[160]

என்றும், பாடலைப் பாடுக, மேலும் பாடுக, அதே பாடலை என்னும் கருத்தில்,

**"- - - - - - - - - - - - பாடுக பாட்டே**
**இன்னும் பாடுக பாட்டே அவர்**
**நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே"**[161]

என்றும் அடுக்குத் தொடரமைப்பில் பாடியுள்ளமை கொண்டு அறியலாம்.

தலைவி ஒருத்தி தலைவனுக்கு நாரையைத் தூது அனுப்ப நினைத்தாள். நீர்த்துறையில் துவைக்கப்பட்டு அழுக்குப் போகிய வெள்ளை ஆடை போன்ற நிறமுடைய சிறுகுருகே! நீ இரை தேடும் பணியைச் செய்கிறாய். அதனை விடுத்துத் தலைவனின் ஊருக்குச் சென்று எனது நிலையை எடுத்துரைப்பாயாக என்று வேண்டுகின்றாள். இதனை வெள்ளி வீதியார்,

**"சிறுவெள்ளாங் குருகே சிறுவெள்ளாங்குருகே**
**துறைபோகு அறுவைத் தூமடி யன்ன**
**நிறங்கிளர் தூவிச் சிறுவெள்ளங் குருகே"**[162]

என்று தலைவி அழைப்பதாய் அமைத்துப் பாடியுள்ளார்.

### புறப்பாடல் அமைப்பு

வேள் எவ்வி போரில் புண்பட்டு இறந்தான் என்னும் செய்தியைக் கேட்ட வெள்ளெருக்கிலையார் அச்செய்தி பொய்யாகுக! பொய்யாகுக! என்று நினைத்துக் கொண்டார். இதனை,

**"பொய்யா கியாரோ பொய்யா கியரோ**
**.....................................................**
**பொன்புனை திகிரியிற் பொய்யா கியரோ"**[163]

என்று அடுக்குத் தொடர் போல் தன் மனதில் தோன்றிய எண்ணத்தை வெளிப்படுத்துகிறார். போரவைக் கோப்பெருநற்கிள்ளியைப் பாடும் நக்கண்ணையார்,

**“என்னைக்கு ஊர் இஃது அன்மை யானும்**
**என்னைக்கு நாடு இஃது அன்மை யானும்**
**ஆடுஆடு என்ப ஒருசா ரோரே**
**ஆடன்று என்ப ஒருசாரோரே”[164]**

என்று தனது மன உணர்வுகளைக் கேட்போர் முன் உரைப்பது போல் பாடியுள்ளார். பெருங்கோப்பெண்டு என்னும் புலவர் ஈமத்தீயில் இறங்க முனைந்த தன்னைத் தடுத்து அறிவுரை கூறிய சான்றோரைப் பார்த்து இவ்வாறு பாடுகிறார்.

**“பல்சான் றீரே பல்சான் றீரே**
**செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்**
**பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே”[165]**

என்று வரும் பாடலடிகளில் சான்றோர்களே! என்னும் சொல் மீண்டும் மீண்டும் பயின்று அடுக்குத் தொடராய் அமைந்துள்ளதைக் காண முடிகிறது.

**தொகுப்புரை**

1. சங்கப்பெண்பாற் புலவர்களின் அகம் புறம் ஆகிய இரு திணை சார்ந்த பாடல்களில் கற்பனை, உவமை, உள்ளுறை, இறைச்சி , நடை முதலிய அணிநலன்கள் இடம்பெற்றுள்ளன.

2. எல்லாவிதமான செயல்களுக்கும் அடிப்படையாய் அமைவது கற்பனை. இலக்கியமும் படைப்பாளரின் கற்பனையில் தோன்றிய ஒன்றாகும். கற்பனை என்ற சொல் சங்க இலக்கியங்களில் காணப்பெறவில்லை. புனைந்துரை, கட்டுரை என்னும் சொற்கள் கற்பனை என்னும் பொருளில் பயின்று வந்துள்ளன.

3. அகத்திணையில் இடம்பெற்றுள்ள தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய், பாணன் முதலிய பாத்திரங்கள் அனைத்தும் புலவர்களின் கற்பனையில் முகிழ்ந்தவைகளே ஆகும்.

4. புறத்திணையில் மன்னர்களின் கொடைத்தன்மை, படைக்களம், போர்முறை, வெற்றி, ஆட்சிச் சிறப்பு, நாட்டுவளம் போன்றவற்றைப் புலவர்கள் பல்வேறு புனைவுகளோடு படிப்போர் மகிழ்வுறும் வண்ணம் படைத்துள்ளனர்.

5. நன்கு தெரிந்த பொருளைக் கொண்டு தெரியாத பொருளை விளக்குவது உவமையாகும். உவமிக்கப்படும் பொருள் சிறந்த விளக்கம் பெறுவதோடு

கூறப்படும் உவமை உயர்வுடையதாக இருக்க வேண்டும் என்பது தொல்காப்பியரின் கருத்தாக அமைகிறது.

6. தொனி என்றும் குறிப்புப் பொருள் என்றும் உள்ளுறை வழங்கப்படுகிறது. பாடலின் திணையை விளக்குவதற்குப் பெரிதும் துணை செய்வது உள்ளுறை உவமையாகும். உள்ளுறை அகத்திணைக்கு மட்டுமே பொருந்துவதாய் புலவர்களால் படைக்கப்பட்டுள்ளது.

7. ‘இறைச்சி’ என்பது ‘உடனுறை’ எனத் தொல்காப்பியரால் குறிப்பிடப்படுகிறது. உரிப்பொருளின் புறத்தே தோன்றுவது இறைச்சிப் பொருளாகும். இது சொல் உணர்த்தும் பொருளுக்கு மேல் ஒரு பொருளை உணர்த்தும் தன்மையுடையது. இறைச்சியும் அகத்திணைப் பாடல்களில் மட்டுமே பெண்பாற்புலவர்களால் அமைத்துப் பாடப்பட்டுள்ளது.

8. சங்கப் புலவர்கள் தாம் கூறவரும் கருத்துகளுக்கேற்ப பல்வேறு நடைகளை பயன்படுத்தியுள்ளனர்.

9. பெண்பாற் புலவர்களின் நடையமைப்பினை, கூறியவை கூறல், பேச்சுமொழி, அடுக்குத் தோடர் போன்ற முறைகளில் பகுத்து ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. பெண்பாற் புலவர்களின் பாடல் தொடர்களும், கருத்து நிலைகளும் சில இடங்களில் ஒன்றுபோல் அமைந்துள்ளன. உரையாடல் அமைப்பில் சில பாடல்கள் பாடப்பட்டுள்ளன. சில இடங்களில் உணர்ச்சி நடை பயின்று வந்துள்ளது.

# அடிக்குறிப்புகள்

1. இரா.மாயாண்டி, சங்க இலக்கியத்தில் கற்பனை, ப.19.
2. இராம.சௌந்தரவல்லி, மீனாட்சி சுந்தரனாரின் பிள்ளைத்தமிழும் கோவையும், ப.169.
3. இரா.மாயாண்டி, மு.கு.நூல். பக். 37-38.
4. இரா.மாயாண்டி, மு.கு.நூல். ப.52.
5. நற். 243: 5-8.
6. செ.சாரதாம்பாள், சங்கச் செவ்வியல், ப.269.
7. தொல். பொ.நூ.57.
8. தெ.கலியாணசுந்தரம், சங்க அகப்பாடல்களில் உணர்வுப் போராட்டம், பக். 72-73.
9. அகம், 11: 13-15.
10. குறுந். 27: 3-5.
11. குறுந். 126:4-5
12. குறுந். 47: 3-4.
13. அகம். 68: 6-9.
14. குறுந். 31: 4-5.
15. குறுந். 44:1-2.
16. குறுந். 388: 7-8.
17. குறுந். 178: 3-4.
18. குறுந். 202: 4-5.
19. புறம். 97: 14.
20. புறம். 89: 5-6.
21. புறம். 90: 3-5.
22. புறம். 232:4.
23. புறம். 234:4.
24. புறம். 235: 8-9.
25. நற். 369: 9-11.
26. அகம். 294 : 4-5.
27. அகம். 154 : 1-3.
28. அகம். 46: 1-6.
29. குறுந். 91: 1-3.
30. அகம். 173: 12-14.
31. அகம். 235: 15.

32. அகம். 163: 9.
33. அகம். 40: 6-7.
34. அகம். 217: 1-13.
35. அகம். 294: 1-8.
36. குறுந். 197: 4-5.
37. தொல்.பொ.நூ. 272.
38. தொல். பொ.நூ. 278.
39. ரா.சீனிவாசன், சங்க இலக்கியத்தில் உவமைகள், ப.2.
40. வ.ஜெயா, சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும், ப.38.
41. நற். 381: 9-10.
42. குறுந். 91: 6-8.
43. பொ. ஆ. 139 - 140.
44. பொ. ஆ. 136 - 138.
45. பொ.ஆ. 151.
46. பொ.ஆ. 159-160.
47. பொ.ஆ.67-70.
48. பொ.ஆ. 64 - 65.
49. பொ.ஆ.131.
50. பொ.ஆ. 54-56.
51. பதிற்று. 55: 14-16.
52. பதிற்று. 51: 14-16.
53. புறம். 383 : 10-15.
54. புறம். 278 : 2.
55. புறம். 277: 1-2.
56. புறம். 246: 14-15.
57. பதிற். 52: 5.
58. குறுந். 157: 4.
59. புறம். 174:1-6.
60. நற். 250: 7.
61. நற். 295: 1-2.
62. அகம். 32: 18.
63. குறுந். 29: 2-4.
64. குறுந். 176: 3-4.
65. குறுந். 176: 6-7.
66. குறுந்.169: 4-6.

67. குறுந். 149: 3-4.
68. அகம். 147: 8-9.
69. குறுந். 11: 1-2.
70. குறுந். 30: 4-6.
71. குறுந். 50: 1-3.
72. பொ.ஆ. 4-7.
73. பொ.ஆ: 45-47.
74. பதிற்று. 51: 19-21.
75. புறம். 251: 1-2.
76. பதிற்று. 52: 1-3.
77. புறம். 302: 1-2.
78. புறம். 299: 2-3.
79. பொ. ஆ. 165 - 166.
80. குறுந். 237: 5-6.
81. அகம். 147: 1-3.
82. குறுந். 180: 1-4.
83. புறம். 246: 4.
84. நற். 357: 5-6.
85. பொ.ஆ. 211-212.
86. குறுந். 183: 5-6.
87. அகம். 324: 3-4.
88. குறுந். 67: 1-4.
89. குறுந். 192: 3-5.
90. குறுந். 68: 1-3.
91. குறுந். 117: 1-4.
92. அகம். 272: 1-3.
93. நற். 70: 2-3.
94. பொ.ஆ.208-213.
95. அகம். 324: 11-12.
96. அகம். 303: 17-18.
97. நற். 371: 1-2.
98. பதிற்று. 60: 5-7.
99. குறுந். 35: 2-3.
100. நற். 19: 1-2.
101. நற். 335: 4-5.

102. அகம். 160: 13-14.
103. அகம். 173: 13-15.
104. அகம். 45: 1-2.
105. பொ.ஆ. 201.
106. அகம். 362: 14-15.
107. நற். 357: 7-8.
108. நற். 239: 6.
109. குறுந். 51: 1-2.
110. த.வசந்தாள், தமிழியக்கத்தில் அகப்பொருள் மரபுகள் ஒரு வரலாற்றுப் பார்வை, ப.12.
111. தொல். அகத்.நூ.51.
112. தி.ரா.தாமோதிரன், பண்டைத்தமிழ் இலக்கியக் கொள்கைகள், ப.135.
113. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை, ப.218.
114. நற். 268: 3-5.
115. நற். 304: 2-4.
116. நற். 239: 6-7.
117. நற். 47: 4-5.
118. அகம். 46: 1-6.
119. நற். 390: 5-8.
120. தொல். பொ. நூ.46.
121. த.வசந்தாள், மு.கு.நூ., ப.13.
122. தொல். பொ. நூ. 33.
123. ந.சுப்புரெட்டியார், மு.கு.நூ., ப.225.
124. அகம். 22: 1-2.
125. நற். 357: 3-10.
126. நற். 281: 4-8.
127. நற். 7: 7-9.
128. அகம், 147: 5-7.
129. ஜெ. நீதிவாணன், நடையியல், ப.20.
130. செ.சாரதாம்பாள், சங்கச் செவ்வியல், பக்.225-226.
131. க.பிரபாகரி, இலக்கியத் திறனாய்வும் கொள்கைகளும், ப.104.
132. நற். 335: 9-11.
133. நற். 348: 7-8.
134. அகம். 217: 19-20.
135. அகம். 163: 9.

136. அகம். 324: 1-2.
137. அகம். 384: 14-15.
138. குறுந். 325: 4.
139. குறுந். 176: 5.
140. நற். 239: 1-2.
141. நற். 117: 5.
142. நற். 187: 2.
143. நற். 369: 1.
144. நற். 335: 1.
145. நற். 348: 1-2.
146. புறம். 37: 5-6.
147. புறம். 39: 1-3.
148. புறம். 11: 17-18.
149. புறம். 126: 2-3.
150. புறம். 12: 1-2.
151. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, புறநானூறு மூலமும் உரையும், முதற்தொகுதி, ப.35.
152. புறம். 126: 10-11.
153. புறம். 174: 10.
154. நற். 357: 1.
155. குறுந். 275: 1-2.
156. அகம். 110: 12-14.
157. அகம். 110: 16-17.
158. நற். 348: 9-10.
159. குறுந். 202: 1-5.
160. குறுந். 23: 1-3.
161. குறுந். 23: 3-5.
162. நற். 70: 1-3.
163. புறம். 233: 1-4.
164. புறம். 85: 1-4.
165. புறம். 246: 1-3.

# நிறைவுரை

**'சங்கப் பெண்பாற் புலவர்களின் சமுதாயச் சிந்தனைகள்'** என்னும் இவ்வாய்வில் கண்டறியப்பட்ட முடிவுகள்.

அகத்திணை பாடிய பெண்பாற்புலவர்கள் இருபத்தியெட்டு பேர். புறத்திணை பாடியோர் பதினைந்து பேர். அகம் புறம் ஆகிய இருதிணை பாடியோர் ஏழுபேர் என மொத்தம் ஐம்பது பெண்பாற் புலவர்களின் நூற்று தொண்ணூற்றைந்து பாடல்கள் தொகை நூல்களில் இடம் பெற்றுள்ளன.

ஔவையார் ஐம்பத்தொன்பது பாடல்களைப் பாடி பெண்பாற் புலவர்களுள் தலைமை சான்றவராகத் திகழ்கின்றார். பதிமூன்று பாடல்களைப் பாடிய வெள்ளிவீதியார் ஔவையாருக்கு அடுத்த நிலையில் இடம் பெறுகிறார்.

பெண்பாற்புலவர்கள் புறத்திணைப் பாடல்களைவிட அகத்திணை சார்ந்த பாடல்களை அதிகம் புனைந்துள்ளனர். அகத்திணையில் களவைவிட கற்புநெறிக்கு அதிக முக்கியத்துவம் தந்துள்ளனர்.

ஐவகைச் சமுதாயத்தைச் சார்ந்த மகளிர் அனைவரும் கல்வி கற்கும் வாய்ப்பு சங்க காலத்தில் இருந்துள்ளது. இதற்குச் சங்கப் பெண்பாற் புலவர்கள் சான்றாக அமைகின்றனர்.

பெண்பாற் புலவர்கள் பாடியவற்றுள் தன்னுணர்ச்சிப் பாடல்களும் இடம் பெற்றுள்ளன. பெண்களின் வீரம் குறித்துப் பேசும் மூதின் முல்லைத் துறைப் பாடல்கள் ஆண்பாற் புலவர்களால் பாடப்பட்டிருப்பினும் அவை பெண்பாற் புலவர்களின் உணர்ச்சிமிக்க பாடல்களுக்கு இணையாகவில்லை.

புறத்தில் அகம் பாடிய புலவராகப் பெருங்கோழி நாயக்கன் மகள் நக்கண்ணையார் திகழ்கின்றார். தொகை நூல்களில் இருபத்து மூன்று புலவர்கள் ஒரு பாடல் மட்டுமே புனைந்துள்ளனர். சேரநாடு, சோழநாடு, பாண்டிய நாடு ஆகிய மூன்று பகுதிகளில் வாழ்ந்த பெண்பாற் புலவர்கள் சங்கநூல்களில் இடம் பெற்றுள்ளனர் என்பது ஆய்வில் கூறப்பட்டுள்ளது. இதில் பாண்டிய நாட்டைச் சார்ந்த பெண்பாற் புலவர்கள் அதிகம் உள்ளனர்.

அரசர், வணிகர், குறவர், குயவர் முதலிய இனத்தைச் சார்ந்த மகளிரும் புலவர்களாகத் திகழ்ந்தனர். முடிவேந்தர்கள், வேளிர்கள், குறுநிலமன்னர்கள் பற்றியும், தம் காலத்து புலமையிற் சிறந்து விளங்கிய புலவர்கள் பற்றியும் பெண்பாற் புலவர்கள் தமது பாடலில் வைத்துப் போற்றியுள்ளனர்.

புறச்செய்திகளைவிட அகம் சார்ந்த செய்திகள் அதிகம் பேசப்பட்டுள்ளன. இதற்குக் காரணம் அக்கால மகளிர்க்கு புறவாழ்வில் அதிக நாட்டமும் ஈடுபாடும் இல்லாமை எனக் கருதப்படுகிறது.

களவுநெறியில் இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கர் கூட்டம், பாங்கியர் கூட்டம், வரைவு கடாவுதல், பொருள்வயின் பிரிதல், இற்செறிப்பு, உடன்போக்கு முதலிய நிகழ்வுகள் அகத்திணை மரபுகளின் அடிப்படையில் விளக்கப்பட்டுள்ளன.

வரைவில் நாட்டமில்லாது குறியிடம் வந்து செல்வதிலேயே விருப்பம் கொண்ட தலைவனுக்குத் தோழி, அலர், இற்செறிப்பு, நொதுமலர் வரைவு போன்ற காரணங்களால் தலைவியைச் சந்திக்க இயலாது எனக் கூறி வரைவுக்கு உடன்படுத்துவது களவில் சிறப்பிடம் பெறுகிறது. களவில் தலைவியைக் காட்டிலும் தோழி வரைவு குறித்து அதிகம் பேசுவதாகச் செய்திகள் அமைந்துள்ளன.

களவில் தலைவனின் வேட்கையை விட தலைவியின் வேட்கை மிகுதியை பெண்பாற் புலவர்கள் அதிகம் சிறப்பித்துள்ளனர். களவில் திருமணம் செய்தற் பொருட்டு ஆடவர்கள் பொருள் தேடச் சென்ற நிலை காணப்படுகிறது.

களவில் தலைவிக்கு உண்டாகும் பசலைக் குறித்தும், அந்நோய்த் தீர எடுக்கப்படும் வெறியாட்டு குறித்தும் அறியலாகிறது. குறிஞ்சித் திணையில் மட்டுமே வெறியாட்டு நிகழ்வு இடம்பெற்றுள்ளது. களவின் முடிவாக நடைபெறும் உடன்போக்கு அக்காலச் சமுதாயத்தில் வெறுக்கப்பட்ட நிலையில் இல்லை என்பது பெறப்படுகிறது.

பெண்கள் கற்புடன் வாழும் வாழ்க்கையை அக்காலச் சமுதாயம் பெரிதும் போற்றியது. மகளிரும் கற்பு நெறியில் இருந்து வழுவாமை ஒன்றையே பெரும்

பேறாகக் கருதினர். இல்லறத்தை நல்லறமாக்குவது பெண்களின் கடமை என்பது வலியுறுத்தப்பட்டுள்ளது.

களவிற் பிரிவைவிட கற்பிற் பிரிவில் தலைவியின் துன்பநிலை அதிகம் காட்டப்படுகிறது.

அக்கால மகளிர் பொருளை விரும்பினும் பொருள் தேடச் செல்லும் ஆடவரின் பிரிவை விரும்பாதவர்களாக இருந்துள்ளனர்.

விருந்தோம்பல் தமிழ்ப் பண்பாட்டின் நிலைக்களன் என்பது வினைமுடித்து மீளும் தலைவனுக்குத் தலைவி விருந்து படைக்கும் நிகழ்வின் மூலம் அறிவுறுத்தப்படுகிறது. அக்கால ஆடவரின் பரத்தமை ஒழுக்கம் பெண்பாற் புலவர்களால் கடிந்துரைக்கப்படுகிறது. பரத்தமை தொன்றுதொட்டுச் சமூதாயத்தில் எவ்வாறு இடம் பெற்று வந்துள்ளது என்பது ஆய்வில் விளக்கப்பட்டுள்ளது.

ஐவகைச் சமுதாய மக்களுக்கும் நெருங்கிய உறவுநிலை இருந்தது. சிறியவர் முதல் பெரியவர் வரை சமூகத்தில் வாழ்ந்த அனைவர்க்கும் கடமைகள் வலியுறுத்தப்பட்டன. சமூக முன்னேற்றம் என்பது மக்களின் நற்பண்புகளை உள்ளடக்கியது என்பது பெண்பாற்புலவர்களின் கருத்தாய் அமைந்துள்ளது.

குறிஞ்சி நிலச் சமுதாய மக்கள் வேட்டையாடல், தினை விதைத்தல், முதலிய முக்கியத் தொழில்களை மேற்கொண்டனர். தெய்வம், நிமித்தம் முதலியவற்றில் நம்பிக்கை கொண்டிருந்தனர். ஓவியம், கூத்து போன்ற கலைகளிலும் சிறந்து விளங்கினர். ஊர்க்காவல் முறையும் இங்குக் காணப்படுகிறது.

நாகரிகத்தின் தொடக்க நிலை முல்லை நிலச் சமுதாயத்தில் முகிழ்ந்தது. மணமுறையும் குடும்ப அமைப்பும் இச்சமுதாயத்தில் தோற்றம் பெற்றன. பெண்களின் கற்பு குறித்து இச்சமூகத்தில் அதிகம் பேசப்படுகிறது.

உழவை முக்கியத் தொழிலாகக் கொண்ட மருதநிலச் சமுதாயத்தில் நகர அமைப்பும் நாகரிக வாழ்வும் நிலை பெற்றன. இவர்கள் பிற சமுதாயத்தவரின் தேவைகளைப் போக்கும் வல்லமை பெற்றவர்களாகத் திகழ்ந்தனர். மருதநிலச் சமுதாய ஆடவரின் பரத்தமை ஒழுக்கம் குடும்பத்திலும் சமுதாயத்திலும் வெறுக்கப்பட்டது.

நெய்தல் நிலச் சமுதாயத்தவர் மீன் பிடித்தல், உப்பு விளைவித்தல் போன்ற முக்கியத் தொழில்களை மேற்கொண்டனர். இவர்களின் வாழ்வியலில் கடல்விழா முக்கிய இடம் பெறுகிறது. கடல்தெய்வம் தமது குறைகளைத் தீர்க்கும் என நம்பினர்.

பாலைநில வெம்மையும், அவ்வழிச் செல்வோர் படும் இன்னல்களும் விளக்கப்பட்டுள்ளன.

அக்காலத்தில் கைம்பெண்களின் நிலை மிகவும் துன்பகரமானதாக இருந்தது. கணவனோடு உடன்கட்டை ஏறிய பெண்டிரும் காணப்படுகின்றனர். சமுதாயக் கட்டுப்பாடும், சடங்குமுறைகளும் கைம்பெண்களைப் பெரிதும் துன்புறுத்தியுள்ளன. அக்காலச் சமுதாயத்தில் நிலவிய கட்டுப்பாடுகளைத் தாங்கி வாழ்வதை விட இறப்பதே மேல் என்ற முடிவுக்கும் கைம்பெண்கள் வந்துள்ளனர் என்பது ஆய்வில் கூறப்பட்டுள்ளது.

இறந்தவர்களின் நினைவாக எடுக்கப்படுவது நடுகல். இதை மக்கள் வழிபடவும் செய்தனர்.

சங்ககாலப் போர் முறை, வெற்றி, கொடை, புகழ் நிலைக் குறித்தும் மக்களது புறவாழ்வியல் சூழல்கள் குறித்தும் பேசப்பட்டுள்ளன.

சேரமன்னர்கள் ஐவரும் சோழ மன்னர்கள் மூவரும் சிறப்பிக்கப்பட்டுள்ளனர். பாண்டிய மன்னர்கள் பற்றிய குறிப்புகள் இடம் பெறவில்லை.

ஔவையார் மூவேந்தர்களின் ஒற்றுமை குறித்தும் சமாதானம், போர்ச்சூழல், படைத்திறம், நாட்டு வளம், ஈகை, நல்வினை, தீவினை குறித்தும் சிறப்பித்துள்ளார்.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் வரலாறும் சேரநாட்டின் வளமும் முடத்தாமக்கண்ணியாரால் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

புலவர்களால் போற்றப்படும் பெருமையுடையவனாகவும் பாலைத்திணை பாடுவதில் வல்லவனாகவும் பெருங்கடுங்கோ சிறப்பிக்கப்படுகிறான். இவனது

# நிறைவுரை

**‘சங்கப் பெண்பாற் புலவர்களின் சமுதாயச் சிந்தனைகள்’** என்னும் இவ்வாய்வில் கண்டறியப்பட்ட முடிவுகள்.

அகத்திணை பாடிய பெண்பாற்புலவர்கள் இருபத்தியெட்டு பேர். புறத்திணை பாடியோர் பதினைந்து பேர். அகம் புறம் ஆகிய இருதிணை பாடியோர் ஏழுபேர் என மொத்தம் ஐம்பது பெண்பாற் புலவர்களின் நூற்று தொண்ணூற்றைந்து பாடல்கள் தொகை நூல்களில் இடம் பெற்றுள்ளன.

ஔவையார் ஐம்பத்தொன்பது பாடல்களைப் பாடி பெண்பாற் புலவர்களுள் தலைமை சான்றவராகத் திகழ்கின்றார். பதிமூன்று பாடல்களைப் பாடிய வெள்ளிவீதியார் ஔவையாருக்கு அடுத்த நிலையில் இடம் பெறுகிறார்.

பெண்பாற்புலவர்கள் புறத்திணைப் பாடல்களைவிட அகத்திணை சார்ந்த பாடல்களை அதிகம் புனைந்துள்ளனர். அகத்திணையில் களவைவிட கற்புநெறிக்கு அதிக முக்கியத்துவம் தந்துள்ளனர்.

ஐவகைச் சமுதாயத்தைச் சார்ந்த மகளிர் அனைவரும் கல்வி கற்கும் வாய்ப்பு சங்க காலத்தில் இருந்துள்ளது. இதற்குச் சங்கப் பெண்பாற் புலவர்கள் சான்றாக அமைகின்றனர்.

பெண்பாற் புலவர்கள் பாடியவற்றுள் தன்னுணர்ச்சிப் பாடல்களும் இடம் பெற்றுள்ளன. பெண்களின் வீரம் குறித்துப் பேசும் மூதின் முல்லைத் துறைப் பாடல்கள் ஆண்பாற் புலவர்களால் பாடப்பட்டிருப்பினும் அவை பெண்பாற் புலவர்களின் உணர்ச்சிமிக்க பாடல்களுக்கு இணையாகவில்லை.

புறத்தில் அகம் பாடிய புலவராகப் பெருங்கோழி நாயக்கன் மகள் நக்கண்ணையார் திகழ்கின்றார். தொகை நூல்களில் இருபத்து மூன்று புலவர்கள் ஒரு பாடல் மட்டுமே புனைந்துள்ளனர். சேரநாடு, சோழநாடு, பாண்டிய நாடு ஆகிய மூன்று பகுதிகளில் வாழ்ந்த பெண்பாற் புலவர்கள் சங்கநூல்களில் இடம் பெற்றுள்ளனர் என்பது ஆய்வில் கூறப்பட்டுள்ளது. இதில் பாண்டிய நாட்டைச் சார்ந்த பெண்பாற் புலவர்கள் அதிகம் உள்ளனர்.

அரசர், வணிகர், குறவர், குயவர் முதலிய இனத்தைச் சார்ந்த மகளிரும் புலவர்களாகத் திகழ்ந்தனர். முடிவேந்தர்கள், வேளிர்கள், குறுநிலமன்னர்கள் பற்றியும், தம் காலத்து புலமையிற் சிறந்து விளங்கிய புலவர்கள் பற்றியும் பெண்பாற் புலவர்கள் தமது பாடலில் வைத்துப் போற்றியுள்ளனர்.

புறச்செய்திகளைவிட அகம் சார்ந்த செய்திகள் அதிகம் பேசப்பட்டுள்ளன. இதற்குக் காரணம் அக்கால மகளிர்க்கு புறவாழ்வில் அதிக நாட்டமும் ஈடுபாடும் இல்லாமை எனக் கருதப்படுகிறது.

களவுநெறியில் இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கர் கூட்டம், பாங்கியர் கூட்டம், வரைவு கடாவுதல், பொருள்வயின் பிரிதல், இற்செறிப்பு, உடன்போக்கு முதலிய நிகழ்வுகள் அகத்திணை மரபுகளின் அடிப்படையில் விளக்கப்பட்டுள்ளன.

வரைவில் நாட்டமில்லாது குறியிடம் வந்து செல்வதிலேயே விருப்பம் கொண்ட தலைவனுக்குத் தோழி, அலர், இற்செறிப்பு, நொதுமலர் வரைவு போன்ற காரணங்களால் தலைவியைச் சந்திக்க இயலாது எனக் கூறி வரைவுக்கு உடன்படுத்துவது களவில் சிறப்பிடம் பெறுகிறது. களவில் தலைவியைக் காட்டிலும் தோழி வரைவு குறித்து அதிகம் பேசுவதாகச் செய்திகள் அமைந்துள்ளன.

களவில் தலைவனின் வேட்கையை விட தலைவியின் வேட்கை மிகுதியை பெண்பாற் புலவர்கள் அதிகம் சிறப்பித்துள்ளனர். களவில் திருமணம் செய்தற் பொருட்டு ஆடவர்கள் பொருள் தேடச் சென்ற நிலை காணப்படுகிறது.

களவில் தலைவிக்கு உண்டாகும் பசலைக் குறித்தும், அந்நோய்த் தீர எடுக்கப்படும் வெறியாட்டு குறித்தும் அறியலாகிறது. குறிஞ்சித் திணையில் மட்டுமே வெறியாட்டு நிகழ்வு இடம்பெற்றுள்ளது. களவின் முடிவாக நடைபெறும் உடன்போக்கு அக்காலச் சமுதாயத்தில் வெறுக்கப்பட்ட நிலையில் இல்லை என்பது பெறப்படுகிறது.

பெண்கள் கற்புடன் வாழும் வாழ்க்கையை அக்காலச் சமுதாயம் பெரிதும் போற்றியது. மகளிரும் கற்பு நெறியில் இருந்து வழுவாமை ஒன்றையே பெரும்

பேறாகக் கருதினர். இல்லறத்தை நல்லறமாக்குவது பெண்களின் கடமை என்பது வலியுறுத்தப்பட்டுள்ளது.

களவிற் பிரிவைவிட கற்பிற் பிரிவில் தலைவியின் துன்பநிலை அதிகம் காட்டப்படுகிறது.

அக்கால மகளிர் பொருளை விரும்பினும் பொருள் தேடச் செல்லும் ஆடவரின் பிரிவை விரும்பாதவர்களாக இருந்துள்ளனர்.

விருந்தோம்பல் தமிழ்ப் பண்பாட்டின் நிலைக்களன் என்பது வினைமுடித்து மீளும் தலைவனுக்குத் தலைவி விருந்து படைக்கும் நிகழ்வின் மூலம் அறிவுறுத்தப்படுகிறது. அக்கால ஆடவரின் பரத்தமை ஒழுக்கம் பெண்பாற் புலவர்களால் கடிந்துரைக்கப்படுகிறது. பரத்தமை தொன்றுதொட்டுச் சமுதாயத்தில் எவ்வாறு இடம் பெற்று வந்துள்ளது என்பது ஆய்வில் விளக்கப்பட்டுள்ளது.

ஐவகைச் சமுதாய மக்களுக்கும் நெருங்கிய உறவுநிலை இருந்தது. சிறியவர் முதல் பெரியவர் வரை சமூகத்தில் வாழ்ந்த அனைவர்க்கும் கடமைகள் வலியுறுத்தப்பட்டன. சமூக முன்னேற்றம் என்பது மக்களின் நற்பண்புகளை உள்ளடக்கியது என்பது பெண்பாற்புலவர்களின் கருத்தாய் அமைந்துள்ளது.

குறிஞ்சி நிலச் சமுதாய மக்கள் வேட்டையாடல், தினை விதைத்தல், முதலிய முக்கியத் தொழில்களை மேற்கொண்டனர். தெய்வம், நிமித்தம் முதலியவற்றில் நம்பிக்கை கொண்டிருந்தனர். ஓவியம், கூத்து போன்ற கலைகளிலும் சிறந்து விளங்கினர். ஊர்க்காவல் முறையும் இங்குக் காணப்படுகிறது.

நாகரிகத்தின் தொடக்க நிலை முல்லை நிலச் சமுதாயத்தில் முகிழ்ந்தது. மணமுறையும் குடும்ப அமைப்பும் இச்சமுதாயத்தில் தோற்றம் பெற்றன. பெண்களின் கற்பு குறித்து இச்சமூகத்தில் அதிகம் பேசப்படுகிறது.

உழவை முக்கியத் தொழிலாகக் கொண்ட மருதநிலச் சமுதாயத்தில் நகர அமைப்பும் நாகரிக வாழ்வும் நிலை பெற்றன. இவர்கள் பிற சமுதாயத்தவரின் தேவைகளைப் போக்கும் வல்லமை பெற்றவர்களாகத் திகழ்ந்தனர். மருதநிலச் சமுதாய ஆடவரின் பரத்தமை ஒழுக்கம் குடும்பத்திலும் சமுதாயத்திலும் வெறுக்கப்பட்டது.

நெய்தல் நிலச் சமுதாயத்தவர் மீன் பிடித்தல், உப்பு விளைவித்தல் போன்ற முக்கியத் தொழில்களை மேற்கொண்டனர். இவர்களின் வாழ்வியலில் கடல்விழா முக்கிய இடம் பெறுகிறது. கடல்தெய்வம் தமது குறைகளைத் தீர்க்கும் என நம்பினர்.

பாலைநில வெம்மையும், அவ்வழிச் செல்வோர் படும் இன்னல்களும் விளக்கப்பட்டுள்ளன.

அக்காலத்தில் கைம்பெண்களின் நிலை மிகவும் துன்பகரமானதாக இருந்தது. கணவனோடு உடன்கட்டை ஏறிய பெண்டிரும் காணப்படுகின்றனர். சமுதாயக் கட்டுப்பாடும், சடங்குமுறைகளும் கைம்பெண்களைப் பெரிதும் துன்புறுத்தியுள்ளன. அக்காலச் சமுதாயத்தில் நிலவிய கட்டுப்பாடுகளைத் தாங்கி வாழ்வதை விட இறப்பதே மேல் என்ற முடிவுக்கும் கைம்பெண்கள் வந்துள்ளனர் என்பது ஆய்வில் கூறப்பட்டுள்ளது.

இறந்தவர்களின் நினைவாக எடுக்கப்படுவது நடுகல். இதை மக்கள் வழிபடவும் செய்தனர்.

சங்ககாலப் போர் முறை, வெற்றி, கொடை, புகழ் நிலைக் குறித்தும் மக்களது புறவாழ்வியல் சூழல்கள் குறித்தும் பேசப்பட்டுள்ளன.

சேரமன்னர்கள் ஐவரும் சோழ மன்னர்கள் மூவரும் சிறப்பிக்கப்பட்டுள்ளனர். பாண்டிய மன்னர்கள் பற்றிய குறிப்புகள் இடம் பெறவில்லை.

ஔவையார் மூவேந்தர்களின் ஒற்றுமை குறித்தும் சமாதானம், போர்ச்சூழல், படைத்திறம், நாட்டு வளம், ஈகை, நல்வினை, தீவினை குறித்தும் சிறப்பித்துள்ளார்.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் வரலாறும் சேரநாட்டின் வளமும் முடத்தாமக்கண்ணியாரால் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

புலவர்களால் போற்றப்படும் பெருமையுடையவனாகவும் பாலைத்திணை பாடுவதில் வல்லவனாகவும் பெருங்கடுங்கோ சிறப்பிக்கப்படுகிறான். இவனது

வீரமும் கொடைச் சிறப்பும் இளவெயினியாரால் சிறப்பிக்கப்படுகிறது. கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனின் வீரம் வெள்ளிவீதியாரால் புகழ்ந்துரைக்கப்படுகிறது.

கரிகால் பெருவளத்தான் தாய்வயிற்றில் இருந்த போதே அரசுரிமை பூண்ட செய்தியும், அவனது ஆட்சித் திறமும் பண்பு நலமும் சோழ நாட்டின் வயல் வளமும் வெண்ணிப் போர் நிகழ்வும் முடத்தாமக் கண்ணியாரால் பாடப்பட்டுள்ளன.

சோழர்கள் கடல் வாணிபத்தில் சிறந்து விளங்கினர். சிபிச் சோழனின் புகழ்நிலை விளக்கப்பட்டது. கிள்ளிவளவனின் ஆட்சிக் காலத்தில் உறைந்தை அவையம் நீதி வழங்குவதில் புகழ்பெற்றுத் திகழ்ந்தது.

சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி ஆமூர் மல்லனோடு போரிட்ட செய்தி நக்கணையாரால் கூறப்படுகிறது.

முடிவேந்தர்களுக்கு அடுத்த நிலையில் குறுநில மன்னர்கள், வேளிர்கள், சீறூர் மன்னர்கள் போன்றோர் பெண்பாற் புலவர்களால் சிறப்பிக்கப்பட்டுள்ளனர். சிற்றரசர்கள் முடிவேந்தர்களுக்கு அடங்கியும் தனித்தும் ஆட்சி செலுத்தினர். ஆட்சி முறையில் முடிவேந்தர்களுக்கு நிகரானவர்களாகத் திகழ்ந்தனர். போர்க்காலங்களில் முடிவேந்தர்களுக்கு சிற்றரசர்களின் உதவி பெரிதும் தேவைப்பட்டது.

சங்க காலத்தில் வாழ்ந்த வாய்மைத் தவறாத பண்புடைய கோசர் என்ற இனம் பேசப்படுகிறது.

மறக்குடிமகளிரது வாழ்வு குறித்து உணர்ச்சி பொங்கும் வகையில் தாய்மைப்பற்றுடன் பெண்பாற்புலவர்கள் பாடியுள்ளனர். சங்க மகளிர் ஆயுதம் ஏந்திப் போரிடவில்லையாயினும் போர்க்காலங்களில் வீரர்களுக்குப் பல்வேறு உதவிகளைச் செய்துள்ளனர்.

கற்பனை, உவமை, உள்ளுறை, இறைச்சி, நடை முதலிய அணிநலன்களைப் பெண்பாற் புலவர்கள் தமது இருதிணை சார்ந்த பாடல்களிலும் கையாண்டுள்ளனர்.

கற்பனை என்னும் சொல் சங்கப் பாக்களில் காணப்பெறவில்லை. புனைந்துரை, கட்டுரை என்னும் சொற்கள் கற்பனை என்னும் பொருளில் வழங்கப்பட்டுள்ளன.

அகத்திணையில் இடம் பெற்றுள்ள தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய், பாணன் முதலிய பாத்திரங்கள் அனைத்தும் சங்கப் புலவர்களின் கற்பனையில் முகிழ்ந்தவையே ஆகும்.

பெண்பாற்புலவர்கள் புறப்பொருள், அகப்பொருள், கலையியல், விலங்குகள், பறவைகள், தாவரங்கள், இயற்கை என்னும் அடிப்படையில் உவமைகளைக் கையாண்டுள்ளனர்.

சங்கப் பாக்களின் திணை அமைப்பை விளக்குவதற்குப் பெரிதும் துணை செய்வது உள்ளுறை உவமமாகும். உள்ளுறை, இறைச்சி போன்ற உத்திகள் அகத்திணைக்கு மட்டுமே பொருந்துவனவாய் அமைந்துள்ளன.

செய்யுட்களின் பொருளைத் திறம்படச் சொல்லும் வடிவமைப்பு நடை எனப்படும். அதன் பொருட்டுப் பெண்பாற் புலவர்களின் நடையமைப்பு கூறியவைக் கூறல், பேச்சுமொழி, அடுக்குத்தொடர் என்னும் நிலைகளில் பகுத்து ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. சில இடங்களில் உணர்ச்சி நடை கையாளப்பட்டுள்ளது.

சங்கப் பெண்பாற் புலவர்களின் பாடல்களில் பெண்மைக்குரிய பண்புநலன் அதிகம் இடம் பெற்றுள்ளது. அக்காலப் பெண்கள் குடும்ப நலனிலும் சமுதாய நலனிலும் அதிக ஈடுபாடும் அக்கறையும் செலுத்தியுள்ள பாங்கு காணப்படுகிறது. சங்கப் பெண்பாற் புலவர்களின் சமுதாயச் சிந்தனைகள் அக்காலச் சமுதாயத்திற்கு மட்டுமல்லாமல் இக்கால சமுதாயத்திற்கும் பொருந்துவதாய் அமைந்துள்ளன.

இவ்வாய்வைத் தொடர்ந்து மேலாய்வு செய்வதற்கான தலைப்புகளாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.

1. சங்கப் பெண்பாற்புலவர்களின் திணைக் கோட்பாடுகள்
2. சங்கப் பெண்பாற்புலவர்களும் சமகால பெண்பாற்புலவர்களும் - ஒரு ஒப்பீடு.